கவிஸார்வபௌமரான

# காளிதாஸர்

இயற்றிய

# குமாரஸம்பவ மஹாகாவ்யம்

ாஞ்சி பரமஹம்ஸ ஸ்ரீ பரமாசார்யாளால் 'ஸாஹிதீ வல்லப'
ன்ற விருது அனுக்ரஹிக்கப்பட்டவரும், மயிலை விவேகாநந்தர்
ல்லூரியின் முன்னாள் ஸம்ஸ்க்ருதப் பேராசிரியரும், திருப்பதி
ந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்தியாபீடத்தின் முன்னாள் முதல்வரும்,
ஸம்ஸ்க்ருத புலமைக்கான
பாரத ராஷ்டிரபதியின் ஸன்மான இதழ் பெற்றவருமான

**வே. ஸ்ரீ. வேங்கட ராகவாசார்யர்**

எழுதிய தெளிவான தமிழ் உரையுடன்

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**

சென்னை – 600 017 : : திருச்சி – 620 002

விலை ரூ. 25

|| SRIHI ||

# OUR BAREST JUSTICE



**DEDICATED**

**To the late - lamented Founder of the LIFCO**

Sri Sathaari Sevaka, Hayagriva Sevarathnam,

Bhakthi Prachaarana Praveena,

Poikaippakkam Tirumalai Nallan Chakravarti

**Sri Ubhaya Ve. V. KRISHNASWAMI SARMA SWAMI**

Who Ever Remained

an Ardent Bhaktha,

Every Inch of his Frame.

**—The LIFCO Publishers**

## OUR DEVOUT PRAYERS TO GOD

**1. That our publications and services spread spiritual sunshine and joy everywhere; 2. that our Firm works for the spiritual unity of mankind so that Providence will bless us *all* with absolute peace and goodwill; and 3. that our publications also tend to promote good conduct, character and capacity on the part of our youngsters, especially students.**

— THE LITTLE FLOWER CO. (LIFCO)
Madras-600 017

7th World Book Fair New Delhi 17 FEB 86

# முன்னுரை

மஹாகவி காளிதாஸரின் ரகுவம்ச மஹாகாவ்யம் முழுவதற்கும் நான் எழுதி 1953-இல் வெளியிட்ட தமிழுரையைக் கண்ட அன்பர்கள் பலரும் அதேபோன்று குமாரஸம்பவத்திற்கும் உரை எழுதி வெளியிடவேண்டும் என்னும் கருத்தைத் தெரிவித்தனர். அதற்கிணங்க இவ்வுரை 1960-இல் எழுதி முடிக்கப்பட்டதாயினும், சில காரணங்களால் வெளியிடப்படாமல் இருந்து அதற்கான வாய்ப்பினைத் தற்போதே பெற்றுள்ளது.

இருபது வருஷ இடை வெளியினைப் பயனற்றதெனக் கருதவேண்டாதபடி இவ்வுரை திருத்தப்பட்டும், புதிய கருத்துக்கள் பல சேர்க்கப்பட்டும் வெளிவருகின்றது.

குமாரஸம்பவத்திற்கு ஐம்பத்துநான்கு உரைகள் உள்ளன. அவற்றுள் 5, 6 உரைகளே அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளன. ஏறக்குறைய நூறுண்டுகட்குமுன்பே அச்சில் இருந்து பிரசித்தி பெற்ற உரை ஆந்திர நாட்டினரான மல்லிநாதர் எழுதியது. கேரள நாட்டினரான அருணகிரிநாதரும், நாராயணரும் எழுதிய உரைகள் சுமார் அறுபத்தேழு ஆண்டுகட்குமுன்பு திருவனந்தபுரத்தில் அச்சிடப்பட்டன. சாரித்ரவர்த்தனர் என்பவர் எழுதிய உரையும் அச்சில் உள்ளதே. திருச்சிராப்பள்ளியில் இருந்த பெரும் பண்டிதரும், வழக்கறிஞருமான ஸ்ரீ ஏ.வி. கோபாலாசாரியார் முதல் மூன்று ஸர்க்கங்களுக்கு ஸம்ஸ்க்ருதத்தில் எழுதிய உரை 1933-இல் வெளிவந்துள்ளது.

மல்லிநாதர் பதவுரை, சந்தம், அணி இவற்றுடன் இலக்கணக் குறிப்புக்களையும் தந்து சுலோகப் பொருளை விளக்குவார். பிற உரையாசிரியர்கள் விசேஷவுரைகளையும் எழுதுவார்கள். எல்லா உரைகளையும் பரிசீலனை செய்தபின் இத்தமிழுரை எழுதப் பட்டுள்ளது. பழைய உரையாசிரியர்களின் வாக்யங்கள் தேவையான இடங்களில் தரப்பட்டுள்ளன. ரஸிகர் என்ற பெயரில் குறிப்பிடப்படுபவர் ஸ்ரீ கோபாலாசாரியார் அவர்கள். என் கருத்துக்களையும் ஆங்காங்கு விசேஷவுரைப் பகுதியில் குறிப் பிட்டுள்ளேன்.

குமாரஸம்பவ மஹாகாவ்யத்தில் முதல் எட்டு ஸர்க்கங்களே காளிதாஸர் எழுதியவை என்றும், மேலுள்ள ஒன்பது முதல் பதினேழு வரையுள்ள ஒன்பது ஸர்க்கங்கள் காளிதாஸர் எழுதியவை அல்ல என்றும் அறிஞர்கள் பலரும் கருதுகின்றனர். உரையாசிரியர்கள் பலரும் முதல் ஏழு ஸர்க்கங்களுக்கே உரை எழுதியுள்ளனர். திருமணம் முடிந்து சிவ-பார்வதி தம்பதிகளின் இல்லற இன்ப வாழ்க்கையை வர்ணிக்கும் எட்டாம் ஸர்க்கத்திற்கு உரை எழுதுதல் கூடாதென்பது மாதவர், தக்ஷிணாவர்த்தநாதர் முதலிய உரையாசிரியர்கள் கொண்ட கருத்தாகும். ''இப்பகுதிக்கு ஸம்ஸ்க்ருத உரையே போதுமானது. தமிழுரை வேண்டாம்'' என்பது ஸ்ரீ காஞ்சி முனிவர்களின் திருவுள்ளமுமாகும். எனவே, இப்பகுதிக்குத் தமிழுரை எழுதப்படவில்லை. ஏற்கனவே அச்சிடப்பட்டுள்ள மல்லிநாதர் உரையே இதனுடன் இணைக்கப்பட்டுள்ளது.

தற்போது அச்சிலுள்ள மல்லிநாதர் உரையில் பிழை உள்ளது. பல இடங்களில் அவருடைய சில வாக்யங்கள் நீக்கப்பட்டு உரைப் பகுதி குறுக்கப்பட்டுள்ளதென்பது அவ்வுரையைப் பதிப்பிக்க முற்பட்டபோது தெரியவந்தது. ஆகை

யால், நூறு வருஷங்களுக்கு முன்பு க்ரந்த எழுத்தில் வெளி யிடப்பட்ட ஒரு பிரதியையும், மற்றும் பல பதிப்புக்களையும் ஆராய்ந்து மல்லிநாதர் உரையைச் செப்பம் செய்து வெளி யிட்டிருப்பதை ஒப்பு நோக்கும் பண்டிதர்கள் உணர்வார்கள்.

பல வருஷங்களுக்குமுன் குமாரஸம்பவம் ஐந்தாவது ஸர்க் கத்திற்கு நான் வெளியிட்ட தமிழுரை இருக்கிறதாயினும், காளி தாஸரின் மஹாகாவ்யமான குமாரஸம்பவம் முழுவதற்கும் தமிழில் உரை வருவது **இதுவே முதலாவதாகும்.**

இப்பணியினைச் செய்ய எனக்கு அருள் புரிந்த எம்பெரு மான் திருவடிகளை நினைத்து வணங்குகிறேன்.

இவ்வுரை, மஹாகவியை அறிந்துகொள்ள தமிழ் அறிந்த வாசகர்களுக்குப் பேருதவியாக இருத்தலுடன் ஸம்ஸ்க்ருதப் பண்டிதர்களுக்கும், ஸம்ஸ்க்ருதம் பயின்றவர்களுக்கும், பயில விரும்புபவர்களுக்கும் பயனுள்ளதாக அமையும் என்பதும் என் கருத்து.

பார்வதி தேவியின் திருமணத்தைக் கூறும் மங்களகர மான இக்காவ்யத்தை வரவேற்றுப் போற்றுவது தமிழ் கூறும் நல்லுலகத்திற்குச் சிறப்பினையளிப்பதொன்றாகும்.

**உரையாசிரியர்**

# முகவுரை

காவ்யம் - என்ற பதத்திற்குக் கவி எழுதியது என்பது பொருள். பாட்டின் வடிவிலே அமைந்தது மாத்திரமே காவ்யம் என்பது இல்லை. வசன நடையிலே அமைந்துள்ளதையும் காவ்யம் என்றே கூறுவர் வடமொழி அறிஞர்கள். தண்டியாசிரியர் காவ்யத்தைப் பகுக்குங்கால், செய்யுளாலானது, வசன நடையாலானது, இரண்டும் கலந்து அமைந்தது என மூவகையாகப் பிரித்தனர்.

இனி காவ்யத்தை வேறு வகையிலும் பிரிப்பர். காதால் கேட்டும், படித்தும் அனுபவித்தற்குரிய காவ்யத்தை ச்ரவ்ய காவ்யம் என்பர். இவ்வகைக்கு ராமாயணம், ரகுவம்சம் முதலியன உதாஹரணங்களாகும். நடித்தற்கு வசதியாக எழுதப்பட்டு, நடித்தும் அனுபவித்தற்குரிய காவ்யத்தை த்ருச்ய காவ்யம் என்பர். நாடக காவ்யம் என்ற மறு பெயரும் இதற்குண்டு. இவ்வகைக்கு உதாஹரணம், சாகுந்தலம், உத்தரராமசரிதம் முதலியனவாம்.

இனி இக்காவ்யங்களை மஹாகாவ்யம் - கண்ட காவ்யம் (சிறு காவ்யம்) என அவற்றின் அளவு முதலியன கருதி மற்றொரு வகையிலும் பகுப்பர். மஹாகாவ்யத்திற்குத் தேவையான அம்சங்கள் அலங்கார சாஸ்த்ரங்களிலே விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மஹாகாவ்யத்தின் உட்பிரிவுகள் ஸர்க்கங்கள் என அழைக்கப்படும். காவ்யத்தின் தலைவன், தேவனாகவோ, நற்குடியில் பிறந்து, தீர உதாத்தனுக்குரிய குணங்களுடன் கூடிய க்ஷத்ரியனாகவோ இருக்கலாம். ரகுவம்சத்தில் இருப்பது போல் ஒரே வம்சத்தில் தோன்றிய பலரும் நாயகர்களாக இருக்கத் தக்கவர்களே. ச்ருங்காரம், வீரம், சாந்தம் என்ற மூன்றி

னுள் ஒன்று முக்யமான ரஸமாகவும், மற்ற ரஸங்கள் அதற்குப் புஷ்டி தருகின்றனவாகவும் அமைதல் வேண்டும். கதை இதி ஹாஸங்களிலிருந்து எடுக்கப்பட்டதாகவோ, அல்லது உத்தமமான வேறு ஒரு மனிதனைப் பற்றியதாகவோ இருக்கலாம். துஷ்டர் களின் இழி குணத்தை நிந்தித்தும், நல்லோர்களின் சிறப்பியல்பு களைப் புகழ்ந்தும் கூற வேண்டும்.

நகரம், ஸமுத்ரம், மலை, பருவங்கள், சந்திர ஸூர்யோத யங்கள், ஜலக்ரீடை, பூங்காவில் விளையாடுதல், மதுபானம், காதலர்களின் பிரிவு, சேர்க்கை, விவாஹம், புத்திரன் பிறப்பு, போர் முதலிய வர்ணனைகள் மஹாகாவ்யத்தில் இடம் பெற்றி ருக்க வேண்டும். ரஸம், பாவம், பலவகை அணிகள் இவை நிரம்பி, காதிற்கினிய விருத்தங்களிலே அமைந்து, மனத்தை மகிழ்விப்பதாகவும், மஹாகாவ்யம் இருக்க வேண்டும். ஸர்க்கங் களின் மொத்த எண் எட்டிற்குக் குறையாமலும், முப்பதிற்கு மேற்படாமலும் இருக்கவேண்டும் என்பது சிலர் கருத்து. ஸர்க்கங்கள் மிக நீண்டிருத்தலும் கூடாது. ஒவ்வொரு ஸர்க்கத் தின் இறுதியிலும் விருத்தங்கள் (சந்தங்கள்) மாற்றப்பட வேண்டும். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நால்வகைப் புருஷார்த்தங்களையும் அடைவதற்கான முறை களைத் தெளிவாகக் கூற வேண்டும். பொதுவாக காவ்யத்தின் பயனைக் கூறுமிடத்து, பொருள், புகழ், உலக அறிவு, தீயன நீக்கி நலனை அடைதல், பிரம்மானந்தத்திற்கு ஒத்த காவ்யச் சுவையைத் துய்த்தல், ஒரு காதலி தன் கருத்தைக் காதலனுக்குத் தெரிவிப்பது போல் சொல்லாமற் சொல்லி அறத்தின் அறிவைப் புகட்டுதல், முதலியன பயனுகக் குறிக்கப் பட்டுள்ளன. இவற் றில் சில காவ்யத்தை இயற்றும் கவிக்கும், சில காவ்யத்தைப் படிக்கும் ரஸிகர்க்கும், சில இருவருக்கும் உண்டாவன என்பர். ஆனுல், உண்மையான காவ்யப் பயனை ஆராய்ந்த பெரியோர் கள் இலக்கியச் சுவையனுபவித்தலே பயன் என்றும், நீதி புகட்டுதலே காவ்யத்திற்கு முக்ய நோக்கு இருக்க வேண்டு வதில்லை என்றும் கருதுகின்றனர்.

அத்தகைய சுவை, காவ்யத்தினின்றும் வெளிப்படையாகத் தெரிகின்ற பதப் பொருளைக் காட்டிலும் தொனிக்கின்ற உட்

பொருளான இறைச்சிப் பொருளாலேயே மிகுதியும் பெறப் படும் எனவும் கூறுவர். இறைச்சிப் பொருளை வட மொழியில் ''த்வனி'' என்பர்.

இந்த ''த்வனி'' என்பது என்னவெனின் ச்லோகத்தி லுள்ள பதங்கள் ஒன்றோடு ஒன்று அந்வயம் பெற்றுத் தெளி வான ஒரு பொருளைத் தெரிவித்து நின்று விடுகின்றன. ஆனால் அவ்வாறு வெளியிடப்பட்ட கருத்து பிறிதொரு கருத்தை வெளியிடும் தன்மை வாய்ந்ததாக இருப்பதுண்டு. இவ் வாறு வெளியிடப்பட்டதை ''த்வனி'' என்றும். ''வ்யங்க்யம்'' என்றும் கூறுவர். இதுவே காவ்யத்தின் ஜீவன். இத்தகைய த்வனியைப் புலப்படுத்தும் சக்தி ஒரு கருத்துக்கும் உண்டு. ஒரு பதத்திற்கும் உண்டு. இவ்வாறு தொனிக்கப்படுவது, காதல் முதலிய ரஸமாகவோ, உவமை முதலிய அணியாக வோ, அல்லது கதையின் ஒரு பகுதியாகவோ இருக்கலாம். இவற்றை முறையே, ''ரஸத்வனி,'' ''அலங்காரத்வனி'', ''வஸ்துத்வனி'' என்பர். இம்மூவகை த்வனியிலும் ''ரஸத் வனியே'' சிறந்தது. அது குன்றாது இருக்கச் செய்வதே கவியின் முக்யமான நோக்காக இருக்கவேண்டும். இத்தகைய ''ரஸத்வனி'' நிறைந்த காவ்யமே காவ்யங்களில் சிறந்ததாகக் கருதப்படு கிறது.

இத்தகைய த்வனியை அனுபவிக்கும் பொழுது, கவி யினது மனத்துடன் ஒத்த மனமுடைய ரஸிகனது மனம் மட் டற்ற ஒரு வகை மகிழ்ச்சியை அடைகின்றது. இம் மகிழ்ச்சி உலகப் பொருளினின்றும் பெறப்படும் இன்பம் போன்றதன்று. அது பிரம்மானந்தத்திற்கு ஒப்பானது.

மஹாகாவ்யத்திற்கு இன்றியமையாவெனக் கருதப்பட்ட அம்சங்களில் ஒன்றிரண்டு இல்லாவிடினும் அதனால் காவ்யத் திற்கு இழுக்கு ஒன்றுமில்லை. காளிதாஸர் முதலிய மஹா கவிகளின் காவ்யங்களை நோக்கியபின்பே அணியாசிரியர்கள் மஹாகாவ்ய லக்ஷணத்தை வகுத்துள்ளனர். எனவே, காளி தாஸரின் காவ்யங்களிலே இந்த லக்ஷணங்கள் பெரும்பாலும் உள்ளன என்பது, தானே பெறப்படும். மஹாகாவ்யமல்லாதது சிறு காவ்யம் எனப்படும்.

காளிதாஸர் எங்கு எக்காலத்தில் வாழ்ந்தார் என்பதைப் பற்றித் திண்ணமாய் அறிவதற்குத் தக்க சான்றுகள் கிடைக்க வில்லை. அவரும் தமது நூல்களிலே குறிப்பிட்டாரில்லை. வித் வான்கள் பலரும் பலவிதமான கருத்துக்களை வெளியிட்டுள்ள னர். அவர் காஷ்மீரத்தில் பிறந்தவர் எனவும், உஜ்ஜயினியில் வாழ்ந்தவர் எனவும் சிலர் கூறுவர். கர்ண பரம்பரையாக வழங்கும் செய்திகள் அவர் போஜ ராஜனோடு வாழ்ந்தவர் எனக் கூறுகின்றன. இவ்வாறே அவர் வாழ்ந்த காலத்தைப் பற்றியும் கருத்து வேறுபாடு மிக உள்ளது. கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு வரையுள்ள ஆறு நூற்றாண்டு வரை அறிஞர்களின் கொள்கைக் கிணங்க அவர் வாழ்ந்த காலம் ஊசலாடி வருகின்றது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு நூற்றாண்டைக் குறிப்பிடுகின்றனர். காளிதாஸரின் காலத்தையும் வாழ்ந்த இடத்தையும் அறுதியிடுவதற்காக அறி ஞர்கள் கூறுகின்ற காரணங்களை எல்லாம் இங்கே ஆராய்தல் பயனற்ற செய்கையாதலால் அவ்வாராய்ச்சியை விட்டுச் செல்லல் சாலச் சிறந்ததாகும். ஸர்வதேச கவியான காளி தாஸரை ஒரு இடத்திற்கு மாத்திரம் உரியவராகச் செய் தலும், ஸர்வகால கவியான அவருக்கு ஒரு காலத்தை மாத்திரம் குறிப்பிடுதலும் ஈச்வர ஸம்மதமன்று போலும்!

## குமாரஸம்பவம்

காளிதாஸர் மாளவிகாக்நிமித்ரம், விக்ரமோர்வசீயம், சாகுந்தலம் என்ற மூன்று நாடகங்களையும், குமாரஸம்பவம், ரகுவம்சம் என்ற இரு மகா காவ்யங்களையும், ருதுஸம்ஹாரம், மேகஸந்தேசம் என்ற இரு சிறு காவ்யங்களையும் இயற்றியுள் ளார். ஸம்ஸ்க்ருதத்தில் உள்ள ஐம்பெரும் காப்பியங்களில் சேர்க்கப்பட்டு இருக்கும் பெருமையை குமாரஸம்பவமும், ரகு வம்சமும் பெற்றுள்ளன. பாரவியின் கிராதார்ஜுனீயமும், மாக கவியின் சிசுபாலவதமும், ஸ்ரீஹர்ஷரின் நைஷதமும் ஐம் பெரும் காப்பியங்களில் சேர்க்கப்பட்டுள்ள மற்ற மூன்று காவ் யங்களாகும். ரகுவம்சத்தில் திலீபன் முதலான மனிதர்களைக்

கதாநாயகர்களாக வைத்துள்ளார். மேகஸந்தேசத்தில் மனிதர்களைவிட உயர்ந்தவனும் தெய்வத்தன்மை முற்றிலும் பெற்றுள்ள இந்திரன் முதலியவர்களைவிடத் தாழ்ந்தவனுமான யக்ஷனை கதாநாயகனுக்கினார். குமாரஸம்பவத்தில் தெய்வத்தன்மையின் முழுமையும் பெற்றுள்ள சிவபிரானைக் காவ்யத் தலைவனுகவும், பார்வதியைக் காவ்யத் தலைவியாகவும் அமைத்தார்.

குமாரஸம்பவம் என்ற சொல்லுக்குக் ''குமாரன்'' என்று அழைக்கப்படும் ஸுப்ரஹ்மண்யரின் பிறப்பு என்பது பொருள். அதனைப்பற்றிக் கூறுவதால் காவ்யத்திற்கும் அதுவே பெயராக அமைந்துள்ளது.

# குமாரஸம்பவ காவ்யத்தின் பொருட் சுருக்கம்

## முதல் ஸர்க்கம்

வட திசையில் பாரத நாட்டின் அகலத்தை அளக்கும் அளவுகோல் போல் கிழக்கிலும் மேற்கிலும் வெகுதூரம் வியாபித்துள்ளது ஹிமாலயம். சிகரங்களில் எப்பொழுதும் பனி இருப்பினும் அதனல் அம்மலையின் அழகிற்குக் குறை எதுவுமில்லை. அதன் அழகில் ஈடுபட்ட தேவர்களும் ஸ்வர்க்கத்தை விட்டு அம்மலையில் வசிக்கின்றனர். மகரிஷிகள் தவம் செய்வதற்கு ஏற்ற இடமாகவும் அது இருக்கிறது. வேடுவர்களும் கூட தம் அன்பு மனைவிகளுடன் அம்மலையின் குகைகளில் வசிக்கின்றனர். ஸரளமரப்பாலின் நறுமணம் எங்கும் வீசி ஹிமாலயத்தை மணமுடையதாகச் செய்கின்றது. பலவகை தாதுப் பொருள்களும், ரத்னங்களும், ஓஷதிகளும் அம்மலையில் எளிதில் கிடைக்கின்றன. யாகத்திற்கு வேண்டிய அரிய பொருள்களான ஸோமலதை முதலியவற்றைத் தருவதால் ஹிமவானை மலையரசனுகப் பிரம்ம தேவர் செய்தார். யாகத்தில் ஹவிஸ் பெரும் உரிமையையும் அவனுக்கு அளித்தார்.

இம்மலையின் தலைவனாகிய தேவன் ஹிமவான் பித்ருக்களின் மானஸ புத்திரியான மேனை என்பவளை மணந்தான். அவர்களுக்கு மைனாகன் என்ற மகன் பிறந்தான்.

தக்ஷன் என்பவரின் மகளாகப் பிறந்து சிவபிரானை மணந்திருந்த ஸதி என்பவள் தன் தந்தை தக்ஷன் இழைத்த அவமானம் காரணமாகத் தன் உடலை யோக முறையில் விடுத்து ஹிமாலய தம்பதிகளுக்கு மகளாகப் பிறந்தாள். பர்வத குலத்தில் பிறந்ததால் அவளுக்கு பார்வதி என்ற பெயர் ஏற்பட்டது. நாளடைவில் கல்வியைக்கற்று யௌவனப்பருவம் எய்திய அவளுக்குத் தக்க கணவனை ஹிமவான் தேடிக் கொண்டிருந்தான்.

ஸதியை இழந்த சிவபிரான் வேறு மனைவியை ஏற்காமல் ஹிமாலயத்தில் ஓரிடத்தில் தவம் செய்து கொண்டிருந்தார்.

ஒரு ஸமயம் நாரதர் ஹிமவான் வீட்டிற்கு வந்து, ''பார்வதி சிவபிரானையே மணப்பாள்'' என்று கூறினார். மகரிஷியின் வாக்கில் நம்பிக்கை வைத்த ஹிமவான் வேறு வரனைத் தேடவில்லை. சிவபிரான் மறுத்துவிடுவாரோ என்றஞ்சி அவரிடமும் தன் மகளை மணக்கும்படி கேட்கவில்லை. தனது மலையில் வந்து தங்கி தவம் செய்யும் சிவபிரானுக்கு மரியாதை செய்து அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யும்படி தன் மகளுக்கு கட்டளையிட்டான். நாள்தோறும் பார்வதி சிவபிரானது ஆச்ரமத்தை சுத்தம் செய்தும் பூஜைக்கு வேண்டிய புஷ்பம், தர்ப்பம், ஜலம் முதலியவைக் கொடுத்தும் பணிவிடை செய்து வந்தாள்.

## இரண்டாவது ஸர்க்கம்

சிவபிரானுக்குப் பார்வதி பணிவிடை செய்து வந்த அதே காலத்தில், தாரகாசுரனால் பலகாலமாகத் துன்பம் எய்தி வந்த இந்திரன் முதலான தேவர்கள் பிரம்மலோகம் சென்று தாங்கள் படும் கஷ்டங்களைப் பிரம்மதேவருக்கு எடுத்துரைத்து தாரகனைக் கொல்லச் சக்தி வாய்ந்த ஒரு படைத் தலைவனைப் படைத்துத்

தரும்படி வேண்டினர். பிரம்மதேவர், ''தாரகன் கடும் தவம் செய்து அதன் மூலம் உலகினை அழிக்க முற்பட்ட போது அவன் கேட்ட வரங்களைக் கொடுத்து இவ்வுலகை அழிவினின் றும் காப்பாற்றினேன். சிவபிரான் மகனைத் தவிர வேறு எவரும் தன்னைக் கொல்லக் கூடாதென்று அவன் கேட்ட வரத்தையும் கொடுத்தேன். எனவே அவனை வாழச்செய்த நான் அவனை அழிப்பதற்காக ஒரு படைத்தலைவனை படைப்பது முறையன்று. மனைவி ஸதி இறந்தபின் சிவபிரான் ஹிமாலயத் தில் தவம் செய்து வருகிறார். ஹிமவான் மகள் பார்வதி அவருக்குப் பணிவிடை செய்து வருகிறாள். பார்வதியின் அழகை உதவியாகக் கொண்டு சிவபிரானது மனத்தை அவளிடம் ஈடு படச் செய்யுங்கள். அவளே அவருக்கு மனைவியாக இருக்கத் தகுந்தவள். அவர்களுக்கு பிறக்கும் மகனே தேவர்களின் சேனைக்குத் தலைவனாக இருந்து தாரகனைக் கொல்வான். சிறிது காலம் பொறுத்திருங்கள்'', என்று தேவர்களுக்கு அறிவுரை கூறி மறைந்தார்.

பார்வதியினிடத்தில் சிவபிரானுக்கு அன்பை உண்டாக்க மன்மதனே திறமை வாய்ந்தவன் எனக்கருதிய இந்திரன் அவனை மனத்தால் நினைக்கவும், அவன் மனைவி ரதியுடனும் நண்பன் வஸந்தனுடனும் இந்திரன் அருகில் வந்து சேர்ந்தான்.

## மூன்றாவது ஸர்க்கம்

தேவர்களுடன் சபையில் வீற்றிருந்த இந்திரன் மன் மதனை மிகப்பரிவுடன் அழைத்து தன் அருகில் அமரச் செய் தான். இந்திரன் காட்டிய அன்பினால் மிகக்களிப்புற்ற மன் மதன் பேசலுற்றான்:— ''அரசே இவ்வுலகில் தங்களுக்கு ஆக வேண்டிய காரியம் என்ன உள்ளது? எவன் தங்கள் பதவியை விரும்பிக் கடும் தவம் செய்கின்றான்? எவன் தங்கள் கருத்திற்கு எதிராக மோக்ஷத்தை விரும்புகின்றான்? எவனுடைய தர்மத் தையும் பொருளையும் நான் அழிக்க வேண்டும்? இவர்கள் எல்லோரும் என் வில்லிற்கு வசப்பட்டுத் தங்கள் குறிக்கோளை மறப்பர். தங்கள் கருத்திற்கு இணங்காத ஸ்த்ரீ எவள்?

அன்பு காட்டிய தங்களை அவமதித்தவள் யார்? எனக்கு புஷ்பமே ஆயுதமானாலும் மனவுறுதிக்குப் பிரசித்தி பெற்ற சிவபிரானது மனத்தையும் நான் கலங்கச் செய்வேன்'' என்றான். தான் கூற விரும்பியதையே மன்மதன் கூறியமையால் மனம் மகிழ்ந்த இந்திரன் மன்மதனிடம், ''மன்மத! உன் சக்தியை நான் அறிந்தவன். ஆதலால் உன்னை ஒரு பெரிய காரியத்தில் ஏவப் போகிறேன். இங்கு இருக்கின்ற தேவர்கள் அனைவரும் சிவபிரானது மகனைத் தங்கள் சேனைத் தலைவனாகச் செய்ய விரும்புகிறார்கள். சிவபிரானது மனத்தில் காதலைத்தூண்ட உன் ஒருவனால் தான் முடியும். ஹிமாலயத்தில் தவம் செய்யும் சிவபிரான் பார்வதியினால் பணிவிடை செய்யப்பட்டு வருகிறார். இப்போதே உன் நண்பன் வஸந்தனுடன் அங்கு சென்று சிவ பிரான் பார்வதியை விரும்பும்படி செய். நீ செய்யும் காரியம் மூவுலகிற்கும் நற்பயனை அளிப்பதாகும்'' என்றான்.

மன்மதன் தன் மனைவி ரதியுடனும் வஸந்தனுடனும் சிவபிரான் இருந்த இடத்திற்குச் சென்றான். வஸந்தன், அவ் வனத்தில், வஸந்தருதுவிற்குரிய காலம் அல்லாத போதும், வஸந்த ருதுவைத் தோற்றுவித்தான். அவ்வஸந்த ருது எங்கும் மலர்களையும், தளிர்களையும் தோற்றுவித்தது. கொடிகளும், செடிகளும், மரங்களும், மிருகங்களும், பறவைகளும், முனிவர் களும் கூட காதல் வசப்பட்டு இன்பத்தின் நுகர்ச்சியைப் பெற விரும்பினர். அப்பொழுது மலர்களையே ஆபரணமாக அணிந் திருந்த பார்வதி சிவபிரானுக்குப் பணிவிடைசெய்ய அவரது ஆச்ரமத்திற்கு வந்தாள். சிவ சேவகரான நந்திகேச்வரரின் அனுமதி பெற்றுத் தன் தோழியுடன் சிவபிரான் அருகில் சென்று தாமரை மணிமாலை ஒன்றை அவருக்குத்தர முற்பட் டாள். அன்பரிடம் அன்புடைய சிவபிரான் அவள் தரும் மாலையை ஏற்கத் தொடங்கினார். சிவபிரான் மேல் மலர்க் கணையை ஏவ விரும்பி ஆச்ரமத்தின் மரத்தின் மறைவில் மறைந்திருந்த மன்மதன் இதுவே தருணம் எனக்கருதி ஸம்மோ ஹனம் என்ற பாணத்தை வில்லில் தொடுத்தான். அதன் பயனாகச் சிவபிரான் சிறிது மனக்கலக்கம் பெற்று, பார்வதியின் முகத்தை சில கணங்கள் உற்று நோக்கினார். மறுகணமே உற்று நோக்குவது தகாது என உணர்ந்த சிவபிரான் தம்

மனக்கலக்கத்திற்குக் காரணம் என்னவென்று அறிய சுற்றி லும் நோக்கினர். மரத்தின் அருகில் வில்லை வளைத்து அவர் மேல் அம்பை எய்வதற்கு தயாராக நின்ற மன்மதனைக் கண்ட வுடன் அவருக்கு அடங்காக் கோபம் உண்டாயிற்று. தேவர் கள் பலரும், ''கோபம் கொள்ள வேண்டாம்'' என்று சிவ பிரானை வேண்டிக் கொண்டிருக்கும் போதே அவர் நெற்றிக் கண்ணினின்றும் வெளிவந்த அக்னி மன்மதன் மேல் விழுந்து அவனை சாம்பலாக்கியது.

தீப்பொறி எழுந்தவுடனேயே மூர்ச்சித்த ரதி மன்மதன் இறந்ததை முதலில் அறியவில்லை.

சிவபிரானை அழகினால் வசிகரிக்க விரும்பிய பார்வதி, தன் எண்ணம் ஈடேறாததைக் கண்டு மனம் வருந்தி வீட்டிற்குத் திரும்பினாள்.

சிவபிரானும், தவம் செய்வதற்கு அந்த இடம் தகுந்த தன்று எனக்கருதி, ப்ரமத கணங்களுடன் வேறு இடம் சென்றார்.

## நான்காவது ஸர்க்கம்

மூர்ச்சை தெளிந்த ரதி தன் கணவன் இருந்த இடத்தில் சாம்பல் மாத்திரமே இருப்பதைக் கண்டு அவன் இறந்து விட் டான் என்பதை அறிந்து பல கூறி வாய்விட்டுப் புலம்பினாள். வஸந்தனும் அழிக்கப்பட்டிருப்பானோ என அவள் ஐயுற்றபோது அவளுக்கு ஆறுதல் கூற வஸந்தன் அவள் எதிரில் வந்து நின் றான். ரதி அவனிடம், மன்மதன் இறந்தபிறகு தான் உயிர் வாழ விரும்பவில்லை என்பதைக்கூறி தான் இறப்பதற்கு துணை செய்ய வேண்டினாள்.

அப்பொழுது ஒரு அசரீரி கூறியது:—

''ரதியே, உன் கணவன் ஒரு ஸமயம் பிரம்ம தேவரின் மனத்தில் பொருந்தாக்காதலைத் தோற்றுவித்தான். அதனால் கோபம் கொண்ட அவர், 'சிவபிரானது நெற்றிக் கண் தீயினால்

அவன் இறக்க வேண்டும்' எனச் சபித்தார். தர்மதேவன் என்ற ஒரு தேவன் மன்மதனது குற்றத்தை மன்னித்து அருள் புரியும்படி வேண்ட, பிரம்மதேவர், 'சிவபிரான் பார்வதியை மணக்கும் போது மன்மதன் தனது உடலைப்பெற்று உயிர் பெற்றெழுவான் என அருள் புரிந்துள்ளார். எனவே நீ இறக்கத் தேவையில்லை. மன்மதனது சாம்பலை பாதுகாத்து வா'' என்றது.

அசரீரியின் வாக்கினால் சிறிது ஆறுதல் பெற்ற ரதி, சிவன்-பார்வதி திருமணத்தை எதிர்நோக்கியவளாக இருந்தாள்.

## ஐந்தாவது ஸர்க்கம்

அழகினால் சிவபிரானை வசீகரிக்க முயன்ற பார்வதி அது பயனளிக்காதபொழுது தவம் செய்து அவரை அடைய விரும்பினாள். பெற்றோரின் அனுமதி பெற்று இரு தோழிகளுடன் ஹிமாலயத்தின் ஒரு சிகரத்தில் இருந்து கொண்டு தவம் செய்தாள். சிறிது காலம் தவம் செய்த பின், தான் செய்யும் சாதாரண தவத்தால் பயன் பெற முடியாது என்பதை உணர்ந்த போது, அவள் கோடை காலத்தில் ஐந்து அக்னிகளின் மத்தியில் இருந்து கொண்டும், மழைக்காலத்தில் திறந்த வெளியில் இருந்து கொண்டும், பனிக் காலங்களில் நீர் நிலைகளில் கழுத்தளவு தண்ணீரில் நின்று கொண்டும் தவம் செய்தாள். தானாக மரத்தினின்றும் உதிர்ந்த இலைகளையே உண்டு வந்த அவள் கடும்தவம் செய்யும் காலத்தில் அதனையும் நீக்கினாள். அவளது தவப்பெருமையைக் கண்ட முனிவர்களும் அவளைக் காண வந்தனர்.

ஒரு சமயம் பிரம்மச்சாரி ஒருவர் அவளுடைய ஆச்ரமத்திற்கு வர, பார்வதி அவருக்கு அதிதிக்குரிய மரியாதை செய்தாள். உபசாரத்தை பெற்ற அதிதி பேசலுற்றார்:—

''பார்வதி! உன்னிடம் அதிதியாக வந்துள்ள என்னை அன்னியனாகக் கருதாதே. நான் கேட்கும் சில கேள்விகளுக்கு

பதில் கூறுவாயாக. நற்குலப் பிறவி, செல்வம், யௌவனப் பருவம் சிறந்த அழகு முதலியன பலவும் பெற்றுள்ளாய். தந்தை வீட்டிலிருக்கும் உனக்கு எவ்வித கஷ்டமும் நேர்ந்திராது. நல்ல ஒரு கணவனை அடைய விரும்பும் நீ தவம் செய்ய வேண்டியதில்லை. மூவுலகிலுள்ள அழகையும் பெற்றுள்ள உன்னை அடைய, ஒருவன் தானே வரவேண்டுமேயன்றி நீ அவனைத் தேடிச் செல்லத் தேவையில்லை. நீ எவ்வளவு காலம் கஷ்டப்படுவாய்? என் தவத்தில் பாதியை உனக்குத் தருகின்றேன். அதனைக் கொண்டு விரும்பிய வரனை நீ அடையலாம். ஆனால் அவன் யார் என்பதை எனக்கு முதலில் சொல்'' என்றார்.

பார்வதியின் தோழி, 'சிவபிரானே பார்வதியால் விரும்பப் படும் வரன்' என்று கூறியவுடன் பிரம்மச்சாரி பேசினார். ''பார்வதி! சிவபிரானை நான் நன்கு அறிவேன். அவர் அமங்கல மான காரியங்களைச் செய்பவர். பாம்புகளை அணிந்திருப்பவர். மயானத்தில் வசிப்பவர். உடலில் சாம்பல் பூசியிருப்பார். கிழ எருதே அவருக்கு வாஹனம். மூன்று கண்கள் உடையவர். நல்ல உடை உடுத்தாதவர். வரன்களிடத்தில் எந்தஎந்த குணங்கள் இருக்க வேண்டுமென்று மணப்பெண்ணும் பெற்றோரும் எதிர்பார்க்கின்றனரோ அவற்றில் ஒன்று கூட அவரிடத்தில் இல்லை. நீ அவரை மணக்க விரும்புவதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன்'' என்று கூறினார்.

பிரம்மச்சாரியின் வார்த்தைகளைக் கேட்ட பார்வதி கோபத்தினால் உதடு துடிக்க அவருக்கு பதில் கூறினாள். ''இவ்வாறு பேசுவதனின்றும் நீர் சிவபிரானை நன்கு அறியவில்லை என்பது புலனாகின்றது. உலகைப் பாதுகாக்கின்ற அவருக்கு மங்களப் பொருள்களால் ஆக வேண்டியது என்ன? பிறர்க்குச் செல்வம் அளிக்கும் அவர் தமக்கென செல்வமின்றி இருப்பார், மயானத்தில் வசிப்பவராயினும் மூவுலகத்திற்கும் தலைவராக உள்ளார். அவர் உடலில் பூசிய சாம்பலைத் தேவர்களும் தலையால் தாங்குகின்றனர். உம்முடன் நான் விவாதம் செய்ய விரும்பவில்லை. நீர் கூறிய குற்றங்கள் எல்லாம் அவரிடம் இருப்பதாகக் கொண்டாலும் என் மனம் அவரை அடைவதிலேயே உறுதியாக உள்ளது'' என்று கூறினாள்.

மேலும் அவர் பேச விரும்புவதைக் கண்ட பார்வதி ''இவ்விடத்தை விட்டு நானே வேறிடம் செல்வேன்'' என்று திரும்பிய போது, பிரம்மச்சாரி வடிவில் வந்த சிவபிரான் தன் சுய வடிவுடன் அவள் முன் தோன்றி அவள் கையைப்பற்றி, ''பார்வதி இன்று முதல் நான் உனது அருள் பெருந் தவத்தால் விலைக்கு வாங்கப்பட்ட உனது அடிமை'' என்று கூறி நின்றார்.

எதிர்பாரா வகையில் சிவபிரானைத் தன் முன் கண்ட பார்வதி வெட்கமும் நடுக்கமும் கொண்டாள். ஒரு கணம் அங்கு நிற்கவோ அங்கிருந்து செல்லவோ முடியாமல் திகைப் புற்றிருந்தாள். தான் கோரிய பலன் கிடைக்கப் பெற்றதால் இதுவரை பட்ட கஷ்டங்களை மறந்து ஒரு வகையான புதிய பொலிவுடன் காணப்பட்டாள்.

## ஆறுவது ஸர்க்கம்

தன்னை மணக்கத் தன் தந்தையின் அநுமதியைப் பெறும்படி சிவபிரானிடம் பார்வதி வேண்ட, அவரும் அதை ஏற்று பார்வதியை அவள் வீட்டிற்குச் செல்ல அனுமதித்தபின் ஸப்தரிஷிகளை மனத்தில் நினைத்தார். அவர்களும் உடனே சிவ பிரானிடம் வந்து வணங்கி தாங்கள் செய்ய வேண்டிய பணி யைக் கூறுமாறு வேண்டினார்கள்.

சிவபிரான், ''மகரிஷிகளே, உலகில் உள்ள ஜீவராசிகளின் நன்மைக்காகவே நான் முயல்கின்றேன் என்பது நீங்கள் அறிந்ததுதான். தேவர்கள் தங்கள் சேனைக்கு ஒரு தலைவனைப் பெற்றுத் தரும்படி வேண்டியிருப்பதால் நான் பார்வதியை மனைவியாக அடைய விரும்புகின்றேன். எனவே, நீங்கள் ஹிமவானிடம் சென்று பெண் தரும்படி எனக்காகக் கேளுங் கள்'' என்றார்.

மகரிஷிகள் சிவபிரானது ஆணையை சிரமேற் கொண்டு ஹிமவானுடைய அரண்மனைக்கு வந்தனர். ஹிமவான் அவர் களுக்குரிய மரியாதைதயைச் செய்த பிறகு அவர்கள் வந்த காரி

யத்தை அறிய விரும்பினன். மகரிஷிகளில் ஒருவராகிய அங்கிரஸ், ''மூவுலகத் தலைவரான சிவபிரான் உன் மகளைத் தமக்கு மணம் செய்விக்கும்படி எங்கள் மூலம் உன்னை வேண்டுகின்றார்'' என்று கூறவும், ஹிமவான் மிக மகிழ்ந்து மேனையின் அனுமதி பெற்றுப் பார்வதியை அருகில் அழைத்து, ''மகரிஷிகளே, சிவபிரானுடைய மணமகள் உங்களை வணங்குகிறாள்'' என்று கூறினன். பார்வதியும் மகரிஷிகளை வணங்கினாள். மகரிஷிகள் அன்றிலிருந்து நான்காவது நாள் விவாகத்திற்குரிய நல்ல நாள் என்று கூறிவிட்டு சிவபிரானிடம் வந்து எல்லாவற்றையும் கூறித் தம் இருப்பிடம் சென்றனர்.

## ஏழாவது ஸர்க்கம்

விவாஹதினத்தன்று ஹிமவான் பார்வதிக்கு விவாஹத்திற்கு அங்கமான நற்சடங்குகளை ஸ்த்ரீகளைக் கொண்டு செய்வித்தான். ஸ்த்ரீகள் பார்வதிக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து பட்டாடை அணிவித்து, அணிகலன்களால் அழகுறச் செய்தனர். மேனை பார்வதியின் நெற்றியில் திலகமிட்டு, கையில் ப்ரதிஸரம் என்ற நூலைக் கட்டினாள். ஸ்த்ரீகள் பார்வதியை விவாஹ மண்டபத்திற்கு அழைத்து வந்தனர்.

சிவபிரானும் மணமகனுக்கு ஏற்ற வகையில் ஆடை அணிகலன்கள் உடையவராக பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்களாலும் மகரிஷிகளாலும், ப்ரமத கணங்களாலும் சூழப்பட்டு விருஷபாரூடராக ஹிமவானின் நகரவாசலை அடைந்தார். ஹிமவான் தன் உறவினர்களுடன் எதிர்கொண்டு சென்று வரவேற்று அவரை விவாஹ மண்டபத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கு, விவாஹம் செய்யும் முறையை நன்கு அறிந்த புரோஹிதர் சிவபிரானுக்கும் பார்வதிக்கும் விவாஹம் செய்வித்தார். 'பார்வதி! நீ வீரனை ஒரு மகனைப் பெற வேண்டும்' என்று பிரம்ம தேவர் வாழ்த்தினர். விவாஹத்தின் முடிவில் தேவர்கள் முதலானவர்களை அனுப்பிவிட்டு தமக்கென அமைத்த ஒரு மாளிகையில் சிவபிரான் பார்வதியுடன் சிறிது காலம் தங்கியிருந்தார்.

# எட்டாவது ஸர்க்கம்

மாளிகையில் ஒரு மாத காலம் தங்கியிருந்த சிவபிரான் தம்முடைய பெருமை காரணமாக அச்சமும் வெட்கமும் கொண்டிருந்த பார்வதிக்குச் சிறிது சிறிதாக அவை நீங்கு வதற்கான வகையில் நடந்து அவளது மனத்தில் தைரியத்தை உண்டாக்கினுர். பிறகு மேரு மலை, மந்தர மலை, மலய மலை, நந்தன வனம் முதலான இடங்களில் சில காலம் பார்வதியுடன் இருந்து விட்டு, கந்தமாதன மலையில் தங்கி இல்லறத்தை நடத்தி வந்தார் என்று கூறி கவி காவ்யத்தை முடிக்கிருர்.

# குமாரஸம்பவத்திற்கு மூல நூல்

குமாரஸம்பவத்திற்கு மூல நூல்கள் யாவை?

கீழே தரப்பட்டுள்ள புராணங்களிலே பார்வதி விவாஹமும், குமார உத்பத்தியும், தாரக வதமும், சிலவற்றில் சுருக்கமாகவும் சிலவற்றில் விரிவாகவும் கூறப்பட்டுள்ளன:

1. ஸ்ரீமத் ராமாயணம் பால காண்டம், ஸர்க்கம் 36 – 37
2. மஹாபாரதம் — வன பர்வம் — அத். 227 – 33
3. சிவ புராணம் — ஞானஸம்ஹிதா — அத். 5 – 16
4. சிவ மஹாபுராணம் ருத்ரஸம்ஹிதா — பார்வதி கண்டம்
5. ஸ்கந்த புராணம் — கேதார கண்டம்— அத். 21 – 31; கௌமாரிகா கண்டம்—அத். 35 – 36
6. மத்ஸ்ய புராணம் — அத். 153
7. பத்ம புராணம் — அத். 6 – 38
8. லிங்க புராணம் — அத். 101 – 102

இப்புராணங்கள் எல்லாம் பார்வதி விஹாஹத்தை வெவ் வேறு வகையில் கூறுகின்றன. ஸ்கந்த புராணமும், லிங்க புராணமும் பார்வதி சிவபிரானை ஸ்வயம்வரத்தில் மணந்த தாகக் கூறுகின்றன. காளிதாஸர் பல புராணங்களில் கூறப்பட்டுள்ளனவற்றைப் பரிசீலனம் செய்து சிவ புராணத்தில் கூறியதைக் கருத்தில் கொண்டு, தமது ப்ரதிபா விசேஷத் தால் இம் மஹா காவ்யத்தை இயற்றினர் என்று புலனாகிறது.

## குமாரஸம்பவப் பெயர்ப் பொருத்தம்

காவ்யப் பொருளைப் பார்க்கும் பொழுது, கவி, காவ் யத்தின் பெயருக்கு ஏற்ப குமரன் பிறப்பைக் கூறவில்லை என்பது விளங்கும். எனவே காவ்யத்திற்குப் பெயர் பொருந்த வில்லை என்று சிலர் கருதலாம். இது சரியான கருத்து ஆகாது.

ஒரு பயன் நிகழ்வதற்கு வேண்டிய காரணங்கள் எல்லாம் நிரம்பி இருப்பதாகக் கூறப்படின் காரியமும் நிகழ்ந்ததாகக் கூறப்பட்டதாகும். பார்வதி, சிவபிரான் இவர்களின் திரு மணமே குமரன் பிறப்பிற்குரிய காரணமாதலால், அதனைக் கூறிய பின் குமரன் பிறப்பும் திண்ணமாய் நேரும் என்பது பெறப்படுவதாகும். உரையாசிரியர்கள் பலரும் இக் கருத்தை ஆதரிக்கின்றனர். மல்லிநாதர் எட்டாவது ஸர்க்கத்தின் தொடக்கத்தில் ("குமாரஸம்பவ பலே ஸர்கே அஸ்மின்") குமார ஸம்பவத்தைப் பயனாகக் கொண்ட சிவ-பார்வதி தம்பதிகளின் இல்வாழ்க்கையைக் கவி இந்த ஸர்க்கத்தில் வர்ணிக்கிறார் என்று கூறியுள்ளார்.

உரையாசிரியர் நாராயணர் கூறுவது:— "இரண்டாவது ஸர்க்கத்தின் தொடக்கத்தில், தாரகனால் துன்புறுத்தப்பட்ட தேவர்கள் பிரம்மாவிடம் முறையிடச் செல்வதை 'தாரகனால் துன் புறுத்தப்பட்ட' (2-1) என்று கூறியிருப்பதால் இக்காவ்யத்தின் முக்கியமான பொருள் தாரக வதமே. 'தாரக வதம்' என்றே பெயரும் இட்டிருக்க வேண்டும். 'குமாரஸம்பவம்' என்ற பெய ருக்கேற்ப குமரன் பிறப்பைக் கூறியிருக்கலாம். அதையும் அவர்

செய்தாரில்லை'' என்று சிலர் கருதலாம். இக்கருத்து சரியன்று. இரண்டாவது ஸர்க்கம் ச்லோகம் 51-இல் தேவர்கள் குமரன் பிறப்பை வேண்டியதால் அதுவே காவ்யத்தின் பொருளாகும். கவிக்கும் தாரக வதம் வரை எழுதுவதில் நோக்கில்லை. எனவே, குமாரஸம்பவம் என்ற பெயரே பொருத்தமானது.

பிரம்ம தேவரும், 59-ஆம் சுலோகத்தில் 'உமையின் அழகைக் கொண்டு சிவபிரான் மனத்தைக் கவருங்கள்' என்று கூறியதால் இதனையே காவ்யத்தின் முக்கிய பொருளாகக் கொள்ள வேண்டும். 'காரணம் முற்றிலும் இருப்பின் காரியம் தானே நிகழும்' என்பது பிரம்ம தேவரின் கருத்து. சிவபிரான் மனம் வசீகரிக்கப் பட்டதென்பது ஐந்தாம் ஸர்க்கத்தின் முடிவில் சுருங்கக் கூறப்பட்டுள்ளது. இதையே எட்டாம் ஸர்க்கத்தில், கவி விரிவாகக் கூறியுள்ளார். காவ்யத்தின் தொடக்கத்தில் 'உமையின் அழகால் சிவபிரான் மனத்தைக் கவருங்கள்' என்று தொடங்கி இருப்பதாலும், 'இன்று முதல் நான் உனது அடிமை' என்று காவ்யத்தின் நடுப் பகுதியில் [5-ஆம் ஸர்க்கம்] கூறி உறுதிப் படுத்தி இருப்பதாலும், முடிவில் எட்டாம் ஸர்க்கம் கடைசி சுலோகத்தில் 'சிவ-பார்வதி தம்பதிகள் ஒத்த கருத்துடன் மனமுவந்து இல்லற வாழ்க்கையை நடத்தி வந்தனர்' என்று முடித்திருப்பதாலும், குமாரஸம்பவம் என்ற பெயரே மிகவும் பொருத்த மானது என்பர் [குமாரஸம்பவம் முதல் சுலோகம் நாராயணர் உரை காண்க].

தாரகன் வதமே காவ்யத்தின் பொருளாக இருக்க வேண்டும் என்று கருதிய ஒருவர் ஒன்பது முதல் பதினேழு வரையுள்ள ஒன்பது ஸர்க்கங்களை எழுதிச் சேர்த்திருக்கிறார். இவர் தமது பெயரைக் குறிப்பிடவில்லை. இவர் ஒரு மஹாராஷ்ட்ரராக இருக்கலாம் என கீத் [Keith A. B.] என்ற பேராசிரியர் தமது 'ஸம்ஸ்க்ருத இலக்கிய வரலாறு' என்ற நூலில் கூறியிருக்கிறார்.

9 முதல் 17 ஸர்க்கங்கள் காளிதாஸர் எழுதியது அல்ல என்பதற்கு முக்கியமான சில காரணங்களை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்:

1. முதல் எட்டு ஸர்க்கங்களில் காணப்படும் சொல்லழகும், பொருளழகும், நடையழகும் இப்பகுதியில் இல்லை.

2. இலக்கணப் பிழைகளும் உள்ளன.

3. ஸம்ஸ்க்ருத அணி நூல் எழுதிய ஆசிரியர்கள் எல்லோருமே முதல் எட்டு ஸர்க்கங்களிலுள்ள சுலோகங்களையே தமது நூல்களில் மேற்கோளாகக் காட்டுகின்றனர். பிற்பகுதியிலிருந்து ஒரு சுலோகமும் தரப்படவில்லை. என்வே, இப்பகுதி அணி நூல் ஆசிரியர்கள் காலத்தில் இருக்கவில்லை என்பதையும் காட்டுகின்றது. இருப்பதாகக் கொள்ளினும் இதை அவர்கள் காளிதாஸருடையதாகக் கருதவில்லை என்பதும் தேரும்.

4. பழைய ஓலைச் சுவடிகள் பலவற்றிலும் ஏழு அல்லது எட்டு ஸர்க்கங்கள் உள்ள பகுதியே காணப்படுகிறது.

## குமாரஸம்பவம் என்ற பெயர்க் காரணம்

காளிதாஸர் வால்மீகியை மிகவும் போற்றுபவர். ரகுவம்சத் தொடக்கத்தில் அவரை பூர்வஸூரி என்ற சொல்லால் குறித்துள்ளார். தாம் எழுதும் 'ரகுவம்சம்' என்ற நூல், முன்பே வால்மீகியினால் ராமாயணம் என்ற துவாரம் செய்யப்பட்ட ரகுவம்ச மன்னர்களின் சரித்ரம் என்ற ரத்னங்களைக் கோக்கும் நூலாகும் என்றார். ஸூர்ய வம்சம் என்றோ மனுவம்சம் என்றோ பெயர் வைக்காமல் ரகுவம்சம் என்ற பெயர் வைத்ததற்குக் காரணம் இப்பதத்தை ராமன் வாயிலாக வால்மீகி உபயோகித்துள்ளார் என்பதே ஆகும்.

**" அஹம் ச ரகுவம்ச:ச "** [யுத்த காண்டம் 1-11.] **" ரகுவம்சஸ்ய சரிதம் "** [பால காண்டம் 4-9] என்ற வால்மீகியின் சொல் காளிதாஸரின் மனத்தைக் கவர்ந்து அதனையே தன் காவ்யத்திற்குப் பெயராக வைக்கத் தூண்டியது. இதே போல் குமாரஸம்பவம் என்ற பெயரும் வால்மீகி கூறியுள்ளதுதான். வால்மீகி, **" குமாரஸம்பவச்சைவ "** [பால காண்டம் 37-38] எனக் குமரன் பிறப்பைப் புகழ்ந்து ராமனுக்குக் கூறி இருப்பதும்

இப்பதமே தம் காவ்யத்திற்கும் பெயராக அமைய வேண்டுமென காளிதாஸர் கருதி இருக்கலாம்.

இப்படிக் கூறுவதால் காளிதாஸர் தமது காவ்யத்திற்குப் பெயர் வைப்பதிலும் பிறரை எதிர் நோக்கி இருந்தார் என்று கூறியதாகாது. இதனுல் அவருடைய ப்ரதிபைக்கு எவ்விதமான இழுக்கும் கூறப்பட்டதாகாது. தம்மால் போற்றப்படுவர்களும் தமக்கு முன் இருந்தவர்களுமான கவிகளின் கருத்தையும், சொற்களேயும், சொற்ரெடர்களேயும், பின் வந்த கவிகள் அவர்களிடம் தாம் கொண்ட அன்பின் அடையாளமாகத் தமது காவ்யங்களிலே உபயோகிப்பது தொன்று தொட்டு வந்த வழக்கமாகும். இதையே நன்னூல் ஆசிரியர் பவணந்தி கூறியிருப்பதாலும் அறியலாம்:

''முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும் பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும், முன்னோரின் வேறு நூல் செய்துமெனு மேற்கோளி லென்பதற்கும் கூறு பழஞ் சூத்திரத்தின் கோள்.''

— நன்னூல், பொதுப்பாயிரம்-9

என்பதும் இத்தகைய ஸம்ப்ரதாயம் நெடு நாளாக உள்ளது என்பதை வலியுறுத்தும்.

ஸ்ரீ வேதாந்த தேசிகன் உட்பட பின் வந்த கவிகள் பலரும் காளிதாஸரைப் பின்பற்றியுள்ளதை யாரும் குற்ற மாகக் கருதுவதில்லே.

## குமாரஸம்பவ காவ்யத்தின் முக்கியமான சுவை

காவ்யத்தின் தலேவர் சிவபிரான், தலேவி பார்வதி. முதல் ஸர்க்கத்தில் பார்வதியின் யௌவனப் பருவ வர்ணனே, மூன்ருவது ஸர்க்கத்தில் வஸந்த ருது வர்ணனே, ஐந்தாவது ஸர்க்கத்தில் பார்வதியின் விப்ரலம்பச்ருங்கார வர்ணனே, ஏழாவது ஸர்க்கத்தில் சிவ-பார்வதி விவாஹ-வர்ணனே, எட்டில்

தம்பதிகளின் இல்வாழ்க்கை வர்ணனை என ஐந்து ஸர்க்கங்களிலும் ச்ருங்காரமே முக்கியமான ரஸமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. மற்ற சுவைகள் அதற்கு அங்கமென்று கூறுவர்.

காதலர்கள் இணைவதற்கு முன்பும், இணைந்தபின் பிரிந்திருக்கும் நிலையிலும் அவர்கள் மனத்துள்ள காதலுணர்ச்சியை விப்ரலம்பச்ருங்காரம் [பிரிவாற்றுமை] என்பர். குமாரஸம்பவம் முதல் ஏழு ஸர்க்கங்களில் ஆங்காங்கு விப்ரலம்பச்ருங்காரமே வர்ணிக்கப்பட்டுள்ளது. காளிதாஸரின் பிற நூல்களிலும் மிகுதியும் வர்ணிக்கப்பட்டுள்ளது விப்ரலம்பச்ருங்காரம்தான். இச்சுவையின் தனிச் சிறப்பைக் கவி மேகஸந்தேசத்தில் விரிவாக வர்ணித்துக் காட்டினுர். அதே போல் தமது முழுத் திறமையையும் உபயோகித்து ஸம்போகச்ருங்காரத்தை குமாரஸம்பவத்தில் எட்டாவது ஸர்க்கத்தில் வர்ணித்திருக்கின்றுர்.

உரையாசிரியர் நாராயணர் குமாரஸம்பவத்தில் தயா வீரம் முக்கியமான ரஸம் என்பர். பண்டித ஜகந்நாதர் 'ரஸகங்காதரம்' என்ற தமது நூலில் [பக்கம் 37] வீர ரஸத்தை நான்கு வகையாகப் பகுத்து, கர்ணன் கொடையை தான வீரமாகவும், சிபி தன் உடலை அளித்ததை தயா வீரமாகவும், ராமனுடைய போர் ஆற்றலை யுத்த வீரமாகவும், யுதிஷ்டிரரின் தர்மத்தினின்று வழுவா நிலையை தர்ம வீரமாகவும் கூறுவர். இவை போல் பொறுமை வீரம், ஸத்ய வீரம், பாண்டித்ய வீரம் முதலியவற்றையும் ஏற்றுக் கொள்ளலாம் என்பது அவர் கருத்து.

நாராயணர் கூறுவது:—

''தாரகாசுரவதத்தைக் கருதி இக்காவ்யத்தில் வர்ணிக்கப்படுகின்ற குமரன் பிறப்பிற்கான சிவபிரான் சரிதத்தில் தயா வீரமே முக்கியமான ரஸம். ஸதியைப் பிரிந்தபின் வெறுப்புற்றுத் தவம் புரிந்த சிவபிரான் பார்வதியை மணக்க விரும்பியதற்குக் காரணம், அவளிடம் அவர் கொண்ட தயைதான் [ஸர் 5, சுலோ. 86 காண்க]. ஆறுவது ஸர்க்கத்தில் தேவர்கள், சிவபிரானிடம் சேனைத் தலைவனை வேண்டியதாகவும், தேவர்

களின் துயர் தீர்க்க விரும்பியே பார்வதியை மணக்க விரும்பு வதாகவும் சிவபிரான் கூறியுள்ளார்.

'மஹரிஷிகளே! என் முயற்சி எதுவும் எனது சொந்த நன்மையை உத்தேசித்ததன்று என்பதை நீங்கள் அறிவீர்கள். எனது எண் வகை உடலும் உலகத்தினற்கே பயன்படுவது. தாகத்தால் வருந்தும் சாதகப் பறவைகள் தண்ணீரை மேகத் தினிடம் யாசிப்பது போல் தாரகனல் துன்புறுத்தப்படும் தேவர்கள் நான் ஒரு மகனை படைக்க வேண்டும் என விரும்பு கின்றனர். எனவே மகனைப் பெறுவதற்காகவே பார்வதியை மணக்க விரும்புகிறேன்' [ஸர் 6, சுலோக 24 - 26] என்று கூறுவதிலிருந்து சிவபிரான் தேவர்களிடம் எல்லையற்ற தயை கொண்டிருந்தார் என்பதும், அது காரணமாகவே தவத்தை விட்டுப் பார்வதியை மணக்க முற்பட்டார் என்பதும் புலனாகும். சிவபிரானது இச்செயல் தயா வீரத்தின் பாற்படும் என்பது தெளிவு. எனவே, காவ்யத்தின் முக்கியமான ரஸம் ''தயா வீரம்'' என்பர். (முதல் ஸர்க்கம் சுலோகம் 53 - உரை காண்க.)

தமக்கே உரிய ஓர் உத்ஸாகத்துடன் ச்ருங்கார ரஸத்தை வர்ணிப்பதால் காளிதாஸர் நன்னடத்தையில் நோக்கற்றவர் என்பர் சிலர். இதற்கென ஆதாரமாக சில கதைகளையும் கூறுகின்றனர். உண்மையில் அவர் நன்னடத்தையில் நோக்குள் ளவர் என்பதற்குச் சான்றுகள் அவருடைய நூல்களிலே உள்ளன [என்னுடைய ரகுவம்சம் முன்னுரை பக்கங்கள் X, XI காண்க].

காளிதாஸர் வேதங்களையும், சாஸ்த்ரங்களையும் நன்கு பயின்றவர். மக்களின் மனத்தை நன்கு அறிந்தவர். உலக அறிவு மிகவும் உடையவர். அரசர்கள், பண்டிதர்கள், ஏழை கள் மற்றும் பலதரப்பட்ட மனிதர்கள் என இவர்களின் வாழ்க் கையையும் நன்கு அறிந்தவர். அவற்றில் உள்ள சிக்கல்களை யும், இன்ப துன்பங்களையும் நன்கு உணர்ந்தவர். இயற்கை யின் அழகைக் கூர்ந்து நோக்குபவர். அதனை அனுபவிக்கவும் பிறர்க்கு எடுத்துக் கூறும் வல்லமையும் பெற்றவர். ஒத்த இரண்டு கருத்துக்களை இணைத்துக் காட்டுவதென்பது கல்வி

அறிவு, ப்ரதிபை என்ற இவற்றின் பயனாக உள்ளது. இத்தகைய ஆற்றல் பெற்றவர்களுக்கே தாம் கூற விரும்பிய பொருளுக்கேற்ப உபமானத்தைக் கூற இயலும். ஏற்ற உபமானங்களைக் கூறுவது காளிதாஸரின் சிறந்த குணமாகும். இது காரணமாகவே ''உவமையில் சிறந்தவர் காளிதாஸர்'' என்ற பழமொழியும் ஏற்பட்டுள்ளது. அவருடைய உவமைகள் மிகப் பொருத்தமானவையாக இருப்பதுடன் மனத்தைக் கவரும் அழகு வாய்ந்தனவாகவும் இருக்கின்றன. மற்ற அணிகளைக் காட்டிலும் உவமையில்தான் அவருடைய கருத்து ஊன்றி உள்ளது. உவமைகளைக் கூறுவதில் இதுவரை காளிதாஸரை விஞ்சியவர் யாருமில்லை. இந் நூலைப் பயில்பவர்கள் காவ்யத்தின் பெருமையையும், கவியின் ப்ரதிபா விசேஷத்தையும் தாமே அறிவர். ஆதலால் இங்கு அதற்கென எடுத்துக் காட்டுகள் கூற வேண்டுவதன்று.

— உரையாசிரியர்

## உரையாசிரியருக்கு ஸ்ரீ ராஜாஜி அவர்களின் புகழுரை

ஸ்ரீ ராமோதந்தம் என்ற நூலிற்கு ஸ்ரீ வேங்கட ராகவாசார்யர் எழுதிய தமிழுரையைப் பாராட்டி ஸ்ரீ ராஜாஜி அவர்கள் தமது திருக்கரத்தாலேயே எழுதிய கடிதத்தைக் கீழே வெளியிடுகிறோம். அன்பர்கள் கண்டு மனமகிழ்வர் என்பது திண்ணம்.

— லிப்கோ பதிப்பகத்தார்

[illegible]
5.6.52

Blessings

[illegible]

[illegible] (49) [illegible]

[illegible]

# நன்றியுரை

இருபது ஆண்டுகட்குமுன்பே உருப்பெற்ற இவ்வுரையை வெளியிடும்படி **லிப்கோ** பதிப்பகத்தாருக்கு ஊக்கமூட்டியவர் சென்னையிலுள்ள உயர் நீதிமன்ற பிரபல வழக்கறிஞர் **ஸ்ரீமான் எஸ். ஸம்பத்குமார அய்யங்கார்** அவர்கள். மிகப் பொருட் செலவைக் கொண்ட இவ்வெளியீடு, அவரது தூண்டுதல் இல்லையேல், வெளிவருதல் அரிதினும் அரிதாக இருந்திருக் கும்.

இவ்வுரைப் பிரதியை, அச்சிடுவதற்காக மிகத் தெளி வான எழுத்தில் **குமாரி எஸ். ரேவதி, குமாரி ஆர். பட்டம்மாள்** இருவரும் பிரதி செய்து கொடுத்தனர். குமாரிகள், சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஸம்ஸ்க்ருதப் பிரிவில், ஸம்ஸ்க்ருதத்தில் டாக்டர் பட்டம் பெற ஆராய்ச்சி செய்துவருபவர்கள்.

இந்நூல் அச்சிடப்படும்பொழுது ப்ரூப் பார்ப்பதிலும், எட்டாவது ஸர்க்கம் உரையைத் திருத்துவதிலும் பல பிரதி களைப் படித்து ஒப்பு நோக்கிச் சரியான பாடத்தைத் தேர்ந் தெடுப்பதிலும் என்னுடனிருந்து உதவியவர் சென்னைப் பல் கலைக் கழக ஸம்ஸ்க்ருத விரிவுரையாளரும் என்னுடைய பழைய மாணாக்கருமான **டாக்டர் என். கங்காதரன்** அவர்கள் ஆவார்.

இந்நூலை அச்சிட மிக விருப்பத்துடன் ஏற்றுக்கொண்டு, திறம்பட முடித்தவர் அச்சக உரிமையாளர் **குருபக்த சிகாமணி ப்ரஹ்மஸ்ரீ தியாகராஜ அய்யர்** அவர்கள்.

காகித விலை, அச்சகக் கூலி முதலியன எல்லாமே உயர்ந் துள்ள இந்நாளில் புத்தகங்களை அச்சிட்டு வெளியிடுவதிலுள்ள

கஷ்டங்களை அத்துறையிலுள்ளவர்களே நன்கு உணர்வர். அச்சிட்ட நூலின் பிரதிகள் முழுவதும் வாசகர்களின் கைகளில் போய்ச் சேரும்வரை பதிப்பகத்தாரின் கவலை நீங்காது.

இத்தகைய இன்னல்கள் பலவற்றிற்கிடையேயும் இந்நூலை, காளிதாஸரிடம் உள்ள பக்தியாலும், ஸம்ஸ்க்ருத மொழியின்மீது கொண்ட அபிமானத்தாலும், தமிழ் அறிந்தோர்க்கு மஹாகவியை அறிமுகம் செய்து உதவவேண்டும் என்ற பெருநோக்கோடும் இதனை அச்சிட முன்வந்தவர்கள் **லிப்கோ** பதிப்பகப் பார்ட்னர் **ஸ்ரீ தி. ந. ச. வரதன்** அவர்களும், நிர்வாக அதிகாரி **ஸ்ரீ குரேரு வே. வேங்கடேச அய்யர்** அவர்களும் ஆவர்.

இவர்கள் எல்லோருக்கும் திருவேங்கடவன் எல்லா நன்மைகளையும் பாலிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்து, எனது க்ருதஜ்ஞதையையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தாம்பரம்-ஸானடோரியம்
சென்னை—600 047
1-4-1982

— **வேங்கட ராகவாசார்யர்**
உரையாசிரியர்

श्रीः

# कुमारसम्भवः

## प्रथमः सर्गः

अस्त्युत्तरस्यां दिशि देवतात्मा
हिमालयो नाम नगाधिराजः ।
पूर्वापरौ तोयनिधी वगाह्य
स्थितः पृथिव्या इव मानदण्डः ॥ १ ॥

**उत्तरस्याम् दिशि**-வடக்குத் திசையில், **देवता-आत्मा**-தெய்வத் தன்மையுடையதும், **पूर्वापरौ** - கிழக்கிலும் மேற்கிலும் உள்ள, **तोयनिधी** - இரு ஸமுத்ரங்களிலும், **वगाह्य** - புகுந்து, **पृथिव्याः**- பூமியை, **मानदण्डः इव** - (அளக்கும்) அளவுகோல் போன்று, **स्थितः**- இருப்பதும், **हिमालयः नाम** - ஹிமாலயம் எனப் புகழ் பெற்றதுமான, **नगाधिराजः**-சிறந்த மலை ஒன்று, **अस्ति**-இருக்கிறது.

*(க-து) வடதிசையில் மலைகளில் சிறந்த ஹிமாலயம் இருக்கின்றது. அது மலையின் வடிவில் மாத்திரமன்றி தெய்வ வடிவிலும் இருப்பதாகும். அம்மலை கிழக்கிலும் மேற்கிலும் உள்ள கடல்கள் வரை சென்று வியாபித்திருப்பதால், இப்பாரத பூமியின் அகலத்தை அளக்கும் ஒரு அளவுகோல் போலுள்ளது.*

देवतात्मा - கல்லும் மண்ணுமான மலைவடிவுதவிர அம்மலைக்குத் தலைவனான தேவன் ஒருவன் உண்டு. அத்தெய்வ வடிவினையும் ஹிமாலயம் என்றே கூறுவர். மலைவடிவம் தெய்வவடிவம் ஆகிய இரண்டினையுமே காளிதாஸர் வர்ணிக்கின்றார்.

மலை மணம் செய்துகொண்டது எனக் கூறும்போது அம்மலைத்தேவன் மணம் செய்துகொண்டான் எனக் கருத வேண்டும். மரம் முதலியவற்றைக் கூறும்பொழுது மலை வடிவத்தைக் கூறுகின்றார் என எண்ணவேண்டும். देवता-आत्मा - தேவ வடிவம் கொண்ட என்பது பதப் பொருள். पृथिव्या इव मानदण्डः- இச்சுலோகத்தின் இரண்டாவது பகுதியில் கவி ஹிமாலயத்தின் மலைவடிவினைப் பற்றிக் கூறுகின்றார்.

ஹிமாலயத் தொடர்ச்சி கிழக்கிலும் மேற்கிலும் வியாபித்திருப்பதால் கவி, அதனைப் பாரத தேசத்தின் அகலத்தை அளக்கும் அளவுகோலாகக் கூறினார்.

नग-अधिराज:- மலைகளுக்குத்தலைவன்; மலைகளில் சிறந்தது. नगः - மலை ; 'स्थावराणां हिमालयः'' என்பது பகவத்கீதை. அத். 10, சு. 25.

उत्तरस्यां, दिशि - வடதிசை தேவர்களின் நிலம் என்பர். எனவே ஹிமாலயமும் தேவர்கள் வாஸம் செய்யும் இடம் என்பது பெறப்படும்.

நூலாசிரியர்கள் மங்களம் என்று கூறப்படும் கடவுள் வணக்கத்தைப்பற்றிய சுலோகத்தைத் தமது நூலின் தொடக்கத்தில் அமைப்பது வழக்கம்.

இம் மங்களம் மூன்று வகையில் இருக்கும். படிப்பவர்களுக்கு நன்மை வழங்க வேண்டுமெனக் கடவுளிடம் கேட்டுக்கொள்தல் "ஆசிஸ்" அல்லது நன்மை கோருதல் என்ற முதல்வகையாகும்.

இவ்வகையில் சேர்ந்த மங்களசுலோகம் சாகுந்தளத்தின் தொடக்கத்தில் உள்ளது. "வணங்குகின்றேன்" எனக் கூறும் மங்களம் இரண்டாவது வகையாகும். இதனை நமஸ்காரம்

அல்லது வணக்கம் என்று கூறுவர். இது ரகுவம்சத்தின் தொடக்கத்தில் உள்ளது. சிறந்த குணமுள்ள கதாநாயகன், கதையின் முக்கியமான அம்சம் இவைகளை முதலில் குறிப்பது वस्तुनिर्देशम्- பொருள் குறித்தல்-என்ற மூன்ருவது வகை மங்களமாகும். இம்முறையில் கவி இங்கு கதாநாயகனுகிய சிவபிரானைப்பற்றிக் கூற வேண்டுமாயினும் இக்காவியத்தின் முக்கிய வரலாற்றுடன் இணைந்துள்ளவனும், "மஹா விஷ்ணுவே இவன்" எனக் கூறப்படுபவனுமான ஹிமவானைப் பற்றி முதலில குறிப்பிட்டார். இதுவே நூலின் முதலில் உள்ள மங்களமாக அமைகின்றது. "पताकानायक निर्देशस्यापि वस्तुनिर्देशत्वम्" என்பர் நாராயணர் என்ற உரைகாரர். अ என்பது விஷ்ணுவைக் குறிக்குமாதலால் अस्ति என்பதிலுள்ள முதல் எழுத்தே மங்களமாக அமையும் என்றும் கூறுவர் சிலர்.

यं सर्वशैलाः परिकल्प्य वत्सं
मेरौ स्थिते दोग्धरि दोहदक्षे ।
भास्वन्ति रत्नानि महौषधीश्च
पृथूपदिष्टाम् दुदुहुर्धरित्रीम् ॥ २ ॥

सर्वशैलाः - எல்லாமலைகளும், यम् - எந்தஹிமாலயத்தை, वत्सम् - கன்ருக, परिकल्प्य - ஏற்படுத்திக்கொண்டு, दोहदक्षे - கறப்பதில் திறமை வாய்ந்த, मेरौ-மேருமலை, दोग्धरि-கறப்பவனுக, स्थिते (सति) - இருக்கும் போது, पृथूपदिष्टाम् - பிருது மஹாராஜனுல் ஆணையிடப்பட்ட, धरित्रीम्-(பசுவின் வடிவிலிருந்த) பூமியினிடமிருந்து, भास्वन्ति - ஒளி பொருந்திய, रत्नानि - ரத்னங்களையும், महा-ओषधीश्च - சிறந்த மூலிகைகளையும், दुदुहुः - கறந்து கொண்டனவோ, सः-அத்தகைய ஹிமாலயம் (उत्तरस्यां दिशि अस्ति) வடக்குத் திசையில் உள்ளது.

(க-து) மலைகள் எல்லாம் ஒன்று சேர்ந்து மேருமலையைப் பால் கறப்போனாகவும் ஹிமாலயத்தைக் கன்றாகவும் கொண்டு பசுவடிவி லிருந்த பூமியினிடமிருந்து பாலாகக் கருதப்படும் பலவகை ரத்னங் களையும் சிறந்த மூலிகைகளையும் கறந்து பெற்றுக்கொண்டன. பூமி என்ற பசுவிற்குக் கன்றாகவிருக்கும் பெருமையையும் பிற மலைகளால் கௌரவிக்கப்படும் நிலையையும் பெற்றது இந்த ஹிமாலயம்.

இது முதல் பதினாறு சுலோகங்கள் ஹிமயமலையை வர்ணிக்கின்றன. இந்த சுலோகங்களில் எல்லாம் ஹிமய மலையைக் குறிக்க य:, यस्य, यस्मिन् போன்ற-“ எந்த, எதனுடைய எதில் ” என்ற பொருள் உள்ள சொற்கள் உபயோகிக்கப் பட்டுள்ளன. இச் சொற்களுடன் இயைபுள்ள ‘அந்த’ स: என்ற சொல்லை வருவித்தும், அத்துடன் हिमालय: नगाधिराज: अस्ति என்ற முதல் சுலோகத்திலுள்ள பதங்களைக் கூட்டியும் பொருள் கூறவேண்டும். இம்முறையைப் பின்பற்றியே இச் சுலோகவுரை உள்ளது.

ஆனால் இனி வரும் சுலோகங்களில் பொருள் எளிதில் விளங்க வேண்டுமென்பதைக் கருதி स: என்பன போன்ற சொற்களை வருவிக்காமல் य: என்பதற்கு “ ஹிமாலயம் ” என்றே பொருள் கூறப்படும்.

“ यं वत्सं परिकल्प्य ” இச்சுலோகத்தில் கூறப்படும் வரலாறு.

வேனன் என்ற அரசனின் மகனானபிருது என்பவன் அரசாண்டு வருகையில் ஒரு சமயம் பெரும் பஞ்சம் ஏற்படவும் மக்கள் பிருதுவினிடம் சென்று “நாங்கள் விதைக்கும் விதைகள் முளைப்பதில்லை. மண்ணே அவற்றை விழுங்கி விடுகிறது, ஆதலால் நாட்டில் எங்கும் பஞ்சம் உளது” என முறை யிட்டனர். பூமியின் இவ்வடாத செய்கையைக் கண்டு

அதனைத் தண்டிக்கக் கருதி பிருது கையில் வில்லை எடுத்ததும், பூமி பசுவின் வடிவம் தாங்கி ஓடி மறைய முயன்றது. அவன் அதனைத் தொடர்ந்து சென்று அடிக்க முற்படவும், பூமிதேவி, அயோக்கியர்கள் உலகில் மலிந்து விட்டதால்தான், தானியங்களை அளிக்கவில்லையென்றும், துஷ்டர்களை ஒழித்தபின் பிருது, பசுவின் வடிவிலுள்ள தன்னிடமிருந்து விரும்பிய பொருள்களை எல்லாம் பால் வடிவில் கறந்து கொள்ளலாம் என்றும், ஆனால் ஒவ்வொரு பொருளையும் பெறுதற்குத் திறமைவாய்ந்த கறப்போனையும், தகுந்த கன்றினையும் அமைத்துக் கொள்ளவேண்டும் என்றும் கூறினாள். மனு என்பவரைக்கன்றாக வைத்து, பிருது, தன்கையிலே பால் வடிவில் தானியங்களைப் பெற்றுக் கொண்டான.

மலைகள், மேருவைக் கறப்பவனாகவும். ஹிமாலயத்தைக் கன்றாகவும் கொண்டு பால் வடிவில் சிறந்த ரத்னங்களையும், சிறந்த மூலிகைகளையும் பெற்றன. தாய்ப் பசுவிற்குக் கன்றினிடம் அதிக வாத்ஸலயம் உண்டு எனவே பூமிக்குக் கன்றாக இருந்து அதனது அன்பைப் பெற்றவன் ஹிமவான். மற்றமலைகளும் பயன் பெற உதவியவன் ஹிமவான் என அவனது பெருமை கூறப்படுகிறது. கன்றில்லாமல் பால் கறப்பதை சாஸ்திரங்கள் அனுமதிப்பதில்லை.

पृथूपदिष्टाम् - பிருதுவினால் ஆணையிடப்பட்ட; பிருது தான் கறந்து கொண்டது மட்டுமின்றி மற்றவர்கள் கறந்து கொள்வதற்கும் பூமி உதவ வேண்டுமென உத்தரவு இட்டான். ஆதலால் தேவர், முனிவர் முதலிய பலரும் தாம் தாம் விரும்பியதைப் பூமியினிடமிருந்து பெற்றனர். இவ்வரலாறு ஸ்ரீபாகவதம் நான்காவது ஸ்கந்தம் அத்தியாயம் பதினெட்டிலும், விஷ்ணுபுராணம் முதல் அம்சம், பதின்மூன்றாவது அத்தியாயத்திலும் கூறப்பட்டுள்ளது.

गौर्भूमिः, अचलाः सर्वे कर्तारोऽत्र पयांसि च । ओषध्यश्चैव भास्वन्ति रत्नानि विविधानि च ॥ वत्सश्च हिमवानासीत् दोग्धा मेरुर्महागिरिः
மத்ஸ்யபுராணம் 10-20 காண்க

अनन्तरत्नप्रभवस्य यस्य
हिमं न सौभाग्यविलोपि जातम् ।
एको हि दोषो गुणसन्निपाते
निमज्जतीन्दोः किरणेष्विवाङ्कः ॥ ३ ॥

**अनन्त-रत्न-प्रभवस्य** - எண்ணற்ற சிறந்த பொருள்களுக்குக் காரணமான, **यस्य** - ஹிமவானுக்கு, **हिमम्** - உறைந்தபனி, **सौभाग्य-विलोपि** - (மதிப்பை), அழகைக் குறைப்பதாக, **न-जातम्**- ஆகவில்லை; **हि** - ஏனெனில், **एकः** - ஒரு, **दोषः** - குறை, **गुण-सन्निपाते** - நற்குணங்களிடையில், **इन्दोः** - சந்திரனுடைய, **किरणेषु** - கிரணங்களிடையில், **अङ्कः इव** - களங்கம் (மறைவது) போல, **निमज्जति** - மறைந்து விடுகிறது.

*(க-து) தண்ணிய ஒளிபொருந்திய கிரணங்களைக் கருதி சந்திரனுடைய களங்கத்தைப் பாராட்டாததுபோல் பல்வகைச் சிறந்த பொருள்கள் உண்டாவதற்குக் காரணமான ஹிமவானிடத்தில் எப் பொழுதும் உறைபனி இருத்தலை ஒரு குறையாகக் கருதவில்லை பெரியோர்கள். பல நற்குணங்களிடையில் ஒரு குறை, குறையாகத் தோன்றுவதில்லை. பல சிறந்த பொருளைத் தருவதால், ஹிமவான், பலருக்கும் உபகாரியாக இருந்தான் என்பது கருத்து.*

अनन्त-रत्न-प्रभवस्य பெண்களிற் சிறந்த உமாதேவியும், வைடூரியம் முதலான விலையுயர்ந்த ரத்னங்களும், தேவதாரு, முதலியசிறந்த மரங்களும், ஸஞ்ஜீவனீ முதலிய அரிய மூலிகைகளும்,கங்கை முதலிய சிறநத நதிகளும், ஸோமலதை முதலிய யாகத்திற்கு உரிய பொருள்களும் உண்டாவதற்கு

இருப்பிடமான ஹிமவானைக் கவி, சிறந்த ரத்னங்களுக்குக் காரணம் எனக் கூறினர். அந்தந்த இனத்தில் சிறந்த பொருளை ரத்னம் என்பது மரபு.

" हिमं सौभाग्यविलोपि " எப்பொழுதும் பனி உறைந்திருப்பதால் மலையின அழகும் அதனிடம் நாம் கொண்டுள்ள மதிப்பும் குறையுமோ என்ற சந்தேகம் வேண்டாம். ஹிமவானிடமிருந்து பெறப்படும் பல நன்மைகளைக் கருதும்பொழுது இது ஒரு குறைபாடாகாது. இவ்வகையில் உதாஹரணமாக வருவன சந்திரனது களங்கமும் கிரணங்களும். निमज्जति மூழ்குகின்றது - மறைகின்றது.

यश्चाप्सरोविभ्रममण्डनानां
संपादयित्रीं शिखरैर्बिभर्ति ।
वलाहकच्छेदविभक्तरागाम्
अकालसन्ध्यामिव धातुमत्ताम् ॥ ४ ॥

**यः**- அந்த ஹிமவான், **अप्सरो-विभ्रम-मण्डनानाम्** - அப்ஸர ஸ்த்ரீகளின் கேளிக்கைகளுக்கு உதவும் அழகு ஸாதனங்களை, **संपादयित्रीम्** - தருகின்றதும், **वलाहक-च्छेद-विभक्त-रागाम्**-சிதறிய மேகங்களில் பரவிய சிவப்பு நிறம் உடையதும், **अकाल-सन्ध्यां-इव** ஸூரியன் அஸ்தமிக்காதபோதே நிகழ்ந்த சாயங்கால நேரம் போல் இருப்பதுயான, **धातुमत्ताम्** - செங்காவிப்பொடிகளை, **शिखरैः** - தனது சிகரங்களால், **बिभर्ति** - தாங்கிக் கொண்டிருக்கிறது.

(க-து) *ஹிமாலயத்தில் வஸிக்கும் அப்ஸரஸ்த்ரீகள் தம் காதலர்களை ஸந்திப்பதற்கு முன் அலங்காரம் செய்து கொள்கின்றனர். அவர்களது அழகிற்குத் தேவையான பலவர்ணப் பொடிகள், சிறப்பாகச் செங்காவிப் பொடிகள், அம்மலையின் சிகரங்களில்*

*ஏராளமாக உள்ளன. செங்காவிப் பொடிகளின் சிவப்பு நிறம் மலைச் சிகரங்களில், காற்றினால் சிதறிக்கிடக்கின்ற மேகங்களில் பிரதிபலிக்கின்றன. எனவே ஸூரியன் அஸ்தமிக்காத பொழுதே ஸாயங்காலம் வந்து விட்டது என்ற எண்ணத்தை உண்டாக்குவதற்குக் காரணமாக இருந்தன இச் செங்காவிப்பொடிகள்.*

अप्सरसः- பாற்கடலைக் கடைந்த பொழுது அதனின்றும் வந்தவர்கள். இவர்கள் தேவர்களின் பொது மகளிர் ஆவர்.

विभ्रम-காதற்கேளிக்கைகள். मण्डन-அவற்றிற்கு உதவுகின்ற அலங்காரப் பொருள்கள். वलाहक - மேகம். छेद - சிதறிய துண்டுகள். மலையுச்சியில் காற்றினால் மேகங்கள் சிதறுண்டு சிறு சிறு துண்டுகளாக இருக்கின்றன.

विभक्तराग-மலைச் சிகரத்தில் உள்ள செங்காவிப்பொடிகளின் சிவப்பு நிறம், சிகரங்களில் உள்ள மேகங்களில் பிரதிபலித்தன.

अकाल सन्ध्यां इव-ஸாயங்காலத்தில் மேகங்கள், ஸூரியனது செந்நிறக்கதிர்களினால் சிவந்து காணப்படும். இங்கே செங்காவிகளின் நிறத்தால் மேகங்கள் சிவந்து தென்பட்டன.

அதனால் ஸூரியன் அஸ்தமிப்பதற்கு முன்பே ஸந்தியா காலம் வந்துவிட்டதோ என்று நினைக்கும்படி இருந்தது.

ஸந்தியாகாலம் மேகத்திற்குச் சிவப்பு நிறம் அளிப்பது. செங்காவியும் சிவப்புநிறம் அளிப்பது. மேகத்திற்குச் சிவப்பு நிறம் அளித்தல் என்பது இரண்டிற்கும்பொதுவாக இருத்தலால் கவிசெங்காவிப்பொடியினை ஸந்தியாகாலமாக உத்ப்ரேக்ஷித்தார்.

अकालसन्ध्याम् - உரிய காலத்தில் நிகழாத ஸாயங்காலம் - அதாவது ஸூரியன் அஸ்தமிக்காத பொழுதே நிகழ்ந்த ஸாயங்காலம் என்பது கருத்து.

धातुमत्-செங்காவிப்பொடிகளை நிறைய உடையது. धातुमत्ताम्-அவ்வாறு இருக்கும் நிலை. தெளிவைக் கருதி இங்கு செங்காவிப்

பொடிகள் என்றே பொருள் தரப்பட்டது செங்காவிப்பொடிகளை யுடையதாக இருக்கும் நிலையைத் தாங்கிக்கொண்டு இருக்கிறது என்பது பதப்பொருள். ஹிமாலயம், காதலர்கள் இன்பம் துய்ப்பதற்கு வேண்டியபொருளையும் தருவது என்பது இதனில் கூறப்பட்டது.

आमेखलं सञ्चरतां घनानाम्
छायामधस्सानुगतां निषेव्य ।
उद्वेजिता वृष्टिभिराश्रयन्ते
शृङ्गाणि यस्यातपवन्ति सिद्धाः ॥ ५ ॥

सिद्धाः- ஸித்தர்கள் என்றழைக்கப்படும் தேவ வகையினர், आमेखलम् - ஹிமாலயத்தின நடுப்பகுதி வரை, सञ्चरताम् - ஸஞ்சரிக்கின்ற, घनानाम् - மேகங்களுக்கு, अधः-सानु-गताम् - கீழுள்ள ஸம பிரதேசங்களில் இருக்கும், छायाम् - நிழலை, निषेव्य - அனுபவித்தபின், वृष्टिभिः - மழையினால், उद्वेजिताः - வருந்தி, यस्य - ஹிமாலயத்தின், आतपवन्ति-வெய்யில் மிகுந்த, शृङ्गाणि - சிகரங்களை, आश्रयन्ते - அடைகின்றனர்.

*(க-து) ஹிமாலயம் மேக மண்டலத்திற்கு மேலும் உயர்ந்துள்ளது எனவே அம்மலையின் நடுப்பகுதிகளில் ஸஞ்சரிக்கின்ற மேகங்கள் தரும் நிழலை, ஸித்தர் என்ற தேவவகையினர், மலையின் கீழ்ப்பகுதிகளில் இருந்து அனுபவிக்கின்றனர். அம்மேகங்கள் மழை அதிகம் பொழிந்து துன்பம் அளிக்குமாயின் அந்த ஸித்தர்கள் மேகங்கள் இல்லாது நல்ல வெய்யிலுடனிருக்கும் சிகரங்களில் ஏறி மகிழ்கின்றனர். ஆதலால் ஹிமாலயத்தில் குளிர்ச்சியோ உஷ்ணமோ விரும்பியபடி கிடைக்கின்றது.*

सिद्धाः- தேவர்களில் ஒரு வகையினர், मेखला - மலையின் இடைப்பகுதி, आमेखलम् - இடைப்பகுதிகள் முற்றிலும், घनानाम् - இதனை, छायां - என்பதுடன் சேர்த்து, 'மேகங்களின் நிழலை'

என்று பொருள் கொள்ள வேண்டும். நிழலுள்ள இடத்தைக் காட்டவந்தசொல், "अध: सानु" என்பது. सानु - பர்வதசிகரம், அல்லது மலைகளில் உள்ள ஸமமான தரைகள். மேகங்கள் தந்த நிழல், கீழுள்ள தாழ்ந்த சிகரங்களிலும், ஸமதளங்களிலும் விழுந்தது. அதனை ஸித்தர்கள் அனுபவித்தனர். उद्वेजिता:- மழையினால் வெறுப்புற்றவர்கள். आतपवन्ति शृङ्गाणि-மேக மண்டலத்திற்கு மேலுள்ள சிகரங்கள் எப்பொழுதும் வெய்யில் உடையன. எனவே வெய்யிலை விரும்பியபொழுது, மேலே சென்றனர். மழையையோ, குளிர்ச்சியையோ விரும்பிய பொழுது கீழே வந்தனர் ஸித்தர்கள்.

**पदं तुषारस्रुति धौतरक्तं**
**यस्मिन्नदृष्ट्वापि हतद्विपानाम् ।**
**विदन्ति मार्गं नखरन्ध्रमुक्तैः**
**मुक्ताफलैः केसरिणां किराताः ॥ ६ ॥**

**यस्मिन्** - அம் மலையில், **किराताः**- வேடர்கள், **तुषार-स्रुति-धौत-रक्तम्** - பனிப் பெருக்கினால் ரத்தம் அலம்பப்பட்டிருப்பினும், **हत-द्विपानाम्** - யானைகளைக்கொன்ற, **केसरिणाम्** - சிங்கங்களின், **पदम्** - அடிச்சுவட்டை, **अदृष्ट्वा-अपि** காணாவிடினும், **नख-रन्ध्र-मुक्तैः** (சிங்கங்களின்) நகத்திடையினின்றும் நழுவிய (தரையில் கிடக்கும), **मुक्ताफलैः** சிறந்த முத்துக்களால், **मार्गम्**-சிங்கங்கள் சென்ற வழியை, **विदन्ति** - அறிகின்றனர்.

*(க-து) ஹிமாலயத்தில் பெரிய யானைகள் உண்டு. யானைகளின் மஸ்தகங்களில் முத்துக்களிருப்பதாகக் கூறுவர். சிங்கங்கள் யானைகளைக்கொன்று அவைகளின் மஸ்தகத்தைக் கிழிக்கும்பொழுது முத்துக்கள் அவைகளின் கால் நகங்களிடையில் சிக்குகின்றன. யானைகளைக் கொன்ற சிங்கங்களின் அடிச்சுவடுகளில் உள்ள ரத்தக் கறை பனிப் பெருக்கினால் அலம்பப்பட்டு விடுவதால், அதனைக்*

*கொண்டு, சிங்கம் சென்ற வழியை அறிய முடியாதாயினும், சிங்கங்களை வேட்டையாட விரும்பும் வேடர்கள், அவற்றின் நகங்களிலிருந்து உதிர்ந்த முத்துக்கள் தரையில் கிடப்பதைக் கண்டு அதன் மூலம் சிங்கங்களிருக்கும் இடம் சென்று வேட்டையாடி மகிழ்கின்றனர்.*

ஹிமாலயத்தில் முத்துக்கள் உண்டு. வேட்டையாடி இன்பம் பெற விரும்புகிறவர்களுக்கு வேண்டிய வாய்ப்புக்களும் அங்கு உண்டு என்பது இதனுல் பெறப்படும். இன்பம் நுகரும் வழிகளில் ஒன்று வேட்டையாடுவது

तुषारस्रुति धौतरक्तम् - என்பதை, पदम् - என்பதுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். "அடிச்சுவட்டின் ரத்தம், உருகிப்பெருகும் பனி நீரால் அலம்பப்பட்டதாயினும்" என்பது கருத்து. पदम् - அடிச்சுவடு, केसरी - சிங்கம், "பிடரிமயிர் உடையது" என்பது பொருள்.

अदृष्ट्वा अपि - ரத்தமுள்ள அடிச்சுவட்டைக் காண முடிவதில்லை. ஏனெனில் உருகிய பனி ரத்தத்தைக் கழுவி விடுகின்றது.

नख-रन्ध्र-मुक्तैः :- சிங்கங்களின் நகங்களில் சிறு குழிகள் உண்டு என்றும், அக்குழிகளில் சிக்கிய முத்துக்கள் உதிர் கின்றன என்றும் கூறுவர். நகங்களின் வளைவுகளில் சிக்கியவை என்றும் கொள்ளலாம்.

मुक्ताफलैः :- முதிர்ந்த முத்துக்களால்; யானையின் தலையில் முத்து உண்டாவதாக அகஸ்தய முனிவர் கூறியுள்ளார்.

"द्विपेन्द्र - जीमूत - वराह - शंख-मत्स्य-अहि-शुक्त्युद्भव-वेणुजानि ।
मुक्ताफलानि प्रथितानि लोके तेषां तु शुक्त्युद्भवमेव भूरि ॥"

என்பதைக் காண்க.

किराताः विदन्ति - கவி காளிதாஸர் வேட்டையாடுதலை "ईहग्विनोदः कृतः" இத்தகைய மனமகிழ்ச்சி வேறு எதினின்றும்

கிடைக்கும் என்று புகழ்ந்துள்ளார். சிங்கத்தை வேட்டையாடுவது வீரர்களுக்கு மிக மகிழ்ச்சி தருவதாகும். வீரர்கள் வேட்டையாடி மகிழ்வதற்கும் உதவுவது ஹிமாலயம் என்பது கருத்து.

न्यस्ताक्षरा धातुरसेन यत्र
भूर्जत्वचः कुञ्जरबिन्दुशोणाः ।
व्रजन्ति विद्याधरसुन्दरीणां
अनङ्गलेखक्रिययोपयोगम् ॥ ७ ॥

यत्र ஹிமாலயத்தில், धातु-रसेन - செங்காவி நீரினால், न्यस्त-अक्षरा - எழுதப்பட்டுள்ள எழுத்துக்களையுடையனவும், कुञ्जर-बिन्दु - शोणा :- வயது முதிர்ந்த யானைகள் உடலில் காணப்படுவது போன்ற சிவந்த புள்ளிகளையுடையனவுமான, भूर्जत्वच :- பூர்ஜமரத்தின் பட்டைகள், विद्याधर-सुन्दरीणाम् - வித்யாதரஸ்த்ரீகளுக்கு, अनङ्ग - लेख - क्रियया - காதல கடிதம் எழுதுதலினால், उपयोग - பயனுள்ள நிலையை, व्रजन्ति - அடைகின்றன.

(க-து) *ஹிமாலயத்திலுள்ள வித்யாதரஸ்த்ரீகள் பூர்ஜமரத்தின் பட்டைகளில் செங்காவிப்பொடிகள் கரைந்த நீரினால் எழுத்துக்களை எழுதி, தம் காதலைக் காதலர்களுக்குத் தெரிவிக்கின்றனர். அப் பட்டைகள் ஆங்காங்கு சிவந்த நிறமுடையனவாய், வயது முதிர்ச்சியினால் சிவந்த புள்ளிகளையுடைய யானைகளின் உடல் பகுதி போல் காணப்பட்டன.*

இவ்வகையில் காதலர்கள் விரும்பும் உதவியையும் அளித்தது ஹிமாலயம்.

இதிலும் அடுத்து வரும் மூன்று சுலோகங்களிலும் கலவி இன்பத்தை அனுபவிப்பதற்கு வேண்டிய பொருள்களும் அம் மலையில் உண்டு என்பதைக் கவி கூறுகிறார்.

धातुरस :- செங்காவிப் பொடி கலந்த நீர். இது எழுதுவதற்கு சிவப்புமையாக உதவியது.

भूर्जत्वच :- பூர்ஜம்-ஒருவகை மரம். இவற்றின் பட்டைகள் காகிதம்போல் மிக மெல்லியனவாக இருப்பதால் கடிதம் எழுத உபயோகமாகின்றது.

कुञ्जरबिन्दुशोणा :- வயது முதிர்ந்த அல்லது மதம் கொண்ட யானையின் உடலில் ஆங்காங்கு சிவந்த புள்ளிகள் தோன்றும். சிவப்புமையால் எழுதப்பட்ட எழுத்துக்களையுடைய சாம்பல் நிறமுள்ள பூர்ஜப்பட்டைகள் யானையின் உடல் போல் ஆங்காங்கு சிவந்த புள்ளியுடையனவாகக் காணப்பட்டன.

बिन्दु - யானையின் உடலில் தோன்றும் செம்புள்ளியையும் குறிக்கும். செம்புள்ளியுடைய தன்மையால் பூர்ஜமரத்தின் பட்டை யானையின் சரீரத்திற்கு ஒப்பிடப்பட்டது.

विद्याधरसुन्दरी - வித்யாதரர், தேவர்களில் ஒரு வகையினர். அவ்வகையைச் சேர்ந்த பெண்கள். विद्याधर - வித்யையுடைய-படித்துள்ள-ஸுந்தரிகளே கடிதம் எழுதும் ஆற்றல் பெற்றவர்கள் என்பதைக்காட்ட विद्याधर-सुन्दरी - என்றபதத்தைக் கவி உபயோகித்துள்ளார் என்பர் ஒரு ரஸிகர். "विद्यावत्यः सुन्दर्यः एव हृदयेशाय अनंगलेखं लिखेयुः। अपण्डिताः पामरस्त्रियो नाक्षरज्ञाः। अत्र योगार्थोऽप्याश्रयणीयः" என்பது ரஸிகர் உரை. अनङ्गलेख - காதற் கடிதம்.

यः पूरयन् कीचकरन्ध्रभागान्
दरीमुखोत्थेन समीरणेन ।
उद्गास्यतामिच्छति किन्नराणां
तानप्रदायित्वमिवोपगन्तुम् ॥ ८ ॥

यः :- ஹிமயமலை, दरी-मुख-उत्थेन - குகை என்ற வாயிலினின்றும் உண்டான, समीरणेन - காற்றினால், कीचक-रन्ध्र-भागान् - மூங்கில்களின் துளையுள்ள பகுதிகளை, पूरयन् - நிரப்புகின்றதாக, उद्गास्यताम् - மேல் ஸ்தாயியில் பாடவிரும்புகின்ற, किन्नराणाम् - கின்னரர்களுக்கு, तान-प्रदायित्वम् - 'தானம்' என்ற ஸ்வரத்தைத் தரும் நிலையை, उपगन्तुम् - அடைய, इच्छति-इव - விரும்புவது போல் உள்ளது.

*(க-து) பாடகர்கள் மேல் ஸ்தாயியில் பாடும்பொழுது அந்த ஸ்தாயிக்கு அனுஸரணையாக, புல்லாங்குழலை உடைய பக்க வாத்தியக்காரர்கள் 'தானம்' என்ற ஸ்வரத்தை எடுத்துத்தருவர். ஹிமாலயத்தில் கின்னரர் என்ற தேவ வகையினர் பாடத் தொடங்கிய பொழுது ஹிமாலயம் தானஸ்வரம் கொடுப்பதாக இருந்தது. அங்கு வளர்ந்துள்ள மூங்கில்களே புல்லாங்குழலாக இருந்தன. புல்லாங்குழலை ஒலிக்கச் செய்வதற்கான காற்று ஹிமாலயத்தின் வாய் போன்ற குகைகளினின்றும் வந்தது.*

कीचक - காடுகளில் வண்டுகளால் துளையிடப்பட்டுள்ள மூங்கில்களில் காற்று புகும் பொழுது ஒலி உண்டாகும். இத்தகைய மூங்கில்கள் கீசகம் எனப்படும். மலையின் குகைகளில் இருந்து வரும் காற்று மூங்கில்களில் புகுந்து சப்தத்தை உண்டாக்கின. ஆங்கு கின்னரர்களும் பாடிக்கொண்டிருந்தனர் எனவே கவி ஹிமாலயமே ஸங்கீதரஸிகனாக இருந்து, பாடுகின்ற கின்னரர்களுக்கு தான ஸ்வரம் தருவதாகப் புனைந்து கூறினார்.

किन्नर - தேவர்களில் ஒரு வகையினர். तान - பாட வேண்டிய ஸ்வரத்தின் அளவைக் குறிப்பது. இதனையே அம்சஸ்வரம் என்றும் குறிப்பிடுவர். "तानो नामोद्गातव्यस्य स्वरादेः इयत्ता-परिच्छेदः स चांश स्वर उच्यते" புல்லாங்குழலின் உதவியினால் பாடகர்களை அனுசரித்து செய்யப்படவேண்டியது தானமாகும்.

"गाता यं यं स्वरं गच्छेत् तं तं वंशेन वादयेत्" என்றார் பரத முனிவர். तानप्रदायित्वं उपगन्तुम् - ஹிமாலயம் ரஸிகனுகையால் கின்னரர் களுக்கு உதவியாளனுக இருக்க விரும்புகின்றது.

அக்னிவர்ணன் என்ற அரசன் நாட்டியமாடும் பெண் களுக்கு மிருதங்கம் வாசித்ததாகக் கவி ரகுவம்சத்தில் கூறியுள்ளார்.

दरीमुख - ஹிமாலயத்திற்கு அதன் குகையே வாயாக இருந்து குழல் வாசிக்க உதவியது. इच्छति इव । इव. என்பது கவியின் உத்ப்ரேக்ஷையைக் காட்டுகின்றது. இயற்கையாக மூங்கிலினின்றும் வரும் சப்தத்தைக்கவி तानமாகவும், ஹிமால யத்தை तानம் தர விரும்பும் துணைப்பாடகனுகவும் கல்பனை செய்தார்.

कपोलकण्डूः करिभिर्विनेतुं
विघट्टितानां सरलद्रुमाणाम् ।
यत्र स्रुतक्षीरतया प्रसूतः
सानूनि गन्धः सुरभीकरोति ॥ ९ ॥

यत्र - ஹிமாலயத்தில், करिभि:- யானைகளாலே, कपोल-कण्डू:- தம் கன்னங்களிலுள்ள தினவுகளை, विनेतुम् - போக்கிக் கொள்வதற்காக, विघट्टितानाम् - உராயப்பட்ட, सरल-द्रुमाणाम् - தேவதாருமரங்களின், स्रुत-क्षीरतया - பால்பெருக்கிய நிலை யினுலே, प्रसूत:- உண்டான, गन्ध:- வாஸனை, सानूनि - சிகரங்களை (அல்லது மலையிலுள்ள ஸமதளங்களை), सुरभीकरोति - வாஸனையுடையதாகச் செய்கின்றது.

*(க-து) யானைகள் தம் கன்னத்தினவுகளை போக்கிக்கொள் வதற்காக, உயரமான தேவதாரு மரங்களில் உராய்கின்றன. அவை*

*உராய்வதால் பட்டை உரிந்த தேவதாரு மரங்களினின்றும் பால் பெருகி அதன் வாஸனை மலைப்ரதேசம் முழுவதையும் வாஸனை யுடையதாகச் செய்கின்றது.*

ஸுகம் அனுபவிப்பதற்கு வேண்டிய உதவிப்பொருள்களில் நறுமணமும் ஒன்று. அது ஹிமாலயத்தில், தானே அமைந் துள்ளது.

सरल - ஒரு வகை மரம், தேவதாருவகையைச் சேர்ந்தது. இதனுடைய பால் நறுமணம் உடையது என்பர்.

सरलद्रुमाणाम् - என்பதை, गन्धः என்பதுடன் சேர்த்து, தேவதாரு மரங்களின் வாஸனை எனப் பொருள் கொள்ள வேண்டும்.

सुरभीकरोति - வாஸனையில்லாத இடத்தையும் வாஸனை யுடையதாகச் செய்கின்றது ஸரளமரப் பாலின் மணம்.

वनेचराणां वनितासखानाम्
दरीगृहोत्सङ्गनिषक्तभासः ।
भवन्ति यत्रौषधयो रजन्यां
अतैलपूराः सुरतप्रदीपाः ॥ १० ॥

यत्र - ஹிமாலயத்தில், रजन्याम् - இரவில், दरीगृह-उत्सङ्ग-निषक्त-भासः - குஹையாகிய வீட்டின் உட்புறத்தில் சென்ற ஒளியையுடைய, ओषधयः - மூலிகைகள், वनिता-सखानाम् - வனிதையருடன் இருக்கின்ற, वनेचराणाम् - வேடர்களுக்கு, अतैलपूराः - எண்ணெய் நிரப்புதலை வேண்டாத, सुरत-प्रदीपाः - கலவிக்கால விளக்குகளாக, भवन्ति - இருக்கின்றன.

*(க-து) ஹிமாலயத்திலுள்ள குஹைகள் தான் வேடர்களுக்கு வீடுகளாக இருக்கின்றன. இரவில் அவ்வீடுகளில் எண்ணெய் ஊற்றிய விளக்குகள் தேவையில்லை. ஏனெனில் குஹைகளில்*

*வாசலில் வளர்ந்துள்ள ஒருவகை ஒஷதிகளின் ஒளியே குஹையின் உட்புறத்தில் சென்று ஒளியைத் தருகின்றது. அவ்வோஷதிகளே எண்ணெயில்லா விளக்குகளாக உள்ளன.*

वनिता:- காதல் மிகுந்த மகளிர், वनिता-सखाः- வனிதையரின் நண்பர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். ओषधिः- ஹிமாலயத்தில் ஒரு வகைச்செடி இரவில் ஒளி தருவதாக உள்ளது என்பர். இதனையே இங்கு ஓஷதி (ओषधि) என்ற சொல் குறித்தது. ஸர்க்கம் 6, சுலோகம் 43 காண்க. இதன் மறுபெயர் ज्योतिर्लता என்பது.

अतैलपूराः- எண்ணெய் நிரப்புதலுக்குத் தேவையில்லாத, सुरत-प्रदीपाः- படுக்கையறை விளக்குகள்.

उद्वेजयत्यङ्गुलिपार्ष्णिभागान्
मार्गे शिलीभूतहिमेऽपि यत्र ।
न दुर्वहश्रोणिपयोधरार्ताः
भिन्दन्ति मन्दां गतिमश्वमुख्यः ॥ ११ ॥

यत्र-ஹிமாலயத்தில், शिली भूत-हिमे-பாறையாக உறைந்த பனியையுடைய, मार्ग-வழியானது, अङ्गुलि पार्ष्णि भागान्-பாத விரல்களையும் குதிகால்களையும், उद्वेजयति अपि - (குளிர்ச்சியினால்) துன்புறுத்தும் பொழுதும், अश्वमुख्यः:- கின்னரஸ்த்ரீகள், दुर्वह-श्रोणि पयोधर-आर्ताः:- பாரமான இடையின் பிற்பகுதியாலும் ஸ்தனங்களாலும் கஷ்டமடைந்தவர்களாக, मन्दाम्-(தங்களுடைய) மெதுவான, गतिम्-நடையை, न भिन्दन्ति-விடுவதில்லை (மாற்றிக் கொள்வதில்லை.)

(க-து) *ஹிமாலயத்திலுள்ள வழிகளில் பனி உறைந்து பாறையாக உள்ளது. கின்னரஸ்த்ரீகள் அவ்வழியில் நடக்கும் பொழுது அவ்வுறைபனிக்கற்கள் விரல்களையும் குதிகால்களையும் துன்புறுத்து*

*கின்றனதாம். ஆயினும் கின்னரஸ்த்ரீகள் தங்களது மெதுவான நடையை மாற்றிக்கொண்டு வேகமாகச் செல்ல முடிவதில்லை. ஸ்தனம் இடை இவற்றின் பாரமே இதற்குக் காரணமாகும்.*

शिलीभूत-हिमे-பாறையாக உறைந்த பனியையுடையது; வழி.

पार्ष्णि-குதிகால்; நடக்கும் பொழுது, விரல்களும் குதிகாலும் தரையில் நிச்சயமாகப்படுகின்றனவாதலாலும், பனியின் குளிர்ச்சி இவ்விடங்களில் உணரப்படுமாதலாலும் இப் பகுதிகளை முக்யமாகக் குறிப்பிட்டார் கவி.

अश्वमुख्य: கின்னரர்களில் சிலர் குதிரையின் முகமும் மனித உடலும் உடையவர்கள். சிலர் மனிதமுகமும் குதிரை உடலும் உடையவர்கள். இங்கு கூறப்பட்டவர்கள் முதல் வகையைச் சேர்ந்தவர்கள் என்பர். கின்னரர்கள் சிறிது நீண்டமுகமுடையர்வர்கள் என்பதைக் குறிக்க வந்தது अश्वमुख्य: என்ற சொல்.

दुर्वह - தூக்கமுடியாத-மிகப் பாரமான.

அழகுமிகுந்த தேவஸ்த்ரீகள் நிறைந்துள்ளது ஹிமாலயம் என்பது இதனால் கூறப்பட்டது.

**दिवाकराद्रक्षति यो गुहासु**
**लीनं दिवाभीतमिवान्धकारम् ।**
**क्षुद्रेऽपि नूनं शरणं प्रपन्ने**
**ममत्वमुच्चैःशिरसां सतीव ॥ १२ ॥**

**य:**- ஹிமாலயம், भीतं इव - (ஸூர்யனிடமிருந்து) பயந்தது போல், दिवा - பகலில், गुहासु - குகைகளில், लीनम् பதுங்கி இருக்கின்ற, अन्धकारम्- இருளை, दिवाकरात्-ஸூரியனிடமிருந்து, रक्षति - காப்பாற்றுகின்றது. उच्चै:शिरसाम् - உயர்ந்தமனமுடையவர்க்கு, शरणम् प्रपन्ने - (தம்மைச்) சரணமடைந்த,

क्षुद्रे अपि - அல்பனிடத்திலும், सति इव - நல்லவரிடத்தில் இருப்பது போல், ममत्वम् - என்னைச் சேர்ந்தவன் என்ற நினைவு, नूनं-நிச்சயமாக, (अस्ति) இருக்கின்றது.

*(க-து) ஸூரியனிடம் அச்சம் கொண்டதுபோல், குஹைகளில் கிடக்கும் இருளையும் பாதுகாக்கின்றது ஹிமாலயம். சரணமடையும் நல்லவனைக்காப்பதுபோலவே, அல்பமான இருளையும் காக்கின்றது. ஏனெனில் பெரியோர் தம்மையடைந்தவர் எத்தகையோராயினும், புகலிடமளிப்பர். இங்கு இருள் பயந்ததாகக் கவி கூறியது உத்ப்ரேக்ஷை; ஹிமாலயத்தில் இருள் நிறைந்த பெரும் குஹைகள் உண்டு என்பதனைக் கூறவந்தது இச் சுலோகம்.*

उच्चैः शिरस:- இச்சொல் தலைநிமிர்ந்துஇருத்தலைக் குறிக்கும். இதனின்றும் உயர்ந்த மனமுடையவர் என்பது குறிப்பிடப் பட்டது.

> लाङ्गूलविक्षेपविसर्पिशोभै-
> रितस्ततश्चन्द्रमरीचिगौरैः ।
> यस्यार्थयुक्तं गिरिराजशब्दं
> कुर्वन्ति बालव्यजनैश्चमर्यः ॥ १३ ॥

चमर्यः :- கவரிமான்கள், इतस्ततः - இங்குமங்கும், लाङ्गूल-विक्षेप-विसर्पि-शोभैः :- வால்களை அசைப்பதால் பரவுகின்ற காந்தியுடையனவும், चन्द्र-मरीचि-गौरैः :- சந்திர கிரணம் போல் வெண்மையானவையுமான, बालव्यजनैः :- சாமரங்களால், यस्य- ஹிமாலயத்திற்கு, गिरिराज-शब्दम् - (கிரிராஜன்) மலையரசன் என்ற பெயரை, अर्थ-युक्तम् - பொருளுடையதாக, कुर्वन्ति - செய்கின்றன.

*(க-து) கவரிமான்களின் வால்களே சாமரங்களாகப் பயன்படுகின்றன. சாமரம் அரசர்க்குரிய சின்னமாகும். ஹிமவான் மலையரசன். ஹிமாலயத்திலுள்ள கவரிமான்கள் தம் வால்களை அசைத்துச் சாமரம் வீசி, ஹிமவான் மலையரசன் என்பதனை உண்மையானதாகச் செய்தன.*

चमर्यः :- பெண் கவரிமான்கள்.

लांगूल•••शोभैः :- வாலை அசைப்பதால் அதன் வெண்ணிறம் பல இடங்களிலும் பரவுகின்றது. लांगूल - வாலின் தடி போன்ற பகுதி. चन्द्रमरीचिगौरैः :- வாலின் மயிருள்ள பகுதி; சந்திர கிரணம் போல் வெண்மையாக இருப்பது.

वालव्यजनम् - வாலினாலான விசிறி-சாமரம்.

'अर्थयुक्तम्' அரசனுக்குச் சாமரம் வேண்டும். அதனைத் தந்து ஹிமவானை மலையரசராகச் செய்தன கவரிமான்கள். பிற அரசர்களுக்குச் சாமரம் வீசுபவர் மனிதர்கள். ஹிமவானுக்கோ சாமரம் தரும் கவரிமான்களே சாமரம் வீசின.

यत्रांशुकाक्षेपविलज्जितानां
यदृच्छया किंपुरुषाङ्गनानाम् ।
दरीगृहद्वारविलम्बिबिम्बाः
तिरस्करिण्यो जलदा भवन्ति ॥ १४ ॥

यत्र-ஹிமாலயத்தில், अंशुक-आक्षेप-विलज्जितानाम्-(காதலர்கள்) வஸ்திரத்தை இழுத்தலால் வெட்கமுற்ற, किंपुरुष-अङ्गनानाम् - கின்னரஸ்த்ரீகளுக்கு, यदृच्छया - எதிர்பாராவகையில், दरी-गृह-द्वार - विलम्बि - बिम्बाः : குஹையாகிய வீட்டின் வாசலில் இறங்கிய ஒரு பகுதியையுடைய, जलदाः :- மேகங்கள், तिरस्करिण्यः : திரைகளாக, भवन्ति - இருக்கின்றன.

(க-து) குஹையையே வீடாக வைத்துக்கொண்டு வசிக்கும் கின்னரஸ்த்ரீகளுக்கு, குஹைகளின் வாசலில் தொங்கும் மேகத்தின் பகுதியே திரையாக இருந்து, குஹையினுள் வெளிச்சம் வாராதபடி செய்து, வெட்கமுற வேண்டிய நிலை நேரும்பொழுது பாதுகாப்பளிக்கின்றது.

विलम्बि बिम्बाः-बिम्ब - இங்கு மேகத்தின் ஒருபகுதி. மேலே யுள்ள மேகத்தின் ஒருபகுதி திரை தொங்குவது போல் குஹையின் வாசலில் தொங்கிக் கொண்டிருக்கிறது.

तिरस्करिण्य :- மறைப்பதற்கு உதவும் பொருள் : திரைகள்.

**भागीरथीनिर्झरशीकराणाम्**
**वोढा मुहुः कम्पित देवदारुः ।**
**यद्वायुरन्विष्टमृगैः किरातै-**
**रासेव्यते भिन्नशिखण्डिबर्हः ॥ १५ ॥**

भागीरथी-निर्झर-शीकराणाम् - கங்கை அருவிகளின் ஜலத்தி வலைகளை, वोढा-எடுத்து வருவதும், कम्पित-देवदारु :- தேவதாரு மரங்களை அசைப்பதும், भिन्न-शिखण्डि-बर्ह :- மயில்களின் தோகைகளைக் கலைக்கின்றதுமான, यद्वायुः - ஹிமாலயக்காற்று, अन्विष्ट-मृगै :- மிருகங்களைத் தேடிய (வேட்டையாடிய), किरातै :- வேடுவர்களால், मुहुः- மிகவும், आसेव्यते- அனுபவிக்கப்படுகிறது.

(க-து) *ஹிமாலயத்தில் வேட்டையாடிக் களைப்புற்ற வேடர்கள், அதன் காற்றை மிகவும் நன்கு அனுபவிக்கின்றனர். கங்கை அருவியின் ஜலத்திவலைகளைக்கொண்டு வருவதால் அக்காற்று குளிர்ந்ததாகவும், தேவதாரு மரங்களில் பட்டு வருவதால் நறுமணமுடையதாகவும், மயில் களின் தோகையைக் கலைத்ததால் மெதுவானதாகவும் இருந்த தென்பது புலப்படும்.*

कम्पित देवदारुः 'அசைக்கப்பட்ட தேவதாருமரமுடைய' 'भिन्न-शिखण्डि बर्ह : ' கலைக்கப்பட்ட மயில்களின் தோகைகளையுடைய' என்பதும் பதப் பொருள். குளிர்ச்சி, மணம் மெதுவான தன்மை இம்மூன்றும் காற்றுக்கு வேண்டிய முக்யமான குணங்கள். இவை அக்காற்றுக்கு இருந்தன வென்பதைக் கவி மூன்று விசேஷணங்களால் காட்டினார். मुहुः, " पौनः पुन्ये " — भृशार्थे च என்பது வைஜயந்தி.

सप्तर्षिहस्तावचितावशेषा-
ण्यधो विवस्वान् परिवर्तमानः ।
पद्मानि यस्याग्रसरोरुहाणि
प्रबोधयत्यूर्ध्वमुखैर्मयूखैः ॥ १६ ॥

**सप्त - ऋषि - हस्त - अवचित - अवशेषाणि** ஸப்தரிஷிகளின் கைகளால் பறிக்கப்பட்டவை போகமிஞ்சியுள்ள, **यस्य** ஹிமாலயத்தின், **अग्र-सरो-रुहाणि** சிகரத்தில் உள்ள தடாகங்களில் வளர்ந்துள்ள, **पद्मानि** - தாமரை மலர்களை, **अधः** - கீழ்ப்பகுதியில், **परिवर्तमानः** சுற்றிவருகின்ற, **विवस्वान्** - ஸூரியன், **ऊर्ध्व-मुखैः** - மேல்நோக்கிச்செல்லும், **मयूखैः** : கிரணங்களால், **प्रबोधयति** - மலரச்செய்கின்றான்.

*(க-து) ஹிமாலயம் ஸூரியமண்டலத்திற்கும் மேல் உயர்ந்துள்ளது. அதன் சிகரங்களில் ஸப்தரிஷிகள் வசிக்கின்றனர். ஆங்குள்ள தடாகங்களிலே வளரும் தாமரைமொட்டுக்களை ஸப்தரிஷிகள் தம் கைகளாலேயே பூஜைக்காகப் பறிக்கின்றனர். அவர்கள் பறித்தவை போக எஞ்சியவைகளை, ஹிமாலயத்தின் நடுப்பகுதியிலேயே சுற்றிவரும் ஸூரியன், தனதுமேல் நோக்கிச்செல்லும் கிரணங்களால் மலரச்செய்கின்றான். (தாமரை ஸூர்யகிரணம் பட்டால்தான் மலரும்).* இதில் *ஹிமவானுடைய உயரம் கூறப்பட்டது. ஸப்தரிஷிகள் போன்ற பெரியோர்கள் வசிக்குமிடம் அது என்பதும் இதனால் பெறப்படுகின்றது.*

**अधः परिवर्तमान** :- ஹிமாலயம் மிக உயர்ந்துள்ளது. ஸூரிய மண்டலத்துக்கும்மேலே அதன் சிகரங்கள் உள்ளன. ஆகையால் ஸூரியனது ஸஞ்சாரம் அதனுடைய கீழ்ப்பாகங்களிலே உள்ளது. எனவே மேல்நோக்கிச்செல்லும் சூரிய கிரணங்களே மலையுச்சியிலுள்ள தடாகங்களில் வளரும் தாமரைகளை மலரச் செய்கின்றன.

'सप्तर्षि' மரீசி, அத்ரி, புலஹர், புலஸ்த்யர், க்ரது, அங்கிரஸ், வஸிஷ்டர் ஆகிய இவர்கள் இங்கு கூறப்பட்ட ஏழு மஹர்ஷிகள்.

यज्ञाङ्गयोनित्वमवेक्ष्य यस्य
सारं धरित्रीधरणक्षमं च ।
प्रजापतिः कल्पितयज्ञभागं
शैलाधिपत्यं स्वयमन्वतिष्ठत् ॥ १७ ॥

यस्य-ஹிமவானுடைய, धरित्री-धरण-क्षमम्-பூமியைத்தாங்குவதற்குத் தகுந்த, सारं-பலத்தையும், यज्ञ-अङ्ग-योनित्वं च யாகத்திற்கு வேண்டிய பொருள்கள் தோன்றுமிடமாக இருக்கும் தன்மையையும், अवेक्ष्य-கண்டு, प्रजापतिः-பிரம்மதேவர், स्वयम्-தாமே, कल्पित-यज्ञ-भागम्-யாகத்தில் பாகம் பெறுவதை (உரிமையாகக்) கொண்ட शैल-आधिपत्यम्-மலை அரசப்பதவியை, (ஹிமய மலைக்கு) अन्वतिष्ठत् செய்துவைத்தார் (கொடுத்தார்).

*(க-து) யாகத்திற்கு வேண்டிய ஸோமலதை முதலான பொருள்களைத்தந்து உதவுவது ஹிமாலயம். பூமியைத்தாங்கும் ஆற்றலும் உடையது. இவ்விரண்டு தகுதிகளையும் நோக்கி பிரம்மதேவர், ஹிமவானை, மலைகளுக்கு அரசனாகச்செய்தார். அரசனாக இருப்பதற்கு உரிய மரியாதை என்னவெனில், இந்திரன் முதலான தேவர்களைப் போல் ஹிமவானுக்கும் யாகத்தில் பாகம் பெற உரிமை உண்டு. ∴ இவ்வுரிமையும் பிரம்மதேவர் அமைத்ததே.*

यज्ञांगयोनित्वम्-யாகப்பொருளான ஸோமலதை முதலானவை உண்டாகும் நிலமாக ஹிமயமலை உள்ளது.

धरित्रीधरणक्षमम्-सारम् பூமியை மலைகள் தாங்குவதாகக் கூறுவர். भूधरम् என்றும் மலைக்குப்பெயர்.

இவ்விரண்டினாலும் ஹிமவானுடைய இரண்டு பெருமைகள் கூறப்பட்டன.

कल्पित यज्ञभागम् - அமைக்கப்பட்ட (தரப்பட்ட) யாகத்தில் பாகமுடையது என்பது பதப்பொருள். இது शैलाधिपत्यम् என்பதற்கு அடைமொழியாகும். யாகத்தில் பங்குபெறுதல், அரசுப் பதவிக்குப் பயனாக அமைக்கப்பட்டது.

யாகத்தில் பாகமாக ஹிமவானுக்குத் தரப்படுவது யானை; हिमवते हस्ती-என்பது வேதம்-

स्वयम्-தாமே-பிரம்மா பிறர்தூண்டுதலின்றித்தாமே செய்தார்.

स मानसीं मेरुसखः पितॄणां
कन्यां कुलस्य स्थितये स्थितिज्ञः ।
मेनां मुनीनामपि माननीया-
मात्मानुरूपां विधिनोपयेमे ॥ १८ ॥

**मेरु-सखः**:- மேருவின் தோழனும், **स्थितिज्ञः**:- சாஸ்திர முறையறிந்தவனுமான, **सः**:- ஹிமவான், **पितॄणाम्**-பித்ருக்களின், **मानसीम्**- மனத்தில் பிறந்தவளும், **मुनीनां-अपि** முனிவர்களாலும், **माननीयाम्**-மதிக்கத்தக்கவளும், **आत्म-अनुरूपाम्**-தனக்குத்தகுந்தவளுமான **मेनाम् कन्याम्**-மேனை என்ற பெண்ணை, **कुलस्य**-தன் வம்சம், **स्थितये**-நீடித்து நிற்பதற்காக, **विधिना**-சாஸ்திரப்படி, **उपयेमे**-மணந்து கொண்டான்.

*(க-து) மேருவின் நண்பன் ஹிமவான்; சாஸ்திரமுறைகளை அறிந்தவனாதலால் தன்வம்சம். ஸந்ததி மூலமே நிலைபெறுமென உணர்ந்து, பித்ருக்கள் என்றழைக்கப்படும் தேவவகையினரால் மனத்திலிருந்தே படைக்கப்பட்ட மேனை என்பவளை முறைப்படி மணந்து கொண்டான்.*

पितॄणां मानसीम्-பித்ருக்கள் தேவவகையினர். அவர்கள் ஏழு தொகுதியாக இருப்பவர்கள். அக்னிஷ்வாத்தர், பர்ஹிஷதர், என்ற இரு தொகுதியினருக்கும் மானஸிக புத்ரியாக மேனை

தாரிணி இருவரும் பிறந்தனர் இருவரும் பிரம்மம் அறிந்த வர்கள். யோகமுறையையும் கற்றவர்கள். 'मुनीनामपि माननीयाम्' பிரம்மஞானம்பெற்று யோகமுறை அறிந்திருந்ததால் முனிவர் களாலும் கௌரவிக்கத்தக்கவளாக மேனை இருந்தாள்.

தாரிணியை மேரு மணந்துகொண்டான்.

पितरो ब्रह्मणा सृष्टा व्याख्याता ये मया पुरा। अग्निष्वात्ता बर्हिषदोऽनग्नयः साग्नयश्च ये। तेभ्यः स्वधासुते जज्ञे मेना वै धारिणी तथा। ते उभे ब्रह्मवादिन्यौ योगिन्यौ चाप्युभे द्विज। விஷ்ணுபுராணம்: 1-10; 17-19. மேருவேறு; மேனைவேறு; மேனகா என்பவள் அப்ஸரஸ்.

**कालक्रमेणाथ तयोः प्रवृत्ते**
**स्वरूपयोग्ये सुरतप्रसंगे।**
**मनोरमं यौवनमुद्वहन्त्या**
**गर्भोऽभवत् स्थावरराजपत्न्याः ॥ १९ ॥**

अथ-பிறகு, तयोः-அவ்விருவருடைய, स्वरूप-योग्ये-நிலைக் குத்தக்கபடியான, सुरत प्रसङ्गे-கிருஹஸ்ததர்மம், प्रवृत्ते-தொடங்கியபொழுது, मनोरमं-மனம் கவரும், यौवनं-யௌவனப் பருவத்தை, उद्वहन्त्याः-தாங்கிய, भूधर-राज-पत्न्याः-ஹிமவானது மனைவிக்கு, गर्भः-கர்ப்பம், काल-क्रमेण-காலக்ரமத்தில், अभवत्-உண்டாயிற்று.

(க-து) *மேனை காலக்ரமத்தில் கருவுற்றாள்.*

*இந்த சுலோகம் காளிதாஸரது அல்ல என்று நினைக்க வேண்டி இருக்கிறது. அருணகிரி, நாராயணர் முதலியவர்கள் இச்சுலோகம் இருப்பதாகக்கூடத் தமது உரைகளில் குறிப்பிடவில்லை.*

**असूत सा नागवधूपभोग्यं**
**मैनाकमम्भोनिधिबद्धसख्यम्।**
**क्रुद्धेऽपि पक्षच्छिदि वृत्रशत्रा-**
**ववेदनाज्ञं कुलिशक्षतानाम् ॥ २० ॥**

**सा**-அவள் (மேனு), **नाग-वधू-उपभोग्यम्**-நாக கன்னிகைகளால் அனுபவிக்கத்தக்கவனும், **अंभो-निधि-बद्ध-सख्यम्**-ஸமுத்ரத்துடன் நட்பு கொண்டவனும், **पक्ष-च्छिदि**-(மலேகளின்) சிறகுகளே வெட்டுகின்ற, **वृत्र-शत्रौ** - இந்திரன், **क्रुद्धे-अपि** - கோபத்துடன் இருந்தபொழுதும், **कुलिश - क्षतानाम्** - வஜ்ராயுதத்தினுல் உண்டாகும் வ்ரணங்களின், **अवेदनाज्ञम्**-வலியை அறியாதவனுமான, **मैनाकम्**-மைனுகனே, **असूत**-பெற்ருள்.

(க-து) *மேனே, மைனுகன் என்ற மகனேப்பெற்ருள். இவன் பாதாள லோகத்திலுள்ள நாககன்னிகைகளே மணந்து கொண்டபின் ஸமுத்ரத்துடன் நட்புடையவனுக இருந்தான். இந்திரனுலும் இவனது இறகுகளே வெட்ட முடியவில்லே.*

ஹிமவான் போல் மைனுகனும் இரண்டு சரீரங்கள் உடையவன். ஒன்று தேவசரீரம்; மற்ருென்று, மலே வடிவாகும். தேவசரீரத்துடன் அவன் பெற்ற பெருமையைச் சொல்வது नागवधूपभोग्यम्-என்பது.

'नागवधू' நாக கன்னிகைகள், இவர்களின் இருப்பிடம் பாதாளம். இவர்கள் விரும்பிய வடிவம் எடுக்கும் தன்மையுடைவர்கள்; மிக அழகுடையவர்கள் எனப் பிரஸித்தி பெற்றவர்கள்; அத்தகைய கன்னிகைகளே மைனுகன் மணந்து கொண்டான்.

पक्षच्छिदि....முதலியவை அவனுடைய மலேயாகிய சரீரத்திற்கு உள்ள பெருமையைத் தெரிவிக்கின்றன. முன் காலத்தில் மலேகள் சிறகுடன் இருந்து பல இடங்களுக்கும் பறந்து சென்று ஜனங்களுக்குத் துன்பம் விளேவித்தன. அதனுல் கோபம் கொண்ட இந்திரன், வஜ்ராயுதத்தினுல் மலேகளின் சிறகுகளே வெட்டி அவைகளே ஆங்காங்கு இருக்கும்படி செய்தான். இந்திரன் சிறகுகளே வெட்டுவதை அறிந்தவுடன் மைனுகன்

ஸமுத்ரத்தினிடம் சென்று தான் நீரில் பதுங்கி இருப்பதாகவும் தனக்குப் பாதுகாப்பை அளிக்க வேண்டும் என்றும் வேண்டினன். நண்பனுன ஸமுத்ரராஜன் அபயம் அளிக்கவும் மைனுகம் கடல் நீரில் மூழ்கிக்கிடந்தது. மற்ற மலைகள் எல்லாம் வஜ்ராயுத்தினுல் சிறகு வெட்டபட, வெட்டுதலினுல் உண்டான காயங்களின் வலியை உணர்ந்தன வாயினும் மைனுகத்திற்கு அத்தகைய பரிதாப நிலை நிகழவில்லை. கோபம் கொண்ட இந்திரனுலும் மைனுகத்தின் சிறகை வெட்ட முடியவில்லை.

अम्भोनिधि बद्ध सख्यम् - ஸமுத்ரத்துடன் நட்பு கொண்டதால் மைனுகம் பெற்ற பயன்கள் இரண்டு: ஸமுத்ரத்திற்குக்கீழுள்ள நாகலோகவாஸிகளான நாக கன்னிகைகளை மணந்தது முதற்பயன்; சிறகு வெட்டப்படாமல் இருந்தது இரண்டாவது.

वृत्रशत्रु - விருத்ரன் என்ற அசுரனைக் கொன்றவன் - இந்திரன்.

अथावमानेन पितुः प्रयुक्ता
दक्षस्य कन्या भवपूर्वपत्नी ।
सती सती योग विसृष्टदेहा
तां जन्मने शैलवधूं प्रपेदे ॥ २१ ॥

अथ-பிறகு, दक्षस्य-தக்ஷருடைய, कन्या-பெண்ணும், भव-पूर्व-पत्नी-சிவபிரானது முதல் மனைவியும், सती-பதிவ்ரதையுமான सती-ஸதி, पितुः-தந்தை இழைத்த, अवमानेन-அவமானத்தினுல் प्रयुक्ता - தூண்டப்பட்டு, योग-विसृष्ट देहा - யோகாக்னியினுல் சரீரத்தை விட்டவளாக, जन्मने-(மறுபடியும்,) பிறப்பதற்காக, ताम्-அந்த, शैल-वधूम्-ஹிமவானுடைய மனைவியை (மேனையை) प्रपेदे-அடைந்தாள்

(க-து) *பிரம்ம தேவரின் குமாரரான தக்ஷருடைய பெண் ஸதி. அவள் சிவபிரானை மணந்திருந்தாள். ஒரு சமயம் தன் தந்தை தக்ஷன், தனக்கும் தன் கணவருக்கும் இழைத்த அவமானத்தினால் தூண்டப்பட்டு யோக முறையில் தன் சரீரத்தை விட்டாள். பின் நல்ல தாய் தந்தையருக்குப் பிறக்க விரும்பி மேனையைத் தாயாக தேர்ந்தெடுத்தாள்.*

पितुः अवमानेन प्रयुक्ता - தக்ஷன் தான் செய்த யாகத்திற்கு தேவர்கள் பலரையும் அழைத்திருந்தான். சிவபிரானையும், தன் மகள் ஸதியையும் அழைக்கவில்லை. ஆயினும் கணவரது அனுமதி பெற்று ஸதி யாகசாலையை யடைந்தபொழுது அவளை தக்ஷனும் மற்றவர்களும் வரவேற்காது புறக்கணித்தனர். அதனால் தக்ஷனிடமிருந்து பெற்ற உடலை விடவிரும்பி, ஸதி, யோக முறையினால் அக்னியை உண்டாக்கி அவ்வக்னியில் தன் உடலை எரித்து உயிர் துறந்தாள். பின் சிவபிரானையே கணவனாக அடைய விரும்பி, மேனைக்குப் பெண்ணாகப்பிறக்க விரும்பி அவளுடைய திருவயிற்றிலே தோன்றினாள்.

सती - பார்வதியின் பூர்வஜன்மப் பெயர்.

सा भूधराणामधिपेन तस्यां
समाधिमत्यामुदपादि भव्या ।
सम्यक्प्रयोगादपरिक्षतायां
नीताविवोत्साहगुणेन सम्पत् ॥ २२ ॥

**सम्यक्-प्रयोगात्**-நன்கு உபயோகிப்பதால், **अपरिक्षतायाम्** - குற்றமில்லாதிருக்கின்ற, **नीतौ**-ராஜ நீதியின் மூலம், **उत्साह-गुणेन**-உத்ஸாஹ சக்தியினால், **संपद्-इव**-செல்வம் (உண்டாக்கப் படுவது) போல, **भव्या**-மங்கள குணமுடைய, **सा** - அந்த ஸதி, **भूधराणाम् अधिपेन**-மலைகளுக்கு அரசனான ஹிமவானால், **समाधि-मत्याम्** - தவமுள்ள, **तस्याम्** - மேனையினிடத்தில், **उदपादि** - (மகளாகத்) தோற்றுவிக்கப்பட்டாள்.

*(க-து) உத்ஸாஹசக்தி ராஜநீதி இவ்விரண்டினின்றும் செல்வம் தோன்றுவது போல், ஹிமவானுக்கும் மேனைக்கும், ஸதி மகளாகப் பிறந்தாள்.*

नीति - என்றது இங்கு ராஜநீதியை. அரசர் தாம் பிற அரசர்களுடன் பழகும் பொழுது ஆறுவகை உபாயங்களைக் கைக்கொள்வர். இவ்வறுவகை உபாயங்களையும் பொதுவாக नीति என்ற சொல்லால் குறிப்பர். அவை:

1. सन्धि : பலமுள்ள அரசனுடன் விரோதம் ஏற்படின் பலத்தைச் சேகரித்துக் கொள்ளும்வரை அவனுடன் ஸமாதானம் செய்து கொள்ளுதல்.

2. विग्रह : பிறனால் உண்டான அவமானம், பொருள் நஷ்டம் இவைகளைக் கருதி, அவ்வாறு செய்தவனிடம் பகை கொள்வது, விக்ரஹம்.

3. यानम् : பலமுள்ளபொழுது பகைவன் மேல் படை எடுத்துச் செல்லுதல் யானம் எனப்படும்.

4. आसनम् படை எடுப்பதற்கு முன், பகைவனின் பல மறிந்து பலத்தைச் சேகரிக்க விரும்பி வாளாயிருத்தல் ஆஸனம்

5. द्वैधीभाव : இரு அரசர்கள் ஒருவரோடொருவர் பகைவர் களாக இருப்பின் அவர்களிடையில் இருவருக்கும் உதவுவதாகக் கூறிக்கொண்டு, உண்மையில் எவருக்கும் உதவாமல் சொல் லொன்றும் செயலொன்றுமாக இருத்தல் த்வைதீபாவம் எனப்படும்.

6. आश्रय : பலமான பகைவனால் துன்புறுத்தப்படும் பொழுது தன் இனத்தைச் சேர்ந்த பலமுள்ள ஒருவனை அண்டுதல் ஆச்ரயம்.

இந்த ராஜநீதியை, தக்க இடத்தையும் காலத்தையும் அறிந்து உபயோகிக்கவேண்டும். அப்பொழுதுதான் அது

கன்கு உபயோகிக்கப்பட்டதாகும். अपरिक्षता - தோல்வியுருதது. இவ்வுபாயங்களை ஒரு அரசன் நன்கு அறிந்திருந்தால் மட்டும் போதாது. அவற்றை உபயோகிக்க உத்ஸாஹமும் வேண்டும். உத்ஸாஹமாவது, தான் சக்தியுள்ளவனுக ஆகவேண்டுமென்ற விருப்பம்; ஊக்கம்; அரசர்க்கு வேண்டிய மூவகைச் சக்திகளில் உத்ஸாஹம் ஒன்று. மற்றவை ப்ரபுசக்தியும் மந்த்ர சக்தியும் ஆம். ஸேனுபலத்தை ப்ரபுசக்தி என்பர். மந்திரிகள் தரும் நல்ல ஆலோசனைக்கு மந்தரசக்தி எனப் பெயர்.

उत्साह गुणेन संपत् - அரசன் உத்ஸாகமுடையவனுயின் நீதியைப்பிழையின்றி உபயோகித்துச் செல்வம் பெறமுடியும். உத்ஸாஹமும் நீதியும் சேரும்பொழுது செல்வமுண்டாகிறது.

ஹிமவானுக்கு உத்ஸாஹகுணமும், மேனைக்கு நீதியும் ஸதிக்குச் செல்வமும் உபமானங்கள்.

प्रसन्नदिक् पांसुविविक्तवातम्
शङ्खस्वनानन्तरपुष्पवृष्टि ।
शरीरिणां स्थावरजङ्गमानां
सुखाय तज्जन्मदिनं बभूव ॥ २३ ॥

**प्रसन्न-दिक्**-தெளிந்த திசைகளையுடையதும், **पांसु-विविक्त-वातम्**-புழுதியற்ற காற்றுடையதும், **शंख-स्वन-अनन्तर-पुष्पवृष्टि**-சங்க நாதத்தை அடுத்துவந்த பூமாரியுடையதுமான, **तज्जन्म-दिनम्**-பார்வதி பிறந்ததினம், **स्थावर-जङ्गमानाम्** - அசையாதன-அசைவன ஆகிய, **शरीरिणाम्** இவ்விருவகை ஜீவர்களுக்கும், **सुखाय**-ஆநந்தமளிப்பதற்குக் காரணமாக, **बभूव**-இருந்தது.

(க-து) *பார்வதி பிறந்த தினம் எல்லா வகையான ஜீவர்களுக்கும் ஆனந்தம் விளைவிப்பதாக இருந்தது. எவ்வகையில் எனில், அவள் பிறந்த அன்று, கடும் வெய்யில், மேகம் மூடியிருத்தல் முதலிய*

*தொந்தரவுகளின்றி எத்திசையும் பிரகாசமாக, கண்ணைக்கவர்வதாக இருந்தது. புழுதியற்றகாற்று வீசி-ஸ்பர்ச ஸுகமளித்தது. பார்வதியின் பிறப்பாகிய மங்களத்தைத் தெரிவிக்க ஹிமவானது கிருஹத்தில் சங்க நாதம் செய்தனர். அதனைக் கேட்ட தேவர்கள் உடனே தேவலோக மலர்களைக் கொண்டு வர்ஷித்தனர். எனவே பூமாரி பெய்தது. அம் மலர்களின் நறுமணம் எல்லோரையும் பரவசமுறச் செய்தது ஸுகமான சிதோஷ்ணநிலை, மந்த மாருதம், இனியசங்க நாதம், நறுமணம் கமழ்தல் என்ற நான்கும் நிகழ்ந்தமையால் இடம் விட்டுப்பெயர்ந்துசெல்லும் ஆற்றல் உள்ள ஜீவர்களுக்கும், அத்தகைய ஆற்றல் இல்லாத மரம் செடி கொடி முதலிய பிற ஜீவர்களுக்கும், ஆனந்தமளிப்பதாக அந்த நாள் இருந்தது.*

प्रसन्नदिक्— क्रूरातप-मेघावरणराहित्यात् प्रसन्नदिक्-திசைகள் தெளிந் திருத்தலாவது, காண்பதற்குக்கஷ்டமின்றி-கண்கவர் நிலையில் இருத்தல்; இவ்வடைமொழி-காட்சியின் இனிமையைக்கூறியது.

पांसुविविक्तवातम् - புழுதியற்ற காற்று இருந்ததால் - ஸ்பர்ச ஸுகம் கூறப்பட்டது.

शङ्खस्वनानन्तरपुष्पवृष्टि - சங்கநாதம் ஹிமவானது வீட்டில் பார்வதியின் பிறப் பெனும் மங்களத்தைத் தெரிவிக்கச் செய்யப் பட்டதாக இருக்கலாம்; அல்லது தேவர்களே சங்கநாதத்தையும் செய்து, பூமாரி பொழிந்தனர் எனலாம். சங்கநாதம் காதிற்கு இன்பத்தையும் பூமாரி நறுமணத்தின் மகிழ்ச்சியையும் அளித்தன. கண், ஸ்பர்சேந்திரியம், காது, மூக்கு என நான்கு புலன்களும் மகிழ்ச்சி பெற்றமை கூறப்பட்டது.

" आकाशदेशात् दिव्यसुमेषु पतत्सु किमिदमित्यूर्ध्वमवलोकयतां जनानां आस्ये दिव्यमकरन्द बिन्दुपतनात् जिह्वेन्द्रियस्यापि प्रीतिरर्थादनेनैवोक्तेति माधव. " என்பது நாராயணர் உரையிலுள்ளது.

शरीरिणाम्-சரீரமுடையவை; ஜீவன் உடையவை; இவைகளை இருவகையாகப் பகுக்கலாம். தாமிருக்கும் இடம்விட்டுப்

பெயர்ந்து செல்லும் ஆற்றல் உடையவை; மனிதர், விலங்கு, பறவை, பூச்சி, புழு முதலியவை முதல்வகையைச் சாரும். இவற்றை ஜங்கமம் என்பர்-ஜங்கமம்-நடப்பன. அத்தகைய ஆற்றலின்றித்தாம் தோன்றிய இடத்திலே நிற்பன - தாவரங்கள்; மரம் செடி கொடி முதலியன. இவை இரண்டாம் வகையைச் சேர்ந்தன. இவைகளுக்கும் உயிர் உண்டு. உணரும் ஆற்றலும் உண்டு. स्थावर-ம் நிற்பது. இவ்விருவகை ஜீவர்களுக்கும் ஆனந்தமளித்தது அந்த நாள்.

तया दुहित्रा सुतरां सवित्री
स्फुरत्प्रभामण्डलया चकासे ।
विदूरभूमिर्नवमेघशब्दा-
दुद्भिन्नया रत्नशलाकयेव ॥ २४ ॥

विदूर-भूमि-விதூரம் என்ற மலைப்பிரதேசம், नव-मेघ-शब्दात्-புதிய மேக சத்தத்தினால், उद्भिन्नया-தோன்றிய, रत्न-शलाकया-इव-(வைடூர்ய) ரத்ன முளையினால் (விளங்குவது) போல், स्फुरत्-प्रभा-मण्डलया-பிரகாசிக்கின்ற ஒளி வட்டமுடைய, तया दुहित्रा-அந்தமகளான-பார்வதியால், सवित्री-தாய், மேனை, सुतराम्-மிகவும், चकासे-அழகுடன் விளங்கினாள்.

(க-து) *விதூரமலை, மேகத்தினாலே தன் சுரங்கங்களில் தோன்றிய வைடூர்யரத்னத்தினால் பிரகாசிப்பது போல், பார்வதியின் பிறப்பினாலே மேனை மிகப் பொலிவு பெற்று விளங்கினாள்.*

பார்வதியின் பிறப்பினாலே அவனது தாய் பெற்ற பெருமை கூறப்பட்டது, இச்சுலோகத்தில்.

विदूरभूमि:- விதூரம் என்ற மலையில், மழைகாலத் தொடக்கத்தில் முதன் முதலில் உண்டாகும் மேக ஒலியினால், பூமியைப் பிளந்துகொண்டு வைதூர்யரத்னம் தோன்றுவதாக

கூறுவர். அவ்வாறு தோன்றிய ரத்னத்தினால் விதூரமலை அழகுடன் காணப்படுவது போல், காந்தியுடன் கூடிய பார்வதி பிறப்பினால் தாய் மேனை மிகுப்பொலிவுடன் விளங்கினாள். மேனைக்கு விதூர நிலமும், பார்வதிக்கு ரத்னமும் உபமானம். ரத்னத்திற்கும் பார்வதிக்கும் பொதுவானதன்மை-ஒளியுடனிருத்தல்-स्फुरत्प्रभामण्डलता ।

> अस्ति शैलो विदूराख्यः, पर्यन्ते तत्र काचन ।
> मही रत्नाकरीभूता, वैदूर्यं तत्र जायते ॥
> मेघशब्देन जायन्ते तत्र रत्ननवांकुराः ।
> क्रमात् परिणतास्ते स्युः मणयो राजपूजिताः ॥

என்பர் போஜ ராஜர்.

மேகசத்தத்தினால் ரத்னம் உண்டாகின்றதென்றும் அது காலக்ரமத்தில் முதிர்ந்து அரசர்களால் அடைப்படுகிறதென்றும் போஜர் கூறுகின்றார்.

रत्नशलाका - ரத்னங்களின் சிறுமுளை ; அல்லது சிறுகுச்சி போன்ற ரத்னம் ; स्फुरत्प्रभामण्डलया-பிரகாசிக்கின்ற வட்டமான ஒளியுடைய ; தெய்வத்தன்மை வாய்ந்தவர்களைச் சுற்றிலும் ஒளி சூழ்ந்திருப்பதாகக் கூறுவர். இந்த அடைமொழியை रत्नशलाकया-என்பதுடனும் சேர்த்துக் கொள்ளவேண்டும். ரத்ன முளையும் ஒளியுடையது.

विदूर :- ஒருமலை; இது நர்மதைக்கு அருகில் உள்ளது எனச் சிலரும் ஸ்ரீலங்காவில் உள்ளது என்று சிலரும் கூறுவர்.

वैदूर्य- விதூர மலையில் தோன்றிய ரத்னம். இதன் நிறம், மூங்கில இலை போல் பச்சை எனவும், மயில் கழுத்து போல் நீலநிறமுடையதெனவும், பூனைக்கண் போல் பழுப்பான மஞ்சள் நிறமுடையதெனவும் கூறுவர்.

" एकं वेणुपलाशकोमलरुचा मायूरकण्ठत्विषा
मार्जारेक्षणपिङ्गलच्छविजुषा ज्ञेयं त्रिधा च्छायया । "
" वैदूर्यरत्नमणयो विविधावभासा:
तस्मात् स्फुलिङ्गनिवहा इव संबभूवु: । "
" मार्जारनयनप्रख्यं रसोनप्रतिमं हि वा ।
कलिलं निर्मलं व्यंग्यं वैदूर्यं देवभूषणम् ॥ "
என்பன வைடூர்யத்தின் நிறத்தைப் பற்றிக் கூறுவன.

विदूरभूमि:-रत्नशलाका - இரண்டும், மேனை - பார்வதி இவர்களுக்கு உபமானமாதலால், ஸ்த்ரீலிங்கச் சொற்களாக உள்ளன.

दिने दिने सा परिवर्धमाना
लब्धोदया चान्द्रमसीव लेखा ।
पुपोष लावण्यमयान् विशेषान्
ज्योत्स्नान्तराणीव कलान्तराणि ॥ २५ ॥

लब्ध-उदया - பிறப்பைப் பெற்றுள்ளவளும், दिने-दिने - தினந்தோறும், परिवर्धमाना - வளர்ந்து வருபவளுமான, सा - அப்பார்வதி, चान्द्रमसी लेखा-சந்திரனுடைய கலை, ज्योत्स्ना-अन्तराणि - ஒளி நிரம்பிய, कलान्तराणि-इव-கலைகளை அடைவது போல், लावण्यमयान् - அழகு நிரம்பிய, विशेषान् - அங்கங்களை, पुपोष - அடைந்துவந்தாள்.

*(க-து) சுக்லபக்ஷத்தின் தொடக்கத்தில் உள்ள சந்திரனது கலை, தினந்தோறும் காந்தியுள்ள கலைகளையடைவது போல், பார்வதியும் தினந்தோறும் அழகு நிரம்பிய அங்கங்களை அடைந்தாள்.*

அவயவங்கள் ஏற்கனவே உள்ளனதான்; ஆனாலும் தினந்தோறும் அவற்றில் அழகு நிறைந்தமையால், கவி அழகைப் பெற்றாள் எனக் கூறாது, அழகுள்ள அங்கங்களை யடைந்தாள் என்று கூறினார்.

लब्ध-उदया-அடையப்பட்ட பிறப்பையுடைய என்பது பதப் பொருள். 'பிறந்துள்ள' என்பது கருத்து. இச்சொல்லை, சந்திர கலைக்கும் விசேஷணமாகக் கொள்ள வேண்டும். உதயமான சந்திரகலை' என்பது பொருள். இங்கு கூறப்பட்டுள்ளது சுக்லபக்ஷத்தில் முதல் நாளுள்ளகலை.

दिनेदिने परिवर्धमाना-சந்திர கலையும் தினம் தோறும் வளர்வது. 'ज्योत्स्नान्तराणि' நிலவு ஒளி நிறைந்த; ज्योत्स्ना-நிலவு ஒளி, अन्तर-மூடியது-'நிலவு ஒளியினுல் மூடிய'-நிறைந்த என்பது கருத்து. कलान्तराणि-மற்றக்கலைகளை-என்பர் மல்லிநாதர் अन्तर-மற்ற; अन्तर-என்ற சொல்லை அவயவம் என்ற பொருளில் கொண்டு 'மற்றகலைகளாகிய அவயவங்களை' என்பர் நாராயணர், लावण्यमयान्-அழகு நிரம்பிய, 'लावण्यप्रचुरान्-प्राचुर्यार्थे मयट्। लावण्य-என்பது, அவயவங்களின் நல்ல அமைப் பினின்றும தோன்றுவதும், அவயவங்களினின்றும் தனிப்பட்டது மான ஒருதன்மை ஆகும். "अवयवसंस्थानविशेषाभि-व्यङ्ग्यम् निखिला-वयेभ्यो व्यतिरिक्तं यत्किञ्चित् तत्वान्तरं लावण्यमिति ध्वनिकारः" नारायण:

முத்தினுள் தோன்றும் ஒளியின் சலனம் போல் அவயவங் களில் தோனறும் பளபளப்பை லாவண்யம் என்பர் சிலர்.

> मुक्ताफलेषु च्छायायास्तरलत्वमिवान्तरा ।
> प्रतिभाति यदङ्गेषु तल्लावण्यमिहोच्यते। என்பதனையும் காண்க.

विशेषान् அவயவங்களை, 'विशेषोऽवयवे व्यक्तौ इत्युत्पलमाला'। पुपोष வளர்த்தாள் என்பது பதவுரை. அடைந்தாள் என்பது கருத்து.

> **तां पार्वतीत्याभिजनेन नाम्ना**
> **बन्धुप्रियां बन्धुजनो जुहाव ।**
> **उमेति मात्रा तपसा निषिद्धा**
> **पश्चादुमाख्यां सुमुखी जगाम ॥ २६ ॥**

बन्धु-प्रियाम्-உறவினர்க்குப்பிரியமான, तां-அவளை, बन्धु-जनैः-உறவினர்கள், आभिजनेन-(அவள் பிறந்த) குலம் காரண மாக வந்த, नाम्ना - பெயரினால், पार्वती-इति - பார்வதி என, जुहाव-அழைத்தனர். पश्चात्-பிறகு, मात्रा-தாயினால், "उ-குழந் தாய், मा"-தவம் வேண்டாம்' इति-என்றுகூறி, तपसः - தவத் தினின்றும், निषिद्धा - தடுக்கப்பட்டவளாக, सुमुखी - அழகிய முகமுடைய அவள், उमा-आख्याम् - 'உமா' எனற பெயரை जगाम - அடைந்தாள்.

*(க-து) பர்வதத்தின் வம்சத்தில் பிறந்ததால், (குலப்பெயரான பர்வத என்ற சொல்லினின்றும் வந்த) பார்வதி என்ற பெயரை இட்டு அவளை, அன்புள்ள உறவினர்கள் அழைத்தனர். தவம் செய்வதினின்றும் தடுக்கப்பட்டதால், அவளுக்கு 'உமா' என்ற பெயர் பிறகு உண்டாயிற்று.*

बन्धुप्रिया-உறவினர்க்குப் பிரியமானவள்; உறவினர்களிடம் பிரியமுடையவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

अभिजन.- குலம்; कुले त्वभिजनः जन्मभूमौ च என்பது வைஜயந்தி. அவள் பிறந்த குலம் பர்வதமாதலால் அப்பெயரை இட்டு पार्वती என அழைத்தனர். "अभिजनाः-पूर्वान्वयाः" என்று பொருள் கொண்டு, "தந்தை முதலிய முன்னோர்களின் தொடர்பு காரண மான பெயரால்" என்பர் மல்லிநாதர்.

जुहाव-आजुहाव; उ என்ற அவ்யயம், ஒருவரை அழைப்பதில் உபயோகிக்கப்படுவது. பார்வதி தவம் செய்ய முயன்ற பொழுது தாய் மேனை, பார்வதியை उ என்ற சொல்லால அழைத்து, मा-(தவம்), வேண்டாம் என்றதால் उमा-என்ற பெயர் அவளுக்கு வந்தது என்று உரை கூறுபவர் மல்லிநாதர். उ என்ற சொல் தவத்தைக் குறித்தது; 'उ तापे अव्ययं ईशे ना' என்பது வைஜயந்தி; उ-தவம், मा-வேண்டாம் எனமேனை கூறியதால் उमा-எனப் பெயர்

வந்தது என்பர் நாராயணர்; பார்வதி தவம் செய்த வரலாறு ஐந்தாம் ஸர்க்கத்தில் கூறப்பட்டுள்ளது.

महीभृतः पुत्रवतोऽपि दृष्टिः
तस्मिन्नपत्ये न जगाम तृप्तिम् ।
अनन्तपुष्पस्य मधोर्हि चूते
द्विरेफमाला सविशेषसङ्गा ॥ २७ ॥

पुत्रवतः-अपि - பல மக்களையுடையவனுயினும், महीभृतः- ஹிமவானுடைய, दृष्टिः பார்வை, तस्मिन् अपत्ये-அப்பார்வதியினிடத்தில், तृप्तिम्-(பார்த்தது போதும் என்ற) ஸந்தோஷத்தை, न जगाम - (முழுவதும்) அடையவில்லை; अनन्त-पुष्पस्य-பலவகைப் புஷ்பங்களுடைய, मधोः வஸந்தருதுவின், द्विरेफ-माला-வண்டுகளின் வரிசை, चूते - மாம் பூவில், सविशेष-सङ्गा हि - மிக அதிகம் பற்றுதல் உடையது அல்லவா ?

*(க-து) ஹிமவானுக்குப் பல மக்கள் இருந்தனர். ஆயினும், பார்வதியைப் பார்த்த அவனுடைய பார்வை, பார்த்தது போதும் என்ற திருப்தியை அடையவில்லை. மேன்மேலும் பார்த்துக் கொண்டே இருக்க விரும்பியது. அத்தகைய அழகை உடையவளாகவும் தந்தையின் அன்பிற்கு உரியவளாகவும் இருந்தாள் பார்வதி.*

வஸந்தருதுவில் பல புஷ்பங்கள் இருப்பினும் வண்டுகள் மாம் பூவிலே விசேஷமாகப் பற்று வைக்கின்றன. சுலோகத்தின் முதல் பாதியில் கூறப்பட்ட கருத்துக்கு ஒத்த-அதன் பிரதி பிம்பம்-போன்ற மற்றொரு கருத்து இரண்டாவது பாதியில் கூறப்பட்டுள்ளது. இதை உவமையாக விளக்கின் இவ்வாறு கூறலாம். வஸந்தருது பலவகை மலரையுடையது; ஹிமவான் பல மக்களையுடையவன். வஸந்தருதுவின் வண்டுகள் மாம் பூவிலேயே பற்றுள்ளன. அதனையே விரும்புகின்றன. அதுபோல்

ஹிமவானுடைய பார்வை பார்வதியையே பார்க்க விரும்பு கின்றது. எவ்வளவு நேரம் பார்க்கினும் போதும் என்று எண்ணுவதில்லை. न ततर्प समायान्तं पश्यमानो नराधिपः என ராமரைப் பார்த்த தசரதரைப் பற்றி வால்மீகி கூறுவர். ஹிமவானுக்கு வஸந்தருதுவையும், ஹிமவானது பிற குழந்தை களுக்கு பல வகைப் புஷ்பங்களையும், பார்வைகளுக்கு வண் டுகளையும், பார்வதிக்கு மாம்பூவையும், உபமானமாகக் கொள்ளலாம்.

अत्र महीभृद्वसन्तौ, दृष्टिद्विरेफमाले, पुत्रान्तरपुष्पान्तराणि, पार्वतीरूपापत्य- चूतकुसुमे च परस्परम् बिम्बप्रतिबिम्बभावमनुभवन्ति" नारायणः।

पुत्रवत: இங்குள்ள पुत्र - என்றபதம் பொதுவாக மக்களைக் குறித்தது. புத்திரர்கள் என்ற பொருள் இல்லை; மைனுகம் கங்கை முதலானவர்கள் ஹிமவானுடைய மக்கள்;

चूते सविशेषसंगा - மாம்பூவில் வண்டுகள் பற்றுடையன என்பது न हि प्रफुल्लं सहकारमेत्य वृक्षान्तरं कांक्षति षट्पदाली (6.69) என்ற ரகு வம்ச சுலோகத்திலும் கூறப்பட்டுள்ளதே.

तया दुहित्रा - என்ற 24-ஆம் சுலோகத்தில் பார்வதியின் பிறப்பால் தாய் பெற்ற பெருமை கூறப்பட்டது. இச்சுலோ கத்தில் தந்தை பெற்ற மகிழ்ச்சி கூறப்பட்டது. அடுத்த சுலோகத்தில் தந்தை பெற்ற பிற நலன்கள் கூறப்படுகின்றன.

प्रभामहत्या शिखयेव दीपः
त्रिमार्गयेव त्रिदिवस्य मार्गः ।
संस्कारवत्येव गिरा मनीषी
तया स पूतश्च विभूषितश्च ॥ २८ ॥

प्रभामहत्या - ஒளியினால் சிறந்துள்ள, शिखया - ஜ்வாலையினால், दीपः - इव - விளக்கு போலும், त्रि-मार्गया - கங்கையினால், त्रि-दिवस्य-

ஸ்வர்க்கத்தின், मार्गः-इव-மார்க்கம் (ஆகாசம்) போலும், संस्कार-वत्या-இலக்கணத் தூய்மை பெற்ற, गिरा-பேச்சினால், मनीषी-इव - வித்வான் போலும், तया - அப்பார்வதியால், स :- அந்த ஹிமவான்; पूत : பரிசுத்தனாக்கப்பட்டான், विभूषितः च - அழகுடையவனாகவும் ஆனான்.

*(க-து) நல்ல பிரகாசமுடைய ஜ்வாலையினால் விளக்கு தூய்மையையும் அழகையும் பெறுகின்றது. கங்கையினால் ஆகாசம் பரிசுத்தியுடையதாகவும் அழகுடையதாகவும் ஆகின்றது. இலக்கணப்பிழையற்ற சொல்வன்மையுடைய அறிஞன் பாவம் நீங்கப் பெற்று பலருடைய மதிப்பைப் பெறுகின்றான். அது போல் பார்வதியினால் ஹிமவான் தூய்மை பெற்றான்; விசேஷமான சோபையும் அடைந்தான்.*

दीपः पूत :- விளக்கு தூய்மை பெறுதலாவது - இருளைப் போக்கும் திறன் பெற்று பூஜை செய்வதற்கு உரியதாகுதல்;

विभूषित :- ஜ்வாலை நன்கு இருப்பின் விளக்கு அழகு பெறுகின்றது. दीप : திரியின் நுனியில் உள்ள நெருப்பு;

शिखा - அதனுடைய கொழுந்து விட்டு எரியும் ஜ்வாலை.

त्रिमार्गी - ஆகாசம், பூமி, பாதாளம் என்ற மூன்று வழிகளில் செல்வதால் கங்கை இப்பெயர் பெற்றது.

आकाशः पूत :- ஆகாசம் தூய்மை பெறுதலாவது, அங்கு சஞ்சரிப்பவர்களின் பாவம் நீங்குதல்.

भूषित :- கங்கை பிரவஹிப்பதால் பார்ப்பதற்குத்தக்க அழகுடன் இருத்தல்.

संस्कारवती - இலக்கண முறைப்படி பிழையற்ற-பரிஷ்கரிக்கப் பட்ட சொல்.

मनीषी पूत :- பிழையற்ற சொல்லைப் பேசுபவன் புண்யம் பெறுகிறான். 'एकः शब्दः सम्यग् ज्ञातः सुष्ठु प्रयुक्तः स्वर्गेलोके कामधुग् - भवति' என்பதைக் காண்க.

भूषित :- வித்வான் அழகு பெறுதலாவது பலராலும் மதிக்கப் பெறுதல்,

हिमवान् पूत :- பார்வதியின் பிறப்பு மனத்திலே மகிழ்ச்சியை யுண்டாக்கி மனத்திற்கு தூய்மையளித்தது.

विभूषित :- முகத்தில் ஒளியைத்தந்து சிறந்த சோபையை யுண்டாக்கியது. பார்வதியின் பெருமையை நன்கு கூற விரும்பிய கவி, பார்வதியைக் கண்டு திருப்திபெருத ஹிமவான் போல் ஒரு உபமானத்திஞல் திருப்தி கொள்ளாமல் மூன்று உபமானங்கள் கூறிஞர்.

'उपमानान्तरस्य सौन्दर्यातिशयहेतुत्वात्' अरुणगिरिः ॥

मन्दाकिनीसैकतवेदिकाभिः
सा कन्दुकैः कृत्रिमपुत्रकैश्च ।
रेमे मुहुर्मध्यगता सखीनां
क्रीडारसं निर्विशतीव बाल्ये ॥ २९ ॥

सा - அவள், बाल्ये - குழந்தைப் பருவத்தில், क्रीडा-रसं - விளையாட்டு இன்பத்தை, निर्विशती - इव - அனுபவிப்பவளாக, (அனுபவிக்க விரும்பி), सखीनाम् - ஸ்நேகிதிகளின், मध्य-गता - மத்தியில் இருந்து கொண்டு, मन्दाकिनी-सैकत - वेदिकाभिः - கங்கையின் மணற்பாங்கான இடத்தில் சிறு மணல் மேடைகள் அமைப்பதாலும், कन्दुकैः பந்துகளாலும், कृत्रिम - पुत्रकैः च - பதுமைகளாலும், मुहुः - அடிக்கடி, रेमे - விளையாடிஞள்.

*(க-து) குழந்தைப் பருவத்தில் பார்வதி தன் தோழிகளுடன் பந்துகளாலும், பதுமைகளாலும், கங்கையின் மணலில் மேடைகள் அமைப்பதாலும் விளையாட்டின்பத்தை அடைய விரும்பி விளையாடிஞள்.*

बाल्ये - யௌவனம் வருவதற்கு முன்னுள்ள பருவத்தைக் குறித்தது இச்சொல். बाल्यात् परं साथ वयः प्रपेदे என சுலோகம் 31-இல் கூறியது காண்க.

' क्रीडारसं निर्विशती इव ' விளையாட்டின்பத்தை அனுபவிப்பவள் போல; ' போல ' என்று கூறியதால் பார்வதிக்கு விளையாட்டின்பத்தை அனுபவிக்க விருப்பம் இல்லை. ஆனாலும் பிற குழந்தைகள் போல் தானும் இருக்க வேண்டும் என்று நினைத்ததால் விளையாட்டினை விரும்பினாள் என்பர்; ' प्रपञ्चं विडम्बयतीव लोकमाता ' என்பர் நாராயணர்.

' आवर्जिता किञ्चिदिव ' என்ற சுலோகத்தில் इव என்ற சொல்லுக்குப் பொருள் இல்லை என்பர் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர். அதுபோல் இங்கும் इव என்பது பொருளில்லாதது. வாக்யாலங்காரமாகவந்தது எனக் கொள்வதில் பிழை ஒன்றும் இல்லை.

सैकतवेदिका - மணல்வீடு; அல்லது மணல் மேடைகளை கங்கையின் மணலில் அமைத்து விளையாடினாள்.

कृत्रिमपुत्रक - குழந்தை வடிவினில் உள்ளபதுமை. இவை மரம் துணி முதலியவைகளால் செய்யப்படும்.

क्रीडारस निर्विशतीव बाल्यम् என்பது நாராயணர் கொண்டபாடம்; விளையாட்டின்பத்தில் விரும்பத்தினால் பால்யப்பருவத்தை எய்தியவள் போல் இருந்து அப்பார்வதி விளையாடினாள் என்பது கருத்து.

இனி வரும் இருபது சுலோகங்களில் பார்வதியின் படிப்பு, வடிவின் அழகு, யௌவனப் பருவம் பெற்று மினிர்ந்தமை என்ற இவைகளை வர்ணிக்கின்றார்.

तां हंसमालाः शरदीव गङ्गां
महौषधिं नक्तमिवात्मभासः ।
स्थिरोपदेशामुपदेशकाले
प्रपेदिरे प्राक्तनजन्मविद्याः ॥ ३० ॥

**शरदि**-சரத்ருதுவில், **गङ्गां**-கங்கா நதியை, **हंस-मालाः-इव**-ஹம்ஸக்கூட்டங்கள் (தாமே) வந்தடைவது போலும், **नक्तम्**-இரவில், **महा-ओषधिम्**-பெரிய ஒஷதியை, **आत्म-भासः-इव**-அதன் ஒளிகள் வந்தடைவது போலும், **उपदेश-काले**-படிப்பிக்கும் பருவத்தில், **प्राक्तन-जन्म-विद्याः**- முன்பிறவியில் கற்ற கல்விகள், **स्थिर-उपदेशाम्** -(பூர்வ ஜன்மத்தில் பெற்றுள்ள), உறுதியான ஞானமுடைய, **ताम्** - அப்பார்வதியை, **प्रपेदिरे** - (தாமே) வந்தடைந்தன.

*(க-து) சரத் காலத்தில் கங்காநதியை ஹம்ஸங்கள் தாமே வந்தடைகின்றன. இரவு வந்தவுடன், ஒளி 'ஜ்யோதிர்லதை' என்ற செடியைத்தானே வந்தடைகிறது. அதுபோல், முன்பிறவியிலே-அதாவது தக்ஷன் மகளாக இருந்தபொழுது-கற்ற கல்விகள் எல்லாம் அவளுடைய ஆத்மாவில் நிலைபெற்று இருந்தமையால், இப்பிறவியில் படிக்கத் தொடங்கிய பொழுதே எல்லா வித்யைகளும் அவளைத்தாமே வந்தடைந்தன. ஆசிரியர்களின் முயற்சிக்கு அதிகம் தேவையில்லை.*

शरदि-மழைக்காலத்திற்குப் பின் வருவது சரத்காலம்; கங்கையில் நீர் வடிந்து மணற்பாங்கான இடங்கள் ஆங்காங்கு தோன்றும்: மானஸ ஸரஸிற்குச் சென்றிருந்த ஹம்ஸங்கள் இக் காலத்தில் கங்கைக்குத்தாமே வருகின்றன.

महौषधि - இதனை ஜ்யோதிர்லதை என்பர். இந்த செடி இரவிலே ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். அருகிலுள்ள பொருள்களை இதன் ஒளியில் பார்க்க இயலும்; பகலில் சூரிய வெளிச்சத்தில் இதன் ஒளி புலப்படுவதில்லை. இத்தகைய செடிகள் இப்பொழுதும் ஹிமாலயத்தில் இருப்பதாகக் கூறுகின்றனர்.

स्थिरोपदेश - ஸ்திரமான-உறுதியாக நிலைபெற்றுள்ள-அறிவு அல்லது வாஸனையுடைய; முற்பிறப்பிலே கற்ற கல்விகள் அவளிடம் நிலைபெற்று ஆழ்ந்த நினைவையளித்திருந்தன. எனவே அவள் இந்த ஜன்மத்தில் கற்றுக்கொள்ளுதல் என்பது முற்பிறப்பில் கற்றதை நினைவுகொள்வதாகவே இருந்தது. சிறந்த மேதையுடையவளாக இருந்தாள். மேதை ஞாபகசக்தி.

उपदेश - என்ற சொல் இங்கே அதன்பயனாக வரும் அறிவையோ அல்லது வாஸனையையோ குறிக்கும் "वासना"- மனிதர்கள் அடைகின்ற ஒவ்வொரு அனுபவமும் அவர்களது மனத்தில் தாம் இருந்ததற்கான ஒருவகை அடையாளத்தை (மெழுகில் அடையாளம்போல்) ஒருவாறு பதிந்துவிட்டுச் செல்கின்றன. இதனை भावना, वासना அல்லது संस्कारம் என்பர். இவ்வாறு பதிந்த அடையாளம்தான், பின் நினைவுக்குக் காரண மாகின்றது. ஆழப்பதிந்த அனுபவங்களை நினைவில் கொள்வது எளிது. பூர்வ ஜன்மத்துடன் அனுபவங்களின் அடையாளங் களும் மறைந்துவிடுவதால் முற்பிறப்பில் நிகழ்ந்தவைகளை நினைவு கொள்ளமுடிவதில்லை. அவ்வனுபவம் மிக ஆழமாகப் பதிந்திருப்பின் முற்பிறவி ஸம்பவங்களையும் இப்பிறவியில் நினைக்க இயலும். பார்வதிக்கு இத்தகைய வாஸனை முற் பிறவியில் स्थिरமாக-ஆழப்பதிந்ததாகஇருந்ததால் இப்பிறவியில், கல்விகற்பது எளிதாக இருந்தது. அதனால் கவி, வித்யைகள் அவளைத்தாமே அடைந்தன என்றார்.

'आचार्योपदेशमात्रं निमित्तीकृत्य प्रपेदिरे' यथा सूर्यप्रभाभिभूता निजा एव प्रभाः सूर्यप्रभातिरोभावे महौषधिं प्राप्नुवन्ति तथा बाल्यादप्रकाशमाना वासनारूपेण पूर्वमपि वर्तमाना विद्यास्तामपीत्यर्थः। अत्रोपमानद्वयेनाचार्याणा-मनतिप्रयासो व्यज्यते' नारायणः।

असम्भृतं मण्डनमङ्गयष्टे-
रनासवाख्यं करणं मदस्य ।
कामस्य पुष्पव्यतिरिक्तमस्त्रं
बाल्यात्परं साथ वयः प्रपेदे ॥ ३१ ॥

**अथ** - வித்யாப்யாஸத்திற்குப்பின், **सा**-அவள், **अङ्गयष्टेः**- சிறந்த சரீரத்திற்கு, **असंभृतम्**-முயற்சியின்றி பெறப்பட்ட, **मण्डनम्**-அணியாக இருப்பதும், **अनासव-आख्यम्**-மது எனப்பெயர் பெருத, **मदस्य करणम्** மனத்தை மயக்கக்காரணமாக இருப்பதும், **कामस्य**-மன்மதனுக்கு, **पुष्प-व्यतिरिक्तम्**-புஷ்பத்திற்கும் மேலான, **अस्त्रम्**-ஆயுதமாக இருப்பதும், **बाल्यात्**-பால்ய பருவத்திற்கு **परं**-பின் தோன்றுவதுமான, **वयः**- யௌவனப்பருவத்தை **प्रपेदे**-அடைந்தாள்.

(க-து) *கல்வியைக் கற்று முடித்தபொழுது பார்வதிக்கு யௌவனப்பருவம் தோன்றியது. அப்பருவம் காலக்கிரமத்தில் தானே வருவதால், அது முயற்சியின்றி பெறப்படும் அணிகலன் ஆகின்றது. மனத்தை மயக்குவது மது; யௌவனம் காண்போர் மனத்தைக்கலங்க வைப்பதாயினும் இதற்கு மதுவெனப் பெயரில்லை, இது அதனின்றும் வேறுபட்டது. மன்மதன் புஷ்பங்களை ஆயுதமாக உபயோகிக்கின்ருன். யௌவனம் புஷ்பங்களையும் விட பலம் பொருந்திய ஆயுதம்; அத்தகையயௌவனத்தைப் பார்வதியடைந்தாள்.*

अथ-பிறகு; யௌவனம் வருமுன்னே கல்வி பெண்களுக்குத் தரப்பட வேண்டும் என்பர். 'यदाहमुनि : प्राग्यौवनात् युवति : विद्यां ग्राहयितव्येति ' नारायण : ।

अंगयष्टि : சிறந்த உடல், यष्टि-மெல்லிய தடியைக் குறிக்கும் சொல், மெல்லிய-என்ற பொருளில் வந்து, பிறகு 'சிறந்த' என்ற பொருளைத் தருகிறது. हस्तयष्टिलतादयः प्रशंसावचनाः, என்பர்.

मण्डनम्-உடலுக்கு அழகு செய்யும் பொருளை மண்டனம் என்பர். असंभृतम्-யௌவனம் உடல் முழுவதற்கும் அழகு செய்வது; மனிதர்கள் முயன்று பெறுவதில்லை. காலக் கிரமத்தில் தானே வருவது. यौवनमङ्गेषु सन्नद्धम् என்பதையும் காண்க.

अन्-आसव-आख्यम् - மது என்ற பெயர் பெறாதது; மனத்தை மயக்குவது மது; யௌவனமும் காண்போர் மனத்தை மயங்கச் செய்வதால், 'இது மதுவல்ல, அதனின்றும் வேறுபட்டது; என்றார்' மயக்கும் தன்மை இரண்டிற்கும் உண்டாயினும் இதன் பெயர் வேறு. யௌவனம், தன்னைக் காண்பவர்கள் மனத்தைத்தான் மயக்கும் என்பதில்லை, தான் யாரிடம் இருக்கின்றதோ அவர்களது மனத்தையும் கலங்கச் செய்யும்.

करणम् 'साधकतमम् करणम्' சிறந்தஸாதனம்.

पुष्पव्यतिरिक्तम् - பூவினும் உயர்ந்தது, व्यतिरिक्त-உயர்ந்தது. व्यतिरिक्तः समधिकः என்பது அமரம். மன்மதன் பார்வதியின் அழகைக்கொண்டுதான் சிவபிரான் மனத்தைக் கலக்க முடிந்தது. ஸர்க்கம் மூன்று காண்க. பூவினும் வேறுபட்ட என்றும் பொருள் கூறலாம்.

बाल्यात्-परम् - பால்யத்திற்குப்பின் வருவது, அல்லது, பால்யப் பருவத்தைக் காட்டிலும் சிறந்தது.

उन्मीलितं तूलिकयेव चित्रं
सूर्यांशुभिर्भिन्नमिवारविन्दम् ।
बभूव तस्याः चतुरस्रशोभि
वपुर्विभक्तं नवयौवनेन ॥ ३२ ॥

नवयौवनेन - புதிதாகத் தோன்றியௌவனத்தினால், विभक्तम्-நன்கு அமைக்கப்பட, तस्याः- அவளது, वपुः உடல், तूलिकया-தூலிகையினால், उन्मीलितम्-தெளிவடைந்த, चित्रं-इव-சித்திரம்

**पोலும், सूर्य-अंशुभिः- ஸூர்யகிரணங்களால், भिन्नम्-மலர்ந்த, अरविन्दम्-इव - தாமரை மலர் போலும், चतुरस्र शोभि - முழுவதும் சோபையுடன் விளங்குவதாக, बभूव - ஆயிற்று**

(க-து) *சிறிதே முதலில் தோன்றிய யௌவனப் பருவமும் அவளது அவயவங்களை, அவை அவை இருக்க வேண்டிய வகையில் அமைத்தது. தூலிகையினால் தெளிவும் ஒளியும் பெற்ற சித்திரம் போலும், ஸூர்ய கிரணங்களால் மலர்ந்து பரிபூர்ணமான சோபையுடன் விளங்கும் தாமரை மலர் போலும், அவள், அவயவங்களின் ஏற்றத்தாழ்வின்றி-முழு அழகுடன் விளங்கினாள்.*

नव-यौवनम्-யௌவனம் முற்றிலும் தோன்றவில்லை; சிறிதே தோன்றி அவள் உடலில் இடம் பெற்ற உடனேயே நிகழ்ந்த நிலை கூறப்பட்டது.

विभक्तम् - அவயவங்கள் அவை இருக்க வேண்டியபடி யௌவனத்தினால் பகுத்தும் வகுத்தும் அமைக்கப்பட்டன. அவ்வாறு அமைக்கப்பட்ட அவயவங்களையுடையது அவள்சரீரம்.

तूलिका - சித்திரத்திற்கு வர்ணம் தருவதற்கு உபயோகிக்கப் படும் குச்சி.

तूलिकया उन्मीलितम्-சித்திரம் முதலில் கோடுகளின் வடிவில் எழுதப்பட்டு பிறகு வர்ணம் தரப்படுகிறது. வர்ணம் தரப்பட்ட பின் சித்திரம் தனது முழுவடிவினையும் அடைந்து தெளிவும் ஒளியும் பெறுகின்றது.

उन्मीलितम्-' स्फुटीकृतम् ' नारायणः । रञ्जनद्रव्येणसमुद्भासितम् , मल्लिनाथः ।

चतुरस्रम्—' शब्दोऽयं निरूढलक्षणया सम्यतार्थवाचकः ' नारायणः । 'अन्यूनानतिरिक्तम् ' मल्लिनाथः ।

चतुरस्रशोभि-முற்றிலும் அழகுடன் விளங்குவதாக 'ஏற்றத் தாழ்வின்றி விளங்குவதாக என்பது பொருள்.

இனிவரும் பதினேழு சுலோகங்களில் பார்வதி தேவியை வர்ணிக்கின்றார் கவி.

अभ्युन्नताङ्गुष्ठनखप्रभाभिः
निक्षेपणाद्रागमिवोद्गिरन्तौ ।
आजह्रतुस्तच्चरणौ पृथिव्याम्
स्थलारविन्दश्रियमव्यवस्थाम् ॥ ३३ ॥

निक्षेपणात् - (தரையில் அழுத்தமாக) வைப்பதினால், अभ्युन्नत-अङ्गुष्ठ-नख-प्रभाभिः-சிறிது உயர்ந்து இருக்கின்ற கால் கட்டை விரல்களின் நகங்களது காந்தியின் மூலம், रागम् - செந்நிறத்தை (காலில் தடவியுள்ள செம்பஞ்சுரஸத்தை), उद्गिरन्तौ-इव-கொப்பளிப்பவை போலுள்ள, तच्चरणौ - அவளது பாதங்கள், अव्यवस्थाम् - ஓரிடத்திலேயே நிலைத்து இராத-இடம் விட்டு இடம் செல்கின்ற - स्थल-अरविन्द-श्रियम् - தரைத் தாமரையின் அழகை, पृथिव्याम् - தரையில், आजह्रतुः- கொணர்ந்தன (தந்தன).

(க-து) பார்வதியின் பாதம் இயற்கையிலே சிவந்துள்ளது. (செம்பஞ்சுரஸமும் பூசப்பட்டுள்ளது). தரையில் பாதத்தை வைக்கும் பொழுதெல்லாம் பாதத்தின் சிவந்த நிறம் பாதத்தருகில் உள்ள தரை முழுவதும் பரவியது, பாதமே சிவந்த நிறத்தை (செம்பஞ்சுரஸத்தை) கொப்பளித்தது போல் காணப்பட்டது. அவள் நடந்து சென்ற பொழுது, ஆங்காங்கு சிவந்த நிறம் தரையில் பரவியதால் அவள் பாதங்கள் அந்தந்த இடத்தில் தரைத்தாமரை மலரை வைத்து அழகு செய்தன போல் இருந்தன.

निक्षेपणम् - தரையில் நன்குபதியும்படி வைத்தல்.

अभ्युन्नत - अङ्गुष्ठ-नख - प्रभाभिः-மற்ற விரல்களைக் காட்டிலும் கட்டை விரல் சிறிது உயர்ந்து (अभ्युन्नत) இருக்கும்: விரலில் உள்ள நகம சிவந்து இருந்து அதன் காந்தி தரையில் பரவிய

தால் பாதம் தனது சிவப்பு நிறத்தைத்தரையில் ஊற்றியதோ என நினைக்கும் படிஇருந்தது.

अंगुष्ठ नख-என்பதை விரலின் நகம் என்று கொள்ளாமல் விரல், நகம் என இவ்விரண்டின் காந்தியால் என்றும் பொருள் கொள்வர். अभ्युन्नत என்பதனை விரலுக்கு விசேஷணமாகக் கொள்வதுதான் தகுந்தது. நகத்திற்கு விசேஷணமாகக் கொண்டு 'உயர்ந்துள்ள விரல் நகம்' என்பர் மல்லிநாதர்.

रागम्-இயற்கையாக உள்ள சிவப்பு நிறத்தை; "காலில் பூசியுள்ள செம்பஞ்சு ரஸத்தை" என்பர் நாராயணர். रागोऽनु-रागे लाक्षायाम् என்பது வைஜயந்தி. पूर्वसेवितं लक्षारसं स्वभावारुणैः नखमयूखैः उद्वमन्ती इत्यर्थः खेदाकुलादिव पूर्वसेवितमुद्वमन्तीति भावः ॥" नारायण:।

स्थलारविन्दम्-தரைத்தாமரை. இதுவும் தாமரை போல் சிவப்பெனத் தெரிகிறது. தரையிலே வளர்வது என்பதும் கவி கூறுவதினின்றும் பெறப்படும். தரையில் ஆங்காங்கு புஷ்பத்தை வைத்து அலங்ரிகப்பர். பார்வதி நடந்து சென்ற பொழுது, அவளது பாதங்களின் செந்நிறம் பரவிய இடம் தரைத்தாமரை மலரை வைத்து அழகு செய்யப்பட்டது போல் காணப்பட்டது.

अन्यत्रस्थाम्-ஆனால் பார்வதி கால் வைத்த இடத்தில்தான் இவ்வழகு இருந்ததே ஒழிய, அந்த இடத்தை விட்டு நீங்கிய பின் தரையில் அவ்வழகு இருக்கவில்லை; ஆகையால் அவ்வழகும் இடம் விட்டுச் சென்று கொண்டே இருந்தது என்றார் கவி.

இந்த சுலோகத்தில் பார்வதியின் பாதஸௌந்தர்யம் கூறப்பட்டது. தேவர்களை வர்ணிககும் பொழுது பாதத்தினின்றும் தொடங்கி சிரஸ் வரை வர்ணிகக வேண்டியது முறையாதலால் இங்கு முதலில் பாதம் வாணிக்கப்பட்டது.

सा राजहंसैरिव सन्नताङ्गी
गतेषु लीलाञ्चितविक्रमेषु ।
व्यनीयत प्रत्युपदेशलुब्धै-
रादित्सुभिर्नूपुरशिञ्जितानि ॥ ३४ ॥

नूपुर-शिञ्जितानि - சிலம்பொலியை, आदित्सुभिः- கற்க விரும்பியவைகளும், प्रत्युपदेश-लुब्धैः- தாம் பெறப் போகும் கல்விக்குப் பதிலாக, பிரதி உபதேசம் செய்ய விரும்பிய வையுமான, राजहंसैः- சிறந்த அன்னப்பறவைகளால், सन्नत-अङ्गी-சிறிதே தாழ்ந்த தேஹமுடைய, सा - அவள், लीला-अञ्चित-विक्रमेषु - மனமகிழ்ச்சியினால் அழகான அடி வைத்தலையுடைய, गतेषु-நடைகளில், व्यनीयत-इव - பயில்விக்கப்பட்டாள் போலும் இருந்தாள்.

(க-து) *பார்வதி அன்னம்போல் அழகாக நடந்தாள். நடக்கும் கலையில் அவள் அன்னங்களால் பயில்விக்கப்பட்டவள் போல் காணப் பட்டாள். பார்வதியின் நடை ஹம்ஸத்தின் நடை போல் அழகாக இருந்தது; எனவே இந்நடையழகை அன்னப் பறவைகள் அவளுக்கு கற்றுக் கொடுத்தன போலும் எனக்கவி உத்ப்ரேக்ஷித்தார்.*

கல்வியை மூன்று வகையில் பெறலாம்: குருவுக்குப் பணிவிடை செய்து அதற்குப் பதிலாகப் பெறலாம். குரு விரும்பும் பணத்தைக் கொடுத்துப் பெறலாம். குருவெனக் கருதப்பட்டவருக்கு ஒருவித்யையைக் கற்றுக் கொடுத்து அதற்குப் பதிலாக அவரிடமிருந்து தான் விரும்பிய வித்யை யைப் பெறலாம். அன்னப்பறவைகள் பார்வதியின் சிலம்பின் ஒலியைக் கற்க விரும்பின. எனவே தாம் கற்க விரும்பிய கல்விக்குப் பதிலாக அவளுக்கு ஒரு உபதேசம் செய்ய விரும்பின. (प्रत्युपदेशलुब्धैः); ஆதலால் அழகிய நடையை அவளுக்குக் கற்றுக்கொடுத்தன என்றார் கவி.

गुरुशुश्रूषया विद्या पुष्कलेन धनेन वा ।
अथवा विद्यया विद्या तुरीया नोपपद्यते ॥ என்பதைக் காண்க.

प्रत्युपदेशालुब्धे: உபதேசம் செய்ய விரும்பின ஹம்ஸங்கள் என்று பொருள் கொள்ளாமல், பார்வதியினிடமிருந்து உப தேசம் பெற விரும்பின என உரைகாரர்கள் சிலர் கொள் கின்றனர். அவ்வாறு கொள்வதில், आदिरसुमि: नूपुरशिञ्जितानि என்பதாலும் இதே கருத்து கூறப்படுவதால் கூறியதையே கூறுதல் (पुनरुक्ति) என்ற குற்றம் ஏற்படுகின்றது.

नूपुरशिञ्जितानि-சிலம்பொலி; அன்னங்களின் ஒலி சிலம்பொலி போல் கலகல வென இருக்கும்.

सन्नतांगी-சிறிது தாழ்ந்தஉடலுடையவள். सन्नतांसा என்று பாடம் கொண்டு தாழ்ந்த தோளுடையவள் என்று பொருள் கொள்வர் நாராயணர்.

सन्नतांसेति राजहंससादृश्यप्रतिपत्त्यर्थम् । ते हि तथा प्रसिद्धा: प्रयोगेषु । स्पर्तव्याः शिथिलांसहंसरुचयो गोदावरीवीचय: इति " अरुणगिरि: । ' सन्नतांसा: स्त्रिय: पूज्याः उन्नतांसास्तु पूरुषाः ' नारायण: ।

தழைந்த அல்லது தாழ்ந்த என்று பொருள் கொள்ளாமல் பொதுவாக அழகிய சரீரமுடையவள் என்று நிரூட லக்ஷணை யால் பொருள் கொள்ளலாம்.

विक्रम :- காலைத் தரையில் வைத்தல்; பார்வதி தரையில் காலை வைக்கும் முறை; (லீலா) மனம் கவரும் தன்மையினால் (अंचित) அழகாக இருந்தது.

லீலா-லீ-श्लेषणे - என்ற வினையடியாகவந்த இந்த சொல் "மனம் கவரும் தன்மை வாய்ந்தது" என்ற பொருள் உடையது. அதனாலேயே விளையாட்டினையும் ச்ருங்கார பாவத்தையும் குறிப்பது.

'लीलां विदु: केलिविलास खेला-शृंगारभाव प्रभवक्रियासु ' என்பது விச்வாகிகண்டு.

वृत्तानुपूर्वे च न चातिदीर्घे
जङ्घे शुभे सृष्टवतस्तदीये ।
शेषाङ्गनिर्माणविधौ विधातुः
लावण्य उत्पाद्य इवास यत्नः ॥ ३५ ॥

वृत्त-अनुपूर्वे-உருண்டு திரண்டிருப்பனவும், न-अतिदीर्घे च - மிகநீளமாக இல்லாதனவும், शुभे-அழகானவையுமான, तदीये जङ्घे-பார்வதியின் முழங்கால்களை, सृष्टवत:- படைத்த, विधातुः- பிரம்மதேவருக்கு, शेष-अङ्ग-निर्माण-विधौ - (பார்வதியின்) பிற அவயவங்களை படைத்தல் என்ற காரியத்திற்காக, उत्पाद्ये - ஸம்பாதிக்கப்பட வேண்டிய, लावण्ये-அழகு என்ற பொருளில், यत्न:- பெரும் முயற்சி, आस इव-இருந்தது போல் காணப்பட்டது.

*(க-து) பார்வதியின் இருமுழங்கால்களும் நல்ல உருண்ட வடிவம் பெற்று ஒன்றுக்கொன்று இணையாக, அழகாக அமைந் திருந்தன. பிரம்மதேவர் அவ்விரு முழங்கால்களையும் படைப்பதற்காக தாம் ஈட்டிவைத்திருந்த லாவண்யம் (அழகு) என்ற பொருள் முழுவதையும் செலவழித்து விட்டதால், பார்வதியின் பிற அங்கங் களைப் படைப்பதற்கு வேண்டிய லாவண்யப் பொருளை ஈட்டுவதில் அவருக்குப் பெரும் முயற்சி இருந்திருக்கும் என நினைக்க வேண்டி இருந்தது. அழகை முழுவதையுமே திரட்டி அமைக்கப்பட்டன போல் இருந்தன பார்வதியின் முழங்கால்கள்.*

जङ्घा-முழங்கால்; वृत्त-உருண்ட வடிவமுடையது, अनुपूर्व- "முன் கூறப்பட்டுள்ள பாதங்களின் உருவத்திற்குப் பொருந்த இருப்பது" அல்லது "முழங்கால் ஒன்றுக்கொன்று இணை யாக இருப்பது."

अतिदीर्घे न-' மிக நீளமாக இல்லாதவை இதனால் மிக குறுகியவை அல்ல என்பதும் பெறப்படும்.

शुभे-மங்களகரமான-நன்மையளிககின்ற;

लावण्यमुत्पत्तुमिवास यत्नः என்பது நாராயணர் கொண்ட பாடம். லாவண்யத்தை உண்டாக்குவதற்கு-ஸம்பாதிப்பதற்கு-முயற்சி இருந்தது போல் காணப்பட்டது, என்பது அவர் கூறும் பொருள்.

नागेन्द्रहस्तास्त्वचि कर्कशत्वादे-
कान्तशैत्यात्कदलीविशेषाः ।
लब्ध्वापि लोके परिणाहि रूपं
जातास्तदूर्वोरुपमानबाह्याः ॥ ३६ ॥

**नागेन्द्र-हस्ताः**:- சிறந்த யானைகளின் துதிக்கைகள், **त्वचि-कर्कशत्वात्**-தோல்கடினமாயிருப்பதாலும், **कदली-विशेषाः**:- சிறந்த வாழைகள், **एकान्त-शैत्यात्** - எப்பொழுதும் குளிர்ச்சியாக இருப்பதாலும், **परिणाहि रूपम्**- அழகான வடிவத்தை, **लब्ध्वा-अपि**-பெற்றும், **तदूर्वोः** (**तत्-ऊर्वोः**) - பார்வதியின் இருதுடைகளுக்கு, **लोके** - இவ்வுலகில், **उपमान-बाह्याः** :- உவமைக்கு (புறம்பானவையாக) தகாதனவாக, **जाताः**:-ஆயின.

(க.து) *பார்வதியின் துடைகள் நல்ல வடிவமுடையன. உருண்டு திரண்டு இருப்பன. இத்துடைகளின் அழகை முற்றிலும் எடுத்துக் கூறுவதாயின் எதாவது ஒரு தகுந்த பொருளை உபமானமாகக் கூறவேண்டும். உருண்டு திரண்டு மேலே பருத்து வரவர சிறுத்து இருக்கும் நிலையில், யானைகளின் துதிக்கையை துடைகளுக்கு உபமானமாகக் கூறலாம். ஆனால் துதிக்கை கடினமான ஸ்பர்சமுடையது. எனவே அது பார்வதியின் துடைக்கு உபமானமாகாது. வழவழப்பான ஸ்பர்சம் காரணமாக நல்ல வாழையின் அடிமரத்தை துடைக்கு உபமானமாகக் கூறலாமாயினும், வாழை எல்லாக் காலங்களிலும் குளிர்ந்த ஸ்பர்சமுடையது. பார்வதியின் துடை அத்தகையதன்று; எனவே இவ்வுலகில் பார்வதியின் துடைக்கு உபமானமாகக் கூறத்தகுந்த சிறந்த வடிவம் பெற்றுள்ள இவ்விரண்டும், உபமானத்திற்குத் தகாதவையாயின. எனின் மற்றவைகளைப் பற்றிக் கூறவேண்டுவதில்லை.*

உவமை கூறுவதிலே புகழ்பெற்ற காளிதாஸரே பார்வதியின் துடைக்கு உவமை காணவில்லை எனக் கூறுவது கவனிக்கத் தக்கது.

नागेन्द्र - ஸாதாரணயானைகளை விட்டு சிறந்த யானைகளான- ஐராவதம் முதலியவற்றின் துதிக்கை என்பதைக் குறிக்க-नाग- யானை-என்ற சொல்லுக்குப் பின் - इन्द्र - சிறந்த - என்றபதம் உபயோகிக்கப்பட்டது.

कदली - வாழை; कदलीविशेष-சிறந்த வாழை அல்லது வாழையில் சிறந்த வகை ; परिणाहि-' விசாலமான ' என்பது பதப்பொருள் - ' அழகான ' என்பது கருத்து.

एकान्तशैत्यात् - வாழை எப்பொழுதுமே குளிர்ச்சியான ஸ்பர்சமுடையது; பார்வதியின் துடை அவ்வாறு ஒரே விதமான ஸ்பர்சமுடையதன்று.

'शीतकाले भवत्युष्णमुष्णकाले च शीतलम् । सुन्दरीणां कुचद्वन्द्वमूरुद्वन्द्वं च' என்பதனைக் காண்க.

' करीन्द्राणां शुण्डा. कनककदलीकाण्डपटलीमुभाभ्यामूरुभ्यामुभयमपि निर्जित्य भवती ' என்பது ஸௌந்தர்யலஹரி, சுலோகம்-82.

'रम्भाकरभकरीन्द्रकराभिरूप्यदर्पम् । स्फुटमिव परिभूय गर्वगुर्वोः किमुपमिमीमहि रंगकुञ्जरोर्वोः' என்பர் பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில். சுலோகம் 118. பூர்வசதகம்.

त्वां कृत्वोपरतो मन्ये रूपकर्ता स विश्वसृट् ।
न हि रूपोपमा त्वन्या तवास्तिशुभदर्शने ॥

என்ற வால்மீகி சுலோகமும் (சுந்தர காண்டம். 20.13.) கவனித்தற்குரியது.

एतावता नन्वनुमेयशोभि
काञ्चीगुणस्थानमनिन्दितायाः ।
आरोपितं यद्गिरिशेन पश्चा-
दनन्यनारीकमनीयमङ्कम् ॥ ३७ ॥

**अनिन्दितायाः**- (அழகிலே) சிறிதும் குற்றம் கூறப்படாத பார்வதிதேவியின், **काञ्चीगुण स्थानम्** - இடையானது, **पश्चात्** - பிறகு - (பார்வதி தவம் செய்து சிவபிரானை மணந்தபின்), **गिरिशेन** - சிவபிரானால், **अनन्य नारी कमनीयम्** - வேறு ஒரு ஸ்திரீயினால் ஆசைப்படவும் முடியாத, **अङ्कम्** - (தமது) மடியில், **आरोपितम्** - ஏற்றி வைத்துக் கொள்ளப்பட்டது (इति) என்று, **यत्**-யாதொருபயன் உள்ளதோ, **एतावता** - இவ்வொரு காரணத்தினாலேயே, **अनुमेयशोभि** - ஊஹிக்கத்தக்க அழகுடையதாகும்.

*(க-து) பார்வதிதேவியின் இடையழகை வர்ணிக்கத் தேவையில்லை. அதனை ஒரு காரணத்தைக் கொண்டு ஊஹித்து அறிவதே சாலச் சிறந்தது. பிற ஸ்திரீகளால் நினைக்கவும் முடியாத தமது மடியில், சிவபிரான், மணமானபின், பார்வதிக்கு இடமளித்தார் என்ற ஒன்றே அவளது இடையழகினை புலப்படுத்துவதாகும்.*

காஞ்சீ-இடையிலணியப்படும் ஒரு வகை ஸ்வர்ணாபரணம். இது சங்கிலி வடிவில் இருப்பது.

तस्याः प्रविष्टा नतनाभिरन्ध्रम्
रराज तन्वी नवलोमराजिः ।
नीवीमतिक्रम्य सितेतरस्य
तन्मेखलमध्यमणेरिवार्चिः ॥ ३८ ॥

**नीवीम्** - இடை வஸ்த்ரத்தின் முடிச்சை, **अतिक्रम्य**-கடந்து, **नत-नाभि-रन्ध्रम्** - அழகிய நாபியை, **प्रविष्टा** - அடைந்துள்ள,

**तस्याः तन्वी नव-लोम-राजिः**- அவளது மெல்லிய புதிய ரோமாவளி **सित-इतरस्य** - நீலநிறமான, **तन्मेखला-मध्य-मणेः**- அவளுடைய மேகலையின் நடுவிலுள்ள (நீல) ரத்தினத்தின், **अर्चिः-इव** - ஒளி போல், **रराज** - விளங்கியது.

नीवी-वस्त्र ग्रन्थिः। अतिक्रम्य-अतीत्य, नतं-निम्नं नाभिरन्ध्रम् प्रविष्टा, तन्वी-सूक्ष्मा, नवलोमराजिः। सितेतरस्य-असितस्य, तन्मेखलामध्यमणेः पार्वत्याः मेखलायाः मध्यमणेः अर्चिः-प्रभा इव रराज॥

(க-து) *ஒட்டியாணத்தின் (மேகலையின்) நடுவில் பதிக்கப்பட்டுள்ள நீல ரத்னத்தின் காந்தி மேல் நோக்கிப் பரவியுள்ளதோ என்று நினைக்கும்படி மெல்லிய ரோமாவளி அமைந்திருந்தது.*

मध्येन सा वेदिविलग्नमध्या
वलित्रयं चारु बभार बाला।
आरोहणार्थं नवयौवनेन
कामस्य सोपानमिव प्रयुक्तम्॥ ३९॥

**वेदि-विलग्न-मध्या**-யாகமேடைபோல் (இடையிலே)குறுகிய இடையையுடைய, **सा बाला** - அப்பார்வதி, **कामस्य आरोहणार्थं** - மன்மதன் ஏறுதற்காக, **नव-यौवनेन** - புதிய யௌவனத்தினால், **प्रयुक्तं** - அமைக்கப்பட்ட, **सोपानं-इव** - படி போன்று இருந்த, **चारु**-அழகிய, **वलित्रयं** - மூன்று மடிப்புக்களை, **मध्येन** - (தனது) இடைப் பகுதியினாலே, **बभार** - தாங்கியிருந்தாள்.

(க-து) *பார்வதியின் இடை, யாகமேடையின் இடைப்பகுதி போல் குறுகி இருந்தது. அத்தகைய இடையில், வயிற்றின் மெல்லிய தன்மையைக் காட்டும் மூன்று மடிப்பினையுடையவளாக இருந்தாள். அம்மடிப்புக்கள், மன்மதன் ஏறுவதற்காக யௌவனப் பருவம் அமைத்த படிகள் போல் இருந்தன.*

वेदि - யாக மேடை: இது இரு முனைகளிலும் அகலமான தாகவும் இடையிலே குறுகியும் இருக்கும்.

वलि - மடிப்பு. மெல்லிய வயிற்றின் மேல் இத்தகை மடிப்புக்கள் காணப்படும்.

कामस्य आरोहणार्थम् - 'காமன் ஏறுதற்காக' - இங்கு கூறிய काम - என்பது கணவனது அன்பு. அது ஏறுதலாவது, அதிக மாகுதல். எனவே அழகிய மடிப்புடன் கூடிய இடையினைக் காணும் அன்பரின் அன்பு அதிகமாவது இயற்கை. 'वलित्रयस्य चारुता कान्तमनसः कामप्रवृद्धिकरी - என்பர்' ரஸிகர்.

आरोहणार्थं नवयौवनस्य कामेन - எனப் பாடம் கொண்டு யௌவனப்பருவம் உடல் முழுவதும் பரவுதற்கு வேண்டி அது ஏறுதற்காகக் காமதேவன் அமைத்த படிபோன்ற மடிப்பினை பார்வதி தாங்கினாள்.' அழகான படியினை அமைக்க அழகு தேவன் மன்மதனே தகுந்தவன் என உரை கூறுவர் நாராயணரும் அருணகிரியும். இதுவே சிறந்ததெனப் புலப் படுகின்றது.

'यौवनस्य आरोहणार्थम्'-யௌவனப்பருவம் ஏறுதற்காக, कामेन- மன்மதனால் प्रयुक्त-அமைக்கப்பட்ட எனப் பதப் பொருள்.

"आरोहणार्थम्—स्तनवदनादिप्रदेशप्राप्त्यर्थम् । कामेनेति - नह्यन्येन निर्मिति तादृशं चारुत्वं संभवतीति भावः" नारायणः ॥

अन्योन्यमुत्पीडयदुत्पलाक्ष्याः
स्तनद्वयं पाण्डु तथा प्रवृद्धम् ।
मध्ये यथा श्याममुखस्य तस्य
मृणालसूत्रान्तरमप्यलभ्यम् ॥ ४० ॥

अन्योन्यम् - பரஸ்பரம், उत्पीडयत् - நெருக்குகின்ற, चारु - அழகிய, उत्पल-अक्ष्याः :- நீலத்தாமரை இதழ் போன்ற கண்களை

யுடைய பார்வதியின், पाण्डु - வெண்மையான, स्तन-द्वयम् - இரு ஸ்தனங்களும், तस्य मध्ये-அவை தம் இடையிலே, यथा - எவ்வாறு, मृणाल-सूत्र-अन्तरं-अपि-தாமரை நூலிற்கும் இடம், अलभ्यम्-கிடைப்பதரிதாகுமோ, तथा - அவ்வாறு, प्रवृद्धम् - அழகு பெற்று விளங்கின.

*(க-து) உடலழகிற்குச் சேர ஸ்தன ஸௌந்தர்யம் இருந்ததென்பதைக் கவி இதனில் கூறுகிறார்.*

**शिरीषपुष्पाधिकसौकुमार्यौ**
**बाहू तदीयाविति मे वितर्कः ।**
**पराजितेनापि कृतौ हरस्य**
**यौ कण्ठपाशौ मकरध्वजेन ॥ ४१ ॥**

पराजितेन-अपि - (சிவபிரானால்) தோற்கடிக்கப்பட்டவனாயினும், मकर-ध्वजेन-மன்மதனால், यौ-(பார்வதி தேவியின்) எந்த இரு கைகளும், हरस्य - சிவப்பிரானது, कण्ठ-पाशौ - கழுத்தைப் பிணிக்கும் கயிறுகளாக, कृतौ - செய்யப்பட்டனவோ, तौ - அத்தகைய, तदीयौ - அவளுடைய, बाहू - கைகள் இரண்டும், शिरीषपुष्प - अधिक - सौकुमार्यौ - வாகைப் பூவைக் காட்டிலும் அதிகம் மிருதுவானவை, इति - என்பது, मे - எனது, वितर्कः - ஊஹம்.

*(க-து) பார்வதியின் கைகள் வாகைப் பூவினும் மிருதுவானவை என ஊஹிக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில் பிற மலர்க்கணைகளை எய்த பொழுது சிவபிரான் மன்மதனுக்கு வசப்படவில்லை. மன்மதன் தோல்வியுற்றான். ஆனால் தவம் செய்து பார்வதி சிவபிரானை விவாஹம் செய்தபின் அவளது கைகளால் ஆலிங்கனம் செய்யப்பட்டார் அவர். எனவே பார்வதியின் கைகள் சிவபிரானைப் பிணிக்க மன்மதன் உபயோகித்தகயிறுகளாக அமைந்தன. ஆதலால் புஷ்பங்களிலே மிக மிருதுவான வாகை மலரினும் மிருதுவானவை பார்வதியின் கைகள் என ஊஹிக்க வேண்டி இருக்கிறது.*

शिरीष मालाधिक सौकुमार्यौ - எனப் பாடம் கொள்வர் நாரா யணரும் அருணகிரியும். "வாகை மலர் மாலையைக் காட்டிலும் மிருதுவானவை அவளது கைகள்" என்பது பதப் பொருள்.

कण्ठस्य तस्याः स्तनवन्धुरस्य ·
मुक्ताकलापस्य च निस्तलस्य ।
अन्योन्यशोभाजननाद्बभूव
साधारणो भूषणभूष्यभावः ॥ ४२ ॥

स्तन-वन्धुरस्य - ஸ்தனங்களின் அமைப்பினுல் அழகான, तस्याः - அவளுடைய, कण्ठस्य - கழுத்திற்கும், निस्तलस्य - (கழுத்தில் அணியப்பட்டிருந்த) வட்டமான, मुक्ता-कलापस्य च - முத்து மாலைக்கும், अन्योन्य-शोभा-जननात् - ஒன்றுக்கொன்று அழகை உண்டாக்கியதால், भूषण-भूष्य भावः :- ஆபரணமாக இருத்தல், அழகு செய்யப்படுதல் என்ற இவ்விரண்டு தன்மைகளும், साधारणः - பொதுவாக - இரண்டிற்கும் உரியதாக, बभूव - இருந்தது.

*(க-து) பார்வதியின் கழுத்து அதிகம் பருமனுகவோ மிக மெல்லியதாகவோயின்றி உரிய அளவில் அழகாக இருந்தது. அக் கழுத்திலே அணிந்திருந்த முத்து மாலை வட்டமாக அங்கு பதிந்து கழுத்திற்கு அழகையளித்தது. அத்தகைய அழகிய கழுத்தில் இருந்த தாலே அம்முத்துமாலையும் கழுத்தினுல் அழகு பெற்றது. எனவே, ஆபரணமான முத்து மாலை அழகு செய்யப்படும் தன்மையையும் அடைந்திருந்தது. அழகு செய்யப்படும் கழுத்து, மாலைக்கு அணியாக வானதால் அழகு செய்தல், அழகு செய்யப்படுதல், என்ற இவ்விரு தன்மைகளும் மாலைக்கும் கழுத்துக்கும் பொதுவாக இருந்தன.*

स्तनवन्धुर - "ஸ்தனவழகிற்குச் சேர அழகாக அமைந்த கழுத்து" எனக் கருத்துரைப்பர்.

कलाप : ஆபரணம் ; मुकता कलाप - முத்துமாலை.

तनुबन्धुर-என்பது நாராயணரும் அருணகிரியும் கொண்ட பாடம். இருக்க வேண்டிய வகையில் மெல்லியதாகவும் அழகா கவும் இருந்தது என்பது பொருள்.

भूषणम्-ஆபரணம். भूष्यम्-அழகு செய்யப்படுவது.

भूषणமான முத்துமாலை, भूष्यமாக-அழகுசெய்யப்படுவதாக ஆயிற்று, भूषण भूष्यभावः साधारणः - பொதுவாக மாலைதான் கழுத்துக்கு அழகு செய்வது. பார்வதியின் விஷயத்தில், அவள் கழுத்திலே முத்துமாலையும் அழகு பெற்றது. கழுத்தினால் மாலைக்கும், மாலையினால் கழுத்திற்கும் அழகு உண்டாயிற்று என்பது கருத்து.

चन्द्रं गता पद्मगुणान् न भुङ्क्ते
पद्माश्रिता चान्द्रमसीमभिख्याम् ।
उमामुखं तु प्रतिपद्य लोला
द्विसंश्रयां प्रीतिमवाप लक्ष्मीः ॥ ४३ ॥

लोला-ஓரிடத்திலும் நிலையாக இராத, लक्ष्मीः- லக்ஷ்மி, चन्द्रं-சந்திரனை, गता-அடைந்த பொழுது, पद्म-गुणान - தாமரை மலரின் குணமான வாசனை முதலியவற்றை, न भुङ्क्ते-அனுபவிக் கின்றதில்லை; पद्म-आश्रिता-தாமரை மலரை அடைந்த பொழுது चान्द्रमसीं - சந்திரனுடைய, अभिख्यां - காந்தியை, (न भुङ्क्ते) - அனுபவிக்கின்றதில்லை; उमा-मुखं - பார்வதியின் முகத்தை, प्रतिपद्य तु-அடைந்த பொழுதோ வெனில், द्वि-संश्रयाम्-தாமரை சந்திரன் என்ற இரண்டு இடங்களையும் அடைதலால் வருகின்ற, प्रीतिम्-ஸந்தோஷத்தை, अवाप-அடைந்தாள்.

*(க-து) லக்ஷ்மி தாமரையிலும் சந்திரனிடத்திலும் வசிப்பவள். தாமரை மலரில் வஸிக்கும் பொழுது அதன் வாசனை, மிருதுவான தன்மை இவைகளை அனுபவித்தபொழுதும்கூட பிரகாசம் இல்லை என்ப*

தாலும் இரவில் மூடிக் கொள்வதாலும் சந்திரனை அடைந்து அதன் ஒளியை இரவில் அனுபவிக்கின்றாள். ஆனால் சந்திரனிடத்தில் வாசனை இல்லாமையால் அவனை விட்டு மறுபடியும் தாமரை மலருக்கு வருகிறாள். இம்மாதிரி, தாமரையிலிருந்து சந்திரனுக்கும், சந்திரனிடமிருந்து தாமரைக்கும் பின் சந்திரனுக்கும் மாறிமாறிச்செல்வதால் அவள் ஸ்திரமான ஒரு வாஸஸ்தானம் பெறமலிலோல[நிலையாக இராதவள் எனப் பெயர் பெற்றிருந்தாள். ஆனால் பார்வதி பிறந்தபின், அவளது முகத்தில் நித்ய வாஸம் செய்து, சந்திரன் தாமரை என்ற இரண்டு பொருள்களில் வசிப்பதால் வரும் இன்பத்தை-பார்வதியின் முகம் ஒன்றினாலேயே பெற்றாள், லக்ஷ்மி. ஏனெனில் பார்வதியின் முகம் சந்திரன் போல் ஒளி பெற்று, தாமரை மலர் போல் மென்மை, மணம் முதலியகுணங்களுடன் விளங்கியது. லக்ஷ்மிக்கும் 'லோலா' என்ற பெயர் நீங்கியது, பார்வதியின் முகம் சந்திரன் போலும் தாமரைமலர் போலும் அழகாக இருந்தது என்பது கருத்து.

"सर्वकालरमणीयं स्वाभाविकसौरभ्याभिरामं देवीवदनं प्राप्य तु लक्ष्मीश्चन्द्र-पद्मानुभवजन्यां प्रीतिमाससादेत्यर्थः" नारायणः।

पुष्पं प्रवालोपहितं यदि स्यात्
मुक्ताफलं वा स्फुटविद्रुमस्थम् ।
ततोऽनुकुर्याद्विशदस्य तस्याः
ताम्रौष्ठपर्यस्तरुचः स्मितस्य ॥ ४४ ॥

पुष्पम् - வெண்ணிறப் பூ, प्रवाल-उपहितम् - செந்தளிர்மேல் வைக்கப்பட்டதாகவோ, मुक्ता फलं वा-முதிர்ந்த முத்து, स्फुट-विद्रुम-स्थं - நிர்மலமான பவளத்தின் மேல் வைக்கப்பட்டதாகவோ, यदि स्यात्-இருக்குமாயின், ततः- அப்பொழுது, (அவ்விரண்டனுள் ஒன்று), विशदस्य-மிகவெண்மையானதும், ताम्र-ओष्ठ-पर्यस्त-रुचः-சிவந்த உதட்டில் பரவிய ஒளியுடையதுமான स्मितस्य-(பார்வதியின்) புன்னகையை, अनुकुर्यात्-ஒத்து இருக்கலாம்.

*(க-து) மல்லிகை போன்ற வெண்ணிற மலர் சிவந்த தளிர் மேல் இருந்தால், அது, சிவந்த உதட்டின் மேல் பரவிய ஒளியுடைய பார்வதியின் புன்னகைக்கு ஸமமாக இருக்கும். அல்லது பவழத்தின் மேல் வைக்கப்பட்ட முத்து புன்னகைக்கு இணையாக இருக்கலாம்.*

இச்சுலோகம் பார்வதின் சிவந்த உதட்டின் அழகையும் புன்னகையையும் வர்ணிக்கின்றது. புன்னகையை வெண்ணிற மாகக் கூறுவது கவி மரபு. அவளது புன்னகைக்கு ஈடு எதுவுமே இல்லை; ஆதலால் இல்லாத ஒன்றைக் கற்பனை செய்து கவி உவமையாகக் கூறுகின்றார்.

**स्वरेण तस्याममृतस्रुतेव**
**प्रजल्पितायामभिजातवाचि ।**
**अप्यन्यपुष्टा प्रतिकूलशब्दा**
**श्रोतुर्वितन्त्रीरिव ताड्यमाना ॥ ४५ ॥**

**अभिजात-वाचि**-இனிய பேச்சுள்ள, **तस्यां**-பார்வதி, **अमृत-स्रुता-इव**-அமிருதத்தைப் பெருக்குவது போன்ற, **स्वरेण**-குரலிலே, **प्रजल्पितायां**-பேசத் தொடங்கிய பொழுது, **अन्यपुष्टा-अपि**-குயிலும், **ताड्यमाना**-(முறை தவறி) தட்டப்படுகின்ற, **वितन्त्रीः-इव**-தகாத முறையில் அமைந்த (வீணையின்) தந்தி போல், **श्रोतुः**-கேட்பவருக்கு, **प्रतिकूल-शब्दा**-(கர்ண) கடோரமான ஒலியுடையதாக, **भवति**-ஆகின்றது.

*(க-து) பார்வதியின் குரல் அம்ருதத்தைப் பெருக்குவது போல் இனியதாக உள்ளது. அவள் பேசத்தொடங்கும் பொழுதே, அவளது குரலின் இனிமையைக் கேட்டவர்களுக்கு, குயிலின் குரலும் முறை தவறி தட்டப்பட்ட வீணைத் தந்தியின் ஒலிபோல் கர்ண கடோரமாக இருக்கும்.*

अभिजात-நற்குடியில் பிறந்த எனப் பொருளுடையதாயினும் இச்சொல் இங்கு, "இனிய-மிருதுவான" என்ற பொருளில் வந்தது.

अन्यपुष्टा-பிறரால் வளர்க்கப்பட்டது: காக்கையால் வளர்க்கப்படுவதால் குயில் இப்பெயர் பெற்றது. பார்வதியின் குரலை கேட்டபின் குரலின் இனிமைக்குப் புகழ் பெற்ற குயிலின் குரலும் கர்ணகடோரமாக இருக்கும்.

वितन्त्री:-तन्त्री: வீணையின்தந்தி; वितन्त्री: சரியாக பொருத்தப்படாத தந்தி எனப் பொருள் உரைப்பர் மல்லிநாதர்.

उत्पाद्यानां स्वरादीनां विहितं ताडनक्रमम्। विना या ताड्यते मन्दैः सा वितन्त्रीरिहोच्यते॥ எனக் கூறுவர் நாராயணர். "தோற்றுவிக்கப்பட வேண்டிய ஸ்வரங்களுக்கு ஏற்றபடி மீட்டும் முறையறியாதவர்களால் தட்டப்படும் தந்தியை, वितन्त्री:" என்பர்.

> विपञ्च्या गायन्ती विविधमपदानं पशुपतेः
> त्वयारब्धे वक्तुं चलितशिरसा साधुवचने।
> तदीयैर्माधुर्यैरपलपित तन्त्रीकलरवां
> निजां वीणां वाणी निचुलयति चोलेन निभृतम्॥

என்ற ஸௌந்தர்யலஹரி சுலோகம் (66) இச்சுலோக கருத்தை மற்றொரு வகையில் விளக்குவதாகும்: கருத்து:-

"ஹே பார்வதி தேவியே, சிவபிரானது பலவகை வீரச் செயல்களை, வீணையின் உதவியுடன் பாடுகின்ற ஸரஸ்வதி, நீ தலையசைத்து, பாட்டு நன்றாக இருக்கிறது என்று கூறத் தொடங்கியவுடனேயே, அச்சொற்களின் இனிமையைக் கண்டு தன் வீணைக்கு இத்தகைய நாதம் இல்லையே எனக் கருதி பிறர் அறியாவண்ணம் துணியினாலே வீணையை மறைத்து விடுகின்றாள்" என்பதாம்.

प्रवातनीलोत्पलनिर्विशेष-
मधीरविप्रेक्षितमायताक्ष्या ।
तया गृहीतं नु मृगाङ्गनाभ्य-
स्ततो गृहीतं नु मृगाङ्गनाभिः ॥ ४६ ॥

प्रवात-नील-उत्पल-निर्विशेषम्-பெருங் காற்றுள்ள இடத்தில் இருக்கும் நீலத்தாமரை போன்ற, अधीर-विप्रेक्षितं - மருண்ட (அவளது) பார்வை, आयत-अक्ष्या – நீண்டகண்களையுடைய, तया - அப்பார்வதியால், मृग-अङ्गनाभ्यः- பெண்மான்களிட மிருந்து, गृहीतं:-கற்கப்பட்டதோ? मृग-अङ्गनाभि - பெண்மான் களால், ततः - அவளிடமிருந்து, गृहीतं नु - கற்கப்பட்டதோ? (நாம் அறியோம்);

*(க-து) பெருங்காற்றுள்ள இடத்தில் நீலத்தாமரைமலர் காற்றில் அசைந்து கொண்டே இருக்கும்; அதுபோல் உள்ளது பார்வதியின் மருண்ட பார்வை; மான்களின் பார்வையும் அத்தகையதே; எனவே, அப்படிப்பட்ட அழகிய பார்வையைப் பார்வதி மான்களிடம் கற்றுக் கொண்டனளோ? அல்லது மான்கள் தாம் அவளிடம் கற்றுக் கொண்டனவோ என்று நினைக்கும்படி இருந்தது. பார்வதியின் மருண்ட பார்வை மானுடையது போல், அழகாக இருந்தது. அவள் கண் நீலோத்பலம்போலும் மான்கண்போன்றும் இருந்தது என்பது கருத்து.*

" चारुमारुतावधूयमानचञ्चलेन्दीवरसदृक्ष कटाक्षविक्षेपणं किं तया मृगाङ्गनासकाशात् गृहीतम् उत मृगाङ्गनाभिस्तत्सकाशादितीमं विशेषं निपुणतरं निरूपयन्तोऽपि वयं नावगच्छामः इति भावः" नारायणः ।

तस्याः शलाकाञ्जननिर्मितेव
कान्तिर्भ्रुवोरायतलेखयोर्या ।
तां वीक्ष्य लीलाचतुरामनङ्गः
स्वचापसौन्दर्यमदं मुमोच ॥ ४७ ॥

**आयत-लेखयो**:- நீண்ட வரி வடிவமுள்ள, **तस्याः भ्रुवोः**:- அவள் புருவங்களுக்கு, शलाका-अञ्जन-निर्मिता-इव- தூலிகையிலுள்ள மையினால் அமைக்கப்பட்டதுபோன்று, **या-कान्तिः**:-எந்த அழகு இருந்ததோ, लीला-चतुराम्- அசைவுகளால் கவர்ச்சியுள்ள, **तां**-புருவங்களின் அவ்வழகை, **वीक्ष्य**-பார்த்து, **अनङ्गः**:- மன்மதன், **स्व-चाप-सौन्दर्य-मदम्**-தனது வில்லழகினால் தான் கொண்டுள்ள கர்வத்தை, **मुमोच**- விட்டு விட்டான்.

*(க-து) பார்வதியின் புருவங்கள் நீண்டிருந்தன; தூலிகையில் மையெடுத்துத் தீட்டி அழகு செய்தன போல் அப்புருவங்கள் சோபையுடன் காணப்பட்டன. புருவங்களின் அழகைக்கண்ட மன்மதன், தனதுவில்லே அழகானதென்று இதுவரை தான்கொண்டிருந்த கர்வத்தை விட்டான்.*

மன்மதனது வில்லையும் வென்று அழகாக இருந்தன புருவங்கள் என புருவத்தைவர்ணித்தார் கவி.

लेखा-அமைப்பு, सन्निवेशः:- என்பர் நாராயணர்.

आनतलेखयोः:- ('வளைந்த அமைப்புடைய)' என்ற பாடத்தை நாராயணர் கொண்டுள்ளார். இதுவே சரியானதெனப் புலப்படுகின்றது. புருவத்தை அதன் வளைந்த தன்மையிலேதான் வில்லுடன் ஒப்பிடுவது வழக்கம்.

शलाकाञ्जन निर्मितेव-நீண்ட புருவமில்லாத பெண்கள் மையைத் தடவித் தமது புருவங்களை நீண்டவை போல் தோன்றும்படி செய்வர். பார்வதியின் புருவம், மைதடவி நீட்டியது போல் தோன்றியதேயன்றி மைதடவப் பெருமலே நீண்டிருந்தது.

**लीला**- அழகான அசைவுகள்; लीला चतुराम्- அத்தகைய அசைவுகளால் புருவத்தின் அழகு அதிகமாயிற்று.

लज्जा तिरश्चां यदि चेतसि स्या-
दसंशयं पर्वतराजपुत्र्याः ।
तं केशपाशं प्रसमीक्ष्य कुर्युः
वालप्रियत्वं शिथिलं चमर्यः ॥ ४८ ॥

तिरश्चाम् - மிருகங்களின், चेतसि - மனத்தில், लज्जा - வெட்க உணர்ச்சி, स्यात् - यदि - இருக்குமாயின் (அப்பொழுது), पर्वत - राज - पुत्र्याः - பார்வதிதேவியின், तम् - புகழ் வாய்ந்த, केशपाशम् - சிறந்த கூந்தலை, प्रसमीक्ष्य - பார்த்தபின், चमर्यः - பெண் கவரிமான்கள், वाल - प्रियत्वम् - (தங்கள்) வாலில் வைத்த அபிமானத்தை, असंशयं - திண்ணமாக, शिथिलम् कुर्युः - குறைத்துக் கொள்ளும் (தளரச்செய்யும்).

(க-து) சிறந்த கூந்தலைக் கவரிமான்களின் கவரிகளுக்கு ஒப்பிடுவது வழக்கம். பார்வதியின் கூந்தல், அடர்த்தியிலும் நீளத்திலும் மற்றைக் குணங்களிலும் மிகச்சிறந்து கவரியையும் வென்றிருந்தது. தம் வாலில் மிக அன்புள்ள கவரிமான்கள் வெட்கமுள்ளவையாயின் பார்வதியின் கூந்தலைக் கண்ட பின், தம் வாலில், அதன் அழகில் கொண்ட அபிமானத்தை முற்றிலும் விடாவிடினும் சிறிதேனும் குறைத்துக் கொள்ள வேண்டும். மிருகங்களுக்கு வெட்க உணர்ச்சி இல்லாததால் ஹிமாலயத்திலேயே வாலை ஆட்டிக் கொண்டு அவை திரிகின்றன.

तम् केशपाशम् - 'அந்த' கூந்தலை; அந்த என்ற சொல் பார்வதியினுடைய கூந்தலின் அழகு பலரும் அறிந்ததெனப் பிரஸித்தியைக் காட்டியது.

केशपाशं - கேச என்பதன் பின் வரும் पाश - என்ற சொல் கூந்தலின் அடர்த்தியையும் அழகையும் காட்டும்.

चमर्यः - பெண் கவரிமான்கள்; இவற்றின் வால் மயிர் அடர்ந்து இருக்கும். வாலின் ஒரு மயிரை இழக்கினும் இம் மான்கள் தம் உயிரையும் விடும் என்பர். அவ்வளவு

அபிமானம் கவரியில் அவற்றிற்கு. மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் (குறள் எண் 969) என்றார் திருவள்ளுவரும்.

शिथिलम् कुर्युः - பார்வதியின் கூந்தலைப் பார்த்தபின், வாலில் கொண்ட அபிமானத்தை முற்றிலும் விடவேண்டும். அப்படிச் செய்யாவிடின் அன்பைக் குறைத்துக் கொள்ள வேனும் செய்தல் வேண்டும். அவ்வாறு அவை செய்ய வில்லை. ஏனெனில் மிருகங்களுக்கு வெட்க உணர்ச்சி இல்லை. மன்மதன், வெட்க உணர்ச்சி உள்ளவனாதலால் தன் வில்லில் அபிமானத்தை விட்டான் என முன் சுலோகத்தில் கூறிய கவி, இச்சுலோகத்தில் மிருகங்கள் தம் வாலின் அபிமானத்தை விடாமைக்குக் காரணத்தைக் கூறினார்.

'यो हि गुणाधिकदर्शनेन लज्जितः सः स्वगुणेषु नादरं करोतीति लोक-सिद्धम्' । नारायणः ।

सर्वोपमाद्रव्यसमुच्चयेन
यथाप्रदेशं विनिवेशितेन ।
सा निर्मिता विश्वसृजा प्रयत्ना-
देकस्थसौन्दर्यदिदृक्षयेव ॥ ४९ ॥

विश्व - सृजा - பிரம்ம தேவரால், एकस्थ - सौन्दर्य - दिदृक्षया इव - ஓரிடத்தில் சேர்ந்திருக்கும் அழகு முழுமையும் காணும் விருப்பத்தினால் போலே, प्रयत्नात् - முயன்று, यथाप्रदेशम् - அந்தந்த இடத்தில், विनिवेशितेन - வைக்கப்பட்ட, सर्व - उपमा - द्रव्य - समुच्चयेन - எல்லா உபமானப் பொருள்களின் திரளால், सा - அவள், निर्मिता इव - நிர்மாணிக்கப்பட்டவள் போல் (இருந்தாள்.)

(க-து) சந்திரன், தாமரை, நீலோத்பலம் முதலியவை ஸ்த்ரீகளின் அங்கங்களுக்கு உபமானமாகக் கூறப்படும் பொருள்கள். அவைகளில் ஒவ்வொன்றும் தனித்தனி அழகுடையது. இவ்வழகை எல்லாம் சேர்த்து ஓரிடத்தில் பார்க்கவேண்டும் என்ற விருப்பத்தினுல் போல் பிரம்மதேவரால் உவமைப்பொருள்களை எல்லாம் ஒன்று சேர்த்து அது அது இருக்க வேண்டிய இடத்தில், இருக்க வேண்டிய வகையில் வைத்து அமைக்கப்பட்டவள் பார்வதி. எனவே நிறைந்த அழகுடையவளாக அவள் காணப் பட்டாள்.

विश्वसृजा - உலகைப் படைத்துக் கைதேர்ந்தவர் பிரம்ம தேவர். एकस्थ . . . दिदृक्षया - தாம் படைத்த அழகுப் பொருள்கள் மூலைக் கொன்ருகச் சிதறிக் கிடக்கின்றன. அவற்றைச் சேர்த்து ஓரிடத்தில் பார்க்க விரும்பினுர் பிரம்ம தேவர்.

प्रयत्नात् - படைக்கும் ஆற்றல் மிகவும் பெற்றிருக்கும் பிரம்ம தேவரும் மிக முயன்று படைத்தார் பார்வதியை.

यथाप्रदेशं विनिवेशितेन - சந்திரனை முகமாக வைத்தல், தாமரையைப் பாதமாக வைத்தல், நீலத்தாமரை இதழை குறுக்கிலே கண்ணுக அமைத்தல் போன்று, இருக்க வேண்டிய இடம், முறை இவைகளை அறிந்து வைக்கப் பட்டன உபமானப் பொருள்கள்.

समुच्चयः - சேர்த்தல்; சிதறிக் கிடந்த அழகைக் குவித்துப் பார்த்தார் பிரம்மதேவர். இச்சுலோகத்தில், பார்வதியின் அழகு எளிதிலே உலகில் காணப்பெருத ஒன்று என வர்ணிக்கின்ருர் கவி.

"दिदृक्षया इव निर्मितेव" - अनेन उत्प्रेक्षाद्वयेन च देवीसौन्दर्यस्य लोकोत्तरत्वं ध्वन्यते । नारायणः ॥ अखण्डसौन्दर्यदिदृक्षामूलैवंविध-विधि-निर्माणोत्प्रेक्षया देव्यामखण्डसौन्दर्याध्यासः प्रतीयते ॥ अरुणगिरिः ॥ "कृत्स्नः देहः उपमानैरेव घटितः । नात्रोपमेयगन्धः । उपमानानां समुच्चय एव अवयवी । न उपमानस्य उपमानान्तरं संभवि" । रसिकः ॥

तां नारदः कामचरः कदाचित्
कन्यां किल प्रेक्ष्य पितुः समीपे ।
समादिदेशैकवधूं भवित्रीं
प्रेम्णा शरीरार्धहरां हरस्य ॥ ५० ॥

काम - चरः - *தமது விருப்பப்படி ஸஞ்சரிப்பவரான,* नारदः - *நாரதமுனிவர்,* कदाचित् - *ஒருசமயம்,* पितुः - *தந்தை ஹிமவானுக்கு,* समीपे - *அருகில் (இருந்த),* तां कन्यां - *அப்பெண்ணை,* प्रेक्ष्य (किल) - *பார்த்து,* हरस्य - *சிவபிரானது,* एक - वधूम् - *சக்களத்தியற்ற மனைவியாக,* भवित्रीं - *ஆகப்போகின்றவளாகவும்,* प्रेम्णा - *அன்பினால்,* शरीर - अर्ध - हराम् - *பாதிசரீரத்தை அடைபவளாகவும்,* समादिदेश - *கூறினார்.*

(க-து) தம்மிஷ்டப்படி ஸஞ்சரிக்கும் நாரதர் ஒருசமயம், ஹிமவானது வீட்டிற்கு வந்தார். அங்கே ஹிமவானது அருகில் இருந்த பார்வதியைப் பார்த்து "இவள் சிவபிரானது மனைவியாவாள். இவளுக்கு ஸகளத்ரமாக வேறு ஒருத்தி வர மாட்டாள். மேலும், இவள், தனது அன்பினால் சிவபிரானது உடலிலே பாதியைத் தனதாகப் பெறுவாள்" என்று கூறினார்.

नारदः - இவர் வாக்யம் திண்ணமாகப் பலிக்கும் என்பதனையும் காட்டியது இச்சொல்; नारम् - அறிவை, दः - தருபவர் என்பது இதன் பதப் பொருள்.

एक - वधूः - சிவபிரானுக்கு மற்றொரு மனைவி ஏற்படுவாளாயின் பார்வதியை एक - वधू - எனச் சொல்ல முடியாது. "இரண்டாமவளற்றவள்". இரண்டாமவள் யாரெனின் ஸகளத்ரமே - (சக்களத்தியே); ஸகளத்ரம் என்பது சக்களத்தியாயிற்று. இதனால் சிவபிரானது அன்பு முழுவதும் இவளிடமே இருக்கும் என்று கூறப்பட்டது.

**शरीरार्धहराम्** - *ஸர்வேச்வரன் இவளது அன்பிற்கு வசப் பட்டுத் தமது உடலின் பாதியை அவளுக்குத் தரப் போகிருர் என்பதை, அன்பிஞல் அவரது சரீரத்தின் பாதிப் பகுதியைப் பெறப் போகின்ருள் எனக் கூறிஞர் நாரதர்.*

*சிவபிரானே மணக்கப் போகிருள் என்ற செய்தியே ஹிமவானுக்கு மன மகிழ்ச்சியைத் தருவதற்குப் போது மானது. அதைவிட அதிகம் மகிழ்ச்சியைத் தருவது சிவபிரா னது உடலில் பாதியைப் பெறுவாள் என்பதாம்.*

**किल** - *என்பது பொதுவாக ஒரு வரலாற்றினைக் குறிப்ப தாகும்.*

**गुरुः प्रगल्भेऽपि वयस्यतोऽस्याः**
**तस्थौ निवृत्तान्यवराभिलाषः ।**
**ऋते कृशानोर्न हि मन्त्रपूत-**
**मर्हन्ति तेजांस्यपराणि हव्यम् ॥ ५१ ॥**

**गुरुः** - *தந்தை ஹிமவான்,* **अतः** - *அதஞல் (நாரதவாக்யம் காரணமாக),* **अस्याः** - *பார்வதிக்கு,* **प्रगल्भे** - **वयसि** - *யௌவனப் பருவம்,* **सति अपि** - *வந்துற்ற பொழுதும்,* **निवृत्त** - **अन्य** - **वर** - **अभिलाषः** - *மற்ற வரன்களிடத்தில் ஆசையை நீக்கியவஞக,* **तस्थौ** - *இருந்தான்;* **मन्त्र** - **पूतम्** - *மந்திரத்திஞல் பரிசுத்தமான,* **हव्यम्** - *ஹவிஸ்ஸை,* **कृशानोः** - **ऋते** - *அக்னியைத் தவிர்த்து,* **अपराणि** - *மற்ற,* **तेजांसि** - *ஒளிப் பொருள்கள்,* **न अर्हन्ति हि** - *அடையத் தகுந்தன அல்லவே!*

**(க-து) யௌவனப் பருவமடைந்து, மிகச்சிறந்த அழகுடன் இருக்கும் தன்மகளுக்கு எல்லா வகையிலும் பொருத்தமாக எவன் கணவஞக வரப்போகின்ருஞே எனக்கவலையுடனிருந்தான் ஹிமவான். நாரதர் கூறியதைக் கேட்டவுடன் அவருடைய சொல்லில் நம்பிக்கை கொண்டதால், வேறு வரன்களைப்பற்றிய சிந்தையையும் நீக்கிஞன் அவன். பார்வதிக்கு ஏற்ற கணவன் சிவபிரானே என உறுதியாக நினைத்தான்.**

மந்த்ர உச்சாரணத்தினாலே பரிசுத்தமான ஹவிஸ்ஸைப் பெறுவதற்கு அக்னி ஒன்றுதான் உரியது. பிற ஒளிப் பொருள்கள் அல்ல. தங்கம் வெள்ளி முதலியன ஒளியுடையவையாயினும் இவைகளில் ஹோமம் செய்வதில்லை !

"अपराणि अन्यानि तेजांसि सूर्यचन्द्रमसादीनि नार्हन्ति । हिशब्दः प्रसिद्धौ । यथा मन्त्रपूतं हविः कृशानुरेवार्हति तथा तामपि हर एवेति भावः" नारायणः ॥ 'अपराणि तेजांसि - सुवर्णादीनि । नार्हन्ति' मल्लिनाथः ।

अयाचितारं न हि देवदेव-
मद्रिः सुतां ग्राहयितुं शशाक ।
अभ्यर्थनाभङ्गभयेन साधुः
माध्यस्थ्यमिष्टेऽप्यवलम्बतेऽर्थे ॥ ५२ ॥

अद्रिः - ஹிமவான், अयाचितारं - (மகளைத் தரும்படி) கேட்காத, देव - देवं - தேவர்கள்தலைவரான சிவபிரானை, सुताम् - தன் மகளை, ग्राहयितुम् - (தானே கொண்டு தந்து), ஏற்றுக் கொள்ளும்படி செய்ய, न - शशाक - சக்தியுடையவனாக இல்லை; (அவன் மனம் ஒப்பவில்லை); हि - ஏனெனில், साधुः - மானமுள்ள மனிதன், अभ्यर्थना - भङ्ग - भयेन - (தனது) வேண்டுகோளுக்கு மறுப்பு ஏற்படுமோ என்ற அச்சத்தினால், इष्टे अर्थे अपि - (தான்) விரும்பிய விஷயத்திலும், माध्यस्थ्यम् - நடு நிலையை, अवलम्बते - கைக் கொள்ளுகின்றான்.

(க-து) நாரதர் கூறியதில் நம்பிக்கை கொண்டவனாயினும் ஹிமவான், தன் மகளைச் சிவபிரான் ஏற்கும்படி செய்ய இயலாமல் வாளா இருந்தான். ஏனெனில் சிவபிரான், ஹிமவானிடம், அவனது மகளைத் தமக்கு மணம் செய்விக்கும்படி கேட்கவில்லை. ஹிமவான் தானே அவரிடம் சென்று தன் மகளை மணக்கும்படிக் கேட்கவும்

துணியவில்லை. ஏனெனில் அவர் மறுத்து விட்டால் அது பெரிய அவமானமாகுமே என அஞ்சினன். எனவே, தனக்கு மிக விருப்பமான இவ்விஷயத்திலும் பற்றில்லாதவன் போல் நடு நிலையைக் கைக் கொண்டு சும்மா இருந்தான் ஹிமவான்.

अयाचितारम् - கேட்காதவர்களுக்கு, உணவையும் கல்வியையும் கன்யையும் தருதல் கூடாது என சாஸ்திரம் கூறும்.

"अयाचितानि देयानि सर्वद्रव्याणि भारत।
अन्नं विद्या तथा कन्या अनर्थिभ्यो न दीयते"

முற்காலத்தில் பெண்ணைக் கேட்டுப்பெற்று மணம் புரிதல் தான் வழக்கத்திலிருந்தது. தற்போதும் இது சிலரிடையில் உள்ளதே.

यदैव पूर्वे जनने शरीरं
सा दक्षरोषात् सुदती ससर्ज ।
तदा प्रभृत्येव विमुक्तसङ्गः
पतिः पशूनामपरिग्रहोऽभूत् ॥ ५३ ॥

सा सुदती - அப்பார்வதி, पूर्वे जनने - முன் பிறவியில், यदा - एव - எப்பொழுது, दक्ष - रोषात् - தக்ஷனிடமுள்ள கோபத்தினல், शरीरम् - உடலை, ससर्ज - விட்டனளோ, तदा - प्रभृति एव - அந்த ஸமயம் முதற் கொண்டே, पशूनाम् - पतिः - ஜீவாத்மாக்களுக்குத் தலைவரான சிவபிரான், विमुक्त - सङ्गः - பற்றை விட்டு, अपरिग्रहः - மனைவியற்றவராக, अभूत् - இருந்தார்.

(க-து) இப்பொழுது யௌவன எழிலுடன் இருக்கும் பார்வதி, முற்பிறவியில் ஸதி என்ற பெயருடன் இருந்தபொழுது, தன் தந்தை தக்ஷனிடம் கோபத்தினல் எந்த சமயத்தில் சரீரத்தை விட்டனளோ, அந்த சமயம் முதற் கொண்டே சிவபிரான் எதிலும் பற்றின்றி மனைவியில்லாமலே இருந்தார்.

सुदती - அழகான பல் உடையவள் என்ற பொருளுடைய இச்சொல், யௌவனம் அழகு இரண்டையும் உடையவள் என்ற பொருள் தரும்,

पशवः - கர்ம என்ற கயிற்றினுல் பிணிக்கப்பட்டுள்ளதால், ஜீவாத்மாக்களை-பசு-பிராணி-என்பர். ஜீவர்களுக்கு அந்தர் யாமியாக இருப்பதால் சிவபிரான், 'பசுபதி' என அழைக்கப்படுவர்.

शरीरं दक्षरोषात् ससर्ज - சுலோகம் 21 குறிப்பைக் காண்க.

परिग्रहः - மனைவி, अपरिग्रहः - மனைவியற்றவர்.

स कृत्तिवासास्तपसे यतात्मा
गङ्गाप्रवाहोक्षितदेवदारु ।
प्रस्थं हिमाद्रेर्मृगनाभिगन्धि
किञ्चित्क्वणत्किन्नरमध्युवास ॥ ५४ ॥

कृत्ति - वासाः - (யானைத்) தோலையணிந்தவரும், यत - आत्मा - அடக்கிய புலனுடையவருமான, सः - அச் சிவபிரான், तपसे - தவம் செய்வதற்காக, गङ्गा - प्रवाह उक्षित - देवदारु - கங்கையின் நீரினுல் நனைந்த தேவதாரு மரங்களையுடையதும், मृगनाभि - गन्धि - கஸ்தூரியின் வாசனையுடையதும், क्वणत् - किन्नरम् - பாடுகின்ற கின்னரர்களையுடையதுமான, हिमाद्रेः - ஹிமய மலையின், किञ्चित् - ஒரு, प्रस्थम् - (சிகரத்திலுள்ள) இடத்தில், अध्युवास - வசித்தார்.

(க-து) சிவபிரான், யானைத் தோலை யணிந்து புலனை அடக்கி, தேவதாரு மரங்களும், கஸ்தூரியின் நறுமணமும், பாடுகின்ற கின்னரர்களுமுடைய ஹிமாலயத்தின் சிகரத்திலுள்ள ஒரு ஸமமான இடத்தில் தவம் செய்வதற்காக வசித்தார்.

कृत्तिः - தோல்; இங்கு யானைத் தோலைக் குறித்தது.

प्रवाह - ஜலத்தினுல், उक्षित - நனைந்தது என்பது பொருளாயினும் நீரினுல் வளர்ந்த தேவதாரு மரங்களையுடையது எனப் பொருள் கொள்ள வேண்டும்.

प्रस्थ - மலைமேலுள்ள ஸமமான இடம்; சிவபிரான் தவம் செய்யத் தேர்ந்தெடுத்த இடம், நல்லஜலமும், தேவதாரு நிழலும், கஸ்தூரியின் நறுமணமும், காதிற்கு இனிய ஸங்கீதமும் உடையதாக இருந்தது என்பதனை (१) गंगा, (२) देवदारु, (३) मृगनाभिगन्धि, (४) क्वणत्किन्नरम् - என்ற விசேஷணங்கள் காட்டின.

गणा नमेरुप्रसवावतंसा
भूर्जत्वचः स्पर्शवतीर्दधानाः ।
मनःशिलाविच्छुरिता निषेदुः
शैलेयनद्धेषु शिलातलेषु ॥ ५५ ॥

नमेरु - प्रसव - अवतंसाः - சரக்கொன்றை மலரை அணிந்தவர்களும், स्पर्शवतीः - மிருதுவான ஸ்பர்சமுடைய, भूर्ज - त्वचः - பூர்ஜமரவுரியை, दधानाः - உடுத்தியவர்களும், मनः शिला - विच्छुरिताः - மனச்சிலையைப் பூசியவர்களுமான, गणाः - சிவ ஸேவகர்கள், शैलेय - नद्धेषु - சிலாஜது பரவியுள்ள, शिला - तलेषु - பாறைகளின் மேல், निषेदुः - அமர்ந்திருந்தனர்.

(க-து) சிவ ஸேவகர்களான பிரமதகணங்கள், நமேருமலரை அணிந்து மரவுரி உடுத்தி மனச்சிலையை பூசிக்கொண்டு, சிலாஜது நிறைந்து வாஸனையுள்ள பாறைகளின் மேல் அமர்ந்திருந்தனர்.

गणाः - சிவபிரானுக்குத் தொண்டு செய்யும் கூட்டம். இவர்கள் முப்பத்தாருயிரம் பேர்கள் என்பர். சிவபிரான் தவம் செய்யச் சென்றபொழுது இவர்களும் ஹிமாலயம் சென்று அங்கே கிடைக்கும் பொருளை உபயோகித்து மகிழ்ந்தனர்.

नमेरु - ஒரு வகை மரம். 'ஸுரபுன்னை' என்பர். சரக்கொன்றை என்றும் கூறுவர்.

भूर्जः - ஒரு வகை மரம், இதன் பட்டையை உரித்து உடுத்துவர்; भूर्ज त्वच् - மரவுரி.

मनः शिला - இதைத் தமிழில் மனேசிலை என்பர். இது ஒரு வர்ணப் பொருள். இதன் பொடியை உடம்பிலே பூசி அழகு செய்து கொண்டனர் சிவ ஸேவகர்கள்.

शैलेय - மணமுள்ள ஒருவகைச் செடி என்பர் சிலர். மழை காலத்தில் பாறைகளின் மேல் படரும் ஒருவகைப் பாசி. பார்ப்பதற்கு மெழுகு போல் இருக்கும். शिला - கல்லில் தோன்றும், जतु - மெழுகு அல்லது அரக்கு. சிறிது மண முடையது. 'சிலாஜத்' என்று இப்பொழுதும் விற்கப் படுவது.

तुषारसङ्घातशिलाः खुराग्रैः
समुल्लिखन् दर्पकलः ककुद्मान् ।
दृष्टः कथञ्चिद्गवयैर्विविग्नै-
रसोढसिंहध्वनिरुन्ननाद ॥ ५६ ॥

तुषार - संघात - शिलाः - உறைந்த பனிக்கட்டிப் பாறைகளை, खुर - अग्रैः - குளம்புகளின் முனைகளால், समुल्लिखन् - கீறிக் கொண்டு இருப்பதும், दर्प - कलः - கர்வத்தினால் அழகாக இருக் கின்றதும், विविग्नैः - பயந்த, गवयैः - காட்டு எருதுகளால், कथंचित् - மிக ச்ரமத்துடன், दृष्टः - பார்க்கப்பட்டதுமான, ककु - द्मान् - (சிவபிரானது) விருஷபம், असोढ - सिंह - ध्वनिः - (ஹிமா லயத்திலுள்ள) சிங்கங்களின் கர்ஜனையைப் பொறுக்காததாக उन्ननाद - உரத்துச் சத்தமிட்டது.

(க-து) சிவபிரான் தங்கியிருந்த இடத்திலேயே அவரது வாஹனமான விருஷபமும் இருந்தது. அது தன் குளம்புகளால் பனிப்பாறைகளை கீறிக்கொண்டு, சிங்க கர்ஜனையைப் பொறுக்காது உரத்துக் கர்ஜனை செய்தது. காட்டு எருதுகளும் அதனை அச்சத் துடன் நோக்கின. கர்வத்தினால் தலை நிமிர்ந்து நின்ற அது மிக அழகாக இருந்தது.

गवयः - நாட்டிலுள்ள எருது போன்று காட்டில் வாழும் ஒருவகை மிருகம். இதனைக் காட்டு எருது என்றும் கூறுவர்,

இவை, தம்மைப் போன்றுள்ள விருஷபத்தையும் அச்சத்துடன் நோக்கின. ஏனெனில் அதனுடைய கம்பீரத் தோற்றம் அவற்றின் மனத்தில் அச்சத்தை விளைவித்தது.

विविग्न - ‘பயந்த’ அல்லது இடம் விட்டு ஓடிய என்று பொருள் சொல்லலாம்.

ककुद् - திமில்; அதனையுடையது - ककुद्मान् - விருஷபம்.

असोढसिंहध्वनिः - ஹிமாலயத்திலுள்ள சிங்கத்தின் கர்ஜனையைக் கேட்ட இவ்விருஷபம் உரத்துக் கர்ஜித்தது. இதனால் சிவபிரானது விருஷபம் சிங்கங்களுக்கு அஞ்சவில்லை என்பதும், அவைகளின் பலப் பெருமையை பொறுக்கவில்லை என்பதும் புலனாகின்றது.

समुल्लिखन् - தரையைக் குளம்பினால் கிளறுவதும், மண்மேடுகளைக் கொம்பினால் குத்தி இடிப்பதும் எருதுகளின் ஸ்வபாவம்.

तत्राग्निमाधाय समित्समिद्धं
स्वमेव मूर्त्यन्तरमष्टमूर्तिः ।
स्वयं विधाता तपसः फलानां
केनापि कामेन तपश्चचार ॥ ५७ ॥

तपसः - தவத்திற்கு, फलानाम् - பலன்களை, स्वयं विधाता தாமே தருபவரான, अष्टमूर्तिः - சிவபிரான், तत्र - அங்கு, स्वम् - தமது, मूर्त्यन्तरम् - மற்றொரு வடிவமானதும், समित् - समिद्धम् - ஸமித்தினால் ஜ்வலிக்கும்படி செய்யபட்டதுமான, अग्निम् - அக்னியை, आधाय - வைத்துக் கொண்டு, केन अपि कामेन - ஏதோ ஒரு விருப்பத்தினால், तपः - தவத்தை, चचार - செய்தார்.

(க-து) செய்யும் தவம் முழுவதற்கும் பலன் அளிப்பவர் சிவபிரான். அவர், தமது எட்டு வடிவங்களில் ஒன்ருன அக்னியை, ஸமித்துக்களால் எரியச் செய்து அதனை முன்வைத்துக் கொண்டு ஏதோ ஒரு விருப்பத்தினுல் தவம் செய்தார்.

अष्टमूर्तिः - எட்டுப்பொருள்களைத் தம் சரீரமாக உடையவர்; சிவபிரான். நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், யாகம் செய்பவர் என்று இவ்வெட்டும் சிவபிரானது உடல்கள். स्वं एव मूर्त्यन्तरम् - நெருப்பும் அவரது சரீரம். தமது தேஹமான அக்னியை தம் எதிரில் ஸாக்ஷியாக வைத்துக் கொண்டு அவர் தவம் செய்தார்.

समित् - பலாசு முதலிய சில மரங்களின் சிறு குச்சிகள். இவற்றை அக்னியில் ஹோமம் செய்வர்.

केनापि कामेन - சிவபிரான் ஏன் தவம் செய்தார் என்பதற்கு விடையாக வந்துள்ளன இப்பதங்கள்; எல்லா நன்மைகளையும், அவர் விரும்பினுல், பெறக் கூடும். ஆகையால் ஒரு பயனை யடையத் தவம் செய்தார் என்று சொல்ல இயலாது. ஆனுல் செய்யும் காரியத்திற்கு ஒரு நோக்கம் இருக்க வேண்டுமாதலால், ஏதோ ஒரு விருப்பத்தினுல் தவம் செய்தார் என்றுதான் பொதுவாகச் சொல்ல இயலும். தவம் செய்யும் முறையை உலகத்தினர்க்கு காட்டவேண்டிச் செய்தார் என்பர் நாராயணர்.

"परमार्थतस्तु भगवतः तपश्चरणं लोकानुग्रहाय। अनुग्रहश्च सर्वैरप्येवं कर्तव्यमित्युपदेशः। यथोक्तं भागवते — 'ईजे च भगवान् रामो यत्रास्पृष्टोऽपि कर्मणा। लोकानां ग्राहयन् शीलं यथान्योऽप्यापनुत्तये ॥'' — नारायणः।

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन। नानवाप्तमवाप्तव्यं वर्त एव हि कर्मणि ॥ கீதை 3.22.

यद्यदाचरति श्रेष्ठः तत्तदेवेतरो जनः।

स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥ கீதை 3.21 என்பதையும் காண்க.

अनर्घ्यमर्घ्येण तमद्रिनाथः
स्वर्गौकसामर्चितमर्चयित्वा ।
आराधनायास्य सखीसमेतां
समादिदेश प्रयतां तनूजाम् ॥ ५८ ॥

अद्रिनाथः - ஹிமவான், अनर्घ्यम् - மிகச் சிறந்தவரும், स्वर्गौकसाम् - தேவர்களாலும், अर्चितम् - பூஜிக்கப்படுபவருமான, तम् - அச் சிவபிரானை, अर्घ्येण - தீர்த்தம் முதலிய பூஜைப் பொருள்களால், अर्चयित्वा - பூஜித்தபின், अस्य - அவரை आराधनाय - (தொடர்ந்து) பூஜிப்பதற்காக, प्रयताम् - அடக்க முள்ளவளும், सखी - समेताम् - தோழிகளுடன் கூடியவளுமான, तनूजां - தன் மகளை (பார்வதியை), समादिदेश - ஆணையிட்டான்.

(க-து) ஹிமவான் தன்னுடைய இடத்தில் சிவபிரான் தங்கி இருப்பதை அறிந்தவுடனேயே பூஜாத்ரவ்யங்களுடன் சென்று அவருக்குப் பூஜை செய்த பின், தொடர்ந்து தினந்தோறும் அவருக்குப் பணி விடைசெய்ய, புலனடக்கமுள்ள தன்மகள் பார்வதியைத் தோழிகளுடன் அனுப்பினான்.

अद्रिनाथः - மலைகளின் தலைவன்; ஹிமவான்;

अनर्घ्यम् - अर्घ - விலை; अर्घ्य - விலை மதிக்கக் கூடியது, अनर्घ्य - விலைமதிக்க முடியாதது. இது "மிகச் சிறந்த" என்ற பொருளை உணர்த்தியது.

अर्घ्येण - பூஜையில் உபயோகிக்கப்படும் தீர்த்தம். இங்கு சந்தனம் புஷ்பம் முதலிய பிற பொருள்களையும் உணர்த்தியது.

तनूजाम् आदिदेश - வீட்டிற்கு வந்துள்ள பெரியோர்களுக்குப் பணிவிடை செய்ய மணமாகாத பெண்களை நியமிப்பது தொன்றுதொட்டு வந்த ஒரு வழக்கம்.

प्रत्यर्थिभूतामपि तां समाधेः
शुश्रूषमाणां गिरिशोऽनुमेने ।
विकारहेतौ सति विक्रियन्ते
येषां न चेतांसि त एव धीराः ॥ ५९ ॥

गिरिशः - சிவபிரான், समाधेः - தியானத்திற்கு, प्रत्यर्थि - भूताम् अपि - இடையூறாக இருப்பவளாயினும், शुश्रूषमाणाम् - பணிவிடை செய்கின்ற, ताम् - அவளை, अनुमेने - அனுமதித்தார். विकारहेतौ - மனம் மாறுதற்கான காரணம், सत्यपि - இருக்கும் பொழுதும், येषाम् - எவர்களுடைய, चेतांसि - மனம், न विक्रियन्ते - மாறுபாடு அடைகின்றதில்லையோ, ते एव - அவர்களே, धीराः - மன உறுதியுடையவர்கள்.

(க-து) பார்வதி போன்ற அழகுடையவர்களை அண்மையிலே வைத்துக் கொள்வது மன ஒருமைக்கு இடையூறாயினும் சிவபிரான், அவளைப் பணிவிடை செய்ய அனுமதித்தார். மனத்தைச் சஞ்சலப் படுத்தும் பொருள் இருக்கும் பொழுதும் கூட எவர்களுடைய மனது மாறாது இருக்கின்றதோ அவர்களே தைர்யசாலிகள்.

சிவபிரான் மன உறுதியுடையவராதலால் பார்வதி அண்மையில் இருப்பதால் தமது மனம் நிலைகுலையாதென அவளை அனுமதித்தார்.

समाधिः - தியானம் - இங்கு தவம் முதலியவற்றையும் குறித்தது.

'प्रत्यर्थिभूताम्' 'இடையூறாக இருப்பவள்' என்றதால் பார்வதியின் அழகு முழுவதும் நினைவு படுத்தப்பட்டது.

न विक्रियन्ते - कर्मकर्तरीदं रूपम् - என்பர் நாராயணர்; कर्मणि कट् - என்பர் மல்லிநாதர். நாராயணரை அனுசரித்துப்பொருள் கூறப்பட்டுள்ளது.

चेतांसि - உள்ளங்கள் என்று பன்மையில் வந்துள்ளது.

अवचितबलिपुष्पा वेदिसंमार्गदक्षा
नियमविधिजलानां बर्हिषां चोपनेत्री ।
गिरिशमुपचचार प्रत्यहं सा सुकेशी
नियमितपरिखेदा तच्छिरश्चन्द्रपादैः ॥ ६० ।

सुकेशी - அழகிய கூந்தலையுடைய, सा - அப்பார்வதி, अव चित - बलि - पुष्पा - (சிவபிரான் செய்கின்ற) பூஜைக்கான புஷ்பங் களைப் பறிப்பவளாகவும், वेदि - संमार्ग - दक्षा - (அவர் அமரும்) மேடையைச் சுத்தம் செய்வதில் திறமையுடையவளாகவும், नियम - विधि - जलानाम् - தினந்தோறும் செய்யவேண்டிய கர்மாக் களின் அனுஷ்டானத்திற்கான ஜலத்தையும், बर्हिषां च - தர்ப் பங்களையும், उपनेत्री - கொண்டு வருபவளாகவும், सती - இருந்து கொண்டு, तद् - शिरश्चन्द्र - पादैः - சிவபிரானது தலையிலுள்ள சந்திரனின் கிரணங்களால், नियमित - परिखेदा - களைப்பு நீங்கிய வளாக, प्रत्यहम् - ஒவ்வொரு நாளும், गिरिशम् - சிவபிரானை, उपचचार - உபசரித்தாள்.

(க-து) பார்வதி சோம்பலின்றி தினந்தோறும் சிவபிரானுக்குப் பணிவிடை செய்து வந்தாள். அவர் செய்யும் பூஜைக்குத் தேவை யான புஷ்பங்களைப் பறித்துத் தந்தாள். அவர் அமரும் மேடையை மிக ஊக்கத்துடன் சுத்தம் செய்தாள். ஆசமனம் ஸந்தியாவந்தனம் முதலிய நித்யகர்மாக்களைச் செய்வதற்கான ஜலத்தையும் தர்ப் பத்தையும் கொணர்ந்து தந்தாள். இவ்வாறு உடலை வருத்திப் பணி விடை செய்யும் பார்வதி, சிவபிரான் சிரஸில் உள்ள சந்திரனது குளிர்ந்த கிரணங்களால் தன் களைப்பு நீங்கப் பெற்றாள்.

अवचित - बलिपुष्पा - ' பறிக்கப்பட்ட - பூஜைக்கான - புஷ்பங் களையுடையவள் ' என்பது பதங்களின் நேர்ப்பொருள்.

नियमविधि - ஸந்தியா வந்தனம் முதலியவை; தினந் தோறும் செய்யப்படவேண்டியவை. (இவை காம்யம் அல்ல. விரும்பினுல் செய்யலாம் என்று கூறப்பட்டுள்ள வேறு சில கர்மாக்கள் போன்றவை அன்று). அவச்யம் செய்ய வேண்டிய இத்தகைய காரியங்களுக்கு ஜலத்தையும் தர்ப்பத்தையும் பார்வதி கொடுத்து வந்தாள்.

"अत्र परिखेदसुकेशीशब्दाभ्यां श्रमावस्थासुकभः शोभातिशयः प्रत्याय्यते" नारायणः ।

"गिरिशमुपचचार प्रत्यहं सा सुकेशी
स्वजनकवचनाज्ञापालनावेशभक्ता ।
सकलभुवननाथः शङ्करश्चन्द्रमौलिः
भवतु मम हि भर्ता भावयन्तीति लाभम्" ॥

என்ற சிவபுராண சுலோகத்தின் கருத்தையும் கவனிக்க.

इति महाकवि - श्रीकालिदास - कृतौ महाकाव्ये
कुमारसंभवे प्रथमः सर्गः ॥

—o—

# द्वितीयः सर्गः

तस्मिन् विप्रकृताः काले तारकेण दिवौकसः ।
तुरासाहं पुरोधाय धाम स्वायम्भुवं ययुः ॥ १ ॥

तस्मिन् - அந்த, काले - ஸமயத்தில், तारकेण - தாரகன் என்ற அஸுரனுல், वि-प्र-कृता: - துன்புறுத்தப்பட்ட, दिवौकसः- தேவர்கள், तुरासाहं - இந்திரனை, पुरोधाय - முன்வைத்துக் கொண்டு, स्वायंभुवं - பிரம்மாவினுடைய, धाम - இடத்திற்கு, ययुः - சென்றனர்.

(க-து) தாரகன் என்ற அஸுரனுல் வெகு நாளாகத் துன்புறுத்தப்பட்டு வந்த தேவர்கள் இந்திரனைத் தலைவனாக வைத்துக் கொண்டு, தம் குறைகளை முறையிடுவதற்குப் பிரம்ம தேவரது இடமான ஸத்யலோகத்திற்கு, பார்வதி சிவபிரானுக்குப் பணிவிடை செய்து வந்த அதே காலத்தில் சென்றனர்.

तस्मिन् काले-தேவர்கள் பிரம்ம தேவரிடம் சென்ற ஸமயமும் சிவபிரானுக்குப் பார்வதி தொண்டு செய்து வரும் ஸமயமும் ஒன்ருக இருந்தது.

तारकः - இவன் வஜ்ரநகன் என்ற அஸுரனுக்கும் வராங்கி என்பவளுக்கும் மகனுகப் பிறந்தவன். இவன் பலம் முதலியனவும் தேவர்களுக்கு இழைத்த தீங்கும் சுலோகங்கள் 32 முதல் 51 வரை உள்ளவைகளில் கூறப்பட்டுள்ளன.

दिवौकसः - ஸ்வர்க்கத்தை வாஸஸ்தானமாக உடையவர்கள்-தேவர்கள். तुरासाहम् - தன் பலத்திஞல் எதிரிகளை அடக்குபவன் என்பது பதப்பொருள். இந்திரனைக் குறிக்கிறது.

स्वयम्भूः - பிரம்ம தேவர், स्वायम्भुवम् - பிரம்மாவினுடைய, धाम - வீடு, இருப்பிடம்-உலகம்.

**तेषामाविरभूद् ब्रह्मा परिम्लानमुखश्रियाम् ।**
**सरसां सुप्तपद्मानां प्रातर्दीधितिमानिव ॥ २ ॥**

सुप्त-पद्मानां - குவிந்த தாமரை மலர்களையுடைய, सरसां - தடாகங்களின்முன், प्रातः - விடியற்காலையில், दीधितिमान् - इव - சூரியன் (தோன்றுவது) போல, परिम्लान-मुख-श्रियां - வாடியமுக ஒளியையுடைய, तेषां - அத்தேவர்களின்முன், ब्रह्मा - பிரம்ம தேவர், आविरभूत् - தோன்றினர்.

(க-து) இரவில் தாமரை குவிந்து சோபை இழந்து இருக்கும். அது போல் தேவர்களின் முகங்களும் மனவருத்தத்தினால் சோபையிழந்து இருந்தன. விடியற்காலையில் சூரியன் தாமரை நிறைந்த தடாகங்கள்முன் தோன்றுவது போல் தேவர்களின் முன் பிரம்மா தோன்றினர். சூரியன் வந்ததும் தாமரை மலர்வதுபோல், தேவர்களின் முகங்களும் மகிழ்ந்து பொலிவுற்றன என்பதும் உபமானத்தால் பெறப்படும்.

प्रातर्दीधितिमान् - என்பதை ஒரே பதமாகக் கொண்டு விடியற்காலையில் உள்ள சூரியன் என்றும் பொருள் கொள்ளலாம்.

**अथ सर्वस्य धातारं ते सर्वे सर्वतोमुखम् ।**
**वागीशं वाग्भिरर्थ्याभिः प्रणिपत्योपतस्थिरे ॥ ३ ॥**

अथ - பிறகு, ते सर्वे - அத்தேவர்கள் எல்லோரும், सर्वतोमुखं - எங்கும் (நான்கு திசைகளிலும்) முகமுடையவரும், वागीशं - வித்யைகளுக்குத் தலைவரும், सर्वस्य - எல்லாவற்றையும், धातारं - படைத்தவருமான பிரம்ம தேவரை, प्रणिपत्य - நமஸ்கரித்து, अर्थ्याभिः - பொருள் நிறைந்த, वाग्भिः - சொற்களால், उपतस्थिरे - புகழ்ந்துரைத்தனர்.

(க-து) பிரம்ம தேவர் கல்விகளுக்கெல்லாம் தலைவர். உலகைப் படைத்தவர். நான்கு திசைகளையும் நோக்குகின்ற நான்கு திருமுகங்களையுடையவர். எனவே நாற்புறத்திலும் கூடியுள்ள எல்லாத்

தேவர்களிடமும் அவருடைய கண்ணுக்கு விழும்படி இருந்தது. சுற்றிலும் சூழ்ந்து நின்ற தேவர்கள், பொய்யில்லாத-உண்மையான சொற்களைக் கொண்டு அவர் மனம் மகிழ அவரது பெருமைகளை எடுத்துக் கூறினர்.

सर्वतोमुखम्-தன்னைப் பிரம்ம தேவர் பார்க்கவில்லை என்றோ, பிரம்ம தேவரின் முகத்தைக் காணும் பாக்யம் தான் பெறவில்லை என்றோ தேவரில் எவரும் குறை கூற முடியாதபடி பிரம்ம தேவரின் நான்கு முகங்கள் நான்கு திசைகளை நோக்கி இருந்தன. वागीशम्-வித்யைகளுக்குத் தலைவர்; அல்லது வித்யைகளுக்குத் தலைவியாகிய ஸரஸ்வதி தேவியின் கணவர்.

अर्थ्याभिः - புகழுரைகள் பெரும்பாலும் பொய்யானவை; ஆனால் பிரம்ம தேவரைப் புகழ்ந்த தேவர்கள் கூறியன யாவும் அவரிடம் பொருந்தி இருந்ததால், அச்சொற்கள் பொருள் நிறைந்து உண்மையாகவே இருந்தன.

उपतस्थिरे-தேவபூஜையை उपस्थानं-என்பர். இங்கு தேவர்கள் செய்த புகழுரைகளைக் குறித்தது. அடுத்து வரும் பன்னிரண்டு சுலோகங்கள் தேவர்கள் கூறும் புகழுரைகள்.

नमस्त्रिमूर्तये तुभ्यं प्राक्सृष्टेः केवलात्मने ।
गुणत्रयविभागाय पश्चाद्भेदमुपेयुषे ॥ ४ ॥

(भगवन्) - பகவானே, सृष्टेः प्राक् - படைப்பிற்குமுன், केवल-आत्मने - பெயர், வடிவம் இவையின்றி இருப்பவரும், पश्चात् - பிறகு, (படைப்பின் தொடக்கத்தில்,) गुणत्रय - विभागाय - ஸத்வம், ரஜஸ், தமஸ் என மூன்று குணப் பாகுபாடு உடையவரும், भेदं- (படைப்பவர், காப்பவர், அழிப்பவர் என்ற) வேறுபாட்டை, उपेयुषे-அடைந்தவரும், त्रिमूर्तये- மும்மூர்த்தி வடிவானவருமாகிய, तुभ्यम् - உமக்கு, नमः- நமஸ்காரம்.

(க-து) பகவானே, உலகத்தைப் படைப்பதற்குமுன் தாங்கள் உலகிலே கூறப்படும் பெயர், காணப்படும் வடிவம் முதலியன இன்றி இருந்தீர்கள். பின் படைக்குங்கால், ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் பாகுபாட்டு மூலம், படைப்பவர், காப்பவர்,

அழிப்பவர் என்ற வேறுபாட்டை ஏற்று, தாங்கள் ஒருவரே பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூன்று வடிவினராகவும் இருக்கின்றீர்கள். இத்தகைய பெருமை வாய்ந்த தங்களை நாங்கள் வணங்குகின்றோம்.

'भगवन्' - என்ற சொல்லை வருவித்துப் பொருள் கூறப் பட்டது. केवलात्मने - ஸ்ருஷ்டிக்கு முன்பு ஆத்மா ஒன்றுதான் இருந்தது. உலகிலே காணப்படும் பல்வகைப் பொருளும் அவ்வாத்மாவின் பல்வகை வடிவங்களே. இவ்வடிவங்களும் அவற்றின் பெயர்களும் படைப்புக்குமுன் இருந்தனவல்ல. எனவே அக்காலத்தில் ஆத்மா - அதாவது பிரம்மம் ஒன்றே இருந்தது.

गुणत्रयविभागाय-ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங் களும் மும்மூர்த்தியின் தோற்றத்திற்குக் காரணமாயின. பிரம்மம் ஒன்றே இக்குணங்கள் காரணமாக படைப்பவர், காப்பவர், அழிப்பவர் என்ற வெவ்வேறு தொழில்களைக் கொண்டு பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூன்று மூர்த்தி களாகத் தோன்றியது. பிரம்மத்தின் இத்தகைய தோற்றத் திற்கு-வேறுபாட்டிற்குக் காரணம் இம்மூன்று குணங்களே. இவ்வேறுபாடுற்ற நிலைதான், त्रिमूर्तये என்பதாலும் குறிக்கப் பட்டது. एकैव मूर्तिः - என ஏழாம் ஸர்க்கத்தில் உள்ள நாற் பத்து நான்காவது சுலோகத்திலும் இக்கருத்தைக் கவி கூறுகிறார்.

यदमोघमपामन्तरुप्तं बीजमज त्वया ।
अतश्चराचरं विश्वं प्रभवस्तस्य गीयसे ॥ ५ ॥

अज - பிறப்பற்றவரே, अपां अन्तः - நீரில், त्वया - உம்மால், अमोघं - திண்ணமாகப் பயனளிக்கும், यत् बीजं - எந்த வித் தானது, उप्तम् - இடப்பட்டதோ, अतः - அதனின்று, चर-अचरं - அசையும் பொருள், அசையாப் பொருள் என இருவகைப் பொருளுடைய, विश्वम् - இவ்வுலகம், (उत्पन्नम्) - தோன்றி யுள்ளது. तस्य - அவ்வுலகிற்கு, प्रभवः - காரணமாக, गीयसे - தாங்கள் கூறப்படுகின்றீர்.

(க-து) பிறப்பற்ற தேவரே, தேவரீர் படைக்கத் தொடங்கும் கால் முதலில் நீரைப் படைத்தீர். பிறகு அதனுள் உமது சக்தியை வைத்தீர். இதனின்றும் இடம் விட்டுச் செல்லும் ஆற்றல் பெற்ற உயிர்வகைகளையும் இடம் பெயர்ந்து செல்லும் ஆற்றல் அற்ற மரம், செடி முதலிய பிறவற்றையும் தன்னுள் கொண்ட இவ்வுலகம் தோன்றியது. உமது சக்தியினின்றும் இவ்வுலகம் தோன்றியதால் மனு முதலிய பெரியோர்கள் உம்மையே இவ்வுலகின் முதற்காரண மாகக் கூறுகின்றனர். हिरण्यगर्भो भगवान् सिसृक्षुः विविधाः प्रजाः ।

மனு கூறுவது: अप एव ससर्जादौ तासु वीर्यमवासृजत् ।

तदण्डमभवद्धैमं सहस्रांशुसमप्रभम् ।

तस्मादण्डात् समुत्पन्नं जगत्स्थावरजङ्गमम् ॥ (1-8)

अज-பிறவாதவர் - என்பதால் இறப்பற்றவர் என்பதும் பெறப்படும். उत्पन्नं - என்பதைச் சேர்த்துப் பொருள் கூறப் பட்டது.

**तिसृभिस्त्वमवस्थाभिर्महिमानमुदीरयन् ।**
**प्रलयस्थितिसर्गाणामेकः कारणतां गतः ॥ ६ ॥**

एकः - (படைப்பிற்கு முன்) ஒருவராக இருந்த தாங்கள், तिसृभिः - மூன்று, अवस्थाभिः - (முக்குணங்களால் உண்டான மூன்று) நிலைகளால், महिमानं - உமது சக்தியை, उदीरयन् - புலப்படுத்துகின்றவராக, प्रलय-स्थिति-सर्गाणां -(உலகின்) அழிவு, நிலை, படைப்பு என்ற இவைகட்கு, कारणतां - காரணமாக இருக்கும் தன்மையை, गतः - அடைந்துள்ளீர்.

(க-து) முக்குணங்கள் காரணமாக தங்களுக்கு மூன்று நிலைகள் வந்துள்ளன. ஒவ்வொரு நிலையிலும் தேவரீர், ஒவ்வொரு சக்தியைக் கைக் கொண்டுள்ளீர். படைப்புக்குக் காரணமானது ஒன்று. மற்றொன்று உலகைப் பாதுகாப்பதற்காக உள்ளது. மூன்ருவது சக்தி உலகை அழிப்பது. இம்மூவகைச் சக்தியினால் நீர் இவ்வுலகிற்குக் காரணமாக இருக்கின்றீர்.

இச்சுலோகம், पश्चाद्भेदमुपेयुषे - என்று நான்காம் சுலோகத்தில் கூறியதற்கு விளக்கமாக வந்துள்ளது.

स्त्रीपुंसावात्मभागौ ते भिन्नमूर्तेः सिसृक्षया ।
प्रसूतिभाजः सर्गस्य तावेव पितरौ स्मृतौ ॥ ७ ॥

स्त्री - पुंसौ - பெண்ணையும் ஆணையும், सिसृक्षया - படைக்கும் விருப்பத்தினுல், भिन्न-मूर्तेः - இரு கூறுகளாகச் செய்யப்பட்ட உடலுடைய, ते-உமது, (यौ)-எந்த, आत्म-भागौ-இரண்டு சரீரப் பகுதிகள் இருந்தனவோ, तौ-एव-அவ்விரு (உடற்) பகுதிகளே, प्रसूति-भाजः - (மேன்மேலும்) பிறப்பைச் செய்கின்ற, सर्गस्य - இவ் வுலகின், पितरौ - தாய் தந்தையராக, स्मृतौ-கருதப்படுகின்றன.

(க-து) இவ்வுலகிலுள்ள ஜீவராசிகள் மேன்மேலும் தம் தமது இனப் பெருக்கைச் செய்து கொண்டே இருக்கின்றன. இவை எல்லா வற்றிற்கும் முதலில் இருந்த தாயும் தந்தையும் யார் எனின், பிரம்ம தேவரின் உடற்பகுதிகளே. உலகின் படைப்பைக் கருதிய பிரம்ம தேவர் முதலில் தமது உடலை இருகூருகப் பகுத்துக் கொண்டார். ஒன்று ஆணுகவும் மற்றென்று பெண்ணுகவும் இருந்தன. இவ்விரு பகுதிகளே, பின் வளர்ந்த இவ்வுலகின் முதல் தாய்தந்தையராகும்.

द्विधा कृत्वात्मनो देहमर्धेन पुरुषोऽभवत् ।
अर्धेन नारी तस्यां च विराजमसृजत् प्रभुः ॥ மனு 1.32.

இதன் பொருள்: தம்மை இரண்டாகப் பகிர்ந்து ஒரு பாதியினுல் ஆணுக ஆனுர். மற்றொரு பகுதியினுல் பெண்ணுக ஆனுர். அப்பெண்ணிடம் விராட் என்று கூறப்படும் புருஷனை படைத்தார் என்பதாம்.

स्वकालपरिमाणेन व्यस्तरात्रिन्दिवस्य ते ।
यौ तु स्वप्नावबोधौ तौ भूतानां प्रलयोदयौ ॥ ८ ॥

स्व-काल-परिमाणेन - தமக்கே உரிய கால அளவைக் கொண்டு, व्यस्त - रात्रिन्दिवस्य - பகலையும் இரவையும் வகுத்துக் கொண்ட, ते - உமக்கு, स्वप्न-अवबोधौ - தூக்கம், விழிப்பு என்ற,

यौ तु - எவ்விரண்டு காலப் பாகுபாடுகள் உள்ளனவோ, तौ एव - அவ்விரண்டுமே, भूतानां-ஜீவராசிகளின், प्रलय-उदयौ - பிரளயம், தோற்றம் என்ற இவையாக உள்ளன.

(க-து) மனிதர்களுக்குச் சூரியன் தென்படும் காலம் பகலாகும். சூரியன் மறைந்துள்ள பொழுது இரவு. இவ்விரண்டும் சேர்ந்து ஒரு நாளாகிறது. இவ்வாறு பல நாள் கொண்டது ஒரு வருஷமாகவும், பல வருஷங்கள் கொண்டது ஒரு யுகமாகவும் கணக்கிடப்படுகின்றன. தமக்கெனப் பகலையும் இரவையும் தாங்களே வகுத்துக் கொண்டீர்கள். கிருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம் கலியுகம் என்ற இந்நான்கு யுகங்களும் சேர்ந்த காலம் சதுர்யுகம் எனப்படுகிறது. அவ்வாறு ஆயிரம் சதுர்யுகம் கொண்ட காலம் உமது பகல் பொழுதாக இருக்கின்றது. இக்காலத்தில் தேவரீர் விழிப்புடனிருந்து செயலாற்றுகின்றீர். இதுவே ஜீவராசிகளின் படைப்புக் காலமாகும். அவ்வாறே ஆயிரம் சதுர்யுகம் கொண்ட காலம் உமக்கு இரவாகின்றது. இக்காலத்தில் தேவரீர் நித்ரை கொள்ளுகின்றீர். இச்சமயத்தில் ஜீவராசிகள் யாவும் மறைகின்றன. இதுவே பிரளயமாகின்றது. தாங்கள், தம்மிஷ்டப்படி இரவையும் பகலையும் அமைத்துக் கொண்டிருக்கின்றீர்கள். அத்தகைய பெருமையுடையவர் தாங்கள்.

स्वकालपरिमाणेन - காலத்தை அளக்கும் அளவு-உமக்கென நீரே தனியாக வகுத்துக்கொண்டது.

व्यस्त रात्रिन्दिवस्य-ஆயிரம் சதுர்யுகம் பகல் எனவும், ஆயிரம் சதுர்யுகம் இரவெனவும் வகுத்துக் கொண்டீர்.

स्वप्न - நித்ரை, अवबोध - விழித்திருத்தல்; இக்கருத்தை,

यदा स देवो जागर्ति तदेदं चेष्टते जगत् ।
यदा स्वपिति शान्तात्मा तदा सर्वं प्रलीयते ॥

என்று மனுவும் (1-52) கூறுவர்.

कृतं त्रेता द्वापरश्च कलिश्चेति चतुर्युगम् ।
प्रोच्यते तत्सहस्रं च ब्रह्मणो दिवसं मुने ॥

என்பது விஷ்ணு புராணம் 1-3-15.

जगद्योनिरयोनिस्त्वं जगदन्तो निरन्तकः ।
जगदादिरनादिस्त्वं जगदीशो निरीश्वरः ॥ ९ ॥

त्वं - தாங்கள், जगद्-योनिः - உலகிற்குக் காரணமாக இருப்பவர்; अयोनिः - (ஆனால்) உமக்கு ஒரு காரணமில்லை (பிறவாதவர்); जगद्-अन्तः - உலகினை அழிப்பவராக இருக்கின்றீர்; निरन्तकः - (ஆனால்) தேவரீருக்கு முடிவைத் தருபவர் இல்லை. அழிவற்றவர்; जगद्-आदिः - உலகிற்கு முன்னுள்ளவர்; अनादिः - ஆனால் தாங்கள் ஆதியற்றவர்; जगद्-ईशः - உலகின் தலைவர் தாங்கள்; निरीश्वरः - (ஆனால்) தங்களுக்கு ஒரு தலைவரில்லை.

(க-து) உலகைப் படைப்பதால் அதற்குக் காரணமாயிருப்பவர் தாங்கள். ஆனால் தங்களைப் படைத்தவர் யாருமில்லை. இவ்வுலகினை அழிப்பவர் தாங்கள். தாங்கள் அழிவற்றவர். உலகம் தோன்றுவதற்கு முன்பும் தாங்கள் இருக்கின்றீர்கள். தங்களுக்கு ஆதிமுதல் தோற்றம் என்பது இல்லை. உலகின் தலைவர் தாங்கள். ஆனால் தங்களுக்கும் மேல் ஒரு தலைவர் இல்லை.

**आत्मानमात्मना वेत्सि सृजस्यात्मानमात्मना ।**
**आत्मना कृतिना च त्वमात्मन्येव प्रलीयसे ॥ १० ॥**

त्वं - தேவரீர், आत्मानं - உமது ஸ்வரூபத்தை, आत्मना (एव) தாமே, वेत्सि - அறிகின்றீர்; आत्मानं - தம்மை, आत्मना (एव) - தம்மை கொண்டே, सृजसि - படைத்துக் கொள்ளுகின்றீர்; कृतिना-காத்தல் என்ற காரியத்தைச் செய்த, आत्मना-தம்மைக் கொண்டே, आत्मनि एव-தம்மிடத்தில், प्रलीयसे च-மறைகின்றீர்.

(க-து) உலகைப் படைப்பதற்குமுன் தம்மைத் தாம் நன்றாக அறிந்து, தம்மையே மூலப் பொருளாக-கருவியாகக் கொண்டு இவ்வுலகினைப் படைத்து, காத்து, அதன் பின் முடிவில் தம்மிடத்திலேயே இவ்வுலகினை மறைத்துக் கொள்ளுகின்றீர்.

**चराचराणि भूतानि सर्वाणि भगवद्वपुः** - இவ்வுலகினில் யாவும் கடவுளின் உடலே என்பதனைக் கருத்தில் கொண்டு வந்தது இச்சுலோகம். ஸர்வஜ்ஞரான ஈசுவரன் தம்மைக்கொண்டே இவ்வுலகினைப் படைத்தும் காத்தும் முடிவில் தம்மிடமே அதனை மறையவும் செய்கின்றார். மற்றைத் தேவர்களுக்கு

இத்தகைய சக்தியில்லையாதலின் தாங்களே ஸர்வவல்லமை வாய்ந்தவர்.

இக்கருத்து கீழே தந்துள்ள உபநிஷத் வாக்யத்திலும் காணப்படுகிறது:

**यथोर्णनाभिः सृजते गृह्णते च यथा पृथिव्यामोषधयः सम्भवन्ति ।**
**यथा सतः पुरुषात् केशलोमानि तथाक्षरात् संभवतीह विश्वम् ।**

मुण्डकोपनिषत् 1. 1. 8.

சிலந்தி நூலை உண்டாக்கிப் பின் தன்னிடம் இழுத்துக் கொள்வது போலும், மண்ணிலிருந்து செடிகள் தோன்றுவது போலும், மனிதன் தேஹத்தினின்றும் கேசம் தோன்றுவது போலும், பரமாத்மாவினிடமிருந்து இப்பிரபஞ்சம் தோன்றுகிறது என்பது பொருள்.

**द्रवः सङ्घातकठिनः स्थूलः सूक्ष्मो लघुर्गुरुः ।**
**व्यक्तो व्यक्तेतरश्चासि प्राकाम्यं ते विभूतिषु ॥ ११ ॥**

द्रवः-திரவ பதார்த்தம், सङ्घात-कठिनः-அடர்த்தியான சேர்க்கையால் கடினமான பொருள், स्थूलः - பருப் பொருள், सूक्ष्मः-நுண்ணியது, लघुः - கனமற்றது, गुरुः - கனமுடையது, व्यक्तः-புலப்படுவது, व्यक्त-इतरः च-புலப்படாதது, ஆகிய எல்லாமாக, (त्वम्)-தாங்களே, असि-இருக்கின்றீர்கள், विभूतिषु-இவ்வகைச் சக்திகளில், ते - உமக்கு, प्राकाम्यम् (अस्ति) - தடையற்ற உரிமை உள்ளது.

(க-து) உலகிலுள்ள திரவ பதார்த்தம் யாவும் தேவரீர் தாம். அணுக்கள் ஒன்றோடொன்று அடர்த்தியாகச் சேர்வதால் உண்டாகும் கடினப் பொருள், பருப்பொருளான மலை முதலியன, நுண்ணியதான அணுக்கள், பஞ்சு போன்ற கனமற்ற பொருள், தங்கம் போன்ற கனமான பொருள், ஆக்கப்பட்டுள்ள பொருள், காரணப் பொருள் யாவும் தாங்கள் தாம். இவ்வாறு பலவகையாக இருப்

பதில் உமது விருப்பத்திற்குத் தடை செய்யும் வல்லமை பெற்றவர் யாருமில்லை. முழு விருப்பமும் தேவரீருடையதே.

द्रवः-ஜலம் முதலியன ; ஜலமயமான ஸமுத்ரம் முதலியனவுமாம். संघात कठिनः-பரமாணுக்களால் ஆன பொருள். பரமாணுக்களின் சேர்க்கை அடர்த்தியாக இருக்குமாயின் பொருள்கள் கடினமாக இருக்கும். கல் முதலியன இதற்கு உதாரணங்களாம்.

स्थूलः-கண் முதலிய புலன்களால் காணக் கூடிய குடம் முதலியன. सूक्ष्मः - காண முடியாத அணுக்கள். लघुः - கனமற்றது; பஞ்சு இறகு முதலியன. गुरुः- கனமுள்ளது; தங்கம் இரும்பு முதலியன.

व्यक्तः - புலப்படுகின்றதும், படைக்கப்பட்டதுமான பொருள்.

व्यक्तेतरः-இவ்வுலகினைப் படைப்பதற்கான மூலப்பொருள் காரணப்பொருள். विभूति-அணிமா முதலான எட்டுவகைச் சக்திகள் என்பர் மல்லிநாதர்.

**उद्घातः प्रणवो यासां न्यायैस्त्रिभिरुदीरणम् ।**
**कर्म यज्ञः फलं स्वर्गः तासां त्वं प्रभवो गिराम् ॥ १२ ॥**

यासां गिराम् - எந்த வேதவாக்குகளுக்கு, उद्घातः- தொடக்கமாக, प्रणवः - பிரணவம் இருக்கின்றதோ, त्रिभिः · மூன்று (உதாத்தம் அனுதாத்தம் ஸ்வரிதம் என்ற), न्यायैः - ஸ்வரங்களால், उदीरणं - ஒலித்தல் இருக்கின்றதோ, यासां-எந்த வேதவாக்கினால் கூறப்படும், कर्म - செயல், यज्ञः - யாகமோ, फलं - பயனும், स्वर्गः- ஸ்வர்க்கமோ, तासां - அத்தகைய, गिरां - வேதங்களுக்கு, त्वं - தேவரீர், प्रभवः-தோன்றுமிடமாக இருக்கின்றீர்.

(க-து) பிரணவத்துடன் தொடங்கப் பெறும் பெருமை பெற்றது வேதம். அதன் பொருள் நன்கு புலப்படுவதற்காக, உதாத்தம் அனுதாத்தம் ஸ்வரிதம் என்ற மூன்று ஸ்வரங்களில் உச்சரிக்கப் படுவது; அது கூறும் செயல் யாகம்; யாகத்தினால் பெறப்படும் பயன் ஸ்வர்க்கம். இத்தகைய பெருமை வாய்ந்த வேதங்கள் தங்களிட மிருந்தே தோன்றின. அதன் தோற்றத்திற்குக் காரணம் தாங்கள் தாம்.

**उद्घातः**-ஆரம்பம்; வேதம் தொடங்குவதற்கு முன் பிரண வத்தைச் சொல்லியே தொடங்குவர். முடிப்பதும் பிரண வத்துடன்தான், **ब्रह्मणः प्रणवं कुर्यादादावन्ते च सर्वतः। दहत्येनः कृतं पूर्वं परस्ताच्च विशेषतः**—என்பதைக் காண்க. **उदीरणं** - உச்சரித்தல்.

**त्वं प्रभवः** - சாஸ்திரக்காரர்களில் ஒருசாரார் வேதம் ஈசுவரனால் செய்யப்பட்டது என்பர். வேறு சிலர், மூச்சுக் காற்று போல் ஈசுவரனிடமிருந்து தோன்றியது என்பர். இவ்விரண்டு கொள்கைப்படியும் ஈசுவரன் தான் வேதத் திற்குக் காரணமாகிறான்.

**न्यायैः** ' அர்த்தத்தை விளங்கவைப்பன '; அவை உதாத் தம் அனுதாத்தம் ஸ்வரிதம் என்ற மூன்று ஸ்வரங்களாகும். ஸ்வரத்தைக் கொண்டு வேதத்தின் பொருளை அறுதியிடுவர். இந்த சுலோகத்திற்கு அருணகிரியும் நாராயணரும் உரை செய்யவில்லை.

**त्वामामनन्ति प्रकृतिं पुरुषार्थप्रवर्तिनीम् ।**
**तद्दर्शिनमुदासीनं त्वामेव पुरुषं विदुः ॥ १३ ॥**

**त्वां** - தங்களை, **पुरुषार्थ-प्रवर्तिनीम्** - ஜீவர்களுக்கு ஸுகங்களை உண்டு பண்ணுகின்ற, **प्रकृतं** - பிரகிருதியாக, **आमनन्ति**-(ஸாங் கிய சாஸ்திரங்கள்) கூறுகின்றன; **त्वां एव**-தங்களையே, **तद्द-दर्शिनं**-அப்பிரகிருதியை காண்கின்றவரும், **उदासीनं** - செய

லற்றவருமான, पुरुषं ஜீவனுகவும், विदुः-அந்த சாஸ்திரங்கள் அறிகின்றன.

(க-து) எல்லாவற்றிற்கும் முதற்காரணமாக ஸாங்கியர்களால் கூறப்படுகின்ற மூலப்பிரகிருதியும் பிரம்ம தேவர்தாம். அதனைப் பார்த்துக் கொண்டிருக்கும் புருஷனும் (ஜீவனும்) பிரம்ம தேவர்தாம்.

ஸாங்கிய சாஸ்திரத்திற்கு முதல்வர் கபிலர். அவர் கூறுவது: இவ்வுலகினில் முக்யமான தத்வங்கள் இரண்டு. ஒன்று ஜீவன்-ஜீவாத்மா. மற்றொன்று பிரகிருதி; இது ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களாலானது. இதனின்றும் மஹத், அஹங்காரம், ஐந்து நுண்ணிய பூதங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், மண், ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம் என்ற பூதங்கள் தோன்றின. இவற்றால் ஆனவையே இவ்வுலகில் உள்ள பொருள்கள் யாவும். இவை எல்லாவற்றிற்கும் முதலாக உள்ளது பிரகிருதி. எப்பொழுதும் மாறிக் கொண்டே இருப்பது அதனுடைய இயற்கை. இவ்வாறு மாறுவதால் ஜீவாத்மாவிற்குப் பலவகை இன்பதுன்பங்களை உண்டாக்குகின்றது. ஜீவாத்மா ஒன்றும் செய்வதில்லை, ஸாக்ஷி போல் வாளா இருப்பவன். பிரகிருதியின் ஸுகங்களை அனுபவிக்கும் வரையில் ஜீவாத்மா இவ்வுலகில் இருக்கின்றான். பிரகிருதியின் தன்மையறிவானாயின் பிரகிருதியின் செயல்கள் அவனைத் தீண்டுவதில்லை. அப்பொழுது அவன் இன்பம் துன்பம் இரண்டும் அற்ற நிலையையடைகின்றான். இதுவே மோக்ஷம் எனப்படுவதாகும்.

இவ்வாறுள்ள கபில முனிவரின் ஸாங்கிய சாஸ்திரத்தை ஓரளவு அனுசரித்து பிரம்ம தேவர் இங்கு புகழப்படுகின்றார். பிரகிருதி புருஷன் என்ற இவ்விரண்டும் வேறு வேறாக ஸாங்கியர் கூறி இருக்க, காளிதாஸர் இவ்விரண்டும் ஒன்றே-பிரம்ம தேவரே என்று கூறியதைக் காண்க. ஸாங்கியர்கள் கூறிய இரண்டையும் அங்கீகரித்த வகையில் அவர் ஓரளவு அவர்களைப் பின்பற்றினாராயினும், 'இரண்டும் ஒன்று' என்று கூறுவதில் வேதாந்திகளின் கொள்கையை அனுசரித்துள்ளார்.

**त्वं पितॄणामपि पिता देवानामपि देवता ।**
**परतोऽपि परश्चासि विधाता वेधसामपि ॥ १४ ॥**

त्वं - தேவரீர், पितॄणां-अपि - பித்ருக்கள் என்றழைக்கப் படும் தேவவகுப்பினருக்கும், पिता - பூஜிக்கத்தக்கவர் ; देवानां-अपि - தேவர்களுக்கும், देवता - தேவதை ; परतः अपि - உயர்ந்த பொருள்யாவற்றிற்கும், परः च - மேலானவராக, असि - இருக் கின்றீர் ; वेधसां अपि-மரீசி முதலான ஸ்ருஷ்டிகர்த்தர்களையும், विधाता - படைத்தவராக, (असि) - இருக்கின்றீர்.

(க-து) அக்னிஷ்வாத்தர், பர்ஹிஷதர், ஸோமபர் எனச் சில தேவவகையினர் உள்ளனர். இவர்களைப் பித்ருக்கள் என அழைப் பர். தேவர்களும் அவர்களைப் பூஜிப்பர். அத்தகைய பித்ருக்களுக் கும் தாங்கள் பிதாவாக-பூஜிக்கத்தக்கவராக-இருக்கின்றீர். தேவர் கள் வணங்கும் தெய்வம் தாங்கள். உயர்ந்ததெனக் கருதப்படும் பொருள் யாவற்றிற்கும் மேலே சிறந்து இருக்கின்றீர். மரீசி முத லான ஸ்ருஷ்டி கர்த்தர்களையும் படைத்தவர் தேவரீர்.

**त्वमेव हव्यं होता च भोज्यं भोक्ता च शाश्वतः ।**
**वेद्यं च वेदिता चासि ध्याता ध्येयं च यत्परम् ॥ १५ ॥**

शाश्वतः - அழிவற்ற, त्वं-एव - தேவரீரே, हव्यं - ஹவிஸ் ஆகவும், होता च - ஹோமம் செய்பவராகவும், असि - இருக் கின்றீர் ; भोज्यं - உண்ணப்படும் பொருளாகவும், भोक्ता च-(असि)- உண்பவராகவும் இருக்கின்றீர் ; वेद्यं च - அறிய வேண்டிய பொருளாகவும், वेदिता च (असि) - அறிபவராகவும் இருக் கின்றீர் ; ध्येयं - நினைக்கப்பட வேண்டிய, यत् - எந்த, परं - சிறந்த பொருள் இருக்கின்றதோ, (तत्) च - அதுவாகவும், असि - இருக்கின்றீர் ; ध्याता - (அப்பரம்பொருளை) நினைப்பவ ராகவும், असि - இருக்கின்றீர்.

(க-து) மந்திரம் கூறி அக்னியில் இடப்படும் ஹவிஸ்ஸும், அதை இடும் மனிதரும் தேவரீரே. நீர் தாம் இரண்டுமாக இருக்

கின்றீர். உண்ணப்படும் பொருள் உண்பவர் ஆகிய எல்லாம் தாங்களே. அறியப்படவேண்டிய பொருளும், அறிபவரும் தாங்கள் தாம் நினைக்கத்தக்க பரம் பொருளும் நினைப்பவரும் தேவரீர் தாம்.

हविः - நெய், புரோடாசம் முதலியன.

वेद्यं - அறியத்தக்கது; இவ்வுலகம் என்றும் பொருள் கொள்ளலாம்.

இச்சுலோகத்தின் முதற்பகுதி, வேதத்தின் முற்பகுதியான கர்மகாண்டம் கூறும் பொருளும், இரண்டாவது பகுதி, பிற்பகுதியான ஞான காண்டம் கூறும் பொருளும் பிரம்ம தேவரைக் காட்டிலும் வேறுபட்டன அல்ல எனக் காட்டுகின்றன.

**इति तेभ्यः स्तुतीः श्रुत्वा यथार्थाः हृदयङ्गमाः ।**
**प्रसादाभिमुखो वेधाः प्रत्युवाच दिवौकसः ॥ १६ ॥**

वेधाः - பிரம்ம தேவர், इति - இவ்வாறு, तेभ्यः - தேவர்களிடமிருந்து, यथार्थाः - உண்மைப் பொருள் பொதிந்த, हृदयङ्गमाः - மனத்தை மகிழ்விக்கின்ற, स्तुतीः - புகழுரைகளை, श्रुत्वा-கேட்ட பின், प्रसाद्-अभिमुखः - அருளில் நோக்குடையவராக, दिवौकसः - தேவர்களுக்கு - प्रत्युवाच - பதில் கூறினார்.

(க-து) உண்மையானவையும் மனத்திற்கு உவகையளிப்பனவுமான தேவர்களின் புகழுரைகளைக் கேட்ட பிரம்ம தேவர் அவர்களுக்கு அருள் புரிவதில் நோக்குடையவராக தேவர்களிடம் கூறினார்.

यथार्थाः - உண்மையான பொருளுடையன; உலகில் புகழுரைகள் உண்மையாக இருப்பதில்லை. பிரம்ம தேவரைப் பற்றித் தேவர்கள் கூறியன யாவும் உண்மையானவையே.

हृदयङ्गमाः - உண்மையைக் கூறிப் புகழ்வதும் புகழ்பவரின் மனத்திற்கு உகந்ததாக இருக்க வேண்டும்.

**पुराणस्य कवेस्तस्य चतुर्मुखसमीरिता ।**
**प्रवृत्तिरासीच्छब्दानां चरितार्था चतुष्टयी ॥ १७ ॥**

**पुराणस्य कवेः** - முதல் கவியான, **तस्य** - அப்பிரம்ம தேவரின் **चतुर्मुख-समीरिता**- நான்கு முகங்களாலும் (வாய்களாலும்) கூறப்பட்ட, **चतुष्टयी** - நான்கு வகையான, **शब्दानाम् - प्रवृत्तिः** - சொற்களின் தோற்றமும், **चरितार्था** - முழுப்பயனும் பெற்ற தாக, **आसीत्** - இருந்தது.

(க-து) வேதங்களின் தோற்றத்திற்குக் காரணமானவர் பிரம்ம தேவர்; எனவே அவர்-புராண கவி—ஆதிகவியாவார். தேவர் களுக்குப் பதில் கூறத்தொடங்கிய அவர் தமது நான்கு வாய்களா லும் பேசினார். எனவே நான்கு சொற் பொழிவுகள்—சொல்பிரவா ஹங்கள் நான்கு திசையிலும் கூடியிருந்த தேவர்களுக்கும் ஒரே ஸமயத்தில் பதிலாக அமைந்து முற்றிலும் பயனுடையதாயின.

**शब्दानां प्रवृत्तिः** - சொற்களின் தோற்றம் அல்லது உச் சாரணம்.

**चतुष्टयी** - நான்கு வகையான - நான்கு முகங்களின்றும் சொற்கள் வந்ததால் - ''சொற்களின் நான்கு தோற் றங்கள்'' என்று கூறினார் கவி.

(1) குடம் முதலிய பொருளைக் குறிப்பன (2) நிறம் முதலிய குணங்களைக் குறிப்பன (3) நடத்தல் முதலிய தொழிலைக் குறிப்பன (4) மனுஷ்யத்வம்-முதலிய இனத் தைக் குறிப்பன எனச் சொற்களை வேறு வகையிலும் நான்காகப் பகுப்பர் சிலர்; அல்லது (1) **वैखरी** பிறந்த குழந்தை செய்யும் ஒலி (2) **मध्यमा** - பதங்களின் வடிவம் தெரியும் வகையில் உச்சரித்த சொல் (3) **पश्यन्ती** - தெளி வான பொருளுடன் வாக்யத்தில் அமைந்த சொல் (4) **सूक्ष्मा** - ஆழ்ந்த அறிவை உண்டாக்கும் சொல் எனவும் நால் வகையாகப் பகுப்பர்.

இனிவரும் பதினேரு சுலோகங்கள் பிரம்ம தேவரின் பதிலாக அமைந்தவை.

**स्वागतं स्वानधीकारान् प्रभावैरवलम्ब्य वः ।**
**युगपद् युगबाहुभ्यः प्राप्तेभ्यः प्राज्यविक्रमाः ॥ १८ ॥**

**प्राज्य - विक्रमाः** - பெரும் பராக்ரமமுடைய தேவர்களே! **स्वान्** -உங்களது, **अधीकारान्** - பதவிகளை, **प्रभावैः** - (உங்கள்) சக்திகளால், **अवलम्ब्य (अपि)** - ஏற்று (இருக்கும் பொழுதும்), **युगपत्**- ஒரே சமயத்தில், **प्राप्तेभ्यः** - வந்தவர்களும், **युग-बाहुभ्यः** - நுகத்தடி போல் நீண்ட கைகளையுடையவர்களுமான **वः** - உங்களுக்கு, **स्वागतम् अस्तु** - நல்வரவு (இருக்கட்டும்).

(க-து) பெரும் பராக்ரமமுடைய தேவர்களே, நீங்கள் யாவரும் உங்களுக்குத் தந்துள்ள பதவிகளை, திறமையுடன் நிர்வஹித்து வருகின்றீர்கள்; எனவே உங்களுக்குக் குறையொன்றுமிருக்கக் காரணமில்லை. ஆயினும் நீங்கள் யாவரும் ஒரே சமயத்தில் குழுமி இருக்கின்றீர்கள். யாவருக்கும் நான் நல்வரவு கூறுகின்றேன்.

**अधीकारान्** - அதிகாரம், பதவி, உத்யோகம்.

**प्रभावैः** - தம் தமது ஸாமர்த்தியத்தினுல்; திறமையால் '**अवलम्ब्यः**' **अपि** என்பதைச் சேர்த்து-"உத்யோகத்தைத் திறமையுடன் நிர்வஹிக்கின்ற உங்களுக்கு என்ன குறை?" என்பதைக் காட்ட, "ஏற்று இருக்கும்பொழுதும்" என்று பொருள் கூறப்பட்டது.

**युगबाहुभ्यः** - **युग** - நுகத்தடி. பலம் பொருந்திய நீண்ட கைகளை நுகத்தடியுடன் ஒப்பிடுவர்.

**स्वागतम्** - இச் சொல்லை 'கேள்விக் குறலு'டன் கூறியதாகக்கொண்டு, "ஒரே சமயத்தில் கூடியுள்ள உங்களது வரவு நல்வரவுதானே!" என பிரம்ம தேவரின் கேள்வியாக உரை செய்கிறுர் மல்லிநாதர்.

**किमिदं द्युतिमात्मीयां न बिभ्रति यथा पुरा ।**
**हिमक्लिष्टप्रकाशानि ज्योतींषीव मुखानि वः ॥ १९ ॥**

हिम-क्लिष्ट-प्रकाशानि-பனியால் மங்கிய ஒளியுடைய, ज्योतींषि इव - (சந்திரன் முதலிய) ஒளியுடைப் பொருள்கள்போல், वः - உங்களது, मुखानि - முகங்கள், पुरा यथा-முன்போல், आत्मीयां - தங்களது, द्युति - ஒளியை, न बिभ्रति - உடையனவாக இல்லை, इदं किम्? - இது ஏன்?

(க-து) ''சந்திரனும் மற்றும் பல நக்ஷத்ரங்களும் பனியினால் மறைக்கப்படின் ஒளியுடன் காணப்படுவதில்லை. அவைபோல் உங்கள் முகங்களும் அவைகளுக்கு இயற்கையாயுள்ள ஒளி இன்றி இருக்கின்றன. இதன் காரணம் என்ன?''

किमिदम् - ஏன் இது! என பிரம்மாவின் வியப்பைக் காட்டுவதாகவும் கொள்ளலாம்.

இச்சுலோகத்தில் பிரம்மதேவர், தேவர்கள் எல்லோரையும் பற்றிப் பொதுவாக வினவுகின்றார். இனி வரும் சுலோகங்களில் இந்திரன் முதலான ஒவ்வொரு தேவனையும் பற்றித் தனித்தனியே கேட்கின்றார்.

प्रशमादर्चिषामेतदनुद्गीर्णसुरायुधम् ।
वृत्रस्य हन्तुः कुलिशं कुण्ठिताश्रीव लक्ष्यते ॥ २० ॥

अर्चिषां - ஒளியின், प्रशमात् - அழிவினால், अनुद्गीर्ण - सुरायुधं - பல வகை நிறங்களை வெளியிடாத, एतत् - இந்த, वृत्रस्य हन्तुः - விருத்திராஸுரனைக் கொன்ற இந்திரனுடைய, कुलिशं - வஜ்ராயுதம், कुण्ठित - अश्रि इव - முனை மழுங்கியது போல், लक्ष्यते - காணப்படுகிறது.

(க-து) பல முனைகளையுடையது வஜ்ராயுதம். விருத்திரனைக் கொல்ல உபயோகமானது. மலைகளைப் பிளந்தது. எப்பொழுதும் வானவில்லின் நிறத்தில் பல ரத்னங்களின் ஒளியைக்காட்டுவது. அத்தகைய வஜ்ராயுதம் அதன் பிரகாசம் அணைந்ததால் இப்பொழுது பல்வகை நிறங்களைக் காட்டாது முனைகள் மழுங்கியது போல் காணப்படுகிறதே! ஏன்?

अनुद्गीर्ण - सुरायुधम् - 'வெளியிடப்படாத பலவகை நிறமுடைய' என்பது பதப்பொருள்.

सुरायुधम् - தேவர்களின் ஆயுதம்: வானவில். வானவில்லில் உள்ள ''பல நிறங்களைக்'' குறிக்கிறது இச்சொல். இங்கே வஜ்ராயுதம். முனைகள் மழுங்காதிருப்பின் ஒளி விட்டுக் கொண்டிருக்கும். ஒளியிருப்பின் பல்வகை நிறங்கள் தோன்றிக் கொண்டிருக்கும். பல்வகை நிறமின்மையால் ஒளி இழந்ததென்றும் ஒளியிழந்ததால் முனை மழுங்கியுள்ள தென்றும் ஊஹிக்கப்படுகிறது.

वृत्रस्य - வ்ருத்ரன் ஒரு அஸுரன்; அவனைக் கொன்றவன் இந்திரன்.

कुण्ठिताश्रि 'इव' - முனை மழுங்கிவிட்டதுதான் உண்மை. ஆனால் அதைக் கூறுவது இந்திரனுக்கு அவமானமாதலால் 'உபசாரமாக முனை மழுங்கியது போல்' எனக் கூறினர்.

अश्रि - முனை.

**किञ्चायमरिदुर्वारः पाणौ पाशः प्रचेतसः।**
**मन्त्रेण हतवीर्यस्य फणिनो दैन्यमाश्रितः ॥ २१ ॥**

किंच - மேலும், अरि - दुर्वारः - சத்ருக்களால் தடுக்கமுடியாததும், प्रचेतसः - வருணனுடைய, पाणौ - கையில் இருப்பதுமான, अयं पाशः - இந்தப்பாசம் (கயிறு), मन्त्रेण - மந்திரத்தினால், हतवीर्यस्य - பலமிழந்த, फणिनः - பாம்பின், दैन्यं - எளிய நிலையை, आश्रितः - அடைந்துள்ளது.

(க-து) வருணன் தன் கையில் ஏந்தி இருக்கும் ஆயுதம் பாசம்—கயிறு. எதிரிகளைப்பிணிக்கும் இவ்வாயுதத்தை எளிதிலே தடுக்கமுடியாது. பார்ப்பவர்கள் மனத்தை அச்சுறுத்தும் இக்கயிறும் மந்திரபலத்தினால் செயலற்றுக்கிடக்கும் ஸர்ப்பம்போல் எல்லோராலும் அவமதிக்கப்படும் நிலையில் உள்ளது.

हतवीर्यस्य - அழிக்கப்பட்ட பலமுடைய ; பலமிழந்த ; பாம்பென்றால் படையும் நடுங்கும் என்பர். ஆனால் அதே பாம்பு மந்திரத்தினால் கட்டப்பட்டதாயின் தன் பல மிழந்து கயிறு போல் கிடக்கும். பின் யாரும் அதனைக்கண்டு அஞ்சார். அதனைத் துன்புறுத்தவும் முயல்வர். அத்தகைய பாம்பின் நிலையிலுள்ளது தற்பொழுது வருணனது பாசம்.

**कुबेरस्य मनःशल्यं शंसतीव पराभवम् ।**
**अपविद्धगदो बाहुर्भग्नशाख इव द्रुमः ॥ २२ ॥**

अपविद्ध-गदः - கதாயுதத்தை விட்டதும், भग्न - शाखः - கிளை முறிந்த, द्रुमः इव (स्थितः) - மரம்போல் இருப்பதுமான, कुबेरस्य बाहुः - குபேரனுடைய கை, मनः - शल्यं - மனத்தின் சல்யமான, पराभवं-அவமானத்தை, शंसति - इव - சொல்வது போல் ,ாணப் படுகின்றது.

(க-து) குபேரனுடைய ஆயுதம் கதை. அது எப்பொழுதும் அவன் கையில் இருப்பது. சத்ருக்களைத் தாக்கப் பயன்படாத கதாயுதத்தைக் குபேரன் தானே எறிந்திருக்கலாம். அல்லது சத்ருக் களே அக்கதையைப் பறித்துக்கொண்டும் போயிருக்கலாம் – மரத் தின் கிளையைக் காற்று முறித்துத்தள்ளுவதுபோல. எனவே கதை யின்றி இருக்கின்ற குபேரனது கை, அவன் மனத்துள், அம்பின் நுனிபோல் புதைந்துள்ள அவமானத்தை எடுத்துக் கூறுகின்றது.

अपविद्ध - गदः ''விடப்பட்ட, பறிக்கப்பட்ட கதையுடைய''

भग्नशाखः - முறிக்கப்பட்ட கிளையுடைய; கைக்கு உப மானம் 'மரம்', கிளைக்குக் 'கதை'.

मनः शल्यम् - சல்யம் - அம்பின் நுனி; உடலில் புகுந்துள்ள சல்யம் எவ்வாறு வருத்துமோ அவ்வாறு மனத்துள் புதைந்து வருத்துவது அவமான சல்யம்.

शंसति इव - சொல்வது போலும் உள்ளது. கைக்கு உண்மையில் பேசும் திறமையில்லாததால், பேசுவது போல் உள்ளது என்றார்.

'இந்திரன், வருணன் இருவர் கையில் ஆயுதமாவது இருந்தது; குபேரன் கையில் அதுவுமில்லை' என்பது இதில் கூறப்படுகிறது.

**यमोऽपि विलिखन् भूमिं दण्डेनास्तमितत्विषा ।**
**कुरुतेऽस्मिन्नमोघेऽपि निर्वाणालातलाघवम् ॥ २३ ॥**

**अस्तमित-त्विषा** - காந்தியை இழந்த, **दण्डेन** - (தனது) தண்டாயுதத்தினுல், **यम: - अपि** - யமனும், **भूमिं** - பூமியில், **विलिखन्** - எழுதுகின்றவனுய், **अमोघे - अपि** - மிகவும் பலம்பொருந்திய, **अस्मिन्** - இந்த ஆயுதத்தினிடத்திலும், **निर्वाण - अलात - लाघवम्** - அணைந்த கொள்ளிக் கட்டையில் செய்யப்படும் அவமதிப்பை, **कुरुते** - செய்கிருன்.

(க-து) எல்லோரையும் அடக்குபவன் என்ற காரணப் பெயர் பெற்றவன் யமன். அவனுடைய ஆயுதம் தண்டம்-பெருந்தடி; அதுவும் தன் காந்தி இழந்துகிடக்கின்றது. சத்ருக்களை அடக்க உபயோகித்த தடியால் யமன் இப்பொழுது தரையில் எதையோ எழுதுகிருன். அணைந்த கரிக்கட்டையால் தரையில் எழுதலாம். தண்டாயுதத்தை அவ்வாறு எழுத உபயோகிப்பது கரிக்கட்டைக் கொப்ப அதனைக் கருதுவதாகும்; இது அவ்வாயுதத்திற்குச் செய்யும் பெரிய அவமதிப்புமாகும்.

**यमः - अपि** - யமனும்; இங்குள்ள - 'உம்' என்ற சொல் மற்ற மூன்று தேவர்களைக் காட்டிலும் யமனுக்குள்ள வேறுபாட்டைக் காண்பிக்கின்றது. அது காரணமாகவே, கீழ்த்திசை அதிபனுகிய இந்திரனைக் கூறியபின் தென்திசையோனுகிய யமனைக் கூருது வருணனையும் குபேரனையும் கூறியபின் கூறினுர்.

**अस्तमित - त्विषा** - அழிந்த ஒளியுடைய - ஒளியை இழந்த.

**अमोघे** - திண்ணமாகப் பயனுடைய; எந்த சத்ருவினிடம் எப்பயனைக் கருதி உபயோகிக்கப்படுகிறதோ அப்பயனைத் திண்ணமாக அளிப்பது அது.

**अलात** - எரியும் விறகு - **निर्वाण-अलात** - அணைந்த கட்டை. கரிக்கட்டை - அதனைக்கொண்டு கீழே கோடிடுவர். அக்கட்டை செய்யும் காரியத்தில் தண்டாயுதத்தை உபயோகிப்பது அதற்குச் செய்த அவமானம். சத்ருவை அடக்க உபயோகப்படாத காரணத்தினுல் யமன் அதை அவமதிக்கின்ருன்போலும்.

अमी च कथमादित्याः प्रतापक्षतिशीतलाः।
चित्रन्यस्ता इव गताः प्रकामालोकनीयताम् ॥ २४ ॥

प्रताप - क्षति - शीतलाः-வெய்யில் அழிந்ததால் குளிர்ந்துள்ள, अमी - இந்த, आदित्याः च - ஆதித்தியர்களும், कथं - எவ்வாறு, चित्र - न्यस्ताः - इव - படத்தில் எழுதப்பட்டவர்கள் போல், प्रकाम - आलोकनीयतां - நன்குகாணக்கூடிய நிலையை, गताः - அடைந்துள்ளனர்?

(க-து) ஒளி (வெய்யில்) அழிந்ததால் குளிர்ந்துள்ள சூரியர்கள் பன்னிருவரும் படத்தில் எழுதப்பட்டுள்ளவர்கள்போல் கண்களுக்குக்கஷ்டமின்றி, நன்கு பார்க்கும்படி இருக்கின்றனர். இது எவ்வாறு நிகழ்ந்தது?

கச்யபமுனிவருக்கும் அதிதிக்கும் பிறந்தவர்கள் சூரியர்கள்; இவர்கள் பன்னிருவருர். ஒவ்வொருமாதத்திலும் ஒவ்வொரு சூரியன் அதிகாரம் பெறுகின்றுன். இவர்கள் ஒளிமிகுந்தவர்கள். கண்களால் பார்க்கமுடியாத இச்சூரியர்களும், தமது ஒளியை இழந்ததால் உஷ்ணமின்றிக் குளிர்ந்து இருக்கின்றனர். படத்தில் எழுதப்பட்ட சூரியனைக் கண்களுக்குச் சிரமமின்றி எவ்வளவு நேரம் வேண்டுமாலுைம் பார்க்கலாம். அதுபோல் இச்சூரியர்களும் இப்பொழுது கூசுதலின்றிப் பார்க்கப்படும் நிலையில் உள்ளனர்.

प्रतापः - ஒளி - அல்லது சூரியனது வெய்யில். प्रतापौ पौरुषातपौ - என்பது நிகண்டு:

कथम्-இச்சொல் பிரம்மதேவரின் வியப்பைக் குறிக்கிறது.

पर्याकुलत्वान्मरुतां वेगभङ्गोऽनुमीयते ।
अम्भसामोघसंरोधः प्रतीपगमनादिव ॥ २५ ॥

अम्भसां - ஜலம், प्रतीप - गमनात् - எதிர் நோக்கிச் செல்வதால், ओघ - संरोधः इव - வெள்ளத்திற்குத் தடை இருப்பது

ஊஹிக்கப்படுவது. போல், मरुतां - காற்றுக்களின், पर्याकुलत्वात् - குழப்பமுற்றநிலையினுல், वेग-भङ्गः - அவர்களின் வேகத்திற்குத் தடையானது, अनुमीयते - ஊஹிக்கப்படுகிறது.

(க-து) கச்யபருக்கும் திதி என்பவளுக்கும் பிறந்த புத்ரர்கள் மருத்துக்கள். இவர்கள் ஏழு தேவர்கள். இவர்கள் காற்றின் தலைவர்கள் ஆவர். ககனன், ஸ்பர்சனன், வாயு, அநிலன், மாருதன் பிராணன், பிராணேசன் என்பன அவர்களது பெயர்கள். இவர்களை காற்ருகவும் கூறுவர். வேகத்திற்கு உதாஹரணமாகக் கூறப்படுவது 'வாயுவேகம்'. மருத்துக்கள் ஏழுபேரும் மனம் குழம்பி இருப்பதால் வேகம் குறைந்துள்ளது என ஊஹிக்கப்படுகிறது. வெள்ளம் பள்ளத்தை நோக்கி ஓடும். ஜலம் எதிர் திசையை நோக்கிச் செல்லுமாயின் அப்போது அதன் ஓட்டத்திற்குத் தடை உண்டாகியிருக்கிறதென்பது ஊஹிக்கப்படுமல்லவா? அதுபோல் மருத்துக்களின் வேகத்திற்கு உண்டான தடையும் ஊஹிக்கப்படுகிறது.

पर्याकुलत्वात् - குழப்பத்தினுல்: மனத்திலுள்ள குழப்பத்தினுல் - என்றும் கூறலாம். वेगभङ्गः - எப்பொழுதும் ஓடிக்கொண்டேயிருப்பவர்களுக்குத் தடை ஏற்பட்டுள்ளது.

प्रतीपगमनात् ओघसंरोधः - செல்லவேண்டியவழியே செல்லாது ஜலம் வந்தவழியே திரும்புமாயின் - அதனுல் அது செல்லவேண்டிய வழியில் ஏதோ தடை இருக்கிறதென்பதை ஊஹிக்கலாம் அல்லவா?

**आवर्जितजटामौलिविलम्बिशशिकोटयः ।**
**रुद्राणामपि मूर्धानः क्षतहुङ्कारशंसिनः ॥ २६ ॥**

आवर्जित - தாழ்ந்துள்ள, जटामौलि - சடைமுடியில், विलम्बि - தொங்குகின்ற. - शशिकोटयः - சந்திர கலைகளையுடைய, रुद्राणां अपि - ருத்ரர்களின், मूर्धानः - தலைகளும், क्षत - हुंकार - शंसिनः - ஹுங்காரத்தின் அழிவைத் தெரிவிக்கின்றன.

(க-து) சிவபிரானது அம்சமாகவுள்ள பதினேரு தேவர்கள் ருத்ரர்கள் என அழைக்கப்படுவர். இவர்களது சடைமுடியை அலங்கரித்திருப்பது சந்திரகலை. அச் சடைமுடிகள் ஏதோ ஒரு அவமானம் காரணமாகக் குனிந்து இருக்கின்றன. முடிகளில் உள்ள

சந்திரகலையும் தொங்குகின்றது. இத்தகைய தலைகள் ருத்ரர்களுக்குப் பலமாகவிருந்த ஹூம்காரம் தற்பொழுது இல்லை என்பதைக் காட்டுகின்றன.

சூரியனது பலம் வெய்யில். காற்றின் பலம் வேகம். ருத்ரர்களின் பலம் ஹூம்காரம், ஹூம் என்ற சத்தமே: ஹூம் என்ற சத்தமிட்டே சத்ருக்களை அழித்து விடுவர். வருத்தத்துடன் குனிந்துள்ள தலைகள், ருத்ரர்கள் இப்பொழுது தமது பலமான ஹூங்காரத்தை இழந்திருக்கின்றனர் என்பதைக் காட்டுகின்றன. **जटामौलि** - ஜடையின் முடி. **मौलि**-முடி. **चूडाकिरीटं केशाश्च संयता मौलयस्त्रयः** - என்பதனைக்காண்க. **क्षत-हुंकारशंसिनः**-'அழிந்த ஹூம்காரத்தைத் தெரிவிப்பனவாக' என்பது பதப் பொருள். **क्षताहंकारशंसिनः** - என்பது அருணகிரி கொண்ட பாடம்.

**लब्धप्रतिष्ठाः प्रथमं यूयं किं बलवत्तरैः ।**
**अपवादैरिवोत्सर्गाः कृतव्यावृत्तयः परैः ॥ २७ ॥**

**प्रथमं** - முன்பே, **लब्ध-प्रतिष्ठाः** - நன்னிலைகளைப் பெற்றுள்ள, **यूयं** - நீங்கள், **बलवत्तरैः** - (உங்களைக்காட்டிலும்) பலம் மிகுந்த, **परैः** - சத்ருக்களால், **उत्सर्गाः** - பொது விதிகள், **अपवादैः इव** - சிறப்பு விதிகளால் (பாதிக்கப்படுவது) போல, **किं कृत-व्यावृत्तयः**- (உங்கள் இடத்தினின்றும்) திருப்பப்பட்டீர்களா?

(க-து) வெகுகாலமாக நீங்கள் ஒவ்வொருவரும் தம் தமக்குரிய இடத்தை ஸ்திரமாகப்பெற்று இருக்கின்றீர்கள். அத்தகைய உங்களை பலம் மிகுந்த எதிரிகள் அந்தந்த இடங்களினின்றும் தள்ளி விட்டனரோ?

பொது விதியைச் சிறப்புவிதி பாதிப்பது இதற்கு உபமானம். சாஸ்திரங்களிலே பொது விதி, சிறப்பு விதி என இரு வகை விதிகள் உண்டு. உதாரணமாக, 'உயிர்களைக் கொல்

லக்கூடாது.' (न हिंस्यात् सर्वाणि भूतानि) என்பது பொது விதி. இவ் விதியின்படி ஒரு பிராணியையும் கொலைசெய்தல் கூடாது என்பது வலியுறுத்தப்படுகின்றது. (अग्नीषोमीयं पशुमालभेत)-ஜ்யோதிஷ்டோமயாகத்தில் ஆடு கொல்லப்பட வேண்டும் என்பது விசேஷ விதி. பொது விதி உயிர்க்கொலையைத் தடுப்பதாயினும் இச்சிறப்பு விதி கூறும் விஷயத்தில் அப்பொது விதி பயனற்றதாகின்றது. பொது விதியைக் காட்டிலும் சிறப்பு விதிக்கு பலம் அதிகம். இச்சுலோகத்தில் தேவர்களுக்குப் பொது விதிகளும் சத்ருக்களுக்குச் சிறப்பு விதிகளும் உபமானங்கள்.

प्रथमम् - முன்பே: 'வெகுகாலமாகவே' என்பது கருத்து.

लब्धप्रतिष्ठाः - பெறப்பட்ட நிலையுடைய - தம்தம்மிடத்தில் நன்கு வேர் ஊன்றியவர்கள் நீங்கள்; உங்களைத் தள்ளுவது கடினம் என்பது குறிப்பு.

बलवत्तरैः - தேவர்கள் பலவான்கள்; எதிரிகள் மிகவும் பலமுடைவர்கள்.

कृतव्यावृत्तयः - 'செய்யப்பட்ட திருப்புதலையுடையவர்கள்' என்பது பதப் பொருள். 'இடத்தினின்றும் திருப்பப்பட்டவர்கள்' என்பது கருத்து.

न खलु स्थ बलोत्तरैः என்பது அருணகிரிபாடம் 'நீங்கள் சத்ருக்களால் தள்ளப்படவில்லையே?' என்பது பொருள்.

**तद् ब्रूत वत्साः किमितः प्रार्थयध्वे समागताः ।**
**मयि सृष्टिर्हि लोकानां रक्षा युष्मास्ववस्थिता ॥ २८ ॥**

तत् - ஆதலால், वत्साः-அருமைமக்களே, समागताः-சேர்ந்து வந்திருக்கின்ற நீங்கள், इतः - என்னிடமிருந்து, किं - என்ன,

प्रार्थयध्वे - வேண்டுகின்றீர்கள்? ब्रूत - தெளிவாகக் கூறுங்கள். मयि - என்னிடத்தில், लोकानां - உலகங்களின், सृष्टिः - படைப்பு உள்ளது; रक्षा - பாதுகாப்பு, युष्मासु - உங்களிடம், अवस्थिता हि - இருக்கின்றதல்லவா?

(க-து) எனது அன்பிர்க்குரிய குமாரர்களே, நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து வந்திருக்கின்றீர்கள். என்னிடம் என்ன விரும்புகின்றீர்கள்? உலகை நான் படைக்கின்றேன். அதனைப் பாதுகாக்கும்பொறுப்பு உங்களிடமிருக்கிறபடியால் நீங்கள் தயக்கமின்றி என்னிடம் எதையும் கேட்கலாம். ஏனெனில் நீங்களும் நானும் இவ்வுலகின் நன்மையில் ஒன்றாக ஈடுபட்டுள்ளோம்

वत्साः - 'தேவர்களே' என்று கூறுது அன்புதோன்ற 'அருமையான மக்களே' என அழைத்தார்.

ततो मन्दानिलोद्धूतकमलाकरशोभिना ।
गुरुं नेत्रसहस्रेण नोदयामास वासवः ॥ २९ ॥

ततः - பிறகு, वासवः—இந்திரன், मन्द-अनिल-उद्धूत-कमल-आकर-शोभिना - இளங்காற்றில் அசையும் தாமரைக் கூட்டம்போல் அழகான, नेत्र-सहस्रेण - ஆயிரம் கண்களால், गुरुम् - பிருஹஸ்பதியை, नोदयामास - (பதில் கூறும்படி) தூண்டினான்.

(க-து) பிரம்மதேவருக்குப் பதில் கூறும்படி இந்திரன் தனது ஆயிரம் கண்களால் பிரகஸ்பதியை நோக்குவதன் மூலம் தூண்டினான். அவ்வாயிரம் கண்களும் ஒரே திசையில் திரும்பியபொழுது இளங்காற்றினால் ஒரே திசையில் அசையும் பல தாமரை மலர்கள் போல் காணப்பட்டன.

कमल-தாமரை, - आकर-ஸமூகம், கூட்டம், सन्दोह-निवह-व्यूह-समूह-निकराकराः - என்பது வைஜயந்தி நிகண்டு.

आकरः - 'இருப்பிடம்' என்ற பிரஸித்தமான பொருளைக் கொண்டால் कमलाकरः என்பதற்குத் தாமரைக்குளம் என்ற பொருள் கிடைக்கும். ஆயிரம் கண்களுக்கு தாமரைக் குளத்

தை உபமானமாகச் சொல்ல இயலாது. கண்களுக்கு மலரும், இந்திரனுக்குக் குளமும் உபமானமாகலாம். இவ்விடர்ப் பாட்டைக் கண்டு அருணகிரி, ஆயிரம் கண்களையும் ஒரு ஸமூஹமாகக் கொண்டு அதற்கு உபமானமாக வந்தது குளம், என்று உரை எழுதியுள்ளார். अत्र नेत्रसहस्ररूपः अवयवी कमलाकरस्थानीयः अवयवभूतानि नेत्राणि तु कमलस्थानीयानीति विभागः" என்பது அவர் உரை. आकर - என்பதற்கு ஸமூகம் என்ற பொருள் கொண்டுவிட்டால் இவ்விடர்ப்பாடு இல்லை.

नेत्रसहस्रेण - இந்திரனுக்குக் கண்கள் ஆயிரம் என்பர். தேவர்கள் இமையாதவராயினும் விரும்பினால் இமைக்கும் சக்திவாய்ந்தவர். அதனால்தான் இந்திரன் தன் கண்களை இமைக்கவும் விழிகளை ஒரு திசையில் திருப்பவும் செய்தான் என்பர் மல்லிநாதர்.

**स द्विनेत्रं हरेश्चक्षुः सहस्रनयनाधिकम् ।**
**वाचस्पतिरुवाचेदं प्राञ्जलिर्जलजासनम् ॥ ३० ॥**

**सहस्र-नयन-अधिकं** - ஆயிரம் கண்களிலும் சிறந்தவரும், **द्विनेत्रं**- இரு கண்களையுடையரும், **हरेः** - இந்திரனது, **चक्षुः** - (இந்திரனுக்குக்) கண்ணாகவுள்ளவருமான, **सः** - **वाचस्पतिः** - பிருஹஸ்பதி, **प्राञ्जलिः** - கைகூப்பியவராக, **जलज-आसनं** - பிரம்மதேவரிடம், **इदं** - இதை, (இனிவரும் கருத்தை), **उवाच** - கூறினார்.

(க-து) இந்திரனுக்குக் கண்போல் இருந்து நன்மைகளை எடுத்துக் காட்டுபவர் பிருஹஸ்பதி. ஆயிரம் கண்கள் செய்யமுடியாததைச் செய்வதால் அவற்றினும் சிறந்தவர். தர்மம், அர்த்தம் என்ற இரு புருஷார்த்தங்களை நன்கு அறிந்தமையால் சிறந்த இருகண்ணுடையவர். இந்திரனைக் காட்டிலும் இருமடங்கு அறிவு பெற்றவர். அத்தகைய பிருஹஸ்பதி தமது விநயம் தோன்றக் கைகுவித்து பிரம்மதேவரிடம் கூறினார்.

**हरेः चक्षुः** - இந்திரனது கண்ணாக இருப்பவர்; **सहस्रनयनाधिकम्** - இந்திரனுடைய ஆயிரம் கண்களிலும் சிறந்தவர். அக்கண்கள் சாதாரணமான பொருள்களைக் காட்டும். பிருஹஸ்பதி

புலனுகாததையும் புலப்படச் செய்பவர்-ஆதலால் அவைகளைக் காட்டிலும் சிறந்தவர்.

இந்திரனுக்கு ஆயிரம் கண்கள் உண்டு என்று புராணங்கள் கூறுவதற்கு அர்த்த சாஸ்திரம் எழுதிய கௌடில்யர் விளக்கம் கூறுவர். ஆயிரம் கண்கள் என்றது ஆயிரம் வேவுகாரர்களை. அரசர்கள் வேவுகாரர்களின் மூலமே விஷயமறிவதால் அவர்களைக் கண்ணெனக் கூறத்தடையில்லை. வேவுகாரர்கள் புத்திசாலிகளாக இருந்து ராஜ்யத்தை நிர்வஹிப்பதில் துணை செய்பவர்கள். புத்தி விஷயத்தில் அவர்கள் எல்லோரையும் விஞ்சியவர் பிருஹஸ்பதி.

**द्विनेत्र-चक्षुः** இந்திரன் கண்ணுக்கு இரண்டு கண்களுண்டு என்று கூறுகின்றார் கவி ஒரு புதுமை தோற்ற.

தர்ம அறிவு, செல்வத்தைப்பற்றிய அறிவு இரண்டும் உடையவர் பிருஹஸ்பதி என இச்சொல்லுக்கு விளக்கம் கூறுவர் அருணகிரி. அஸுர குருவான சுக்ரருக்கு பொருள் ஒன்றில்தான் நோக்கு. பிருஹஸ்பதி அவரைவிடச் சிறந்தவர். **नेत्रम्** - அறிவு, **द्विनेत्रम्** - இருமடங்கு அறிவு என்றும் பொருள் கொண்டு இந்திரன் முதலியோரைக்காட்டிலும் சிறந்த அறிவுடையவர் எனலாம். கண்ணை அறிவாகத் திருவள்ளுவரும் கூறுகின்றார் - ''கண்ணுடையரென்பவர் கற்றோர்'' என்பது—குறள் எண் 393.

பிருஹஸ்பதியின் பதிலாக உள்ளன பின்வரும் இருபத்திரண்டு சுலோகங்கள்.

**एवं यदात्थ भगवन्नामृष्टं नः परैः पदम् ।**
**प्रत्येकं विनियुक्तात्मा कथं न ज्ञास्यसि प्रभो ॥ ३१ ॥**

**भगवन्** - வல்லமை பொருந்தியவரே, **यत्** - எதை, **आत्थ** - தாங்கள் கூறுகின்றீர்களோ, (**तत्**) **एवम्** - அது அவ்வாறே உள்ளது. **नः** - எங்களது, **पदं** - இடம், **परैः** - சத்ருக்களால், **आमृष्टम्** - கவரப்பட்டது, **प्रभो** - பிரபுவே, **प्रत्येकं** - ஒவ்வொரு ஜீவனிடத்திலும், **विनियुक्त-आत्मा** - தம்மை வைத்துள்ள தாங்கள், **कथं** - எவ்வாறு, **न ज्ञास्यसि** - அறியாமலிருப்பீர்கள்?

(க-து) பகவானே, எல்லாப்பொருளிலும் அந்தர்யாமியாக உள்ளுறைபவராக இருக்கின்ற தாங்கள் எங்களது கஷ்டங்களை அறியாமலிருப்பீர்களா? தாங்கள் கூறிய அவைவளவும் உண்மையே. எங்கள் இடங்களைப் பகைவர்கள் பறித்துக்கொண்டனர்.

भगवन् - ஜ்ஞானம், சக்தி, பலம், ஐசுவர்யம், வீர்யம், தேஜஸ் ஆகியவாறு குணங்களும் பகம் எனப்படும்; அதை உடையவர் பகவான்.

परैः-சத்ருக்களால்: தாரகன் ஒருவனே சத்ரு, ஆயினும் அவனுடைய துணைவர்களையும் சேர்த்து 'பகைவர் பலர்' எனக் கூறப்பட்டது.

विनियुक्तात्मा - தம்மையே ஒவ்வொரு ஜீவனிடத்திலும் வைத்திருப்பவர்.

भवल्लब्धवरोदीर्णस्तारकाख्यो महासुरः ।
उपप्लवाय लोकानां धूमकेतुरिवोत्थितः ॥ ३२ ॥

भवत् - लब्ध - वर - उदीर्णः - தங்களிடமிருந்து பெற்ற வரத்தினால் கர்வமுள்ள, तारक - आख्यः - தாரகன் எனப் பெயர் கொண்ட, महा - असुरः - ஒரு பெரிய அசுரன், धूमकेतुः - इव - தூமகேது (வால் நக்ஷத்ரம்) போல், लोकानां - உலகங்களின், उपप्लवाय - அழிவிற்காக, उत्थितः - தோன்றி இருக்கிறான்.

(க-து) தங்களிடம் வரம் பெற்று கர்வமடைந்துள்ள தாரகன் என்ற பெரிய அஸுரன் தூமகேதுபோல் உலகங்களின் அழிவிற்குக் காரணமாகத் தோன்றியுள்ளான்.

அஸுரனின் பெயர் தாரகன் என்பது; கரையேற்றுபவன் என்பது பதப்பொருள், ரக்ஷகன் என்பது கருத்து. பெயர்ப்பொருளுக்கு விபரீதமாக உலக அழிவிற்குத் தோன்றியிருக்கிறான். அவன் பலம் பெற்றதும் பிரம்மதேவரின் அருளினாலே தான், தூமகேதுவும் ஒரு நக்ஷத்ரம் தான். ஆனால், அது ஆகாயத்தில் தோன்றின் கெடுதியைத்

தெரிவிக்கும். தாரகனின் உயர்வும் உலகநாசத்திற்குத் தான் காரணமாக இருக்கின்றது.

धूमकेतुः - வால் நக்ஷத்ரத்தின் தோற்றத்தைப் பற்றிக் கீழ்வரும் சுலோகம் கூறுகின்றது.

उत्तिष्ठति यदा भीमो धूमकेतुर्नभस्तले ।
तदा विनश्यति क्षिप्रं जगदेतच्चराचरम् ॥

இனிவரும் ஏழு சுலோகங்களில் தேவர்கள் அவனுக்கு எவ்வாறு பணிவிடை செய்கின்றனர் என்பது கூறப்படுகிறது.

**पुरे तावन्तमेवास्य करोति रविरातपम् ।**
**दीर्घिकाकमलोन्मेषः यावन्मात्रेण साध्यते ॥ ३२ ॥**

अस्य - அவனது, पुरे-நகரத்தில், रविः - சூரியன், यावन्मात्रेण- எந்த அளவு வெய்யிலினால், दीर्घिका-कमल-उन्मेषः - வாவிகளிலுள்ள தாமரையின் மலர்ச்சி, साध्यते - உண்டாக்கப்படுகிறதோ, तावन्तं एव आतपं - அந்த அளவு வெய்யிலையே, तनोति - செய்கின்றான்.

(க-து) உக்ரமான கிரணங்களையுடைய ஸூர்யன் அவனது நகரத்தில் வாவிகளிலுள்ள தாமரை மலர்வதற்கு எவ்வளவு வெய்யில் தேவையோ அந்த அளவு வெய்யிலைத்தான் தருகிறான்.

வெய்யிலை அதிகமாகவோ குறைவாகவோ செய்வதில்லை. குறைந்தால் தாமரை மலராது, அதிகமானால் தாரகனது அந்தப்புர ஸ்திரீகள் வருந்துவர். தாமரை மலர்வது உதயமாகின்ற சூரியனின் கிரணத்தாலும் உண்டாகும். எனவே சூரியன் மிகமிகக் குறைந்த அளவு வெய்யிலைத் தந்து தாரகனை உபசரிக்கின்றான்.

दीर्घिका - நீண்ட வடிவில் அமைந்துள்ள வாவிகள். இவற்றில் ஸ்நானம் செய்தும் விளையாடியும் மகிழ்வர். வாவிகளில் அழகிற்காகத் தாமரையையும் வளர்ப்பர்.

सर्वाभिः सर्वदा चन्द्रः तं कलाभिर्निषेवते ।
नादत्ते केवलां लेखां हरचूडामणीकृताम् ॥ ३४ ॥

चन्द्रः - சந்திரன், सर्वदा - எப்பொழுதும், सर्वाभिः - எல்லா, कलाभिः - கலைகளாலும், तं - அவனுக்கு, निषेवते - நன்கு பணிவிடை செய்கின்றான்; हर-चूडामणीकृतां - சிவபிரானது முடியில் அணியாகச் செய்யப்பட்ட, लेखां केवलां - ஒரு கலையை மாத்திரம், न आदत्ते - சந்திரன் எடுத்துக்கொள்ளவில்லை.

(க-து) சந்திரன் கிருஷ்ணம் சுக்லம் என்ற இரண்டு பக்ஷங்களிலும் தனது கலைகளை குறைத்துக்கொள்ளாமல் எல்லாக் கலைகளாலும் தாரகனுக்குப் பணிவிடை செய்துவருகின்றான். சிவபிரான் முடியில் அணிந்துள்ள கலை ஒன்றைமாத்திரம் தாரகன் பணிவிடையில் உபயோகப்படுத்தவில்லை

सर्वदा - பௌர்ணமி ஒருநாள்தான் சந்திரன் எல்லாக் கலைகளோடும் இருக்கின்றான். சுக்லபக்ஷத்திலும் கிருஷ்ண பக்ஷத்திலும் கலைகளுக்குப் பூர்த்தியில்லை. ஆனால் தாரகனுக்குப் பணிவிடை செய்யும்பொழுது சந்திரன் கிருஷ்ண பக்ஷம் சுக்லபக்ஷம் என்ற வேறுபாடு வைத்துக்கொள்ளவில்லை. எல்லா நாளிலும் அவன் பூர்ண சந்திரன்தான்.

सर्वाभिः कलाभिः - '' எல்லாக்கலைகளாலும் ''; சிவபிரான் முடியிலுள்ள ஒரு கலை 'தவிர' மற்ற எல்லாக்கலைகளாலும் என்று பொருள்.

चूडामणीकृताम् - சந்திரன் கலை ஒன்று சிவபிரானது சடையில் அணியாக உள்ளது.

'' தாரகை - நக்ஷத்ரங்கள். நக்ஷத்ரங்களுக்குத் தலைவனாதலால் சந்திரனுக்கு தாரகேசன் எனப்பெயர். தாரகேசன் தாரகனுக்குப் பணிவிடை செய்கிறான். இதைவிட துரதிருஷ்டம் வேறு என்ன உண்டு'' என்பார் ஒரு ரஸிகர்.

**व्यावृत्तगतिरुद्याने कुसुमस्तेयसाध्वसात् ।**
**न वाति वायुस्तत्पार्श्वे तालवृन्तानिलाधिकम् ॥ ३५ ॥**

वायुः - *காற்று*, उद्याने ; *(தாரகனது)* பூங்காவில், कुसुम-स्तेय-साध्वसात - புஷ்பத்தை திருடுதல் என்ற குற்றத்தின் அச்சத்தினல், व्यावृत्त - गतिः - தடுக்கப்பட்ட ஸஞ்சாரமுடையதாக, तत्पार्श्वे - அஸுரனருகில், तालवृन्त-अनिल-अधिकं - விசிறியின் காற்றுக்கு அதிகமாக, न वाति - வீசுகின்றதில்லை.

(க-து) காற்றும், பலமாக வீசி, பூங்காவில் உள்ள புஷ்பம் உதிருமாயின் தன்னைப் புஷ்பம் திருடியவன் என்று குற்றஞ்சாட்டி தண்டிப்பான் தாரகன் என்ற அச்சத்தினல் அவனருகில் விசிறி வீசும்பொழுது உண்டாகும் காற்றிற்கு மேல் வீசுவதில்லை. விசிறியின் காற்றளவுக்கு வீசுகின்றுன் வாயுதேவன் என்பது கருத்து.

இச்சுலோகம் காற்று வேகமாக வீசாததற்குக் காரணத்தைக் கூறுகின்றது. व्यावृत्त-गति - தடையுற்ற போக்கு. ஸஞ்சாரம். तालवृन्त - பனைமட்டையாலான விசிறி.

**पर्यायसेवामुत्सृज्य पुष्पसम्भारतत्पराः ।**
**उद्यानपालसामान्यमृतवस्तमुपासते ॥ ३६ ॥**

ऋतवः - வஸந்தம் முதலான ஆறு பருவகாலங்களும், पर्यायसेवां - முறையே பணிவிடை செய்தலை, उत्सृज्य - விட்டு, पुष्प-सम्भार-तत्पराः - புஷ்பங்களைச் சேமிப்பதில் கருத்துடையனவாக, उद्यान-पाल-सामान्यं - தோட்டக்காரர்களுக்கு ஒப்ப, तं - அவனுக்கு, उपासते - பணிவிடை செய்கின்றன.

(க-து) வஸந்தம், க்ரீஷ்மம், வர்ஷ ருது, சரத், ஹேமந்தம், சிசிரம் என்ற ஆறு ருதுக்களும் ஒன்றன்பின் ஒன்ருக வந்து உலகிற்கு உதவுகின்றன. ஆனல் தாரகன் ராஜ்யத்தில் முறையே பணிசெய்தலைவிட்டு எல்லா ருதுக்களும் சேர்ந்திருந்து புஷ்பம், பழம் முதலியவைகளைக் கொடுத்து தோட்டக் காப்பாளர்போல் பணிவிடை செய்கின்றன.

எனவே அவன் ராஜ்யத்தில் அந்தந்த ருதுவில் கிடைக்கும் புஷ்பம் பழம் முதலியன எப்பொழுதும் கிடைத்துவந்தன. ஒரு ருது மற்றொரு ருதுவிற்கு விரோதியாகவில்லை.

पुष्पसंभारः - இங்கு புஷ்பம் என்றது பழம் முதலியவைகளுக்கும் உபலக்ஷணம்.

**तस्योपायनयोग्यानि रत्नानि सरितां पतिः ।**
**कथमप्यम्भसामन्तरा निष्पत्तेः प्रतीक्षते ॥ ३७ ॥**

सरितां - நதிகளின், पतिः - தலைவனாகிய ஸமுத்ரராஜன், तस्य - தாரகனுக்கு, उपायन-योग्यानि - பரிசாகத்தரத்தக்க, रत्नानि - (முத்து-பவழம் முதலிய) ரத்னங்களை, अम्भसां अन्तः - தண்ணீருக்குள், आ निष्पत्तेः - (அவை நன்கு) முதிரும்வரை, कथं अपि - மிக ச்ரமத்துடன், प्रतीक्षते - எதிர்நோக்கி இருக்கின்றான்.

(க-து) ஸமுத்ரத்தினுள் சிறந்த ரத்னங்களாகிய முத்தும் பவழமும் உற்பத்தியாகின்றன. ஸமுத்ரராஜன் அந்த ரத்னங்களில் தாரகனுக்குக் காணிக்கையாக அளிக்கத்தகுந்த முத்தும் பவழமும் முதிரும்வரை மிகக்கவலையுடன், அவைகளின் முதிர்ச்சியை எதிர் நோக்கிக் காத்துக்கொண்டிருக்கிறான். முதிர்ந்த க்ஷணத்திலேயே அவைகளைத் தாரகனுக்குக் காணிக்கையாக அளிக்கின்றான்.

தன்னிடம் விளையும் ரத்னங்களை தன்னிஷ்டப்படி உபயோகிக்கும் உரிமை இன்றி இருப்பவன் ஸமுத்ரராஜன்.

उपायनयोग्यानि - ரத்னம் எல்லாவற்றையும் அவனுக்குத் தருதல் கூடாது. அவனுடைய பெருமைக்குச் சேர சிறந்த ரத்னங்களை தெரிந்து எடுக்கும் கஷ்டமும் ஸமுத்ரத்திற்கு உண்டு.

अम्भसां अन्तः - தண்ணீருக்குள்; புஷ்பம் பழம்போல் வெளியில் தெரிவன அல்ல முத்தும் பவழமும்; எனவே ஸமுத்ரத்திற்கு அவற்றைக் கண்டு பிடிக்கும் கஷ்டமும் உண்டு.

आनिष्पत्तेः - முதிரும்வரை : அடுத்த க்ஷணத்தில் அவை தாரகனிடம் தரப்படவேண்டும்.

कथमपि - எவ்வளவு கவலை ஸமுத்ரராஜனுக்கு! ரத்னங்கள் இருக்குமிடம் தெரிந்து அவற்றின் தகுதியை உணர்ந்து, முதிரும்வரை காத்திருந்து மறு நிமிஷமே தரவேண்டும். தாமதித்தால் தண்டிப்பான் என்ற அச்சம். எனவே 'மிக்க ச்ரமத்துடன்' என்ருர்.

**ज्वलन्मणिशिखाश्चैनं वासुकिप्रमुखा निशि ।**
**स्थिरप्रदीपतामेत्य भुजङ्गाः पर्युपासते ॥ ३८ ॥**

(किं) च - மேலும், ज्वलन् - मणिशिखाः - ஒளிருகின்ற ரத்னமாகிய ஜ்வாலையுடைய, वासुकि - प्रमुखाः - வாஸுகி முதலிய, भुजङ्गाः - ஸர்ப்பங்கள், निशि - இரவில், स्थिर - प्रदीपतां - அணையா விளக்கின் தன்மையை, एत्य - ஏற்று, एनं - அத் தாரகனை पर्युपासते - உபசரிக்கின்றன.

(க-து) ஒளிருகின்ற ரத்னங்களைத் தலையில் தாங்கிய வாஸுகி முதலிய ஸர்ப்பங்கள் இரவில் தாரகனது வீட்டில் அணையாத தீபங்களாக நின்று அவனுக்குப் பணிவிடை செய்கின்றன.

ஸமுத்ரம் தன்னிடம் தோன்றும் ரத்னத்தைத் தந்தது. ஸர்ப்பங்கள் தங்கள் அவயவங்களான ரத்னங்களையே உபயோகித்துப் பணிபுரிகின்றன.

ज्वलन्मणिशिखाः - ஒளிருகின்ற ரத்னங்களே இப்புதிய விளக்குகளின் ஜ்வாலைகள்.

स्थिरप्रदीपः-அணையாத விளக்கு; மற்ற விளக்குகள் காற்றில் அணையும்; எனவே அவை ஸ்திரமல்ல. ரத்ன தீபம் காற்றில் அணையாதது; ஆங்காங்கு வாஸுகி முதலான ஸர்ப்பங்கள் ஒவ்வொரு இடத்தில் நிமிர்ந்து நின்று - ஸ்திரமான விளக்காக இருந்தன வென்றும் கூறலாம். பாம்புகள் வெகுநேரம் நிமிர்ந்து இருக்க முடியாதன. ஆயினும் வாஸுகி முதலிய

ஸர்ப்பங்கள் இரவுமுழுதும் நிமிர்ந்துநின்று பணிபுரிகின்றன. இதனுல் அவைகள் பட்ட கஷ்டம் புலனுகும்.

तत्कृतानुग्रहापेक्षी तं मुहुर्दूतहारितैः ।
अनुकूलयतीन्द्रोऽपि कल्पद्रुमविभूषणैः ॥ ३९ ॥

इन्द्रः अपि - இந்திரனும், तत्कृत-अनुग्रह-अपेक्षी - தாரகன் செய்யும் அருளை எதிர்நோக்கியவனுக, मुहुः - அடிக்கடி, दूतहारितैः - தூதர்கள் மூலம் அனுப்பப்பட்ட, कल्पद्रुम-विभूषणैः - கல்பக விருக்ஷம் தரும் ஆபரணங்களால், तं-அத்தாரகனை, अनुकूलयति - (தனக்கு) அனுகூலனுகச் செய்து கொள்கிறுன்.

(க-து) தேவர்களின் தலைவனுகிய இந்திரனும் தாரகனது அருளை விரும்பி, கல்பக விருக்ஷங்கள் தரும் சிறந்த ஆபரணம் முதலியவற்றை அடிக்கடி தூதுவர் மூலம் அனுப்பி, அவனைத் தன்னிடம் அன்புடையவனுகச் செய்ய முயல்கிறுன்.

इन्द्रः - பெரும் பெருமையுடையவன் என்பது பதப்பொருள். இந்திரனும் என்று சொன்னதால், அரசனே இவ்விழி நிலையில் இருப்பானுயின் மற்றைத் தேவர்கள் நிலையை எடுத்துக் கூறவேண்டாம் என்று கூறியதாயிற்று.

इत्थमाराध्यमानोऽपि क्लिश्नाति भुवनत्रयम् ।
शाम्येत्प्रत्यपकारेण नोपकारेण दुर्जनः ॥ ४० ॥

इत्थं - இவ்வாறு, आराध्यमानः अपि - உபசரிக்கப்பட்டபொழுதும், भुवन-त्रयं - மூவுலகையும், - क्लिश्नाति-(தாரகன்) வருத்துகின்றுன்; दुर्जनः - துஷ்டன். प्रत्यपकारेण - பிரதி அபகாரத்தினுல் தான், शाम्येत् - அடங்குவான்; उपकारेण - உபகாரத்தினுல் न (शाम्येत्) அடங்கான்.

(க-து) இவ்வாறு பணிவிடைகள் செய்யப்படும் பொழுதும் அவன் மூவுலகையும் துன்புறுத்துகின்றுன். எங்களது பணிவிடைகளைப்பெற்று நன்றியுடன் மகிழ்ந்திருக்க, அதை மறந்து உலகை வாட்டுவதில் முனைந்துள்ளான். நல்லவன் உபகாரத்தினுல் மகிழ்வான். தான் செய்த தவற்றை உணர்ந்து அடங்குவான். துஷ்டன்

நல்லுபகாரத்தினுல் அடங்கமாட்டான். கெடுதலைத் திருப்பிச் செய்தால்தான் அடங்குவான்.

आराध्यमानः अपि இங்குள்ள अपि என்ற சொல், உபசரிக்கப்படுபவன் கெடுதி செய்வது முற்றிலும் முரணுனது என்பதைக் காட்டவந்தது.

भुवनत्रयम् - உலகங்களின் நலனைக் கருதியே தேவர்கள் அவனுக்கு அடிபணிந்தனர். அவ்வாறேனும் அவன் துன்புறுத்தாது விடட்டும் என்பதாக.

शाम्येत् - அவன் ஸ்பாவத்தை மாற்றமுயன்ற தேவர்கள் அது மாருமல் இருத்தலைக்கண்டு அவனையே அழித்தால் அன்றி அவன் உடன் பிறந்த ஸ்வபாவம் அழியாதென்று உணர்ந்தனர்.

**तेनामरवधूहस्तैः सदयालूनपल्लवाः ।**
**अभिज्ञाश्छेदपातानां क्रियन्ते नन्दनद्रुमाः ॥ ४१ ॥**

अमर-वधू-हस्तैः - தேவமகளிரின் கைகளால், सदय-आलून-पल्लवाः - கருணையுடன் பறிக்கப்பபட தளிர்களையுடைய, नन्दन-द्रुमाः - நந்தன வன மரங்கள், छेद-पातानां - வெட்டப்படுதல் வீழ்த்தப்படுதல் இவைகளை, अभिज्ञाः - அறிபவைகளாக, तेन - அவனுல், क्रियन्ते - செய்யப்படுகின்றன.

(க-து) இந்திரனுடைய உத்யானம் நந்தனம். அதிலுள்ள மரங்களின் தளிர்களை தேவமகளிர் தம் கைகளால் அம்மரங்கள் வேதனையுணராதவாறு மிக இரக்கத்துடன் பறிப்பர். அம்மரங்கள் வெட்டப்படுதல் வீழ்த்தப்படுதல் முதலியவைகளை அறியாதவையாகும். இப்பொழுது தாரகனுல் அவை வெட்டுதலையும் வீழ்த்தலையும் அறிகின்றன.

நந்தனம் இத்திரனது உத்யானம்; ஆனந்தம் தருவது என்பது பதத்தின் பொருள்; ஆனந்தம் தருமிடத்தில் இருக்கும் மரங்கள் துக்கம் அனுபவிக்கின்றன. இந்திரனுக்கு

இவை இருத்தல் கூடாது என்று பகையுணர்ச்சியினால் இம் மரங்கள் வெட்டப்பட்டன - வீழ்த்தப்பட்டன. தன் தோட்டத்தில் நடுவதற்காகவும் இருக்கலாம்.

**वीज्यते स हि संसुप्तः श्वाससाधारणानिलैः ।**
**चामरैः सुरवन्दीनां बाष्पशीकरवर्षिभिः ॥ ४२ ॥**

**श्वास - साधारण - अनिलैः** - மூச்சுக் காற்றுக்குச் சமானமான காற்றை யுடையவையும், **बाष्प-शीकर वर्षिभिः**-(தேவஸ்த்ரீகளின்) கண்ணீர்த்திவலைகளை தூவுபவையுமான, **सुरवन्दीनां** - சிறை பிடிக்கப்பட்ட தேவஸ்த்ரீகளின், **चामरैः** - சாமரங்களினால், **सः हि** - அவன், **संसुप्तः** - தூங்கும்போது, **वीज्यते** - விசிறப்படுகிறான்.

(க-து) தேவஸ்த்ரீகள் பலரைத் தன் பலத்தால் கவர்ந்து தனக்குப் பணிசெய்யும்படி அமைத்துள்ளான். அவன் தூங்கும்பொழுது அந்த ஸ்த்ரீகள், மூச்சுக் காற்றளவிற்குக் காற்றுண்டாகும்படி அவனுக்குச் சாமரம் வீசுகின்றனர். அப்பெண்கள் தம் இழிநிலையை நினைத்து உகுத்த கண்ணீர் சாமரங்களில் விழுந்து சிறு திவலைகளாகச் சிதறுகின்றன.

**हि**-விசேஷணமாகக்கொண்டு, பிரஸித்திபெற்ற தாரகன் எனப்பொருள் கொள்ளலாம். அல்லது, சந்தத்திற்காக வந்ததெனவும் கொள்ளலாம்.

**श्वास - अनिलैः** - சாமரக்காற்று மூச்சுக்காற்றின் அளவிற்கு அதிகம் இருத்தல் கூடாது என்பது தாரகன் ஆணை.

**बाष्प . . . वर्षिभिः** ஸ்த்ரீகள் உதிர்த்த கண்ணீரைச் சிறு திவலைகளாகச் சாமரங்கள் தூவுகின்றன.

**वन्दी**-பலத்தினால் கவரப்பட்ட பிறர் மனைவி. **हठहृता महिला: वन्दी परस्य वनिता हृता बद्धा बलेन या** - என்பர் போஜர்.

**चामरैः** - சாமரமும் விசிறியைப்போல் காற்றுக்காக வீசப்படுகிறது.

संसुप्तः वीज्यते - தேவமகளிர் அழுவதற்குக்கூட இதுதான் நேரம்.

**उत्पाट्य मेरुशृङ्गाणि क्षुण्णानि हरितां खुरैः ।**
**आक्रीडपर्वतास्तेन कल्पिताः स्वेषु वेश्मसु ॥ ४३ ॥**

हरितां - (சூரியனுடைய) குதிரைகளின், खुरैः - குளம்பு களால், क्षुण्णानि - தேய்ந்த, मेरु - शृङ्गाणि - மேருமலையின் சிகரங் கள், तेन - அவனால், उत्पाट्य - பெயர்க்கப்பட்டு, स्वेषु - தனது, वेश्मसु - வீடுகளில், आक्रीड - पर्वताः-கேளிக்கைக்கான சிறு குன்று களாக, कल्पिताः - அமைக்கப்பட்டன.

(க-து) முற்றிலும் தங்கத்திலானது மேருமலை; பல உன்னத மான சிகரங்களையுடையது. மேருமலையைச்சுற்றிச் செல்வதால் சூரிய னது குதிரைக் குளம்புகள் பட்டுத் தேய்ந்தவை. அத்தகைய மேரு சிகரங்களை பெயர்த்துத் தாரகன் தனது ஒவ்வொரு மாளிகையின் பூங் காவிலும் விளையாட்டு மலையாக அமைத்துக்கொண்டான்.

மனமகிழ்ச்சிக்காகத் தோட்டங்களில் தடாகங்களை அமைப்பதுபோல் மலைகளையும் அமைப்பர்.

हरितः - சூரியனுடைய குதிரைகள்; सूर्ये सूर्यतुरंगे च मेरौ च हरिन्निष्यते - என்பர் போஜர். आक्रीडः - உத்யானம் என்றும் பொருள் கொள்ளலாம்.

**मन्दाकिन्याः पयः शेषं दिग्वारणमदाविलम् ।**
**हेमाम्भोरुहसस्यानां तद्वाप्यो धाम साम्प्रतम् ॥ ४४ ॥**

दिग् - वारण - मद - आविलम् திக்கஜங்களின் மதஜலத்தினால் கலங்கிய, पयः - ஜலம் மாத்திரமே, सांप्रतं - இப்பொழுது, मन्दाकिन्याः - தேவகங்கைக்கு (கங்கையில்), शेषम् - எஞ்சியுள் ளது, हेम - अम्भोरुह - सस्यानां - பொன் தாமரையாகிய பயிர் களுக்கு, तद् - वाप्यः - அவனுடைய வாவிகள்தான், धाम - (இப்பொழுது) இடமாக இருக்கின்றன,

(க-து) தேவருலகில் ஓடும் கங்கைக்கு மந்தாகினி எனப்பெயர். அதில் தங்கத் (பொன்) தாமரை வளர்ந்திருந்தது. அத்தாமரைகளை எல்லாம் பறித்துத் தனது வாவிகளில் நெற்பயிர் நடுவதுபோல் நட்டுக் கொண்டான் தாரகன். மந்தாகினி நதியில் இப்பொழுது எஞ்சி இருப்பது, திக்கஜங்களின் மதஜலம் கலந்து குழம்பிய ஜலம் மாத்திரமே.

दिग्वारण-मदाविलम् - யானைகள் மந்தாகினியில் குளிப்பதால் அவைகள் தலையினின்றும் பெருகும் மத ஜலம் மந்தாகினியில் கலந்து அதைக்கலக்கி விடுகிறது.

अम्भोरुहसस्यानाम् - பறித்து நடப்பட்டதால் தாமரையையும் பயிர்வகையில் சேர்த்துக் கூறினர்.

हेमाम्भोरुहम् - பொன்தாமரை - பொன்னிறமுள்ள தாமரை. பொன்னலான தாமரை என்பாரும் உண்டு.

**भुवनालोकनप्रीतिः स्वर्गिभिः नानुभूयते ।**
**खिलीभूते विमानानां तदापातभयात्पथि ॥ ४५ ॥**

तद् - आपात - भयात् - அவனது (எதிர்பாரா) வருகையின் பயத்தினால், विमानानां - விமானங்களின், पथि - வழி, खिलीभूते (सति) பாழடைந்துற்றதால், स्वर्गिभिः - தேவர்களால், भुवन - आलोकन - प्रीतिः - உலகைச்சுற்றிப் பார்ப்பதினால் வரும் இன்பம், न अनु- भूयते - அனுபவிக்கப்படவில்லை.

(க-து) எதிர்பாராவகையில் தாரகன் எங்கு எதிர்ப்படுவானோ என அஞ்சித் தேவர்கள் விமானங்களில் செல்வதில்லை. எனவே விமானமார்க்கங்கள் பாழடைந்தன. தேவர்களும் உலகினைக்கண்டு பெறும் ஸுகத்தை இழந்தனர்.

தேவர்கள் பொருளைக் கண்டுகளிப்பவரேயன்றி உண்டு களிப்பவரல்லர். அவர்கள் பொருளைக் காணும் பாக்கியத்தையும் இழந்தனர். விமானம் செல்லும் வழிகள் விமான ஸஞ்சாரமில்லாததால் பாழடைந்தன.

खिलीभूते - पथि 'सञ्चाररहिते' खिलमप्रहतं स्थानम् என்பர் போஜர்.

यज्वभिः सम्भृतं हव्यं विततेष्वध्वरेषु सः ।
जातवेदोमुखान्मायी मिषतामाच्छिनत्ति नः ॥ ४६ ॥

विततेषु - விரிவாகத் தொடங்கப்பட்டு செய்யப்படும், अध्वरेषु - யாகங்களில், यज्वभिः - யாகம்செய்பவர்களால், संभृतं - தரப்பட்ட, हव्यं - ஹவிஸ்ஸை, मायी - மாயாவியான, सः - அவன், नः - நாங்கள் (தேவர்கள்), मिषतां - பார்த்திருக்கும் பொழுதே, जातवेदो - मुखात् - அக்னியினிடமிருந்து, आच्छिनत्ति - பறித்துக்கொள்ளுகிறான்.

(க-து) யாகம் தொடங்கியபின் யாகம் செய்பவர் எங்களுக்குத் தரும் ஹவிஸ்ஸை நாங்கள் பார்த்திருக்கும்பொழுதே அக்னி தேவனிடமிருந்து பறித்துக்கொள்கின்றான் அம் மாயாவி.

विततेषु - अध्वरेषु - அவன் யாகத்தின் தொடக்கத்தில் ஒன்றும் செய்வதில்லை ; தொடங்கி விஸ்தாரமாக நடக்கும் பொழுது தீங்கு செய்ய வருகிறான்.

मायी - மாயாவி - அவன் எவ்வடிவில் வருவான் என்பதும் எங்களால் அறிய முடிவதில்லை,

नः मिषताम् - கண் இமையாத நாங்கள் பார்த்திருக்கும் பொழுது எங்களை மதியாமல் பறிக்கின்றான்.

जातवेदो - मुखात् - தேவர்களுக்குக் கொடுக்கும் ஹவிஸ்ஸை அக்னியில்தான் இடவேண்டும். அக்னி அவர்களுக்கு வழியாக இருந்து அதைக்கொண்டு தருகின்றான். எனவே, அக்னிதான் தேவர்களின் முகமாக - வாயாக. - இருப்பவன். அக்னியினிடமிருந்து பறிப்பது தேவர்களின் வாயிலிருந்து பறிப்பது போலாகும்.

उच्चैरुच्चैःश्रवास्तेन हयरत्नमहारि च ।
देहबद्धमिवेन्द्रस्य चिरकालार्जितं यशः ॥ ४७ ॥

(किं) च-மேலும், चिरकाल-अर्जितम् -வெகுகாலமாக சம்பாதிக்க பட்டதும், देहवद्-म् - உருவுடைய, इन्द्रस्य यशः इव (स्थितम्) - இந்திரனது புகழ் போன்றதுமான, उच्चैः - உயரமான, उच्चैः-श्रवाः - உச்சைச்ரவஸ் என்ற, हयरत्नम् - (தேவேந்திரனுடைய) சிறந்த குதிரையும், तेन - அவனால், अहारि - கவரப்பட்டது.

(க-து) அம்ருதத்திற்காகத் தேவர்கள் பாற்கடலைக் கடைந்த பொழுது தோன்றிய குதிரை உச்சைச்ரவஸ்; மிக உயரமானது. வெண்ணிறமான அக்குதிரை, வெகுகாலமாக ஸம்பாதித்த-உருவெடுத்துவந்த இந்திரனது புகழ் போலுள்ளது. அக்குதிரையையும் தாரகன் கவர்ந்துள்ளான்.

उच्चैः - உயரமான; குதிரைகளுக்கு இருக்கவேண்டிய குணங்களில் ஒன்று உயரமாக இருத்தல். இக்குணமே தாரகன் அதனைக் கவர்வதற்குக் காரணமாக இருந்தது,

उच्चैः श्रवाः-குதிரையின் பெயர்; 'அதிகம் புகழ் பெற்றது' என்பது பதத்திற்குப் பொருள். 'நிமிர்ந்த காதுடையது', 'உரத்த கனைத்தலை உடையது' என்றும் பொருள் கொள்ளலாம்.

यशः इव - கவிகள் புகழை வெண்ணிறமாக வர்ணிப்பர். இக்குதிரை வெண்ணிறமாக இருந்ததால் உருவெடுத்து வந்த - வெகுகாலம் ஈட்டிய - இந்திரனது புகழ் போல் இருந்தது என அக்குதிரையை உத்ப்ரேக்ஷித்தார். குதிரையைக் கவர்ந்ததால் இந்திரனது புகழும் கவரப்பட்டதாயிற்று.

हयरत्नम् - குதிரைகளில் சிறந்தது. அந்தந்த இனத்தில் சிறந்ததை ரத்னம் எனக் கூறுவர்.

तस्मिन्नुपायाः सर्वे नः क्रूरे प्रतिहतक्रियाः ।
वीर्यवन्त्यौषधानीव विकारे सान्निपातिके ॥ ४८ ॥

क्रूरे - கொடியவனாகிய, तस्मिन् - அவனிடத்தில் (செய்த), नः - எங்களுடைய, सर्वे - எல்லா, उपायाः - உபாயங்களும், क्रूरे - கொடிய, साम्निपातिके विकारे - ஸந்நிபாத ஜ்வரத்தினிடத்தில், (உபயோகிக்கப்பட்ட), वीर्यवन्ति - பலமுள்ள, औषधानि - इव - மருந்துகளும் (செயலற்றுப் போவது) போல, प्रतिहत - क्रियाः (भवन्ति) - தடையுற்ற செயலுடையனவாக - இருக்கின்றன.

(க-து) வாதம், பித்தம், கபம் என்ற இம்மூன்றிலும் ஒரே காலத்தில் ஏற்படும் கோளாறுகளால் வரும் ஜ்வரத்தை ஸந்நிபாத ஜ்வரம் என்பர். அம்ருதம்போல் பலமுடைய மருந்துகளும் இத்தகைய ஜ்வரத்தை அடக்கத் திறனின்றிச் செயலற்று நிற்கின்றன. அதுபோல் மிகக் கொடியனாகிய அவனிடத்தில் நாங்கள் உபயோகித்த எல்லாவகை உபாயங்களும் பலனளிக்காமல் போயின.

उपायाः - ஸாம, தான, பேத, தண்டம் என்ற நால்வகை உபாயங்கள். साम्निपातिकः வாதம், பித்தம், கபம் இம்மூன்றும் சரீரத்தின் முக்ய பொருளாக (தாதுக்களாக)க் கூறுவர். இம் மூன்றும் சம நிலையில் உள்ளபொழுது ஆரோக்யம் இருக்கின்றது. இம் மூன்றில் ஏதேனும் ஒன்று மாறுபடுமாயின் வியாதி உண்டாகிறது. இம் மூன்றிலும் மாறுபாடுகள் ஏற்பட்டு அதனால் வரும் ஜ்வரம் முதலியவற்றை ஸாந்நிபாதிகம் என்பர். அத்தகைய ஜ்வரத்தில் சிறந்த மருந்துகளும் பயனற்றுப்போகின்றன,

वातपित्तकफानां च सन्निपातो यदा भवेत् ।
तदा जातो ज्वरस्तीव्रो ह्यसाध्यः सर्वभेषजैः ॥

என்பது வைத்ய சாஸ்திரம். இங்கு தாரகன் ஜ்வரத்திற்கு ஒப்பிடப்பட்டுள்ளான். இருவருக்கும் பொதுவான குணம் கொடிய தன்மை, உபாயங்களுக்கு வசப்படாமை முதலியன.

जयाशा यत्र चास्माकं प्रतिघातोत्थितार्चिषा ।
हरिचक्रेण तेनास्य कण्ठे निष्कमिवार्पितम् ॥ ४९ ॥

किंच-மேலும், यत्र - எந்த சக்ராயுதத்தினிடத்தில், अस्माकं - எங்களுடைய, जय-आशा (आसीत्) - வெற்றிக்கான நம்பிக்கை இருந்ததோ, प्रतिघात-उत्थित-अर्चिषा - தடையினுல் (மோதுத லால்), உண்டான ஒளியுடைய, तेन - அந்த, हरि-चक्रेण - விஷ்ணு சக்ரத்தினுல், अस्य - அவனுடைய, कण्ठे - கழுத்தில், निष्कं -தங்க ஆபரணம், अर्पितं - इव - போடப்பட்டது போல் (இருக்கப்பட்டது).

(க-து) விஷ்ணுவின் சக்ராயுதம் தாரகனைத் திண்ணமாகக் கொல் லும் என அதனிடம் தேவர்கள் வெற்றிக்கான நம்பிக்கையை வைத் திருந்தனர். அவனது கழுத்தை நோக்கி வீசப்பட்ட சக்ராயுதம் பாறை போன்ற அவனது மார்பில் மோதி தடையுற்றுத் தீப்பொறிகளை வெளி யிட்டு, அவன் கழுத்தில் தங்க ஆபரணம் ஒன்றை அணிவித்ததுபோல் இருந்தது.

ஸாம, தான, பேதம் என்ற உபாயங்கள் பலிக்காத பொழுது நான்காவது உபாயமான தண்டோபாயத்தைக் கைக்கொண்ட தேவர்கள் சக்ராயுதத்தை அவன் மீது வீசச் செய்தனர். பாறைபோன்ற அவனது கழுத்தில் மோதுவ தால் சக்ராயுதத்தினின்றும் ஒளிக்கதிர்கள் தோன்றி அவன் மார்பு முற்றிலும் பரவின. கழுத்தை அறுக்க வேண்டிய அவ்வாயுதம் அவனுக்கு ஆபரணமாக அமைந்தது.

"शिलातलकर्कशे तत्कण्ठे विष्णुचक्रे पातिते सति कण्ठदेशकाठिन्यादुद्गतया वक्षः- प्रदेशपर्यन्तं लम्बमानयानलज्वालया अस्य कण्ठदेशे महत्तरमुरोभूषणमर्पितमिवेत्यर्थः" என்பது அருணகிரியின் உரை. விஷ்ணுசக்ரமே அவன் மார் பில் தங்க ஆபரணம் போல் நின்றது என்று உரைப்பர் மல்லிநாதர். स्वयमेव निष्कमिव स्थितमित्यर्थः - என்பது அவரது உரை.

हरिचक्रेण - விஷ்ணு ஒரு சமயம் இந்திரனுக்குத் தம்பி யாகப் பிறந்தார். அந்த அவதாரத்தில் அவரது பெயர் உபேந்திரன் என்பது. இந்திரன் வஜ்ராயுதம் தாரகனைக் கொல்லாத பொழுது. தேவர்கள் உபேந்திரனை வேண்ட அவர் தமது சக்ராயுதத்தை உபயோகித்தார்.

तदीयास्तोयदेष्वद्य पुष्करावर्तकादिषु ।
अभ्यस्यन्ति तटाघातं निर्जितैरावता गजाः ॥ ५० ॥

निर्जित - ऐरावताः - ஐராவதத்தை வென்ற, तदीयाः गजाः - அவனுடைய யானைகள், अद्य - இப்பொழுது, पुष्कर - आवर्तक - आदिषु - புஷ்கராவர்த்தகம் முதலான, तोयदेषु - மேகங்களில், तट - आघातं - கரைமுட்டி விளையாடுதலை, अभ्यस्यन्ति - பழகு கின்றன.

(க-து) அவனுடைய யானைகள் இந்திரனுடைய யானை ஐரா வதத்தை வென்றவை. இந்திரனுக்குப் பிரியமான நீர் நிறைந்த புஷ்கராவர்த்தகம் முதலான மேகங்களைத் தந்தங்களால் குத்தி இடித்து விளையாடுகின்றன, இப்பொழுது அந்த யானைகள்.

இதுவரை தாரகன் செய்த கொடுமைகளைக் கூறிய பிருஹஸ்பதி தாரகனைக் சேர்ந்த யானைகள் செய்யும் தீங்கைக் கூறுகின்றார், இந்திரன் படும் இன்னல்களை அவனது குதிரையைப் பற்றிக் கூறத் தொடங்கி அவனது யானையின் தோல்வியைக்கூறி முடித்தார்.

अद्य - இப்பொழுது. தாரகனுடைய யானைகளுக்கு இப் பொழுது யுத்தத்தில் வேலையில்லை. ஏனெனில் அவனுடன் போர்புரிபவர் யாருமில்லை.

ऐरावतः - பாற்கடல் கடையப்பட்ட பொழுது இதனை இந்திரன் எடுத்துக் கொண்டான்.

तदीयाः गजाः - தாரகனைப் போன்றே கர்வம் கொண்டவை அவனுடைய யானைகள்.

पुष्करावर्तकः - பிரளய காலத்தில் மழை பெய்வதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள பெரிய மேகம்; இந்திரனுக்கு முதல் மேகமாக உள்ளது. புஷ்கரம் ஆவர்த்தகம் என்று இரண்டு மேகமாகக் கொள்வர் மல்லிநாதர். புஷ்கராவர்த்தகம் என ஒரே பெயராகக் கொள்வர் அருணகிரி. पुष्करावर्तकादिषुपुष्करावर्तकाः - எனப் பன்மையில் கூறுவர் பூர்ணஸரஸ்வதி என்ற உரையாசிரியர். இங்குள்ள आदि - என்ற சொல் ராஜாவர்த்தகம் முதலான மேகங்களையும் குறிக்கும் என்பர்.

'तटाघातम्' तट-ஆறு, குளம், இவற்றின் கரைகள், பெரும்பாலும் இவை மண்ணால் உயர்ந்து மேடாக இருக்கும். இத்தகைய மண்மேடுகளைக் கண்டால் அவற்றில் முட்டி விளையாடுதல் கொம்புள்ள பிராணிகளுக்கு இயல்பாகும். आघातम्-முட்டுதல், இடித்தல். तटाघातं - கரை முட்டி விளையாடுதல். தாரகனது யானைகள் புஷ்கராவர்த்தகம் முதலிய மேகங்களைக் குத்தி இடித்து விளையாடின.

अभ्यस्यन्ति - பல முறையும் விளையாடின.

**तदिच्छामो विभो स्रष्टुं सेनान्यं तस्य शान्तये ।**
**कर्मबन्धच्छिदं धर्मं भवस्येव मुमुक्षवः ॥ ५१ ॥**

विभो - வல்லமை வாய்ந்த தேவரே, तत् - ஆதலால், मुमुक्षवः - மோக்ஷத்தை விரும்புவர்கள்; भवस्य - பிறப்பை, शान्तये - நீக்குவதற்காக, कर्म - बन्ध - च्छिदं - கர்மங்களாகிய கட்டுகளை அறுக்கும், धर्मं - इव - தர்மத்தை(ச்செய்ய விரும்புவது) போல், तस्य - அத்தாரகனை, शान्तये - அழிப்பதற்காக, सेनान्यं - ஸேனைத்தலைவன் ஒருவனை, स्रष्टुं - படைக்க, इच्छामः - விரும்புகின்றோம்.

(க-து) மோக்ஷத்தை விரும்பும் மனிதர்கள், பிறப்பை நீக்க விரும்பி, கர்மங்களால் வரும் பிணிப்புகளை அறுப்பதற்கு தர்மத்தைச் செய்வர். அதுபோல், தாரகனை அழிப்பதற்கு ஒரு ஸேனைத் தலைவனைத் தாங்கள் படைக்கவேண்டும் என விரும்புகின்றோம்.

कर्मबन्ध: - மனிதர்கள் தாம் செய்யும் காரியங்களினின்றும் வரும் புண்ணிய பாபங்களின் பயனை அனுபவிப்பதற்காக இவ்வுலகில் பிறக்கின்றனர். பிறந்து மறுபடியும் செயல் புரிகின்றனர். மேலும் புண்ய பாபங்கள் குவிகின்றன. இவ்வகையில் கர்மங்கள் மனிதனைப் பிணிக்கின்றன. பிறப்பை நீக்கவேண்டுமாயின் கர்மபந்தங்கள்-பிணிப்புகள்-நீங்கவேண்டும். அவை நீங்குவது ஞானத்தினல். ஞானம் பெறுவதுதர்ம அனுஷ்டானங் களினல். எனவே கர்மபந்தம் நீங்க, தர்மத்தைச் செய்பவர் மோக்ஷத்தில் விருப்புடைய மனிதர்கள்.

मयि सृष्टिर्हि लोकानां என்று பிரம்மா கூறியதற்குச் சேர இவ் வேண்டுகோள் செய்யப்பட்டது. स्रष्टुम् - इच्छामः - ' பிரம்மதேவர் ஸ்ருஷ்டிக்கவேண்டும் ' என விரும்புகின்றோம்.

**गोप्तारं सुरसैन्यानां यं पुरस्कृत्य गोत्रभित् ।**
**प्रत्यानेष्यति शत्रुभ्यो बन्दीमिव जयश्रियम् ॥ ५२ ॥**

सुर - सैन्यानां - தேவர்சேனைகளுக்கு, गोप्तारं - ரக்ஷகனாகிய, यं - எந்த சேனைத்தலைவனை, पुरस्कृत्य - முன்னிட்டு, गोत्रभित् - இந்திரன், जयश्रियं - வெற்றித் திருவை, बन्दीं इव - சிறை பிடிக்கப்பட்ட ஸ்த்ரீயை (மீட்பது) போல், शत्रुभ्यः - சத்ருக்களிடமிருந்து, प्रत्यानेष्यति - திரும்ப அழைத்து வருவானே, (तं) - அத்தகைய - ஸேனைத் தலைவனை, स्रष्टुं - படைக்க, इच्छामः - விரும்புகின்றோம்.

(க-து) இந்திரன், தேவர் படையைப் பாதுகாக்கும் வல்லமை வாய்ந்த அச்சேனைத்தலைவனை முன்னிட்டுக் கொண்டு, அஸுரர்களுடன் போர் புரிந்து வெற்றித் திருவை மீட்டு வருவான்.

गोत्र-भित् - மலைகளைப் பிளந்தவன் - இந்திரன். जयश्रियं - ஜயலக்ஷ்மியை - வெற்றித் திருவை ; வெற்றியை லக்ஷ்மியாகக் கூறுவர். सुरश्रियम् - தேவர்களது செல்வத்தை-என அருணகிரி உரைப்பர்.

बन्दी - சிறைபிடிக்கப்பட்ட ஸ்த்ரீ.

प्रत्यानेष्यति - மீட்பான். இத்துடன் ப்ருஹஸ்பதியின் பேச்சு முடிகின்றது.

**वचस्यवसिते तस्मिन् ससर्ज गिरमात्मभूः ।**
**गर्जितानन्तरां वृष्टिं सौभाग्येन जिगाय सा ॥ ५३ ॥**

तस्मिन् - அந்த, वचसि - வார்த்தையானது, अवसिते - முடிந்தவுடன், आत्मभूः - பிரம்மதேவர். गिरं ससर्ज - பேசினார். सा - (அவருடைய) பேச்சு, गर्जित - अनन्तरां - மேக கர்ஜனைக்குப்பின் வரும், वृष्टिं - மழையை, सौभाग्येन - தன் அழகினால், जिगाय - வென்றது.

(க-து) பிருஹஸ்பதியின் பேச்சு முடிந்தவுடன் பிரம்மதேவர் கூறிய ஆறுதலளிக்கும் வார்த்தை தன்னழகினால் மேக கர்ஜனைக்குப் பின்னுண்டாகும் மழையின் தண்மையையும் வென்றது.

பிருஹஸ்பதியின் பேச்சு கம்பீரமாகவும், கேட்போர் மனத்தில் தேவர்களின் பயத்தைக் காட்டுவதாகவும் இருந்ததால் மேககர்ஜனையுடன் ஒப்பிடப்பட்டது. கர்ஜனைக்குப் பின் வரும் மழை, மக்களின் மனத்தை மகிழ்விக்கும். இம் மகிழ்ச்சி சிறிது காலமே இருக்கும். பிரம்மாவின் பதில் தேவர்களுக்கு நிலையான மகிழ்ச்சியைத் தருதலால் அது தன்னழகில் மழையையும் வென்றது என்றார் கவி. சொல்லிற்கு அழகு: உண்மையான பொருளைத் தெரிவித்தல், கேட்பதற்கு இனிதாக இருத்தல், கேட்டவுடன் மனத்தை மகிழ்வித்தல் முதலியனவாம். ஒரே மாதிரியான வேகத்தில் குழப்பமின்றிச் செய்யப்படும் கம்பீரமான சொற்பொழிவிற்கு உபமானமாக மழையைக் கூறுவர். அத்தகைய மழையையும் விஞ்சியது

பிரம்மதேவரின் சொற்பொழிவு. எனின் அதன் பெருமையை எளிதில் ஊஹிக்க முடியும்.

गिरं ससर्ज - சொல்லைக் கூறினார் என்பது பொருள்-

वचस्यवसिते तस्य என்பது அருணகிரி பாடம்.

இனிவரும் எட்டு சுலோகங்கள் பிரம்மதேவரின் பதிலாக உள்ளன.

**सम्पत्स्यते वः कामोऽयं कालः कश्चित् प्रतीक्ष्यताम् ।**
**न त्वस्य सिद्धौ यास्यामि सर्गव्यापारमात्मना ॥ ५४ ॥**

वः - உங்களுடைய, अयं-कामः - இவ்விருப்பம், सम्पत्स्यते - நிறைவேறப்போகின்றது. कश्चित् कालः - சிறிது காலம், प्रतीक्ष्यताम् - பொறுத்திருக்கப்பட வேண்டும், तु - (किन्तु) - ஆனால், अस्य - ஸேனைத்தலைவனை, सिद्धौ - பெறும் விஷயத்தில், आत्मना - நானே, सर्ग - व्यापारं - படைத்தல் காரியத்தை, न यास्यामि - செய்யப்போவதில்லை.

(க-து) "தேவர்களே! உங்களுடைய விருப்பம் திண்ணமாய் நிறைவேறப் போகின்றது. சிறிது காலம் பொறுத்திருங்கள். படைத்தல் என்பது என் தொழிலாயினும் நீங்கள் விரும்பும் ஸேனைத் தலைவனை நான் படைக்கப் போவதில்லை".

कामः - விருப்பம்; ஸேனைத்தலைவனை அடைவது.

कश्चित्-कालः - 'சிறிது காலம்' என்பார் மல்லிநாதர். "அனுகூலமான காலத்தை எதிர்பார்த்திருங்கள்" என அருணகிரி உரை செய்வர்.

संपत्स्यते वः कामः - தேவர்களின் மனமறிந்து பிரம்மதேவர் 'ஆசை நிறைவேறப்போகின்றது' என்று கூறாமல், நிறைவேறப்போகின்றது உங்கள் ஆசை, என்று கூறினார்-दृष्टा-सीता- என்பது போல். பிரம்மதேவர் தானே சேனைத்தலைவனைப் படைக்காததன் காரணத்தை அடுத்த சுலோகத்தில் கூறுகின்றார்.

**इतः स दैत्यः प्राप्तश्रीः नेत एवार्हति क्षयम् ।**
**विषवृक्षोऽपि संवर्ध्य स्वयं छेत्तुमसाम्प्रतम् ॥ ५५ ॥**

इतः-என்னிடமிருந்து, प्राप्तश्रीः-பெறப்பட்ட செல்வமுடைய, (பலமுடைய), स-दैत्यः-அவ்வஸுரன், इतःएव - என்னிடமிருந்தே, क्षयं - நாசத்தை, न अर्हति - அடையத்தகுந்தவனல்லன்; विष-वृक्षः अपि - விஷமரமும், संवर्ध्य - வளர்த்தபின், स्वयं - வளர்த்தவரா லேயே, छेत्तुं - வெட்டப்படுதல், असांप्रतम् - கூடாது (தகாது.)

(க-து) அவ்வஸுரன் தவம் செய்து என்னை மகிழ்வித்து பல் வகைச் செல்வங்களையும் என்னிடமிருந்து பெற்றுள்ளான். எனவே நான் அவனைக் கொல்லுதல் கூடாது. தாம் வளர்த்தது விஷமரமா யினும் தாமே அதனை வெட்டுவது கூடாது.

इतः - இவ்விடமிருந்து தம்மைச்சுட்டிக் கொள்வதால் இச் சொல் பிரம்மதேவரைக் குறித்தது.

विषवृक्षः - விஷமரம்; यस्य स्पर्शनमात्रेण वायुसंस्पर्शनेन वा । म्रियन्ते जन्तवः सर्वे विषवृक्षः स कीर्तितः என்பதனைக் காண்க.

**वृतं तेनेदमेव प्राङ्मया चास्मै प्रतिश्रुतम् ।**
**वरेण शमितं लोकानलं दग्धुं हि तत्तपः ॥ ५६ ॥**

प्राक् - முன்பு, तेन - அவ்வஸுரனால், इदं एव - இதுவே, वृतं - வரமாகக்கேட்கப்பட்டது; मया च - என்னாலும், अस्मै - அவனுக்கும், प्रतिश्रुतम् - (அவ்வரம்) பிரதிக்ஞை செய்யப்பட் டது. लोकान् - உலகங்களை, दग्धुं - எரிப்பதற்கு, अलं - சக்தி வாய்ந்த, तत् - तपः - அவனது தவம், वरेण - வரத்தின் மூலம், शमितं हि - அடக்கப்பட்டது;

(க-து) அவ்வஸுரன், என்னால் அவன் கொல்லப்படுதல் கூடாதென்ற இவ்வரத்தையே கேட்டான். அவ்வரத்தை அவ னுக்கு நான் அளித்தேன். அவன் செய்த தவம் மிக உக்ரமாயிருந் தது. மூவுலகையும் எரிக்கும் சக்தி வாய்ந்திருந்தது. நான், அவன் கேட்ட வரத்தைக் கொடுத்து அதனை அடக்கினேன். தவம் செய் வதனின்றும் நிறுத்தினேன். அவன் கேட்ட வரத்தைத் தந்திரா விடின் உலகிற்குப் பெருந் தீங்கு நேர்ந்திருக்கும். உலகின் நன்மை யைக் கருதி இவ்வரம் கொடுத்தேனேயன்றி அவ்வஸுரனின் நன்மையைக் கருதியல்ல.

इदम् - இதுவே; (1) பிரம்மாவினுல் கொல்லப்படாமை, (2) தேவர்களால் கொல்லப்படாமை, (3) சிவபிரானது மகனுல் மாத்திரமே கொல்லப்படுதல், என இவையே வரமாகக் கேட்கப்பட்டன.

'वरेण अशमितम् - என்று பாடம் கொண்டு, 'வரத்தினுல் அடக்கப்படாத அந்தத் தவம் உலகங்களை அழிக்கும் ஆற்றல் உடையது அல்லவா' என்று உரை கூறுவர் நாராயணர்.

**संयुगे सांयुगीनं तमुद्यन्तं प्रसहेत कः ।**
**अंशादृते निषिक्तस्य नीललोहिततेजसः ॥ ५७ ॥**

सांयुगीनं-யுத்தம் செய்வதில் திறமையுடையவனும், संयुगे - யுத்த பூமியில், उद्यन्तं - 'ஊக்கத்துடன்' நிற்பவனுமாகிய, तं - அவனை, निषिक्तस्य-படைக்கப்பட்ட, नीललोहित-तेजसः-சிவபிரானுடைய, अंशात्-ऋते - புத்திரனைத்தவிர, कः - வேறு எவன், प्रसहेत - எதிர்ப்பான்?

(க-து) தாரகன் யுத்தம் செய்வதில் திறமையுடயவன்; சிவ பிரானது மகனைத் தவிர வேறு எவனும் யுத்த பூமியில் நிற்கின்ற அவனை எதிர்க்க முடியாது.

இதுவரை பிரம்மதேவர், தாரகனைக் கொல்வதில் அவர் சக்தியுடையவர் எனத் தேவர்கள் கொண்ட கருத்தை ஏற்றுப் பதில் கூறினுர் மூன்று சுலோகங்களில். இச்சுலோகத்தில் அவனைக் கொல்லத் தம்மால் முடியாதென்றும் சிவ பிரானது மகன்தான் கொல்வான் என்றும் உண்மை நிலையைக் கூறுகின்றுர்.

उद्यन्तम् - 'எழுகின்ற' என்பது பதப்பொருள், 'முயலுகின்ற' என்று பொருளுரைப்பர் மல்லிநாதர்.

उद्गतम् - என்றும் பாடம் உண்டு.

सांयुगीनम् - सम्मुखीनं - என்ற பாடம் கொண்டு 'எதிரில் வருகின்ற' என்று பொருள் கூறுவர் நாராயணர்.

नीललोहित: - சிவபிரானது கழுத்து நீலமாகவும், சடைகள் சிவந்தும் இருப்பதால், नीललोहित: - என்ற பெயர் பெற்ருர். लोहित - சிவப்பு.

**स हि देवः परं ज्योतिस्तमःपारे व्यवस्थितम् ।**
**परिच्छिन्नप्रभावर्द्धिर्न मया न च विष्णुना ॥ ५८ ॥**

**सः देव:**-அத்தேவர் (சிவபிரான்), **तमः-पारे** - அவித்யைக்கு புறத்தில், **व्यवस्थितं** - உள்ள, **परं** - மிகவுயர்ந்த, **ज्योति: हि** - ஒளி யல்லவா? **मया** - என்னுல், **परिच्छिन्न-प्रभाव-ऋद्धि:** - அளவிடப் பட்ட (முற்றிலும் அறியப்பட்ட) பெருமையின் நிறைவை யுடையவராக, **न**-(அவர்) இல்லை; **विष्णुना च**-விஷ்ணுவினுலும், **न** - அளவிடப்பட்ட பெருமையுடையவரில்லை.

(க-து) அஜ்ஞானத்திற்கு அப்பால் உள்ள அத்தேவரின் சிறந்த பெருமைகளை முற்றிலும் நானும் அறியவில்லை; விஷ்ணுவும் அறிய வில்லை. எங்கள் இருவராலும் அளவிடப்படாத பெருமை வாய்ந்தவர் சிவபிரான்.

**तम:पारे व्यवस्थितम्-तम:** - அஜ்ஞானம். அஜ்ஞானத்திற்குப் புறத்தில் இருப்பதால் அஜ்ஞானம் உள்ள வரை அவரை அறிவது முடியாது.

**परं-ज्योति:** - சிறந்த ஒளி. உலகில் உள்ள பிற ஒளிகள், காலத்திலுலும் இடத்திலுலும் மற்றும் பலவற்ருலும் அளவு டையன. சில தாம் மாத்திரமே புலனுகும். சில ஒளிகள் பிறவற்றையும் காட்டும். சிவபிரான் என்ற இவ்வொளி மற்றவை போன்றன்று. ஆதலால். **परं** - உயர்ந்த என்ற - அடைமொழி தரப்பட்டது.

**प्रभाव-ऋद्धि:** - பெருமையின் நிறைவு.

**परिच्छिन्न . . . . विष्णुना** - சிவபிரான் ஒரு சமயம் பெரிய ஒளி வடிவில் பிரம்மா, விஷ்ணு இவர்களின் முன்னிலையில் தோன்றினர். அவ்வொளியின் முடிவைக் காண பிரம்ம தேவர் ஹம்ஸவடிவில் மேலே சென்ருர். விஷ்ணு வராஹ

வடிவில், ஒளியின் அடியைக் காண பூமிக்குள் சென்முர். முயன்றும் அவ்விருவரும் அவ்வொளியின் அடிமுடிகளைக் காணவில்லை என லிங்கபுராணம் (1. அத் 17) கூறுகின்ற வரலாற்றைக் கவி குறிப்பிடுகிருர்.

उमारूपेण ते यूयं संयमस्तिमितं मनः ।
शम्भोर्यतध्वमाक्रष्टुमयस्कान्तेन लोहवत् ॥ ५९ ॥

ते - பயனை விரும்புகின்ற, यूयं - நீங்கள், संयम - स्तिमितं - தியானத்திஞல் உறுதியாக இருக்கின்ற, शंभोः मनः - சிவ பிரானது மனத்தை, उमा - रूपेण - பார்வதியின் அழகிஞல், अयस्कान्तेन - காந்தத்திஞல், लोहवत् - இரும்பை (இழுப்பது போல), आक्रष्टुं - இழுக்க (வசீகரிக்க), यतध्वम् - முயலுங்கள்.

(க-து) சிவபிரானது மனம் இப்பொழுது தவத்தில் ஈடுபட்டு ஒரே நிலையில் உறுதியாக இருக்கின்றது. காந்தத்திஞல் இரும்பை இழுப்பது போல், பார்வதியின் அழகிஞல் அதனைத்திருப்ப முயலுங்கள்.

उभे एव क्षमे वोढुमुभयोर्वीर्यमाहितम् ।
सा वा शम्भोस्तदीया वा मूर्तिर्जलमयी मम ॥ ६० ॥

आहितं - (எங்கள் இருவராலும்) தரப்படுகின்ற, उभयोः - (எங்கள்) இருவருடைய, वीर्यं - ஆற்றலை, वोढुं-தாங்க, उभे एव - இரண்டுதான், क्षमे - சக்தியுடையன. (அவை எவை எனின்), शंभोः - சிவபிரானது, (சக்தியை), (वोढुं) - தாங்க, सा वा - பார்வதியும், मम - என்னுடைய, சக்தியை, (वोढुं) - தாங்க, तदीया - சிவபிரானுடைய, जलमयी मूर्तिः वा - நீர்வடிவமும் தான், (क्षमे) - சக்தியுடையன.

(க-து) உலகத்தைப்படைக்க விரும்பிய நான் முதலில் நீரைப் படைத்து அதனுள் எனது சக்தியை செலுத்தினேன்.

ஏனெனில் எனது சக்தியைத் தாங்கும் ஆற்றல் நீருக்குத்தான் உண்டு. அதுபோல் ஸேனாபதியைப் படைப்பதில் பார்வதிதான் உதவும் ஆற்றலுடையவள்.

वदीया मूर्तिः जलमयी - சிவபிரானது எட்டுவடிவங்களில் ஒன்று தண்ணீர். பிரம்மதேவர் தன்னைப்பற்றி உவமையாகக் கூறினார். படைப்பதில் நீர் எனக்கு உதவியது போல் சிவபிரானுக்கு உதவுபவள் பார்வதி என்பது கருத்து. वा - என்பது உம்மைப் பொருளில் வந்தது.

**तस्यात्मा शितिकण्ठस्य सैनापत्यमुपेत्य वः ।**
**मोक्ष्यते सुरबन्दीनां वेणीर्वीर्यविभूतिभिः ॥ ६१ ॥**

तस्य - ஆற்றல் மிகுந்த, शिति - कण्ठस्य -சிவபிரானது, आत्मा - மகன், वः - உங்களுக்கு, सैनापत्यं - ஸேனைத் தலைமையை, उपेत्य - ஏற்று, वीर्य - विभूतिभिः- தனது சிறந்த பலத்தினால், सुर - वन्दीनां - சிறை பிடிக்கப்பட்ட தேவமகளிரின், वेणीः - சடைகளை, मोक्ष्यते - அவிழ்த்து விடுவான்.

(க-து) சக்திவாய்ந்த சிவபெருமானுடைய மகன் உங்கள் ஸேனைக்குத் தலைவனாக இருந்து, தாரகனைக் கொன்று, அவனால் சிறை பிடிக்கப்பட்ட பெண்கள் யாவரையும் விடுதலை செய்வான்.

आत्मा - மகன்; தந்தைக்கு உள்ள சக்தி மகனுக்கும் இருக்கும் என்பதனைக் காட்ட புத்ரன் முதலிய சொற்களை விட்டு இதனை உபயோகித்தார்; आत्मा - தான், மகன்; 'தந்தை தானே மகனாகப் பிறக்கிறான்' என்பது ஆன்றோர் கருத்து.

वन्दी - பலத்தினால் கவரப்பட்ட பிறர் மனைவி.

वेणीः मोक्ष्यते - ஸ்த்ரீகள் கணவனைப் பிரிந்த காலத்தில் தங்கள் கூந்தல்களை அலங்காரம் செய்து கொள்ளார். கூந்தல் முழுவதையும் ஒரேசடையாக அல்லது பின்னலாகச் செய்து முடிந்து கொள்வர். மனைவியுடன் கூடிய கணவன், தன் பிரிவுகாரணமாக இடப்பட்ட சடையை அவிழ்த்து ஆற்றி முன்பு இருந்த அழகினைப் பெறச் செய்வான் எனக் கவிகள் கூறுவர்.

சிறையிலுள்ள தேவஸ்த்ரீகள் கணவரை விட்டுப் பிரிந்ததால் சடையிட்டு முடிந்து கொண்டிருந்தனர். சிவ பிரானது குமாரன் தேவஸ்த்ரீகளை சிறையினின்றும் விடுவிப் பின், அவர்களது கணவர்கள் சடையை விடுவிப்பர். கண வர்கள் அவ்வாறு சடைகளை விடுவிப்பது சிவகுமாரனது உதவியினாலாதலால், ''சடைகளைச் சிவகுமாரனே விடுவிப் பான்'' எனக்கூறினார்.

शिति-कण्ठः - கறுத்த கழுத்துடையவர் - சிவபிரான்.

பாற்கடலைக் கடைந்த பொழுது தோன்றிய காலகூட விஷத்தை உலகின் நன்மையைக்கருதி பார்வதியின் அனு மதி பெற்று சிவபிரான் பருகினார். அவ்விஷம் அவரைக் கொல்லும் திறனற்றதாயினும் கழுத்திலே கறையை உண் டாக்கியது. அது அவருக்கு அணியாக அமைந்தது.

एवमामन्त्र्य भगवान् भवानीं विश्वभावनः।
तद्विषं जग्धुमारेभे प्रभावज्ञान्वमोदत ॥
ततः करतलीकृत्य व्यापि हालाहलं विषम्।
अभक्षयन्महादेवः कृपया भूतभावनः ॥
तस्यापि दर्शयामास स्ववीर्यं जलकल्मषः।
यच्चकार गले नीलं तच्च साधोर्विभूषणम् ॥

ஸ்ரீபாகவதம் 8.7.41-3

இச்சுலோகத்துடன் பிரம்மதேவரது பேச்சு முடிவுறு கின்றது.

**इति व्याहृत्य विबुधान् विश्वयोनिस्तिरोदधे ।**
**मनस्याहितकर्तव्यास्तेऽपि देवा दिवं ययुः ॥ ६२ ॥**

विश्वयोनिः - உலகத்திற்குக் காரணமான பிரம்மதேவர், विबुधान् - தேவர்களிடம், इति - இவ்வாறு, व्याहृत्य - கூறிய பின், तिरोदधे - மறைந்தார்; ते देवाः अपि - அத்தேவர்களும், मनसि - மனத்துள், आहित-कर्तव्याः - செய்யவேண்டியதை நன்கு

கொண்டவர்களாக, दिवं - ஸ்வர்க்கத்திற்கு, ययुः - சென் றனர்.

(க-து) உலகக் கர்த்தாவான பிரம்ம தேவர் தேவர்களுக்கு இவ்வுபாயத்தைக் கூறியபின் மறைந்தார். தேவர்களும் தாங்கள் இனிச் செய்ய வேண்டியதை மனத்துள் உறுதிப்படுத்திக் கொண்டு ஸ்வர்க்கம் சென்றனர்.

तत्र निश्चित्य कन्दर्पमगमत् पाकशासनः ।
मनसा कार्यसंसिद्धौ त्वराद्विगुणरंहसा ॥ ६३ ॥

पाकशासनः - இந்திரன், तत्र - அவ்விஷயத்தில், कन्दर्पं - மன் மதனை, निश्चित्य - (தகுந்த உதவியாக), எண்ணி, कार्य-संसिद्धौ - காரியத்தை முடிப்பதில், त्वरा-द्विगुण-रंहसा - ஆவலினல் இரு மடங்கு வேகமுடைய, मनसा - மனத்தினல், अगमत् - (அவனை) நினைத்தான்.

(க-து) சிவபிரானை வசீகரிக்கும் விஷயத்தில் மன்மதனே தகுந்த துணையாவான் என நினைத்து இந்திரன், காரியத்தைச் சாதிப்பதில் உள்ள ஆவலினல் இருமடங்கு வேகமுள்ள மனத்தினல் மன்மதனை நினைத்தான்.

पाक-शासनः - பாகன் என்ற அஸுரனைக் கொன்றதால் இந்திரன் இப்பெயர் பெற்ருன். शासनः - தண்டிப்பவன்' அழிப்பவன். त्वराद्विगुण - रंहसा - வேகத்தில் சிறந்தது மனம்; மனோவேகம் என்பது எடுத்துக்காட்டாக இருப்பது. இந்திரன் மனம் முன்பே வேகமுடையது. அதனுடைய வேகம், காரியத்தை ஸாதிக்கும் விருப்பத்தினல் இருமடங் காயிற்று.

'तत्र' - தேவருலகில் என்று பொருள் கூறுவர் நாரா யணர்.

मनसा अगमत् - "மனத்தால் சென்ருன்" - நினைத்தான் என்பது கருத்து.

अथ स ललितयोषिद्भ्रूलताचारुशृङ्गम्
रतिवलयपदाङ्के चापमासज्य कण्ठे ।
सहचरमधु-हस्तन्यस्त-चूताङ्कुरास्त्रः
शतमखमुपतस्थे प्राञ्जलिः पुष्पधन्वा ॥ ६४ ॥

अथ - பிறகு, सः - அந்த पुष्प-धन्वा - மன்மதன், ललित-योषित्-भ्रूलता - चारु - शृङ्गं - அழகான - ஸ்த்ரீகளின் - புருவக்கொடி-போல் அழகிய முனைகளையுடைய, चापं - வில்லை, रति-वलय-पद-अङ्कं- ரதியின் கைவளையல் பதிந்த இடங்களை அடையாள மாகவுடைய, कण्ठे - (தனது) கழுத்தில் - (தோளில்), आसज्य - வைத்துக் கொண்டு, सहचर-मधु-हस्त-न्यस्त-चूत-अङ्कुर-अस्त्रः - நண்பன் வஸந்தனது கையில் வைத்த மாந்தளிராகிய அஸ்த்ரமுடைய வனுகவும், प्राञ्जलिः - கை கூப்பியவனுகவும், शत-मखं-இந்திரனை, उपतस्थे - அணுகினுன்.

(க-து) நினைக்கப்பட்டவுடனேயே, மன்மதன், அழகிய பெண்களின் புருவம் போல் வளைந்த முனைகளையுடைய தனது மலர் வில்லைத்தோளிலே மாட்டிக்கொண்டு, அவனது துணைவனுகிய வஸந்தன் தன்கையில் மாந்தளிராகிய அஸ்திரத்தை எடுத்துவர, கைகூப்பியவனுக இந்திரன் முன்வந்து நின்ருன். இந்திரனைக் காணச் செல்லும் தன்கணவனுக்கு விடை கொடுத்தனுப்பும் பொழுது ரதி செய்த ஆலிங்கனத்தினுல், அவளது கைவளைகள் மன் மதன் கழுத்தில் பதிந்து உண்டாக்கிய ஆழ்ந்த சுவடுகள் பார்ப் போர் கண்களுக்கு அப்பொழுதும் புலனுயின.

पुष्पधन्वा - புஷ்பங்களாலான வில்லையுடையவன் - மன் மதன். மன்மதனுக்குக் கரும்பையும் வில்லாகக் கூறுவர்.

कण्ठे चापं आसज्य - இங்கு कण्ठे என்பது தோளை. தோளிலே வில்லை மாட்டிக்கொண்டு செல்வது வில்லாளிகளுக்கு ஸ்வ பாவம். தோள் அல்லது கழுத்தின் புறத்தில் ஆலிங்கனம் செய்துகொண்ட ரதியின் வளைகள் பதிந்து சுவடுகளை

உண்டாக்கியிருந்தன. அவைகளை மறைப்பதற்காகவும் வில்லை தோளிலே வைத்திருக்கலாம் என்பர் ஒரு உரைகாரர். 'चापेन तदङ्कगोपनं वा'। रत्या: कण्ठाश्लेषावसरे स्मृत: स्वामिना, तद्वलयपदाङ्कं कण्ठावसक्तमनवमृज्य तत्क्षणमेवागच्छत्'।

मधुः - வஸந்தன், வஸந்தருதுவின் தலைவனாகிய தேவன். இவன் மன்மதனுக்கு எப்பொழுதும் உடனிருக்கும் துணைவன். चूताङ्कुरः-மாந்துளிர். புஷ்பம் போல் துளிரும் மன்மதனுக்கு ஆயுதமாகின்றது. अङ्कुरः - அரும்பு என்றும் கொள்ளலாம். अङ्कुरोऽभिनवोद्गमे என்பது நிகண்டு. கொடி, செடி மரங்களில் புதிதாக தோன்றிய எதனையும் இச்சொல் குறிக்கும்.

रतिवलयपदाङ्के - 'ரதியின் வளைச்சுவடு பதிந்த' என்ற இக்கருத்தை ரஸித்த ஸ்ரீவேதாந்த தேசிகன் தமது இரண்டு நூல்களில் இதனைக் குறிப்பிடுவது ரஸிகர்களுக்கு உவகை தரும்.

इन्दिरायाः कनकवलयमुद्रां कण्ठदेशे दधानः - 'மஹாலக்ஷ்மியின் தங்கவளையல் தழும்பைக் கழுத்திலே தாங்கிய வரதராஜப் பெருமான்,' வரதராஜஸ்தவம், சுலோகம் 47.

"நாச்சிமாருடைய வளைத்தழும்போடு வாசியில்லாத रेखात्रयத்தை உடைத்தாய் . . . . . திருக்கழுத்தைப்பார்த்து" பரமபதஸோபானம் - ஒன்பதாம் பர்வ.

शतमखः - நூறு அசுவமேதங்கள் செய்தவன் என்பது பதப்பொருள் - இந்திரன். मखः; யாகம்; उपतस्थे - சேர்ந்தான்.

॥ इति महाकविश्रीकालिदासकृतौ महाकाव्ये कुमारसम्भवे

द्वितीयः सर्गः ॥

# तृतीयः सर्गः

**तस्मिन्मघोनस्त्रिदशान् विहाय सहस्रमक्ष्णां युगपत्पपात ।**
**प्रयोजनापेक्षितया प्रभूणाम् प्रायश्चलं गौरवमाश्रितेषु ॥ १ ॥**

मघोनः - இந்திரனுடைய, अक्ष्णां - கண்களின், सहस्रं-ஆயிரம், त्रि - दशान् - தேவர்களை, विहाय - விட்டு, तस्मिन् - அம்மன்மதனிடத்தில், युगपत् - ஒரேசமயத்தில், पपात-பதிந்தது; आश्रितेषु-தன்னை அண்டியவர்களிடத்தில், प्रभूणाम् - எஜமானர்களுடைய, गौरवं - ஆதரவு, प्रयोजन - अपेक्षितया - பலனை எதிர்பார்க்கும் தன்மையால், प्रायः - பெரும் பாலும், चलम् - நிலையானதன்று.

(க-து) மந்திராலோசனை சபையில் பல தேவர்களுடன் அமர்ந்திருந்த இந்திரனது ஆயிரம் கண்களும் தேவர்களைவிட்டு உடனே மன்மதனிடம் சென்றன. இந்திரன் தன்னலம் கருதுபவன். பிரபுக்களின் அன்பு ஒருவரிடத்தில் நிலையாக இருப்பதன்று. யாரால் ஒரு பயன் நிகழ வேண்டுமோ அவர்களிடம் தம் கௌரவத்தையும் விட்டு மரியாதை செய்வர். பயன் முடிந்தவுடன் மரியாதையும் நின்றுவிடும். இப்பொழுது மன்மதனின் உதவி வேண்டியிருப்பதால் இதுவரையில் அண்மையிலிருந்த தேவர்களையும் புறக்கணித்து, மன்மதனை நோக்கினான் இந்திரன்.

त्रिदशाः - பால்யம், கௌமாரம், யௌவனம், கிழத்தனம் என்ற நான்கு பருவங்களில் மூன்றாவது பருவமான யௌவனத்தையே எப்பொழுதும் உடையவர்கள் தேவர்கள். அதனால், त्रिदशाः - என்று அழைக்கப்படுவர். त्रि - மூன்றாவது, दशा - நிலை-அதனையுடையவர்.

**स वासवेनासनसन्निकृष्टमितो निषीदेति विसृष्टभूमिः ।**
**भर्तुः प्रसादं प्रतिनन्द्य मूर्ध्ना वक्तुं मिथः प्राक्रमतैवमेनम् ॥ २ ॥**

सः-மன்மதன், वासवेन - இந்திரனாலே, आसन-संनिकृष्टं - (தனது) ஆஸனத்திற்கு அருகிலிருக்கும்படி, “ इतः - இங்கே, निषीद -

உட்கார்.'' इति - என்று கூறி, विसृष्ट-भूमिः - இடம் தரப்பட்டவனாக, भर्तुः - (தன்) எஜமானனுடைய, प्रसादं - அருளை, मूर्ध्ना - சிரத்தினால், प्रतिनन्द्य - கொண்டாடி, मिथः - தனிமையில், एनं - இந்திரனிடம், एवं - இவ்வாறு, वक्तुं - பேச, प्राक्रमत - தொடங்கினான்.

(க-து) இந்திரன், 'இங்கே உட்கார்' என்று கூறி மன்மதனுக்குத் தன் ஆஸனத்திற்கு அருகிலே இடம் தர, இத்தகைய பேரருளை மன்மதன் வணங்கிய தலையினால் போற்றி அருகில் உட்கார்ந்து, பிறர் காதில் விழாதபடி இந்திரனிடம் பேசலுற்றான்.

भर्तुः प्रसादं प्रतिनन्द्य - டலரையும் அனுதரித்துத் தனக்கு ஆஸனத்தருகில் அமரும்படி இடம் தந்ததைப் பெரிய மரியாதையாகக் கருதினான். அதை வணங்கிய தலையினால் போற்றினான். மிக அருகில் உட்காரச் சொன்னதனின்றும் இங்கிதமறிந்த மன்மதன் பேசலுற்றான். मिथः - இருவர் தனித்துப் பேசுவதைக் குறிக்கும். मिथोऽन्योन्यरहस्ययोः - என்பது வைஜயந்தீ. அடுத்து வரும் எட்டு சுலோகங்கள் மன்மதனுடைய பேச்சாக அமைந்தன.

आज्ञापय ज्ञातविशेष पुंसाम् लोकेषु यत्ते करणीयमस्ति ।
अनुग्रहं संस्मरणप्रवृत्तमिच्छामि संवर्धितमाज्ञया ते ॥ ३ ॥

पुंसां - மனிதர்களின், ज्ञात - विशेष - தனிச்சிறப்பை அறிந்த தேவரே, लोकेषु - மூவுலகங்களிலும், ते - உமக்கு, यत् - எது, करणीयं - செய்யப்படவேண்டியதாக, अस्ति - உள்ளதோ, (तत्) - आज्ञापय - (அதனை) ஆணையிடுவீராக. संस्मरण - प्रवृत्तं - என்னைப் பற்றி நினைத்தலினால் தோன்றிய, ते - உமது, अनुग्रहं - அருளை, आज्ञया - ஆணையால் (எனக்கு ஆணை தருவதன் மூலம்), संवर्धितं - (மேலும்) வளர்ந்ததாக (செய்ய), इच्छामि - விரும்புகிறேன்.

(க-து) அரசே, அந்தந்த மனிதனின் தனிச்சிறப்பைத் தாங்கள் அறிந்தவர்கள். ஆகவே இம் மூவுலகிலும் நான் செய்யவேண்டிய தங்களுடைய கார்யம் எது இருப்பினும் கூறுக. என்னை நினைத்ததே தாங்கள் எனக்குச்செய்த பெரிய அருளாகும். அத்தகைய அருள், ஏதாவதொன்றைச் செய்யும்படி உத்தரவிடுதலின் மூலம் விருத்தியடைய வேண்டும் என ஆசைப்படுகிறேன்.

पुंसां - ज्ञातविशेष - विशेषः - அந்தந்த மனிதனுக்குள்ள தனித்திறமை. இந்திரன் தன் பணியாளர்களின் தராதரத்தைக் கண்டு அறிந்தவன்.

'संस्मरणप्रवृत्तं अनुग्रहम्' இந்திரன் தன்னை நினைத்ததை ஒரு அருளாக நினைக்கின்றான் மன்மதன். அவ்வருள் இப்போது தான் முளைவிட்டிருக்கிறது. அது இந்திரனது ஆணை என்ற தண்ணீரால் மேலும் வளரவேண்டும். இந்திரன் ஏதேனும் ஒன்றைச் செய்ய உத்தரவிடுவானாயின் மன்மதன் அதனை பேரருளாகக் கருதுவான்; அருளை வளர்ந்ததாக நினைப்பான்.

केनाभ्यसूया पदकाङ्क्षिणा ते नितान्तदीर्घैर्जनिता तपोभिः ।
यावद्भवत्याहितसायकस्य मत्कार्मुकस्यास्य निदेशवर्ती ॥ ४ ॥

पद - काङ्क्षिणा- (உமது) இடத்தை விரும்புகின்ற, केन - எவனால், नितान्त-दीर्घैः - மிகவும் நீண்ட, तपोभिः - தவங்களால், ते- உமக்கு, अभ्यसूया - பொறாமை, जनिता - உண்டாக்கப்பட்டது? आहित - सायकस्य - பாணம் தொடுக்கப்பட்ட, अस्य - मत्कार्मुकस्य - இந்த எனது வில்லின், निदेश - वर्ती - ஆணையில் இருப்பவனாக, यावत् भवति - அவன் (சீக்ரமே) ஆவான்.

(க-து) உமது பதவியை விரும்பி நெடும் தவம் செய்து எவன் உமக்கு மனத்தில் கவலையை உண்டாக்குகின்றான்? கூறுவீராக. சீக்கிரமே அவன் என் வில்லிற்கு அடிமையாக ஆவான்; காமத்திற்கு வசப்பட்டுத் தவம் செய்வதை விட்டு இன்பம் அனுபவிப்பதில் உழலும்படி அவனைக் கணத்தில் செய்கிறேன்.

**पदकांक्षिणा** - மூவுலகிலும் எந்த மனிதன் வெகுகாலம் செய்த தன் தவத்தின் மூலம் உம்மைத் தள்ளிவிட்டு ஸ்வர்க் கத்திற்கு அரசனுக விரும்புகின்முன்? அவனது பெயரைக் கூறும்.

**असूया** - குணத்தையும் குற்றமாகக் கருதும் தன்மையை அஸூயை என்பர். இந்திரன், பிறர் தவம் செய்வதைக் குற்றமாகக் கருதுவதைக் குறிக்கலாம் - அஸூயைக்கு உடன் பிறந்தது போன்ற மற்ருெரு துர்க்குணம் ஈர்ஷ்யை - அதாவது பொருமை? பிறர் உயர்வதைப் பொறுத்துக் கொள்ளாமை. இச்சொல் அத்தகைய பொறுக் காத தன்மையைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். அஸூயை காரணமாக வரும் கவலே, கோபம் இவற்றையும் குறிப்ப தாகக் கொள்வதிலும் பிழை இல்லே.

**आहितसायकस्य मत्कार्मुकस्य** ''வில்லெடுக்கும் நேரமும் வீண் காது. இப்பொழுதே அவனே என் வில்லிற்கு அடிமையாகச் செய்கிறேன்.'' வில்லிற்கு அடிமை எனின் காமத்திற்கு அடிமை என்பது பொருள். காமத்திற்குத் தாஸனுக ஆவானுயின் தவம் அழிந்ததே ஆகும்.

இந்திரனது ஸ்வபாவம் தெரிந்தவனுதலால் மன்மதன் முதலில் இந்திர பதவிக்கு ஏதேனும் ஆபத்து வந்துற்றதோ என வினவுகின்முன். அடுத்த சுலோகத்தில் மோக்ஷம் விரும்புவனேப்பற்றிக் கூறுகின்முன் மன்மதன்.

**असंमतः कस्तव मुक्तिमार्गं पुनर्भवक्लेशभयात्प्रपन्नः ।**
**बद्धश्चिरं तिष्ठतु सुन्दरीणामारेचितभ्रूचतुरैः कटाक्षैः ॥ ५ ॥**

**तव** - உமக்கு, **असंमतः** - விருப்பமற்ற, **कः** - எவன், **पुनः-भव-क्लेश-भयात्** - மறு முறையும் பிறவித்துன்பத்தில் அச்சமுற்று, **मुक्ति-मार्गं** - மோக்ஷ மார்க்கத்தை, **प्रपन्नः** - அடைந்துள்ளான்? **सः** -

அவன், सुन्दरीणां - அழகிகளின், आरेचित-भ्रू-चतुरैः-நெறிக்கப்பட்ட புருவங்களினுல் திறமை வாய்ந்த, कटाक्षैः-கடைக்கண் நோக்கு களால், बद्धः - கட்டப்பட்டவனுக, चिरम् - வெகுகாலம், तिष्ठतु - இருப்பான்.

(க-து) உமது விருப்பமின்றி, எந்த மனிதன், மறுபிறப்பாகிய துன்பத்தைக் கண்டு அஞ்சி அதனின்றும் விடுதலை பெற மோக்ஷ மார்க்கத்தை அடைந்துள்ளான்? கூறுவீராக. புருவத்தை அழகாக நெறிக்கின்ற ஸுந்தரிகளின் கடைக்கண் நோக்கிற்கு வசப்பட்டு வெகு நாள் தன்வசமிழந்து நிற்பான் அவன்.

असंमतः-இச்சுலோகத்தில் கூறப்படுவன் இந்திரபதவியை விரும்பாதவன்; மோக்ஷத்தை விரும்புகின்றவன். ஆயினும் அவ்வாறு மோக்ஷம் விரும்புவதைக் கூட ஏதாவது காரணத்திஞல் இந்திரன் விரும்பாது இருக்கலாம். பொதுவாக மோக்ஷம் விரும்புபவர்களையும் இந்திரன் வெறுப்பதாகக் கூறுவர்.

आरेचितभ्रूचतुरैः - आरेचितम् - ஒரு புருவத்தை அழகாக உயர்த்துதல்; நெறித்தல். "रेचितं पुनरेकस्या ललितोत्क्षेपणं भ्रुवः"; அல்லது புருவங்களிலே பொதுவாக வரும் சலனங்கள் என்றும் கூறலாம். आरेचितं नर्तितं स्यात् - என்பர் போஜர். चतुरैः - 'திறமை வாய்ந்த' -கடைக்கண் நோக்குகளுக்குத் திறமை நெறித்த புருவங்களால் உண்டாவது. சாதாரண கடைக்கண் நோக்கினும் நெறித்த புருவத்துடன் இருக்கும் நோக்கிற்கு அழகு அதிகம்; திறமையும் அதிகம் என்பது மன்மதன் கருத்து.

कटाक्षैः बद्धः - கடைக்கண் நோக்குகளால் கட்டப்படுதலாவது. அவற்றிற்கு, அவ்வாறு நோக்குபவர்களுக்கு வசப்பட்டு இருத்தல்.

चिरं तिष्ठतु - "வெகுநாள் இருப்பான்"; "ஒரு காலத்தில் மோக்ஷத்திற்காக முயன்றேன்" என்ற நினைவு கூட இல்லாமல் அதை மறக்கும் வகையில் அவனைக் கண்களுக்கு அடிமையாக்குவேன்."

अध्यापितस्योशनसापि नीतिम् प्रयुक्तरागप्रणिधिर्द्विषस्ते ।
कस्यार्थधर्मौ वद पीडयामि सिन्धोस्तटावोघ इव प्रवृद्धः ॥ ६ ॥

उशनसा - சுக்ராசார்யரால், नीतं - நீதிநூல், अध्यापितस्य-अपि - படிப்பிக்கப்பட்டவனுயினும், ते कस्य द्विषः - உமது எந்த சத்ருவினுடைய, अर्थ - धर्मौ - அர்த்த தர்மங்களை, प्रयुक्तराग - प्रणिधिः - (சிற்றின்ப) - ஆசை என்ற வேவுகாரனை அனுப்பி, प्रवृद्धः - அதிகமாகவுள்ள, ओघः - ஜலப் பிரவாஹம் - सिन्धोः - நதியின் तटौ - इव - இருகரைகளையும் (உடைப்பது) போல, पीडयामि - அழிப்பேன்? वद - சொல்வீராக.

(க-து) உமது எதிரிகளில் எவன் பொருளையும் தர்மத்தையும் சேமித்து வைத்துள்ளான்? சுக்ராச்சாரியாரிடம் நீதிநூல் பயின்ற அறிவாளியாயினும், அவனுடைய மனத்தில் இன்பம் துய்ப்பதில் ஆசைகளைக்கிளப்பி, அவனது அர்த்தம் (பொருள்) தர்மம் இரண்டினையும் அழிப்பேன். நதியின் இரு கரைகளைப் பிரவாஹம் ஒன்றே தகர்க்கின்றது. அதுபோல் நான் அவன் மனத்தில் தோற்றுவிக்கும் இன்ப ஆசை ஒன்றே அவன் சேமித்த பொருளையும் அழிக்கும். தர்மத்தையும் அழிக்கும்.

இச்சுலோகத்தில் மன்மதன், பொருள் தர்மம் இவைகளை அழிப்பதாகக்கூறி அடுத்துவரும் சுலோகங்களில் காமத்தைப் பற்றிக் கூறுகின்ருன்.

उशनसा - பொருளை ஈட்டும் வகையைக் கூறும் சாஸ்திரத்தில் வல்லவர் சுக்ரர். சுக்ராச்சாரியார் ஒருவரைத் தவிர்த்து உலகில் எம் மனிதனும் பிழை செய்பவனே என்பது பழமொழி.

न कश्चिन्नापनयते पुमानन्यत्र भार्गवात् என்பது ஆன்ருேர் வாக்கு.

अध्यापितस्य अपि-அவரிடம் நீதி நூல் படித்தவன் பொருளை ஈட்டுவதிலும் பாதுகாப்பதிலும் திறமையுள்ளவனுக இருக்க வேண்டும். அவனை இன்ப ஆசையால் விழச்செய்தல் எளிதல்ல. அத்தகையோனையும் விழச் செய்வேன் என்பது மன்மதனது தற்புகழ்ச்சி. நீதி நூல்கள் பொருளீட்டுவதை மாத்திரமன்றி ஈட்டிய பொருளை நல்வழியில் செலவு செய்யும் வகையையும் கூறுவதால் மன்மதன், சுக்ராச்சாரியரின் சிஷ்யன் தர்மமும் சேமித்திருப்பதாகக் கருதினுன்.

பிரஹஸ்பதியின் பாதுகாப்பிலுள்ள இந்திரனிடம் சுக்ர சிஷ்யனது அறிவைப் புகழ்ந்து மன்மதன் கூறுவதன் நோக்கம் யாதெனின் பிறர் கருத்தைத் தழுவிச் சிலர் சுக்ர சிஷ்யர்கள் புத்திமான்கள் எனக் கருதுகின்றார்களே அவர் களுக்கும் கெடுதி செய்யும் ஆற்றல் தனக்குண்டு என்பதைத் தெரிவிப்பதே மன்மதன் கருத்து ஆகும்.

प्रयुक्त - राजप्रणिधिः - அரசர்கள் பகைவர்களைக் கெடுக்க அனுப்புவது வேவுகாரர்களை. மன்மதனது ஒற்றர்கள் ஆசைகள்தாம். மன்மதன், பணமுள்ளவர்கள் மனத்தில் இன்பத்தைப்பற்றிய ஆசையைக் கிளப்புவானாயின் நொடி யில் பணம் அழிந்துவிடும்.

सिन्धोः - நதிக்குப் பொதுப் பெயர். ஸிந்து நதி என்று பொருள் அல்ல.

प्रवृद्धः ओघः - ஆசை ஒன்றினைக்கொண்டு தர்மம் அர்த் தம் இரண்டினை அழிக்கமுடியுமா எனின், மன்மதன் உதா ரணம் கூறி அதனை நிரூபிக்கின்றான். வெள்ளம் ஒன்றே இரு கரைகளை உடைப்பதுபோல் ஆசை ஒன்றே இரண்டினையும் அழிக்கும்.

**कामेकपत्नीव्रतदुःखशीलां लोलं मनश्चारुतया प्रविष्टाम् ।**

**नितम्बिनीमिच्छसि मुक्तलज्जां कण्ठे स्वयंग्राहनिषक्तबाहुम् ॥७॥**

एक पत्नी व्रत दुःख शीलाम् - கற்பெனும் கஷ்டந்தரும் ஸ்வபா வமுடையவளும், चारुतया - அழகு காரணத்தினால், लोलम् - சபலமுடைய, मनः - (உமது) மனத்துள், प्रविष्टाम् - புகுந்த வளுமான, काम् - எந்த, नितम्बिनीम् - ஸ்த்ரியை, मुक्त - लज्जाम् - வெட்கம்விட்டு, कण्ठे - (உமது) கழுத்தில், स्वयं - ग्राह - निषक्त - बाहुं - தானே ஆலிங்கனம் செய்வதால் பதிந்த கைகளையு டையவளாக, इच्छसि - (செய்ய) விரும்புகின்றீர் ?

(க-து) பதிவிரதையான எந்த அழகி உமது சபலமனத்துள் புகுந்து இருக்கின்றாள்? சொல்வீராக அவளை, தானே வந்து உம்மை

ஆலிங்கனம் செய்யும்படியும் உமது தோள்களிலே கைகளை வைத்து மகிழ்விக்கும் படியும் (அவளைச்) செய்வேன்.

एकपत्नी - பதிவ்ரதை; व्रत - பதிவ்ரதையாக இருத்தல்; பாதிவ்ரத்யம் என்ற குணம், பரபுருஷர்களுக்குக் கஷ்டம் அளிப்பது. எனவே அதனை மன்மதன் - दुःखशीलां கஷ்டமளிக்கும் ஸ்வபாவமுடையவள் என்று கூறுகிறான்.

चारुतया - இந்திரன் மனத்தில் அவள் புகுந்ததற்குக் காரணம் அவளது அழகு. மற்றொன்று அவனது மனம் உறுதியற்றது. எளிதிலே இடம் விட்டுத் தாவுவது.

चारुतया प्रविष्टाम् - प्रवेशिताम् - பதிவ்ரதை தானே பிறர் மனத்தில் புகாள். அவளது அழகினால் அவள் பிறர் மனத்துள் புகும்படி செய்யப்பட்டாள் என்பர் ஒரு உரைகாரர்.

स्वयं ग्राह निषक्त बाहुम् - தானே ஆலிங்கனம் செய்பவளாகவும், (தோளிலே) பதிந்த கைகளையுடையவளாகவும் என உரைப்பர் மல்லிநாதர்.

कयासि कामिन् सुरतापराधात् पादानतः कोपनयावधूतः ।
तस्याः करिष्यामि दृढानुतापं प्रवालशय्याशरणं शरीरम् ॥ ८ ॥

कामिन्-இன்பத்தில் மிகுந்த பற்றுடைய அரசே, अपराधात् - (நீர் செய்த) குற்றம் காரணமாக, पाद - आनतः - கால்களிலே (விழுந்து) வணங்கியவராயினும், त्वं - நீர். कोपनया - கோபம் மிகுந்த, कया - எந்த ஸ்த்ரீயினால், सहसा - யோசனையின்றி, अवधूतः असि - அவமதிக்கப்பட்டிருக்கிறீர்? (கூறுவீராக); तस्याः- அவளுடைய शरीरं - சரீரத்தை, दृढ अनुतापं - உறுதியான - மன வருத்தமுடையதாகவும், प्रवाल - शय्या - शरणं - துளிர்ப் படுக்கையையே தஞ்சமாகக் கொள்ளும்படியும், करिष्यामि - செய்வேன்.

(க-து) காமுகரே, கலவியில் நீர் தவறு இழைத்துப்பின் பாதத்தில் வீழ்ந்து வணங்கிய பிறகும் கோபம் தணியாமல் யோசனையின்றி எந்த ஸ்த்ரீ உம்மை உதறித்தள்ளி அவமதித்திருக்கிறாள்? அவளது பெயரைக் கூறும்; அவள் மனத்துள் உம்மைப் பற்றி அடங்காக் காதலை உண்டாக்கித் தான் செய்த பிழை கருதி மனம் வெதும்பும் படியும், காதல் நோயால் பீடிக்கப்பட்டு அதைத் தணித்துக்

கொள்ள எப்பொழுதும் தளிர்ப் படுக்கையையே தஞ்சமாக அடையும்படியும் அவனைச் செய்கிறேன்.

कामिन् - காமம் மிகுந்தவன்; காமுகன்; மன்மதன் காதல் விஷயத்தில் துணை செய்பவனுதலால் தன் செயலுக்குத்தக்க படி இந்திரன் மனம் மகிழும் வகையில் कामिन् என்று அழைத்தான். अपराध: - குற்றம்: பல மனைவிகளையுடையவர் தமது ஒரு மனைவியை மற்றவள் பெயர் சொல்லியழைத்தல் முதலியன குற்றமாகக் கருதப்படும். पादानत: - இந்திரன் தன் பிழை உணர்ந்து மன்னிப்புக்கோரி அவளது பாதத்தில் வீழ்ந்து வணங்கி இருக்கிருன். कोपना - இங்கு கூறப்பட்டுள்ளவள் இந்திரன் மனைவியரில் ஒருத்தி. सहसा - தான் செய்கின்ற காரியத்தின் பயன் என்ன வென்பதை யோசியாமல் அவள் இந்திரனைத் திரஸ்கரித்து இருக்கிருள். अवधूत: - உதறித் தள்ளப்பட்டவன், அவமதிக்கப்பட்டவன்.

दृढ अनुतापम् - अनुताप: - தவறு இழைத்தபின் உண்டாகும் மன வருத்தம்.

प्रवाल - शय्या - காதல் நோய் தணிவதற்கு, தளிர் மலர் இவைகளாலான படுக்கையில் இருப்பதாகக் கூறுவர் கவிகள்.

प्रसीद विश्राम्यतु वीर वज्रं शरैर्मदीयैः कतमः सुरारिः ।
बिभेतु मोघीकृतबाहुवीर्यः स्त्रीभ्योऽपि कोपस्फुरिताधराभ्यः ॥९॥

वीर - வீரரே, प्रसीद - அருள் புரிவீராக; वज्रं - வஜ்ராயுதம், विश्राम्यतु - களைப்பாறட்டும்! मदीयै: என்னுடைய, शरै: - பாணங்களால், मोघी-कृत-बाहु-वीर्य: - பயனற்றதாகச் செய்யப்பட்ட தோள் பலமுடைய, कतम: - எந்த, सुरारि: - தேவர் பகைவன், कोप-स्फुरित-अधराभ्य: - கோபத்திஞல் துடிக்கும் உதடுகளையுடைய, स्त्रीभ्यो-अपि ஸ்த்ரீகளிடமிருந்தும், बिभेतु - பயப்படவேண்டும்?

(க-து) வீரரே, உலகைக் காக்க இதுவரை முயன்று வந்த வஜ்ரா யுதம் சிறிது காலம் ஓய்வு பெறுவதாக. என் பாணங்கள் உமது பகைவனின் பாஹு பலத்தைப் பலனற்றதாகச் செய்யும். கோபத்தினால் துடிக்கும் உதட்டையுடைய ஸ்த்ரீகளைக் கண்டும் அஞ்சும்படிச் செய்வேன் அவனை. எனக்கு உத்தரவு கொடுங்கள்.

वीर - "பணியாளனாகிய நான் வென்றாலும், வெற்றி உமதேயாகையால் உமது வீர்யத்திற்குத் தாழ்வில்லை"

वज्रं - கடுமையான பொருளுக்கு உவமையான வஜ்ரா யுதம் களைத்திருக்கிறது. அது இளைப்பாறட்டும். மிக மிருதுவான புஷ்ப பாணங்கள் இனி முயலும்.

मोघीकृत - बाहुवीर्यः - பொருள்களில் உள்ள இன்பத்தால் மனம் கவரப்படுமாயின், பாஹுபலம் பயனற்றதே.

कोपस्फुरित - अधराभ्यः - ஸ்த்ரீகள் கூறுவதைக் கேட்காத பொழுது அவர்களுக்குக் கோபம் வரும். கோபம் வரின் உதடு துடிக்கும். உதடு நடுங்கினால் உன் பகைவன் உடலும் பயத்தால் நடுங்கும்.

**तव प्रसादात्कुसुमायुधोऽपि सहायमेकं मधुमेव लब्ध्वा ।**
**कुर्यां हरस्यापि पिनाकपाणेर्धैर्यच्युतिं के मम धन्विनोऽन्ये ॥१०॥**

कुसुमायुधः-अपि - புஷ்பபாணமுடையவனாயினும், मधुं एकं-एव- வஸந்தன் ஒருவனையே, सहायं - துணைவனாக, लब्ध्वा - பெற்று, तव-உமது, प्रसादात्-அருளால், (अहम्)-நான், पिनाक-पाणेः-பினாகம் என்ற வில்லைக்கையில் ஏந்திய, हरस्य-अपि - சிவபிரானுக்கும், धैर्य-च्युतिं - மன உறுதியின் நழுவுதலை, कुर्याम् - செய்வேன். अन्ये - பிற, धन्विनः - வில்லாளிகள், मम - எனக்கு, के - யார்?

(க-து) அரசே, நான் மிருதுவான புஷ்பங்களை ஆயுதமாக உடையவனே. ஆயினும் உமது அருளால், வஸந்தன் ஒருவனையே துணை

யாகக் கொண்டு பயங்கரமான பிநாகம் என்ற வில்லைக் கையிலேந்திய சிவபிரானையும், மன உறுதி இழக்கச் செய்வேன். எனின் மற்றவர்களைப்பற்றி நான் கூறத் தேவையில்லை. அவர்கள் என் முன் பதர் போலாவர்.

कुसुमायुध:-पिनाकपाणेः - இவற்றால் முறையே மன்மதனுடைய ஆயுதத்தின் மென்மையும் சிவபிரானது வில்லின் பலமும் காட்டப்படுகின்றன.

हरः - எல்லாவற்றையும் பிரளய காலத்தில் அழிப்பவர். அவருடைய தைர்யத்திற்குக் குறைவை, மன்மதன் தான் செய்யமுடியும் என்கிறான். இந்த சுலோகத்துடன் மன்மதன் பேச்சு முடிகின்றது.

अथोरुदेशादवतार्य पादमाक्रान्तिसम्भावितपादपीठः ।
सङ्कल्पितार्थे विवृतात्मशक्तिमाखण्डलः काममिदं बभाषे ॥ ११ ॥

अथ - பிறகு, आखण्डलः - இந்திரன், ऊरु-देशात् - தொடையினின்றும், पादम् - (தனது) பாதத்தை, अवतार्य - (கீழே) இறக்கி, आक्रान्ति - संभावित - पाद - पीठः - பாதத்தை வைப்பதினால் பாதபீடத்தை கௌரவித்தவனாக, संकल्पित - अर्थे - (தான்) விரும்பிய விஷயத்தில், विवृत - आत्म - शक्तिम् - தனது திறமையைக் கூறிய, कामम् - மன்மதனை நோக்கி, इदम् - இதை (இனி வருவதை) बभाषे - கூறினான்.

(க-து) மன்மதன் பேசுவதைச் செவி சாய்க்க விரும்பிய இந்திரன், அதற்கு வசதியாக இருக்கும்படி ஒரு பாதத்தை மறு தொடையின் மேல் வைத்துக்கொண்டு மன்மதன் பக்கம் திரும்பி இருந்தான். மன்மதன் பேச்சு முடிந்தவுடன் பாதத்தை தொடையினின்றும் இறக்கி அதற்கென அமைக்கப்பட்ட ஆஸனத்தில் வைத்தான். இந்திரன் விரும்பிய காரியம் சிவபிரானது மனத்தைக் கவர்வது. மன்மதனும் அதையே செய்வதாகக் கூறினான். எனவே, இந்திரன் மன்மதனிடம் தன் எண்ணத்தைக் கூறலுற்றான்.

आखण्डलः - அளவற்ற அறிவும் செல்வமும் உடையவன்: இந்திரன். आक्रान्ति - சில மனிதரின் ஸ்வபாவம் இவ்வாறு உளது. இனி வரும் பத்து சுலோகங்கள் இந்திரன் பேசுவதாக உள்ளன.

सर्वं सखे त्वय्युपपन्नमेतदुभे ममास्त्रे कुलिशं भवांश्च ।
वज्रं तपोवीर्यमहत्सु कुण्ठं त्वं सर्वतोगामि च साधकं च ॥ १२ ॥

सखे - நண்பனே, एतत् सर्वम् - (நீ கூறிய) இது எல்லாம், त्वयि - உன்னிடத்தில், उपपन्नम् - பொருந்தியுள்ளதே. कुलिशं - வஜ்ராயுதமும், भवान् च - நீயும், मम - எனக்கு, उभे - இரண்டு, अस्त्रे - ஆயுதங்கள்; वज्रम् - வஜ்ரம், तपो-वीर्य-महत्सु - தவவலிமையினால் பலவான்களான முனிவர்களிடத்தில், कुण्ठम् - தடையுற்றது (சக்தியற்றது); त्वम् - நீ (எனது மற்றொரு ஆயுதம்), सर्वतोगामि - च - எங்கும் (தடையின்றி) செல்பவன் (செல்வது); साधकम् - च - காரியத்தையும் சாதிப்பவன் (சாதிப்பது).

(க-து) நண்பனே, நீ உன்னைப்பற்றிக் கூறிய யாவும் உன்னிடம் உள்ளதே. வஜ்ராயுதத்தையும் உன்னையும் என்னுடைய இரண்டு ஆயுதங்களாகக் கருதுகின்றேன். வஜ்ராயுதத்தைவிட நீ உயர்ந்தவன். வஜ்ராயுதத்தைத் தபஸ்விகளிடம் உபயோகிக்க முடியாது. உன்னைத் தபஸ்விகளிடமும் உபயோகிக்கலாம். நீ எங்கு சென்றாலும் வெற்றியுடன் திரும்புபவன்.

अवैमि ते सारमतः खलु त्वां कार्ये गुरुण्यात्मसमं नियोक्ष्ये ।
व्यादिश्यते भूधरतामवेक्ष्य कृष्णेन देहोद्वहनाय शेषः ॥ १३ ॥

ते - உனது, सारम् - பலத்தை, अवैमि - அறிகிறேன்; अतः - खलु - அதனால் தான், आत्म - समम् - எனக்கு ஒப்பான, त्वाम् - உன்னை, गुरुणि - ஒரு பெரிய, कार्ये - காரியத்தில், नियोक्ष्ये - ஏவப்போகின்றேன்; भू - धरताम् - பூமியைத் தாங்கும் திறனை, अवेक्ष्य - பார்த்த பின்பே, शेषः - ஆதிசேஷன், कृष्णेन - விஷ்ணு

விஞல். देह - उद्वहनाय - (தமது) தேகத்தை தாங்குவதற்கு; वि - आदिश्यते - கட்டளை இடப்படுகிறுன்.

(க-து) நண்பனே, உனது பலத்தை முற்றிலும் நான் அறிவேன். அதனுல் தான் எனக்கு ஒப்பான உன்னை ஒரு பெரிய காரியத்தில் ஏவப்போகின்றேன். ஆதிசேஷன் பூமியைந் தாங்குகின்ருன் அத்திறமையைக் கண்ட பிறகே விஷ்ணுவும் அவனைத் தம்மைத் தாங்கும் படுக்கையாக ஏற்படுத்திக்கொண்டார்.

कृष्णेन - கிருஷ்ணவதாரத்தில் ஆதிசேஷன் படுக்கையாக இருந்ததில்லையாதலால் இச்சொல் இங்கு விஷ்ணுவைக் குறிக்கின்றது.

**आशंसता बाणगतिं वृषाङ्के कार्यं त्वया नः प्रतिपन्नकल्पम् ।**
**निबोध यज्ञांशभुजामिदानीमुच्चैर्द्विषामीप्सितमेतदेव ॥ १४ ॥**

वृष-अङ्के - சிவபிரானிடத்தில், बाण - गतिम् - பாணம் செல்லுதலை, आ - शंसता - கூறுகின்ற, त्वया - உன்ஞல், नः - எங்களது, कार्यम् - கார்யம், प्रतिपन्न - कल्पम् - பெரும்பாலும் அங்கீகரிக்கப் பட்டதே (ஆகும்). इदानीं - இப்பொழுது, एतद् एव - இதனையே, उच्चैः - द्विषां - பலம் மிகுந்த சத்துருக்களையுடைய, यज्ञ - अंश - भुजाम् - தேவர்களின், ईप्सितम् - விருப்பமாக, निबोध - அறிந்து கொள்.

(க-து) சிவபிரானிடமும் பாணத்தைப் பிரயோகித்து தைர்யத்தை இழக்கச் செய்வேன் என்று கூறியதாலே, அனேகமாக எங்கள் விருப்பத்தை நீ ஏற்றுக்கொண்டாய் எனக் கூறலாம். பெரும் பகைவர்களையுடைய தேவர்களின் விருப்பமும் இதுவே. சிவபிரான்மேல் பாணத்தைப் ப்ரயோகித்து, அவர் மனத்தை திருப்பவேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கு.

आ - शंसता - சிறிது கூறுகின்ற என்று பொருளுரைப்பர் நாராயணர். "शंसतीति स्तुतौ भवेत्" என்பதைக் காண்க.

यज्ञांशभुजाम्-யாகத்தில் ஹவிஸ்ஸை உண்கின்ற தேவர்கள் உணவின்றி இருக்கின்றனர் என்பதைக் காட்ட இச்சொல் வந்தது.

वृष-अङ्कः - எருதைக் கொடியில் அடையாளமாக உடையவர், சிவபிரான்.

**अमी हि वीर्यप्रभवं भवस्य जयाय सेनान्यमुशन्ति देवाः ।**
**स च त्वदेकेषुनिपातसाध्यो ब्रह्माङ्गभूर्ब्रह्मणियोजितात्मा ॥ १५ ॥**

अमी देवाः - இத்தேவர்கள், जयाय - (சத்ருவை) வெல்வதற்காக, भवस्य - சிவபிரானது, वीर्य-प्रभवं - மகனை, सेनान्यं - ஸேனைத் தலைவனாக, उशन्ति हि - விரும்புகின்றனர். ब्रह्म-अङ्ग-भूः - வேதங்கள் (வேதாங்கங்கள் இவைகள்) தோன்றுமிடமானவரும், ब्रह्मणि - உண்மைப் பொருளில், योजित-आत्मा - மனத்தை இணைத்திருப்பவருமான, सः च - அவர், त्वद्-एक-इषु-निपात-साध्यः - உன்னுடைய ஒரே பாணத்தின் பிரயோகத்தினால் வசப்படவேண்டியவர்.

(க-து) இத்தேவர்கள், சிவபிரானது மகனைத் தமது ஸேனைக்குத்தலைவனாகக்கொண்டு வெற்றியடைய விரும்புகின்றனர். வேதங்களுக்கும் அவற்றின் அங்கங்களுக்கும் ஆவிர்பாவஸ்தானமாகிய அவர், இப்பொழுது மனத்தைத் தத்துவப்பொருளில் வைத்து தியானத்தில் இருக்கின்றார். ஒரே பாணத்தைப் பிரயோகித்து நீ அவரை வசீகரிக்க முடியும்.

अमी देवाः - 'எதிரிலுள்ள எண்ணற்ற இவ்வளவு தேவர்களும்' என சுட்டிக் காட்டிப் பேசுகின்றான் இந்திரன்.

त्वदेकेषुनिपातसाध्यः - மன்மதன் தான் கூறுவதை ஏற்க வேண்டுமென்பதற்காக "ஒரே பாணத்தைப்பிரயோகித்து

வசப்படுத்தத் தக்கவர் '' என, செய்ய வேண்டியதை எளிய தாகக் காட்ட முயல்கின்றான் இந்திரன்.

तस्मै हिमाद्रेः प्रयतां तनूजां यतात्मने रोचयितुं यतस्व ।
योषित्सु तद्वीर्यनिषेकभूमिः सैव क्षमेत्यात्मभुवोपदिष्टम् ॥ १६ ॥

प्रयताम् புலனடக்கத்துடன் கூடிய, हिम-अद्रेः - तनूजाम् - ஹிமவான்மகள் பார்வதியினிடத்தில், यत-आत्मने-மனத்தை அடக்கியுள்ள, तस्मै - அவருக்கு, रोचयितुम् - அன்பை உண்டாக்க, यतस्व - முயல் வாயாக. योषित्सु - பெண்களில், सा-एव - அவளே, तत् - वीर्य - निषेक-भूमिः - அவருடைய மனைவியாக இருக்க, क्षमा - தகுந்தவள், इति - என, आत्म-भुवा - பிரம்ம தேவரால், उपदिष्टम् - (எங்களுக்கு) கூறப்பட்டுள்ளது.

(க-து) மனத்தை அடக்கியுள்ளார் சிவபிரான். புலன்களை அடக்கி இருப்பவள் பார்வதி. சிவபிரானுக்குப் பார்வதியினிடத்தில் அன்பை உண்டாக்க முயல்வாயாக. அவள் தான் அவருக்கு ஏற்ற மனைவி எனப் பிரம்மதேவர் கூறியுள்ளார்.

गुरोर्नियोगाच्च नगेन्द्रकन्या स्थाणुं तपस्यन्तमधित्यकायाम् ।
अन्वास्त इत्याप्सरसां मुखेभ्यः श्रुतं मया मत्प्रणिधिः स वर्गः ॥

नग-इन्द्र-कन्या - च - மலை அரசனின் மகள் பார்வதியும், गुरोः - தந்தையின், नियोगात् - உத்தரவினால், अधित्यकायाम् - (ஹிமவானுடைய) ஒரு மலைச் சிகரத்தில், तपस्यन्तम् - தவம் செய்கின்ற स्थाणुम्-சிவபிரானுக்கு, अन्वास्ते - பணிவிடை செய்து வருகிறாள், इति - என்று, मया - என்னால், अप्सरसां - मुखेभ्यः - அப்ஸரஸ்களின் சொற்களினின்றும், श्रुतम्-கேள்வியுறப்பட்டது. सः-वर्गः-(அப்ஸரஸ்களின்) அந்த இனம், मत्-प्रणिधिः - எனது வேவுபார்க்கும் படையாகும்,

(க-து) ஹிமாலயத்தின் ஒரு சிகரத்தில் தவம் செய்து கொண்டிருக்கும் சிவபிரானுக்கு, தந்தையின் உத்தரவிற்கிணங்க, பார்வதி பணிவிடை செய்து வருகிருள் என என் வேவுகாரர்களாகிய அப்ஸரஸ்களிடமிருந்து நான் கேள்வியுற்றேன்.

नगः - மலே. इन्द्रः - தலைவன். गुरुः - தந்தை. अधित्यका - மலேயின் மேல் பாகம், சிகரம்.

स्थाणुः - அழிவற்றவர், சிவபிரான். அப்ஸரஸ்கள் கூறியதை நம்பலாம் என்பதற்குக் காரணமாக வந்தது. प्रणिधिः स वर्गः - என்பது. அவ்வினமே எனது வேவு பார்க்கும் கூட்டமாகும். வேவுகாரர்கள் நம்பத்தக்கவர்களே.

तद्गच्छ सिद्ध्यै कुरु देवकार्यमर्थोऽयमर्थान्तरभाव्य एव ।
अपेक्षते प्रत्ययमुत्तमं त्वां बीजाङ्कुरः प्रागुदयादिवाम्भः ॥१८॥

तत् - ஆதலால், सिद्ध्यै - வெற்றியைப்பெற, गच्छ - செல்வாயாக. देवकार्यम् - தேவர்களின் காரியத்தை, कुरु - செய். अयं - (சிவபிரான் மனத்தை வசீகரித்தல் என்ற) இந்த, अर्थः - காரியம், अर्थान्तर-भाव्यः एव-(பார்வதியின் வடிவழகு, அருகில் இருத்தல் முதலிய) வேறு பல காரணங்களாலே உண்டாக்கத் தக்கதே; बीज - अङ्कुरः - (ஆயினும் இது) விதையினின்று வரும் முளேயானது, उदयात् प्राक्-தான் தோன்றுவதற்கு முன், अम्भः - इव-தண்ணீரை (எதிர் பார்ப்பது) போல், उत्तमम् प्रत्ययम् - சிறந்த காரணமாகிய, त्वाम् - உன்னேயே, अपेक्षते - எதிர் நோக்கி இருக்கின்றது.

(க-து) தேவர்களின் காரியத்தைச் செய்து வெற்றி பெறுவாயாக. சிவபிரான் மனத்தை வசீகரித்தல் என்பது பார்வதியின் வடிவழகினலே செய்யப்பட வேண்டியதேயாயினும் உன் உதவியும் இதற்கு முக்கியமானதே. முளே விதையினின்று உண்டாவது தான். விதை மண்ணுடன் சேர்ந்திருப்பதால் மாத்திரமே முளேப்

பதில்லை. தண்ணீரும் தேவையாக இருக்கிறது. அதுபோல் பார்வதி சிவபிரான் இருவரும் ஒருவர்க்கொருவர் அருகில் இருப்பினும் காதலை அவர்கள் மனத்தில் தோற்றுவிக்க உனது உதவி மிக முக்யமானதாகும்.

सिद्धयै - காரியத்தை சாதிப்பதற்கு, வெற்றியைக் கொள்வதற்கு. गच्छ सिद्धयै - என்பது இந்திரனின் ஆசீர்வாதம்; गच्छ - என்பதில் அதிகாரமும் ஒலிக்கின்றது; अयं अर्थः-ஸேனைத் தலைவனைப் பெறுவதென்ற பயன்; अर्थान्तरभाव्यः - சிவபிரான் - பார்வதி - இவர்களின் விவாகத்தினுல் அடையப்பட வேண்டியதே என்றும் உரைக்கலாம்.

प्रत्ययः - காரணம், बीजाङ्कुरः अम्भः - மன்மதனது முக்யத்வத்தை இந்திரன் கூறிய உபமானம் நன்கு புலப்படுத்துகின்றது.

तस्मिन् सुराणां विजयाभ्युपाये तवैव नामास्त्रगतिः कृती त्वम् ।
अप्यप्रसिद्धं यशसे हि पुंसामनन्यसाधारणमेव कर्म ॥ १९ ॥

सुराणाम् - தேவர்களின், विजय - अभि - उपाये - வெற்றிக்குக் காரணமான, तस्मिन् - அச்சிவபிரானிடத்தில், अस्त्र - गतिः பாணம் செலுத்துதல், तव एव - உனக்கு மாத்திரமே இயலும், नाम - (என்பது) யாவரும் அறிந்ததே; त्वम् - நீ, कृती - பாக்யமுடையவன்; अप्रसिद्धम् अपि - பலரால் அறியப்படாததாயினும், अनन्य - साधारणम् एव कर्म - பிறர் செய்ய முடியாத ஒரு காரியமே, पुंसाम् - மனிதர்களின், यशसे - हि - புகழிற்குக் காரணமாகின்றது.

(க-து) தேவர்களின் காரியத்தில் முதல் காரணம் சிவபிரான். அவரிடம் உன் பாணம் ஒன்றே தான் செல்லும். இத்தகைய பெருமை வாய்ந்த நீ மிகவும் பாக்கியம் பெற்றவன். பிறர் செய்ய முடியாத காரியம் மிக அல்பமாயினும் அதனைச் செய்பவர் புகழ்

பெறுவர். எனின் தேவர்கள் பலர் அறிந்த, ஆனால் அவர்களால் செய்ய முடியாத இக்காரியத்தைச் செய்யப் போகின்ற உனக்கு வரும் புகழைப்பற்றிக் கூறவேண்டுமா ?

कृती त्वम् - என வாழ்த்துரை வழங்குகின்றான் இந்திரன். अप्रसिद्धमपि - பலர் அறியாதது. ஏதாவது ஒரு சிறு காரியமாயினும் பிறர் செய்ய முடியாததொன்றை ஒருவன் செய்வானாயின் - அதைச் செய்வதில் அவன் ஒருவனுக்குத்தான் திறமையுண்டு என்பதும் இருக்குமாயின் - அது அவனுக்குப் புகழ் அளிக்கின்றது. சிவபிரானை வசீகரித்தல் என்பது அல்பகாரியமல்ல. தேவர்கள் பலரும் அறிந்த முக்யமானதொன்று இது. பிறரால் செய்ய முடியாததாகவும் இருக்கின்றது. எனவே மன்மதனுக்குத் திண்ணமாகப் புகழ் அளிக்கும்.

सुराः समभ्यर्थयितार एते कार्यं त्रयाणामपि विष्टपानाम् ।
चापेन ते कर्म न चातिहिंस्रमहो बतासि स्पृहणीयवीर्यः ॥ २० ॥

एते - இந்த, सुराः - தேவர்கள், सं - अभ्यर्थयितारः - (உன்னிடம்) யாசிக்கின்றவர்கள்; कार्यम् - (நீ செய்யப்போகின்ற) காரியம், त्रयाणाम् विष्टपानां-अपि - மூவுலகங்களுக்கும் (பலனளிப்பது); कर्म - இக்காரியம், ते - உனது, चापेन - வில்லினால் (செய்யப்படுகின்றது); अति - हिंस्रं - च - न - ஹிம்ஸை செய்வதாகவும் இல்லை; अहो बत-(என்ன ஆச்சரியம்!) நண்பனே, स्पृहणीयवीर्यः-விரும்பத்தக்க பலமுடையவனாக, असि-இருக்கிறாய் நீ.

(க-து) உன் கண்முன் கூடியிருக்கின்ற இவ்வளவு தேவர்களும் உன்னிடம் இதனை யாசிக்கின்றனர். நீ செய்கின்ற காரியம் தேவர்களுக்கு மாத்திரமேயன்றி மூவுலகிற்கும் நன்மை செய்வது. இக்காரியத்தில் நீ உபயோகிக்கும் ஆயுதம் புஷ்பங்களாலான வில்; அது பிறருக்கு ஹிம்ஸை செய்வதன்று; நண்பனே! எத்தகை சிறந்த பலமுடையவன் நீ! உன்னைப்போல் பலமுடையவனாக

விருக்க யாவரும் விரும்புவர். யாவரும் தமக்கு வேண்டுமென ஆசைப்படத்தக்க பலம் உன்னிடம் இருக்கின்றது.

एते - ' இவர்கள் ' என இந்திரன் சுட்டிக்காட்டுகின்றான்.

सुराः - பிறர்க்கு வரமளிக்கும் தேவர்கள், समभ्यर्थयितारः - வேறு கதியின்றி உன்னிடம் யாசிக்கின்றார்கள்.

कार्यं त्रयाणामपि विष्टपानाम् - நீ செய்யும் காரியத்தினால் வரும் பயன் தேவர்களுக்கு மாத்திரமேயன்றி மூவுலகினிற்கும் உண்டு.

चापेन - பிறவீரர்களின் ஆயுதம் கடினமானது ; பயங்கர மானது. உன்னுடைய வில்லும் புஷ்பம், அம்பும் புஷ்பமே.

न चातिहिंस्रम् - நீ செய்கின்ற போரில் உடலில் புண் உண் டாகாது; ரத்தம் சிந்தாது; காதல் நோயினால் மனத்தில் சிறிது தாபம் உண்டாகலாம். எனவே அதிகம் ஹிம்ஸை இல்லை.

अहो बत - என்ன ஆச்சர்யம் ! अहो - விளியிலே உபயோ கிக்கும் சொல் இது ; ஸந்தோஷத்தையும் காட்டும்: " உனது பலத்தைக் கண்டு வியப்புறுகிறேன், களிப்புறுகிறேன்" ' अहो बत '; अहो इति विस्मये, खेदानुकम्पा-सन्तोष-विस्मयामन्त्रणे बत என்பதனையும் காண்க.

स्पृहणीयवीर्यः - '' மன்மதனுடைய பலம் போன்ற பலம் வேண்டும் என '' யாவராலும் விரும்பத்தக்க பலமுடைய வன்; கண்டோர் காமுறும் பலம்.

मधुश्च ते मन्मथ साहचर्यादसावनुक्तोऽपि सहाय एव ।
समीरणो नोदयिता भवेति व्यादिश्यते केन हुताशनस्य ॥ २१ ॥

मन्मथ - மன்மதனே, असौ - இந்த, मधुः-च - வஸந்தனும் साहचर्यात् - நட்பு காரணமாக, अनुक्तः - अपि - சொல்லப்படா விடினும், ते - உனக்கு, सहायः - एव - துணைவன் தான்; (त्वम्)- நீ, हुत - अशनस्य - அக்னிக்கு, नोदयिता - துணைவனாக, भव - இரு, इति - என, केन - யாரால், समीरणः - காற்று, व्यादिश्यते - கட்டளை யிடப்படுகிறது?

(க-து) உன்னோடு எப்பொதும் இருப்பவன்; உனது நண்பன் வஸந்தன்; நான் சொல்லாவிடினும் அவன் உனக்கு உறுதுணையாக இருப்பான். அக்னியை வளர்ப்பது காற்று. அதனுடைய நண்பன். அக்னிக்கு, உதவி செய்' எனக் காற்றுக்குக் கட்டளையிட்டவர் யார்? பிறர் கட்டளை இன்றியே காற்று தன் நண்பன் அக்னிக்கு உதவி செய்கின்றது. அதுபோல் நான் கூறுமலே உதவுபவன் வஸந்தன். காரணம் அவன் உனது நண்பன்.

வஸந்தனை உதவியாக இரு எனக் கூறுமலேயே அவனை உதவி யாக இருக்கக் கூறினன் இந்திரன்.

साहचर्यात् - 'உடனிருத்தலால்' என்பது பதப்பொருள். 'நட்பினல்' என்பது கருத்து. सहचरः - நண்பன். अनुक्तः 'உதவி செய்' எனக் கட்டளையிடப்படாவிடினும். हुताशनः - ஹோமம் செய்வதை உண்பவன்; அக்னி; समीरणः - தூண்டு கின்றவன் என்பது பதத்தின் பொருள்: காற்று.

இச்சுலோகத்துடன் இந்திரனது பேச்சு முடிகின்றது.

**तथेति शेषामिव भर्तुराज्ञामादाय मूर्ध्ना मदनः प्रतस्थे ।**
**ऐरावतास्फालनकर्कशेन हस्तेन पस्पर्श तदङ्गमिन्द्रः ॥ २२ ॥**

तथा - அவ்வாறே, इति - எனக் கூறி, भर्तुः - இந்திரனது, आज्ञाम् - ஆணையை, शेषाम् - इव - மாலையை (ஏற்பது) போல், मूर्ध्ना - (வணங்கிய) தலையால், आदाय - ஏற்றுக்கொண்டு, मदनः- மன்மதன், प्रतस्थे - புறப்பட்டான்; इन्द्रः - இந்திரன், ऐरावत - आस्फालन - कर्कशेन - ஐராவதத்தைத் தட்டுதலால் கடினமான,

हस्तेन - கையினுல், तत् - अङ्गम् - அவனது சரீரத்தை, पस्पर्श - தொட்டான் (தடவினுன்).

(க-து) மன்மதன் அவ்வாறே செய்வதாகக் கூறிவிட்டு, இந்திரனது ஆணையை சிரமேற்கொண்டு புறப்பட்டான். அவன் புறப்படுங்கால் இந்திரன் தனது அன்பினடையாளமாக தனது கையினுல் அவனைத் தடவிக் கொடுத்தனுப்பினுன்.

शेषा - உறவினரும் பெரியோர்களும் அன்புடன் அளிக்கும் மாலை, அக்ஷதை முதலியன. இந்திரனது ஆணைக்கு உபமானம் மாலை. பெரியோர் தரும் மாலையை வணங்கிய தலையுடன் ஏற்பதுபோல் இந்திரனது ஆணையையும் தலை வணங்கி ஏற்றுக்கொண்டான். தலையின் வணக்கம் ஏற்றுக் கொள்ளுதற்கும் மரியாதைக்கும் அடையாளம். இந்திரன் அன்பு காரணமாக மாலை முதலியன தந்தான். அதனை ஏற்பது போலவே ஆணையையும் ஏற்றுக் கொண்டான். 'மாலையையும் ஆணையையும் வணங்கிய தலையால் ஏற்றுக் கொண்டான்' என்று சிலர் உரை செய்வர். 'शेषां च आज्ञां च आदायेति वा' - நாராயணர்.

आस्फालनम् - ஐராவதத்தை ஊக்குவதற்காகச் செய்யப் படுகின்ற தட்டுதல்: ஐராவதத்தின் தோல் கடினம், கடினமான உடலைத் தட்டியதால் இந்திரனது கையும், कर्कश - கடினமாயிற்று. पस्पर्श - தொட்டான்; தடவிக் கொடுத்தான். தடவிக் கொடுத்தல் அன்பின் அடையாளம்.

स माधवेनाभिमतेन सख्या रत्या च साशङ्कमनुप्रयातः।
अङ्गव्ययप्रार्थितकार्यसिद्धिः स्थाण्वाश्रमं हैमवतं जगाम ॥ २३ ॥

सः - அவன் (மன்மதன்), अभिमतेन-மிகப்பிரியமான, सख्या- நண்பன், माधवेन - வஸந்தனுலும், रत्या - च - ரதியாலும், स-

आशङ्कम्-அச்சத்துடன், अनु-प्रयातः-பின் தொடரப்பட்டு, अङ्ग-व्यय-प्रार्थित-कार्य-सिद्धिः - (தன்) உடலின் அழிவினாலும் காரியஸித்தியை விரும்பி, हैमवतम् - ஹிமாலயத்திலுள்ள, स्थाणु-आश्रमम् - சிவபிரானுடைய ஆச்ரமத்திற்கு, जगाम - சென்றான்.

(க-து) மன்மதன், இந்திரன் கூறிய காரியத்தை நிறைவேற்ற தன் உடலையும் இழக்கத்துணிந்து ஹிமாலயத்திலுள்ள சிவபிரானுடைய ஆச்ரமம் சென்றான். அவனுடைய ஆருயிர் நண்பன் வஸந்தனும், அன்பு மனைவி ரதியும் ஏதேனும் தீங்கு நேருமோ, என்ற அச்சத்துடன் உடன் சென்றனர்.

अभिमतेन - மன்மதனுக்கு வஸந்தனிடம் மிகுந்த அபிமானம். "இந்த நண்பன் அருகில் இருக்கும் பொழுது நான் செய்யமுடியாதது எதுவுமில்லை" என்ற தன்னபிமானத்திற்கு பாத்திரமாகவுள்ளவன்.

साशंकम् - ரதி அச்சத்துடன் பின் தொடர்ந்தாள். ஸ்த்ரீகளுக்கு இயற்கையாயுள்ள அறிவு, ஏதோ விபத்து நேரப்போகின்றதென்பதை அவளுக்குக் காட்டியது. "स्त्रीणामशिक्षितपटुत्वमिति स्वाभाविक-पटुत्वात्" என்பார் ஒரு உரைகாரர். அல்லது அச்சமும் ஸ்த்ரீகளுக்கு இயற்கையானதே.

अंगव्यय-प्रार्थितकार्यसिद्धिः - எவ்வகையிலும் தேவர்களின் காரியத்தைச் சாதிக்க வேண்டும் என மன்மதன் கொண்ட உறுதியைக் காட்டுகின்றது.

மன்மதன் உடலை இழக்கப்போகின்றான் என்பதை முன்னமே கவி குறிப்பினால் உணர்த்துகின்றார்.

तस्मिन् वने संयमिनां मुनीनां तपःसमाधेः प्रतिकूलवर्ती ।
सङ्कल्पयोनेरभिमानभूतमात्मानमाधाय मधुर्जजृम्भे ॥ २४ ॥

तस्मिन्-वने - அவ்வனத்தில், संयमिनाम् - புலனடக்கமுடைய. मुनीनाम् - முனிவர்களின், तपः-समाधेः - தவத்திலுள்ள மன ஒரு மைக்கு, प्रतिकूल - वर्ती-பகையாயுள்ள, मधुः - வஸந்தன், संकल्प - योनेः - மன்மதனுக்கு, अभिमान - भूतम् - செருக்கிற்குக் காரண மான, आत्मानम् - தனது ருது உருவத்தை, आधाय - தோன்றச் செய்து, जजृम्भे - விருத்தியடைந்தான்.

(க-து) வஸந்த ருது, காதலைத் தூண்டுபவைகளில் ஒன்ருகக் கருதப்படுவது. மன்மதன் சிவபிரானது ஆச்ரமம் சென்றவுடன், அவன் நண்பன் தேவன் வஸந்தன், தனது மற்ளுெரு வடிவமான ருதுவை- வஸந்தம் என்ற பருவகாலத்தை - அவ்வனத்தில் தோன் றச் செய்து, தளிர், புஷ்பம், பழம், குயிலின் கூவுதல் முதலியவை மூலம் யாவரும் உணரும் வகையில் விருத்தியடைந்தான்.

காதலுக்குத்தக்க பருவநிலையை - சூழ்நிலையை - முதலில் அமைத்துத்தந்தவன் வஸந்தன். சிவபிரானது மனத்தைக் கலைக்க வந்த மன்மதனுக்கு மஹர்ஷிகளின் மனத்தைக் கலைப்பது கடினமல்லவே. அதை வஸந்தனே செய்யும் வல்லமை பெற்றவன் என்பதை तपस्सामाधेः प्रतिकूलवर्ती - என் பதால் காட்டினுர். संकल्पयोनेः - மன்மதன்-மனத்தில் தோன் றுபவன்; संकल्पः - மனம், அல்லது எண்ணம், அதனை, योनिः - தோன்றுமிடமாகக் கொண்டவன். अभिमानभूतम् - வஸந்தன், மன்மதனது வெற்றிக்குக் காணமாக இருப்பவன். எனவே வஸந்தன் உதவியால் எதையும் சாதிக்க முடியும் என்ற செருக்கு உடையவன். இச்செருக்கிற்குக் காரணம் வஸந் தன் தான். आत्मानम् - தன் பருவமாகிய வடிவினை; வஸந்தன் என்ற தேவனுக்கு இரண்டு வடிவங்கள்; ஒன்று தேவசரீரம்; மற்ளுென்று வஸந்த ருது. இதனை நாம் அக்காலத்தில் தோன்றும் தளிர், புஷ்பம், பழம் முதலியவற்ருல் தான் காண முடியும். जजृम्भे - உடலை நிமிர்த்துதல் என்ற பொருள் உள்ள

जृम्भ् - என்ற வினையடியாக வந்தது. விருத்தியடைந்தான் என்பது கருத்து. இனி வரும் ஒன்பது சுலோகங்களில் வஸந்த ருது வர்ணிக்கப்படுகின்றது.

कुबेरगुप्तां दिशमुष्णरश्मौ गन्तुं प्रवृत्ते समयं विलङ्घ्य ।
दिग्दक्षिणा गन्धवहं मुखेन व्यलीकनिश्श्वासमिवोत्ससर्ज ॥२५॥

उष्ण-रश्मौ - சூரியன், समयम् - உரிய ஸமயத்தை, विलङ्घ्य - மீறி, कुबेर - गुप्ताम् - दिशम् - குபேரனால் பாதுகாக்கப்படும் வட திசையை (நோக்கி), गन्तुम् - செல்ல, प्रवृत्ते-सति - தொடங்கிய பொழுது, दक्षिणा-दिक् - தென் திசை, मुखेन - தனது முகத்தினால் (முற்பகுதியினால்), गन्ध-वहम् - காற்றை, व्यलीक-निःश्वासम्-इव - துக்கத்தினாலுண்டான பெருமூச்சு போல், उत्-ससर्ज -விடுத்தது.

(க-து) சிவபிரானது வனத்தில் மன்மதனுக்கு உதவி செய்ய வஸந்தன், காலமல்லாத காலத்தில் தோன்றினான். வஸந்த ருதுவின் அடையாளமாகத் தென்றல் வீசத் தொடங்கியது என்பது இச்சுலோகத்தின் கருத்து.

வஸந்த ருதுவில் தான் சூரியன் தென்திசையினின்றும், வட திசை நோக்கிச் செல்வான். அகால வஸந்த ருது தோன்றி விட்டதால் சூரியனும் வடதிசை செல்லலுற்றான்; உண்மையில் அது அவன் செல்லும் ஸமயம் இல்லை. ஸமயம் வரும் முன்பே - சூரியன் தன்னை விட்டுப் பிரிந்துசென்றதால் தென்திசை என்னும் நாயகி துக்கத்தினால் விடும் பெருமூச்சுபோல் காற்று வீசியது.

"துணிவுள்ள புருஷன் ஒருவன் தன் மனைவிக்குத் தந்த வாக்குறுதியை மீறி - பிறர் மனைவியை நோக்கிச் செல்லத் தொடங்கினான். அப்பொழுது தாக்ஷிண்யமுள்ள அம்மனைவி அவனை யாதும் கடிந்து கூறாது, துக்கத்துடன் பெருமூச்சு விடுத்தாள்" என்ற கருத்தும் இந்த சுலோகத்தினின்று தொனிக்கின்றது.

उष्णरश्मिः - சூடான கிரணமுடையவன் : சூரியன் : துணிவுள்ள புருஷன்.

समयम् - சூரியன் செல்ல வேண்டிய காலம்; மனைவிக்குத் தந்த வாக்குறுதி. दक्षिणा दिक् - தென்திசை - கணவன் மனம் கோணாது நடக்கவிரும்பும் ஸ்த்ரீ. कुबेरगुप्तां दिशं - குபேரனால் பாதுகாக்கப்பட்ட திசை; வடதிசைக்குக் குபேரன் நாயகன்; பிறன் மனைவி. व्यलीकम् - துக்கம்.

समयं विलङ्घ्य - "காலத்தை மீறி" - உரிய காலத்தை மீறுதல் இரண்டுவகையில் நேரலாம்: உரிய காலம் வந்த பின்னும் காரியம் செய்யாமை; உரியகாலம் வருமுன்பே காரியத்தைச் செய்தல். இரண்டும் குற்றமே: இங்கே சூரியன், காலம் வருமுன்பே வடக்கு நோக்கிச் சென்றதைக் கவி "காலத்தைமீறி" என்று கூறினார்.

मुखेन - தென்திசையை ஒரு ஸ்த்ரீயாகக் கருதியதால் அத்திசையின் ஒரு பகுதியை அவளது முகமாகக் கூறினார். காற்றையும் மூச்சுக் காற்றாக உத்ப்ரேக்ஷித்தார் (புனைந்து கூறினார்).

असूत सद्यः कुसुमान्यशोकः स्कन्धात्प्रभृत्येव सपल्लवानि ।
पादेन नापैक्षत सुन्दरीणां सम्पर्कमाशिञ्जितनूपुरेण ॥ २६ ॥

अशोकः - அசோகமரம், सद्यः - உடனே, स्कन्धात्-प्रभृति-एव - அடி மரத்திலிருந்தே, स-पल्लवानि - துளிர்களுடன் கூடிய, कुसुमानि - புஷ்பங்களை, असूत - தோற்றுவித்தது; आ-शिञ्जित-नूपुरेण - ஒலிக்கின்ற சிலம்பையுடைய, सुन्दरीणाम् - அழகிகளின், पादेन - பாதத்துடன் - (பாதத்தினால் தரப்படும்), संपर्कम् - ஸம்பந்தத்தை - (உதைத்தலை), न-अपैक्षत - எதிர்பார்க்கவில்லை.

(க-து) அழகிய பெண்களின் சிலம்பொலிக்கும் பாதத்திஞல் உதைக்கப்பெறின் பூக்காத அசோகம் பூக்கும் என்பர். வஸந்தன் தோன்றியதால் அத்தகைய பாத ஸ்பர்சத்தை எதிர்பாராமலே அசோகமரங்கள், தளிர்களையும் புஷ்பங்களையும் அடிமரத்திலிருந்தே தோன்றச் செய்தன.

பூக்காமல் இருக்கும் மரங்களுக்குச் சில காரியங்கள் செய்யப் படின் பூக்குமென்பர். இத்தகைய செயல்களுக்கு தோஹதம் எனப் பெயர். ஒவ்வொரு மரத்திற்கும் ஒவ்வொரு வகையான தோஹதம் உண்டு. அசோக மரம் பூக்காவிடில் அழகிய ஸ்த்ரீ தன் காலில் சிலம்பணிந்து, அசோகமரத்தை உதைக்க வேண்டும்.

"ஸ்த்ரீயின் ஸ்பர்சத்தால் பிரியங்குவும், மதுவை வாயினின் றும் தெளிப்பதால் மகிழ மரமும், கடைக்கண் பார்வையால் திலக மும், அணைத்துக் கொள்வதால் மறுதோன்றியும், பரிஹாஸ வார்த் தைகளால் மந்தாரமும், மெல்லச் சிரிப்பதால் சம்பகமும், மெதுவாக வாயிஞல் ஊதுவதால் மாமரமும், பாட்டிஞல் நமேருவும், எதிரில் ஆடுவதால் கர்ணிகாரமும் பூக்கும்" என்பர்.

स्कन्धात् प्रभृति एव - அடி மரத்திலிருந்தே கிளைகளின் நுனி வரை மலர்களும் தளிர்களும் நிறைந்திருந்தன.

सद्यः - உடனே ; முறையின்றி; அரும்பு தோன்றிச் சில நாள் சென்றபின் மலர் தோன்றுதல் என்பது முறை. தளிர் தோன்றியபின் பூ தோன்றுதல் என்ற முறையின்றி தளிரும் பூவும் ஒருங்கே தோன்றுதல் என்பது இங்கு குறிப்பிடப் படுகிறது.

सद्यः प्रवालोद्गमचारुपत्रे नीते समाप्तिं नवचूतबाणे ।
निवेशयामास मधुर्द्विरेफान् नामाक्षराणीव मनोभवस्य ॥ २७ ॥

प्रवाल - उद्गम - चारु - पत्रे - தளிர்களின் முளைகளாகிய அழகிய சிறகுகளையுடைய, नव - चूत - बाणे - புதிய மாம்பூவாகிய (மன் மதனது) பாணம், समाप्ति - नीते सति - முடிக்கப் பட்டவுடன் (தயார் செய்யப்பட்டவுடன்), सद्यः - உடனே, मनोभवस्य - மன்

மதனுடைய, नाम - अक्षराणि - इव - பெயர் எழுத்துக்கள் போல், द्वि-रेफान् - வண்டுகளை, मधुः - வஸந்தன், निवेशयामास - (அப்பா ணத்தில்) வைத்தான்.

(க-து) வஸந்தன் வந்தவுடன் மாமரங்களில் பூக்கள் தோன் றின. புஷ்பங்களின் அடியில் உள்ள சிறு தளிர்கள் பாணங்களில் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும் சிறகுகள்போல் இருந்தன. மாம்பூவின் மணத்தால் வசீகரிக்கப்பட்டு வண்டுகள் அதன்மேல் அமர்ந்தன. கருநிறமான வண்டுகள் மாம்பூவில் அமர்வதைக் கவி, மாம்பூவாகிய மன்மதனுடைய பாணம் தயாரான உடனேயே அதில் அவனுடைய பெயரை வஸந்தன் பொறித்தான்போலும் என உத்ப்ரேக்ஷித்தார்.

प्रवाल-उद्गमः - ''பூவின்கீழ்தோன்றும் சிறு இதழ்'' என்பது மல்லிநாதர் உரை: "தோன்றியுள்ள தளிர்'' என நாராயணர் உரை செய்வர். பாணம் காற்றில் வேகமாகச் செல்லப் பறவைகளின் சிறகுகளை அம்புகளின் காம்பில் கட்டுவர். மாம்பூ என்ற அம்பிற்கு அதன் அடியிலுள்ள சிறு தளிரே-இதழே - சிறகாக இருந்தது. மாம்பூ, மன்மதனுடைய ஐந்து பாணங்களில் ஒன்று. மற்றவை: தாமரை, அசோகு, மல்லிகை, நீலோத்பலம் என்பனவாம்.

नवचूतबाणे समाप्ति नीते - புதிய மாம்பூ பாணம் முடிவை அடைவிக்கப் பட்டவுடன் என்பது பதப்பொருள். "செய்து முடிக்கப்பட்டவுடனேயே '' என்பது கருத்து.

नामाक्षराणि - பெயரில் உள்ள எழுத்துக்கள்; பெரிய வீரர் கள், பாணங்களில் தமது பெயரைப் பொறிப்பர்.

द्विरेफान् - மையினுல் எழுதப்படும் எழுத்துக்கள் கறுப்பாக இருப்பதால், வண்டுகளின் நிறம் கருதி அவைகளைப் பெயரில் உள்ள எழுத்துக்களாகக் கவி கூறினர்.

सख: - सख्यु: - என்பது பாடபேதம்: ''நண்பன் மன்மதனுடைய'' என்று பொருள் கொள்ள வேண்டும். வஸந்தன் தன் நண்பனுக்கு வேண்டிய பாணத்தைத் தயார் செய்து அதில் அவனது பெயரையும் பொறித்தான். வஸந்த ருதுவின் அடையாளமாக ''மாம்பூ தோன்றவும் அதனை வண்டுகள் வந்தடைந்தன'', என்பது சுலோகத்தின் கருத்து.

**वर्णप्रकर्षे सति कर्णिकारं दुनोति निर्गन्धतया स्म चेतः ।**
**प्रायेण सामग्र्यविधौ गुणानां पराङ्मुखी विश्वसृजः प्रवृत्तिः ।।२८।।**

कर्णिकारम् - *கர்ணிகாரமலர் (கோங்குமலர்)*, वर्ण-प्रकर्षे सति - *சிறந்தநிறம் இருக்கும் பொழுதும்*, निर्गन्धतया - *மணமின்மையால்*, चेत:- *(ரஸிகர்களின்) மனத்தை*, दुनोति स्म - *வருத்தியது;* विश्व-सृज:-*பிரம்மதேவரின்*, प्रवृत्ति: *(படைப்பதிலுள்ள) முயற்சி*, गुणानाम् - *நற்குணங்களை*, सामग्र्य-विधौ - *ஒருங்கு சேர்த்து வைப்பதில்*, प्रायेण - *பெரும்பாலும்*, पराङ् - मुखी - *ஊக்கமற்றிருக்கின்றது.*

(க-து) வஸந்தருதுவில் சிறந்த நிறமுள்ள கர்ணிகார மலர்கள் மலர்ந்தன. அவை தமது நல்ல நிறம் காரணமாக யுவர்களின் மனத்தை வசீகரித்தனவாயினும் ரஸிகர்கள் அவற்றின் வாசனை இல்லாத நிலையைக் கண்டு வருந்தினர். ஆனால் இது மலரின் குறையாகக் கருத இயலாது. ஏனெனின் பிரம்ம தேவர் எல்லா நற்குணங்களையும் ஒரு பொருளிலே சேர்த்து வைப்பதில் ஊக்கம் காட்டுகின்றாரில்லை. நிறமுள்ள பூவிற்கு வாசனை இருப்பதில்லை; வாசனையுள்ள புஷ்பங்களில் சில நிறவழகு பெற்றவையல்ல.

காதலுணர்ச்சியைத் தூண்டும் சூழ்நிலையை வர்ணிக்கத் தொடங்கிய கவி இடையிலே கர்ணிகார மலரின் குறைபாட்டைக் கூறுவது பொருந்துமோ என்ற ஐயத்திற்கு உரையாசிரியர்கள் இவ்வாறு பதில் கூறுகின்றனர்.

'वर्णप्रकर्षे सति' என்பதால் கர்ணிகாரமலரின் நிறச் சிறப்பும், அதனுல் யுவர்களின் மனத்தில் தோன்றும் மகிழ்ச்சியும் கூறப்பட்டன. யுவர்கள் மகிழ்ந்தனராயினும் ஆழ்ந்ப் சிந்தனை செய்யும் ரஸிகர்கள் மணமின்மையைக் கருதிச் சிறிதே வருந்தினர் எனக் கர்ணிகாரமலர் இருவகையினர் மனத்திலும் இரண்டுவகை உணர்ச்சியைத் தூண்டியதெனக் கவி கூறினுர் என்பதாம்.

வஸந்தருதுவில் கர்ணிகாரமலர்கள் தோன்றின என்பது கருத்து. कर्णिकार-கோங்குமரம். இதன்மலர் வடிவில் நெய்தலை ஒத்துப் பொன்னிறமுடையது. கொன்றை என்பர் சிலர்

**बालेन्दुवक्राण्यविकासभावाद्बभुः पलाशान्यतिलोहितानि ।**
**सद्यो वसन्तेन समागतानां नखक्षतानीव वनस्थलीनाम् ॥ २९ ॥**

अविकास-भावात् - மலராத தன்மையால், बाल-इन्दु-वक्राणि - இளம்பிறை போல் வளைந்துள்ள, अति-लोहितानि - மிகச்சிவந்த, पलाशानि - பலாச மொட்டுகள், वसन्तेन - வஸந்தனுடன், सद्यः - அப்பொழுதே, समागतानाम् - சேர்ந்த, वन-स्थलीनाम् - அவ்வனப் பிரதேசம் என்ற ஸ்த்ரீகளின், नख - क्षतानि इव - நகத்தின் கீறல்கள் போல், बभुः - விளங்கின (காணப்பட்டன).

(க-து) பலாச மரத்தில் மொட்டுகள் தோன்றின. மலராத காரணத்திஞல் அவை இளம் பிறைபோல் வளைந்து இருந்தன. இயற்கையிலே மிகச்சிவந்து வனத்திலே தோன்றிய அம்மொட்டுகள் வனப்பிரதேசமாகிய ஸ்த்ரீகளின் உடலிலே வஸந்தனுடன் சேர்ந்ததால்தோன்றிய நகத்தின் கீறல்கள்போல் இருந்தன.

பலாசம் - ஒருவகை மரம்.

वनस्थली - இது பெண்பாற் சொல் ; ஆகையால் காட்டுப் பிரதேசங்களை ஸ்த்ரீகளாகக் கூறினுர்.

लग्नद्विरेफाञ्जनभक्तिचित्रे मुखे मधुश्रीस्तिलकं प्रकाश्य ।
रागेण बालारुणकोमलेन चूतप्रवालोष्ठमलञ्चकार ॥ ३० ॥

मधु-श्रीः - வஸந்த லக்ஷ்மி (வஸந்தருதுவின் அழகு-என்ற ஸ்த்ரீ), लग्न - द्विरेफ-अञ्जन - भक्ति - चित्रम् - அமர்ந்திருந்த - வண்டுகளாகிய மை அமைப்பினால் அழகான, तिलकम् - (திலக புஷ்பமாகிய) - திலகத்தை, मुखे - (வஸந்தருதுவின் தொடக்கத்தில்) தனதுமுகத்தில், प्रकाश्य - சிறப்பாக அமைத்து, बाल-अरुण-कोमलेन - இளம் சூரியன் போல் அழகான, रागेण - (செந்நிறத்தினால்) செந்நிறப் பொருளால், चूत-प्रवाल-ओष्ठम् - மாந்தளிராகிய உதட்டை, अलं-चकार - அலங்கரித்தாள்.

(க-து) வஸந்த ருது தோன்றியவுடன் அக்காட்டில் திலக மலர்கள் தோன்றின. அவற்றில் வண்டுகளும் அமர்ந்தன; மாந்தளிரும் தோன்றின.

இதனைக் கவி வர்ணிக்கும் முறை வருமாறு:

வஸந்த ருதுவினால் தோன்றிய அழகை - ஒரு ஸ்த்ரீயாகக் கருதினார். அவளது பெயர் மதுஸ்ரீ, வஸந்த அழகி என்பது; ஸ்த்ரீகள் நெற்றியிலே திலகம் அமைத்துக்கொள்வர். அத்திலகத்தினைச் சுற்றி மையினால் சிறு பொட்டுகள் இடுவர். வஸந்த அழகிக்கு நெற்றியிலுள்ள திலகம் திலகப் பூதான், அதில் அமர்ந்த வண்டுகளே மைப்பொட்டுகளாக அமைந்து திலகத்திற்கு அழகளித்தன.

ஸ்த்ரீகள் உதட்டில் சிவப்பு வர்ணம் பூசி அழகு செய்வர். வஸந்த அழகியின் உதடு மாந்தளிர்தான். அவ்வழகி, தளிராகிய தனது உதட்டிற்கு இளம் சூரியன் போன்ற செந்நிறம் தந்து அழகு செய்து கொண்டாள்.

வஸந்த ருதுவில் திலகம் பூக்கும்; செந்நிற மாந்தளிர் தோன்றும். கவி இவற்றை வஸந்த லக்ஷ்மியின் நெற்றிப் பொட்டாகவும் உதடாகவும் உத்ப்ரேக்ஷித்தார்.

திலகம் - ஒருவகை மரம்; தமிழில் மஞ்சாடி என்பர்.

இச்சுலோகத்திற்கு ஒத்த கருத்துள்ளது ரகுவம்ச சுலோகம். 9-41.

मृगाः प्रियालद्रुममञ्जरीणां रजःकणैर्विघ्नितदृष्टिपाताः ।
मदोद्धताः प्रत्यनिलं विचेरुर्वनस्थलीर्मर्मरपत्रमोक्षाः ॥ ३१ ॥

प्रियाल - द्रुम - मञ्जरीणाम् - பிரியாள மரங்களுடைய பூங்கொத்துக்களின், रजः-कणैः - மகரந்த துணுக்குகளால் (பொடிகளால்), विघ्नित-दृष्टि-पाताः - தடுக்கப்பட்டபார்வையுடையவைகளும், मद - उद्धताः - களிப்பினுல் கர்வமடைந்தவைகளுமான, मृगाः - மான்கள். मर्मर - पत्र - मोक्षाः - சலசலப்புடன் இலையுதிர்தலையுடைய, वन - स्थलीः - காட்டுப் பிரதேசங்களில், प्रति - अनिलम् - காற்றுக்கு எதிராக, विचेरुः - திரிந்தன.

(க-து) வஸந்த ருதுவில் பிரியாள மரங்களில் பூங்கொத்துக்கள் தோன்றின. அவற்றின் மகரந்தப்பொடிகள் காற்றில் பறந்து சென்று மான்களின் விசாலமான கண்களில் விழுந்து பார்வையை மறைத்தன. காற்றினுலும், வஸந்த ருதுவினுலும் களிப்புற்றுத் துள்ளுகின்ற மான்கள் சல சலவென்று ஓசையுடன் இலைகள் உதிர்கின்ற காடுகளில் - காற்றுக்கு எதிராக ஓடித் திரிந்தன.

प्रियालः - காட்டு மா மரம். முறள மரம் என்பர் சிலர். இதன் பூவில் மகரந்தப் பொடிகள் அதிகம் இருக்கும்; रजः - மகரந்தம். कणः - சிறு துணுக்கு. பொடி. मदः - ருதுவினுல் வந்த களிப்பு. उद्धताः - செய்வதறியாது திமிர் கொண்டவைகள்.

मर्मर-पत्रमोक्षाः - '' மர்மர் என்று ஒலிக்கும் இலை யுதிர்தலையுடைய ''. ' மர்மர் ' என்பது இலைகள் உதிரும் பொழுது உண்டாகும் ஒலியின் குறிப்பு. தமிழில் இதனைச் ' சலசல ' வென்று குறிப்பர்,

प्रत्यनिलम् - विचेरुः - வெள்ளத்தை எதிர் நோக்கிச் செல்வது மீன்களுக்கு இயற்கை. அதுபோல் காற்றுக்கு எதிராகச் செல்வது மான்களின் ஸ்வபாவம். இதனால் மான்களுக்கு, वातप्रमीः - (காற்றை எதிர் நோக்கிச் செல்வது), वातमृगः - (காற்று மான்), என்றும் பெயர்கள் உண்டு. मृगाः - மான்கள்; பொதுவாக மிருகத்தைக் குறிப்பதாகவும், சிலர் கொள்வர்.

चूताङ्कुरास्वादकषायकण्ठः पुंस्कोकिलो यन्मधुरं चुकूज ।
मनस्विनीमानविघातदक्षं तदेव जातं वचनं स्मरस्य ॥ ३२ ॥

चूत - अङ्कुर - आस्वाद - कषाय-कण्ठः - மாந்தளிரைச் சுவைப்பதால் இனிய குரலுடைய, पुंस्कोकिलः - ஆண்குயில், मधुरम् - இனிதாக, चुकूज - கூவியது, इति यत्-तत् एव - (என்ற) அக்கூவுதலே, मनस्विनी-मान - विघात - दक्षम् - தற்செருக்குள்ள ஸ்த்ரீயின் கர்வத்தைப் போக்கு வதில் திறமை வாய்ந்த, स्मरस्य - மன்மதனது, वचनम् - சொல்லாக, जातम् - ஆயிற்று.

(க-து) வஸந்தருதுவில் தோன்றிய மாந்தளிரைச் சுவைத்த தால் இனிய குரலுடையனவாகக் குயில்கள் கூவின. இனிய அவ் வொலிகள், கோபத்தினால் கணவனை விட்டுப் பிரிந்துள்ள ஸ்த்ரீ களின் கோபத்தைப் போக்கிக் கணவர்களுடன் சேர்ந்திருக்கும்படி இடப்பட்ட மன்மதனது ஆணையாக இருந்தன.

चूतांकुरास्वादकषायकण्ठः - பனிக்காலத்தில் குயில்களின் குரல் கம்மி இருக்கும். வஸந்தம் வந்தவுடன் தோன்றிய மாந்தளி ரைச் சுவைத்ததால் குயில்களின் குரல் இனிதாக ஆயிற்று.

कषाय - வாசனை மிகுந்த என்பது பொருள். குரலுக்கு அடை மொழியானபொழுது, 'இனிய' என்ற பொருள் கொண்டது; कण्ठः-கழுத்து; இங்குகுரலைக் குறித்தது; पुंस्कोकिलः - பெண் குயில்களை விட ஆண் குயில்கள் திறமைவாய்ந்தன என்பர் ஒரு உரைகாரர்.

**मनस्विनी** - தன்னைப்பற்றிப் பெருமை கொண்ட ஸ்த்ரீ.
**मानः** - கோபம் அல்லது தன் உயர்வு நினைவு.

ஏதாவது சிறு காரணத்தாலோ, தன் பெருமையை நினைத்தோ கணவனிடம் கோபம் கொண்டு, அவனைவிட்டுப் பிரிந்துள்ள ஸ்த்ரீகளுக்கு, குயிலின் கூவுதல், மன்மதனது ஆணையாக இருந்தது : மன்மதனது ஆணை என்ன வென் பதைக் கவி ரகுவம்சத்தில் கூறியுள்ளார். "கோபத்தை விட்டுவிடுங்கள்; போட்ட சண்டைகள் போதும்; சென்ற நாள்திரும்பவும் வாரா. கடந்த பருவமும் திரும்பப் பெற முடியாது. எனவே கணவனை விட்டு நீங்கி இராதீர்கள்" என்பதாம்.

त्यजत मानमलं बत विग्रहैः न पुनरेति गतं चतुरं वयः।
परभृताभिरितीव निवेदिते स्मरमते रमते स्म वधूजनः ॥

(ஸர்க்கம் 9-47)

அழகுத் தெய்வமான மன்மதனது ஆணையாக இருக்கக் குயிலின் இனிய குரலே தகுந்ததாதலால் அதனை மன் மதனது சொல்லாகக் கூறினார்.

**हिमव्यपायाद्विशदाधराणामापाण्डरीभूतमुखच्छवीनाम् ।**
**स्वेदोद्गमः किंपुरुषाङ्गनानां चक्रे पदं पत्रविशेषकेषु ॥ ३३ ॥**

**हिम-व्यपायात्** - பனி சென்றதால், **विशद** - **अधराणाम्** - அழகிய உதடு உடையவர்களும், **आ पाण्डरीभूतमुख** - **छवीनाम्** - சிறிதே வெண்மையான முகத்தின் நிறமுடையவர்களுமான, **किंपुरुष-अङ्गनानाम्** - கிம்புருஷப் பெண்களின், **पत्र-विशेषकेषु** - அலங் காரவரிகளிலும் திலகங்களிலும், **स्वेद** - **उद्गमः** - வியர்வையின் தோற்றமானது, **पदम् चक्रे** - இடம் பெற்றது.

(க-து) பனிக்காலத்தில் கிம்புருஷ ஸ்த்ரீகள், உதடுகளில் வெடிப்பு ஏற்படாமலிருக்க வெண்ணெய் பூசியிருப்பர். பனிக்காலம் சென்று விட்டதால் தற்போது அவர்கள் வெண்ணெய் பூசவில்லை. எனவே அவர்களுடைய உதடுகள், விசதமாக-பிறபொருளின் ஸம்பந்தமின்றித் தூயதாக - தெளிவாக - அழகாக இருந்தன. பனிக் காலத்தில் குங்குமப்பூவின் சாந்தைக் கன்னங்களில் பூசி இருப்பர். வஸந்தருதுவில் அத்தகைய சாந்து பூசாததால், முகங்கள் இயற் கையான வெண்ணிறத்துடன் இருந்தன. வஸந்தத்தில் அந்த ஸ்த்ரீகளின் நெற்றியிலிடப்பட்ட பொட்டுகளிலும் கன்னங்களில் இடப்பட்ட அலங்காரவரிகளிலும் வஸந்தத்தில் வியர்வை தோன் றியது.

किंपुरुष -अङ्गनाः - கிம்புருஷர்-தேவர்களில் ஒரு வகையினர் ; அவர்களின் மனைவியர் ; அவ்வினத்தைச் சேர்ந்த ஸ்த்ரீ கள் ; आपाण्डरीभूतमुखच्छवीनाम् - வெய்யிற்காலத்தில் குளிர்ச்சி யைக் கருதி சந்தனம் பூசுவது போல் குளிர்காலத்தில் குளி ரைக் குறைக்க, உடம்பில் குங்குமப்பூவினாலான சாந்தைப் பூசுவர். சாந்து பூசப்பெறின் முகம் சிவந்து காணப்படும். உஷ்ணகாலம் வந்துற்றதால் குங்குமச் சாந்து பூசவில்லை. எனவே கிம்புருஷ ஸ்த்ரீகளின் முகம் அதன் இயற்கையான நிறமுடையதாக இருந்தது. पाण्डर - வெண்மை, அல்லது சிறிதே மஞ்சள் நிறம் கலந்த வெண்ணிறம். पत्रम् - பெண்கள் கோரோசனை முதலியவற்றைக் குழைத்து இலை போலும் மீன் போலும் உள்ள வரிகளை கன்னம் நெற்றி மார்பு முதலான இடங்களில் இடுவர். இதனை, पत्रम्-என்பர். पत्रम् - இலை. विशेषकः - நெற்றியில் உள்ள திலகம்; வியர்வை உடம்பில் தோன்றினதாயினும் வரிகளையும் திலகங்களையும் மங்கச் செய்ததால் அது உண்டாகியுள்ளதென்பது தெள்ளெ னப்புலப்பட்டது, எனவே, கவி ''வரிகளிலும் திலகங்களிலும்

இடம் பெற்றது'' என அதனையே முக்கியமாகக் குறித்தார். पदम् चक्रे - தனது பாதத்தை வைத்தது. இடம் பெற்றது; தோன்றியது என்பது கருத்து, கிம்புருஷ ஸ்த்ரீகள் வஸந்த காலத்திற்குரிய அழகுடன் விளங்கினர் என்பது கருத்து.

तपस्विनः स्थाणुवनौकसस्तामाकालिकीं वीक्ष्य मधुप्रवृत्तिम् ।
प्रयत्नसंस्तम्भितविक्रियाणां कथञ्चिदीशा मनसां बभूवुः ॥३४॥

स्थाणु - वन - ओकसः - சிவபிரானது வனத்தில் வசிக்கின்ற, तपस्विनः - தவம் செய்வோர், ताम् - அந்த, आकालिकीम् - அகாலத்திலுண்டான, मधु - प्रवृत्तिम् - வஸந்த ருதுவின் தோற்றத்தை, वीक्ष्य - கண்டு, प्रयत्न - संस्तंभित - विक्रियाणाम् - முயற்சியினால் அடக்கப்பட்ட மாறுபாடுகளையுடைய, मनसाम् - மனங்களை कथंचित् - மிக சிரமத்துடன் (ஒருவாறு), ईशाः - அடக்குகின்றவர்களாக, बभूवुः - இருந்தனர்.

(க-து) சிவபிரான் வசிக்கும் அவ்வனத்தில் வாழும் தபஸ்விகள் திடீரெனத் தோன்றிய வஸந்தருதுவைக்கண்டு, அதனால் ஏற்பட்ட மனவேறுபாடுகளை மிக முயன்று அடக்கினர்.

वन-ओकसः - 'வனத்தை வாஸஸ்தானமாக உடைய' என்பது பதப்பொருள், आकालिकीम् - தோன்றிய உடனேயே அழிவதைத் தான் இச்சொல் குறிக்கும். ஆயினும் 'தகாத காலத்தில் தோன்றிய' என்ற பொருளில் வந்தது, तपस्विनः - இங்கு குறிக்கப்பட்ட தபஸ்விகள், வானப்பிரஸ்தர்கள்; மனைவிகளுடன் வசிப்பவர்கள். வஸந்தன் தோற்றத்தினால் மஹர்ஷிகளின் மனத்தில் சிறிது கலக்கம் தோன்றினும் அது அடக்கப்பட்டது எனக் கூறினர் கவி.

तं देशमारोपितपुष्पचापे रतिद्वितीये मदने प्रपन्ने ।
काष्ठागतस्नेहरसानुविद्धं द्वन्द्वानि भावं क्रियया विवव्रुः ॥ ३५ ॥

आरोपित-पुष्प-चापे - நாணேற்றப்பட்ட வில்லையுடையவனும், रति-द्वितीये - ரதியுடன் கூடியவனுமான, मदने - மன்மதன், तम् देशम्-அந்த இடத்தை, प्रपन्ने-அடைந்தவுடன், द्वन्द्वानि-இணைகள் (தம்பதிகள்), काष्ठा-गत-स्नेह-रस-अनुविद्धम् - மிக அதிகமான காதலுணர்ச்சியுடன் கூடிய, भावम् - இன்பநுகர்ச்சியின் விருப்பத்தை, क्रियया - செயல் மூலம், विवव्रुः - வெளியிட்டன.

(க-து) மன்மதன், தனது பூவில்லில் நாணேற்றி, ரதியுடன் அவ்வனத்தை அடைந்தவுடனேயே, காட்டிலுள்ள, ஸ்தாவர ஜங்கம இனத்தைச் சேர்ந்த இணைகள் (தம்பதிகள்), காதலுணர்ச்சி மிக அதிகமாக; இன்பம் நுகர்வதில் தமக்குள்ள விருப்பத்தைச் செயல் மூலம் புலப்படுத்தின.

द्वन्द्वानि - 'இரட்டைகள்' என்பது பதப் பொருள்; ஆண் பெண் என்ற இரண்டினையும் சேர்த்துக் குறிப்பது द्वन्द्वम्-என்பது; பிராணிகளும், செடிகொடிகளும் கூடக் காதலுணர்ச்சி பெற்றன; இன்பம் நுகர விரும்பின; அவ்விருப்பத்தைச் செயல் மூலம் காட்டின.

काष्ठा - உயர்ந்த நிலை; 'काष्ठागत - உயர்ந்த நிலையடைந்துள்ள, स्नेहरस- சுவைமிகுந்த காதலுணர்ச்சியுடன், अनुविद्धम्, கூடிய, என்பது பதப்பொருள்; रस-சுவை மிகுந்த. இனி வரும் நான்கு சுலோகங்கள் இக்கருத்தை வர்ணிப்பன.

मधु द्विरेफः कुसुमैकपात्रे पपौ प्रियां स्वामनुवर्तमानः ।
शृङ्गेण च स्पर्शनिमीलिताक्षीं मृगीमकण्डूयत कृष्णसारः ॥ ३६ ॥

द्वि-रेफः - வண்டு, स्वाम् प्रियाम्- (தன்) காதலியை, अनुवर्तमानः- பின் தொடர்ந்து, कुसुम - एक- पात्रे - பூவாகிய ஒரே பாத்திரத்தில், मधु - தேனை, पपौ - குடித்தது; कृष्णसारः च - மானும், स्पर्श - निमीलित - अक्षीम् - ஸ்பர்ச ஸுகத்தினால் கண்மூடியுள்ள, मृगीम् - பெண்மானை, शृङ्गेण - (தன்) கொம்பினால், अकण्डूयत - சொறிந்தது.

(க-து) ஆண் வண்டு, பெண் வண்டு குடித்து எஞ்சியதேனை, அதே மலரிலிருந்து குடித்தது. ஆண் மான், தனது ஸ்பர்ச ஸுகத்தினால் கண் மூடி நின்ற பெண்மானைக் கொம்பின் முனையால் சொறிந்து இன்பமூட்டியது.

प्रियां अनुवर्तमानः - மனைவியை முதலில் குடிக்கச் செய்து பிறகு அது குடித்த பாத்திரத்திலிருந்தே தேனைப் பருகியது வண்டு. द्विरेफः - 'இரண்டு ரகரமுடையது' என்பது பதப் பொருள்; भ्रमर - என்ற சொல்லைக் குறித்து அதன் மூலம் வண்டு என்ற பொருளுடையதாயிற்று.

**ददौ रसात्पङ्कजरेणुगन्धि गजाय गण्डूषजलं करेणुः ।**
**अर्धोपभुक्तेन बिसेन जायां सम्भावयामास रथाङ्गनामा ॥ ३७ ॥**

रसात् - அன்பின் மிகுதியால், करेणुः - பெண்யானை, पङ्क - ज- रेणु गन्धि - தாமரை மலரின் மகரந்தப் பொடியினது வாஸனையுடையதும், गण्डूष - जलम् - துதிக்கையால் எடுக்கப்பட்டதுமான ஜலத்தை, गजाय - ஆண்யானைக்கு, ददौ - கொடுத்தது. रथाङ्ग-नामा - சக்ரவாகப்பக்ஷி, अर्ध-उपभुक्तेन - (தான்) பாதி உண்ட, बिसेन - தாமரைக் குருத்தினால், जायाम् - (தன்) மனைவியை, संभावयामास - உபசரித்தது.

(க-து) பெண்யானை தாமரை மலரின் மகரந்த வாசனையுள்ள ஜலத்தைத் துதிக்கையில் எடுத்து ஆண் யானைக்குத் தந்து மகிழ்வித்தது. ஆண் சக்ரவாகப்பக்ஷி, தாமரைத் தண்டை, முதலில் தான் உண்டு ருசிபார்த்து, சுவை மிகுந்ததைத் தன் மனைவிக்குத்தந்து உபசரித்தது.

रथाङ्गम् - ரதத்தின் பாகம், சக்ரம்; இதனைப் பெயராக உடையது-சக்ரவாகப் பறவை. नाम - பெயர். बिस - தாமரை நூல், குருத்து, அல்லது தண்டு.

गीतान्तरेषु श्रमवारिलेशैः किञ्चित्समुच्छ्वासितपत्रलेखम् ।
पुष्पासवाघूर्णितनेत्रशोभि प्रियामुखं किम्पुरुषश्चुचुम्ब ॥ ३८ ॥

किंपुरुषः - கிம்புருஷன், श्रम - वारि - लेशैः - வியர்வைத் துளிகளால், किंचित् समुच्छ्वासित-पत्र-लेखम् - சிறிது கலைந்த அலங்கார வரிகளையுடையதும், पुष्प - आसव - आघूर्णित - नेत्र - शोभि - புஷ்ப மதுவினால் (மதுபானத்தால்) சுழலுகின்ற கண்களாலே அழகாயிருப்பதுமான, प्रिया - मुखम् - காதலியின் முகத்தை, गीत - अन्तरेषु - பாட்டுக்களின் இடையில், चुचुम्ब - (தன் முகத்தால்) ஸ்பர்சித்தான்.

(க-து) கிம்புருஷனது மனைவி அவனதுகளிப்பைக் கருதிப்பாடிக் கொண்டிருந்தாள். பாடுவதால் உண்டான வியர்வைத்துளிகள் அவள் முகத்திலிருந்த வரிகளைச்சிறிதே கலைத்திருந்தது. பூமதுவைப் பானம் செய்ததால் அவளது கண்கள் சுழன்று முகத்திற்கு வசீகரத் தன்மையை உண்டாக்கின. ஒரு பாட்டு முடிவிற்கும் மற்றொருபாட்டு தொடங்குவதற்குமிடையிலுள்ள காலத்தில் கிம்புருஷன் தன் காதலியின் முகத்தை முத்தமிட்டான்.

पुष्प - आसवः - இலுப்பைப் பூவினின்றும் தயாரிக்கப்படும் ஒருவகை மது; வாசனைப் புஷ்பம் கலந்த மதுவென்றும் பொருள் கொள்ளலாம். மதுபானத்தாலுண்டான களிப்பால் ஸ்த்ரீயின் கண்கள், சுழன்று முகத்திற்குச் சோபை

யைத் தந்தன. गीतान्तरेषु-பாட்டுக்களுக்கிடையில்: பாடுவதற்கு இடையூறு உண்டாகாத வகையில், ஒரு பாட்டு முடிந்து மற்றொன்று தொடங்குவதற்கு இடையிலுள்ள நேரத்தில் என்பது கருத்து.

पर्याप्तपुष्पस्तबकस्तनाभ्यः स्फुरत्प्रवालोष्ठमनोहराभ्यः ।
लतावधूभ्यस्तरवोऽप्यवापुर्विनम्रशाखाभुजबन्धनानि ॥ ३९ ॥

पर्याप्त-पुष्प-स्तबक-स्तनाभ्यः - நன்கு மலர்ந்த பூங்கொத்தாகிய ஸ்தனமுடையவைகளும், स्फुरत्-प्रवाल-ओष्ठ - मनोहराभ्यः - அசைகின்ற தளிராகிய உதட்டினால் அழகாயிருப்பவையுமான, लता-वधूभ्यः-கொடிகளாகிய இளமங்கைகளிடமிருந்து, तरवः अपि - மரங்களும், विनम्र-शाखा-भुज-बन्धनानि - வளைந்த கிளையாகிய கைகளால் செய்யப்படும் ஆலிங்கனங்களை, अवापुः - அடைந்தன.

(க-து) காட்டிலுள்ள மரங்கள் தம் காதலிகளாகிய கொடிகளால் வளைகின்ற சிறு கிளைகள் மூலம் செய்யப்படும் ஆலிங்கனங்களைப் பெற்று மகிழ்ந்தன.

கவி, மரங்களை ஆண்களாவும், அவைகளைச் சுற்றியுள்ள கொடிகளை அவற்றின் காதலிகளாகவும், சிறு கொடிகளின் சிறு தந்துகங்களை, கிளைகளை - அவற்றின் கைகளாகவும், பற்றி இருத்தலை ஆலிங்கனமாகவும் கூறினார். இக் கொடிகளாகிய ஸ்த்ரீகளுக்கு தளிர்களே உதடுகளாயுள்ளன.

श्रुताप्सरोगीतिरपि क्षणेऽस्मिन्हरः प्रसङ्ख्यानपरो बभूव ।
आत्मेश्वराणां न हि जातु विघ्नाः समाधिभेदप्रभवो भवन्ति॥४०॥

अस्मिन् - இந்த, क्षणे - ஸமயத்தில், हरः - சிவபிரான், श्रुत - अप्सरो-गीतिः-अपि - அப்ஸரஸ்களின் ஸங்கீதத்தைக் கேட்டாராயினும், प्रसंख्यान-परः - தியானத்தில் பற்றுள்ளவராகவே,

बभूव - இருந்தார்; हि - ஏனெனில், आत्म - ईश्वराणाम् - மனத்தை யடக்கியவர்களுக்கு, विघ्नाः - இடையூறுகள், समाधि - भेद - प्रभवः- தியானத்தைக் கலைக்கும் திறனுடையவைகளாக, जातु - ஒரு பொழுதும், न भवन्ति - ஆகின்றதில்லை.

(க-து) மன்மதனுக்கு வசப்பட்டு எல்லா ஜீவராசிகளும் இருந்தன. இந்த ஸமயத்தில் சிவபிரான், அப்ஸரஸ்களின் இனியஸங்கீதத்தைக் கேட்டும் மனம் கலையாமல் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். உறுதியானமனமுடையவர்களின் மன ஒருமையை எத்தகைய இடையூறும் கலைக்க முடியாது.

श्रुताप्सरोगीतिः अपि - கேட்கப்பட்ட அப்ஸரஸ்களின் ஸங்கீத முடையவராயினும், என்பது பதப்பொருள், இந்த அப்ஸரஸ்கள் மன்மதனுக்குத் துணை செய்ய அனுப்பப்பட்டவர்கள் `என்பர் ஒரு உரையாசிரியர். சிவபிரானுக்குப் பணிவிடை செய்ய முன்பே வந்தவர்கள் என்பர் வேறு ஒருவர். प्रसङ्ख्यानम्-தியானம்; परमात्मानुसन्धान - प्रसंख्यान - समाधयः - என்பர் போஜர்; आत्मा - மனம்; आत्मेश्वराः - மனத்தை அடக்கியவர்கள்; समाधिः - மன ஒருமை.

लतागृहद्वारगतोऽथ नन्दी वामप्रकोष्ठार्पितहेमवेत्रः ।
मुखार्पितैकाङ्गुलिसंज्ञयैव मा चापलायेति गणान् व्यनैषीत् ॥४१॥

अथ - பிறகு लता - गृह-द्वार - गतः - கொடி வீட்டின் வாசலில் இருந்தவனும், वाम-प्रकोष्ठ-अर्पित-हेम-वेत्रः - இடது மணிக்கட்டில் வைக்கப்பட்ட பொன்பிரம்புடையவனுமான, नन्दी - நந்திகேசுவரன், मुख-अर्पित-एक-अङ्गुलि-संज्ञया - एव - (தனது) உதட்டின் மேல் வைத்த ஒரு விரலினால் செய்யப்பட்ட ஸம்ஜ்ஞையினாலேயே, 'चापलाय- அல்பகாரியங்களைச் செய்ய, मा -ஆசை கொள்ளாதீர்கள்' इति - என, गणान् - சிவபிரானது ஸேவகர்களை, व्यनैषीत् - அடக்கினான்.

(க-து) கொடிவீட்டின் வாசலில் நின்று நந்திகேசுவரன், வலது கையிலிருந்த பிரம்பை இடது மணிக்கட்டில் போட்டுக் கொண்டு, சுட்டுவிரலை தன் உதட்டின்மேல் வைத்து, வாய்ச் சொல்லின்றி ஸம்ஜ்ஞையினாலேயே, "சபலமான காரியங்களைச் செய்ய முற்படாதீர்கள்" எனக் கூருது கூறி, உணர்ச்சிக்கு வசப்பட்டுத் தன் வசமிழக்கும் நிலையிலிருந்த சிவஸேவகர்களை அடக்கினான்.

नन्दी - சிவபிரானுடைய ஸேவகர்களின் தலைவன்.

लतागृहद्वारगतः - சிவபிரான் தவம் செய்யும் கொடி வீட்டின் வாசலைக் காப்பவன். हैमवेत्रः - பொன் பிரம்பு - முற்றிலும் பொன்னாலானது; அல்லது பொன்னணியுள்ள பிரம்பு. இது நந்தியின் அதிகாரத்திற்கு அடையாளமாக உள்ளது.

मुखार्पित . . . संज्ञया-एव- "இவ்வனத்தில் உள்ள மற்றவர்கள் எவ்வாறேனும் இருக்கட்டும். சிவஸேவகர்களாகிய நீங்கள் இவ்வல்ப ஆசைக்கு வசமாகாதீர்கள்" என அடக்கினான் நந்திகேசுவரன். சொல்லால் தெரிவிப்பதிலும், சுட்டுவிரலை உதட்டின்மேல் வைத்து சைகை மூலம் தெரிவிப்பது நந்தியினது ஆணையின் கடுமையையும் உறுதியையும் காட்டும்.

निष्कम्पवृक्षं निभृतद्विरेफं मूकाण्डजं शान्त मृगप्रचारम् ।
तच्छासनात्काननमेव सर्वं चित्रार्पितारम्भमिवावतस्थे ॥ ४२ ॥

निष्कम्प - वृक्षम् - அசையாத மரங்களையுடையதும், निभृत - द्विरेफम् - சலனமற்ற வண்டுகளையுடையதும், मूक - अण्डजम् - சத்தமற்ற பறவைகளையுடையதும், शान्त-मृग-प्रचारम् - பிராணிகளின் நடமாட்டம் அடங்கியதுமான, काननम् - सर्वम् - एव - அக்காடு முழுவதுமே, तत् - शासनात् - நந்திகேசுவரனது ஆணையால், चित्र - अर्पित - आरम्भं - इव - படத்தில் எழுதப்பட்ட செயலுடையது போல், अव - तस्थे - இருந்தது.

(க-து) நந்திகேசுவரனது ஆணையினால் சிவஸேவகர்கள் மாத்திரமேயன்றி அக்காடு முழுவதுமே அடக்கி ஒடுங்கி நின்றது; மரங்கள் அசையவில்லை; வண்டுகள் பறக்கவில்லை; பறவைகள் கூவவில்லை; மிருகங்களின் நடமாட்டமும் நின்றது; சித்திரத்தில் எழுதப்பட்ட மிருகம் முதலியவற்றின் செயலுடையது போல் அக்காடு இருந்தது.

चित्रार्पितारंभम् - इव - என்பது மல்லிநாதர் கொண்டபாடம். "படத்தில் எழுதப்பட்ட செயலுடைய காடுபோல்" என்பது பொருள். செயலின் ஒரே நிலையைக்காட்டுகின்ற படத்தில் எழுதப்பட்ட காடு போல் இருந்தது என்பது கருத்து. चित्रार्पितारण्यमिव - என்பது நாராயணரும் அருணகிரியும் கொண்ட பாடம். எளிதிலே விளங்கக்கூடியது.

दृष्टिप्रपातं परिहृत्य तस्य कामः पुरः शुक्रमिवप्रयाणे ।
प्रान्तेषु संसक्तनमेरुशाखं ध्यानास्पदं भूतपतेर्विवेश ॥ ४३ ॥

कामः - மன்மதன், प्रयाणे - பிரயாணத்தில், पुरः - शुक्रं - इव - எதிரில் சுக்ரன் இருக்குமிடத்தை விலக்கி விடுவது போல, तस्य - நந்திகேசுவரனது, दृष्टिप्रपातम् - பார்வை விழுமிடத்தை, परिहृत्य - விலக்கிக் கொண்டு, प्रान्तेषु - சுற்றுப்புறங்களில், संसक्त - नमेरु - शाखम् - ஒன்றோடொன்று இணைந்துள்ள நமேரு மரங்களின் கிளைகளையுடைய, भूत - पतेः - ध्यान - आस्पदम् - சிவபிரானது ஆச்ரமத்தில், विवेश - புகுந்தான்.

(க-து) நந்திகேசுவரனது ஆணையின் பலத்தை உணர்ந்த மன்மதன், அவன் பார்வை விழக்கூடிய இடத்தினின்றும் ஜாக்ரதையாக விலகி சிவபிரான் தவம் செய்யும் அந்த கொடி வீட்டுள் மெதுவாகப் புகுந்தான், அக்கொடி வீட்டின் சுற்றுப்புறங்களில் நமேரு மரங்களின் கிளைகள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டு இருந்ததால் மன்மதன் பதுங்கி இருக்க வசதியாக இருந்தது அந்த இடம். பிரயாணம் செய்ய விரும்புவர் சுக்ரனிருக்கும் திசையை விலக்கி விடுவதுபோல் மன்மதன் நந்தியின் பார்வை விழக்கூடிய இடத்தை விட்டு, வேறுவழியாகச் சென்று ஆச்ரமத்தில் புகுந்தான்.

प्रयाणे-पुरःशुक्रमिव - பகைவரை எதிர்த்துச் செல்ல விரும்பும்-அரசன், எத்திசையில் சுக்ரன் இருக்கிறனே அத்திசையை நோக்கிப் பிரயாணத்தைத் தொடங்கான். அவ்வாறு செய்பவன் இந்திரன் போல் செல்வமுடையவராயினும் ஏழையாகத் திரும்புவர் எனச்சாஸ்த்ரம் கூறும்.

> " प्रतिशुक्रं प्रतिबुधं प्रत्यङ्गारकमेव च ।
> अपि शक्र समो राजा हतसैन्यो निवर्तते ॥
> यस्यां तिष्ठेत् भार्गवो दिश्यमुष्यां यात्रा पुंसां प्राणमानार्थहन्त्री "

என்பவற்றைக் காண்க.

दृष्टि - प्रतीपम् - என்பது நாராயணரும் அருணகிரியும் கொண்டபாடம். तस्य - 'நந்திகேசுவரனுடைய' - அருணகிரியும் நாராயணரும் இச் சொல் சிவபிரானைக் குறிப்பதாகக் கொண்டு, சிவபிரானுடைய பார்வை படக்கூடிய இடத்தை விலக்கிவிட்டு மன்மதன் சென்ருன் என்பர். சுலோகம் 70-இல் சிவபிரான் பார்வை மன்மதன் மேல் விழுவதாகக் கூறியிருப்பதால் இவ்வுரை சரியெனப் புலப்படவில்லை. नमेरुः - ருத்ராக்ஷமரம் அல்லது தேவப்புன்னைமரம். ध्यानास्पदम् - தியானம் செய்யுமிடம். भूत-पतिः-भूत - பிரமதகணங்களின். पतिः - தலைவர், சிவபிரான்.

**स देवदारुद्रुमवेदिकायां शार्दूलचर्मव्यवधानवत्याम् ।**
**आसीनमासन्न शरीरपातस्त्रियम्बकं संयमिनं ददर्श ॥ ४४ ॥**

आसन्न - शरीर - पातः - அண்மையிலுள்ள சரீரநாசமுடைய, सः - மன்மதன், शार्दूल-चर्म-व्यवधानवत्याम् - புலித்தோல் விரிக்கப்பட்டுள்ள, देवदारु - द्रुम - वेदिकायाम् - தேவதாருமரத்தடியிலுள்ள மேடையில், आसीनम् - அமர்ந்திருப்பவரும், संयमिनम् - புலனை

யடக்கி இருப்பவருமான, त्रि-अम्बकम् - சிவபிரானை, ददर्श - கண்டான்.

(க-து) அண்மையிலே இறக்கப்போகின்ற மன்மதன், தேவதாரு மரத்தடியில் புலித்தோல் விரிக்கப்பட்ட மேடையில் புலனை அடக்கி அமர்ந்திருக்கும் சிவபிரானைக் கண்டான்.

शार्दूल-चर्म-व्यवधानवत्याम् - "புலித்தோலாகிய மறைப்பை யுடைய" மேடையில்; व्यवधान - இடையிலே இருப்பது. சிவபிரானுக்கும் மேடைக்கும் இடையிலே இருந்தது புலித்தோல். वेदिकायाम् - தேவதாருமரத்தினடியில் கற்களால் அமைக்கப் பட்டுள்ள மேடையில். இதன் அடை மொழி- शार्दूलचर्मव्यवधानवत्याम् - என்பது.

त्रि - अम्बकम् - 'மூன்று கண்களையுடைய' என்பது பதப் பொருள். சிவபிரானைக் குறித்தது. अम्बक - கண்; त्र्यंबक - என வரவேண்டிய சொல், சந்தம் கருதி त्रियम्बकम् - என வந்தது.

இனி வரும் ஆறு சுலோகங்கள் சிவபிரானை வர்ணிக்கின்றன. அந்த ஆறும் இச்சுலோகத்துடன் சேர்ந்து ஒரு வாக்யமாக அமையும். இவ்வாறு அமைவதைக் 'குலகம்' என்பர். இரண்டு சுலோகங்கள் ஒரு வாக்யமாக அமைவதை 'யுக்மம்' என்றும், மூன்று சேர்வதை 'விசேஷகம்' என்றும், நான்கு சேர்வதை 'கலாபகம்' என்றும் ஐந்து முதல் பல சுலோகங்கள் சேர்வதை 'குலகம்' என்றும் கூறுவர்.

पर्यङ्कबन्धस्थिरपूर्वकायमृज्वायतं सन्नमितोभयांसम् ।
उत्तानपाणिद्वयसन्निवेशात्प्रफुल्लराजीवमिवाङ्कमध्ये ॥ ४५ ॥

पर्यङ्क - बन्ध - स्थिर - पूर्व - कायम् - வீராஸனத்தை அமைத்துக் கொண்டதால் அசைவற்ற சரீரத்தின் கீழ்பாகமுடையவரும்,

ऋजु-आयतम् - நிமிர்ந்து நீண்ட மேல் பகுதியுடையவரும், संनमित - उभय - अंसम् - சிறிதே தாழ்ந்துள்ள இரு தோள்களை யுடையவரும், उत्तान-पाणि-द्वय-संनिवेशात् - நிமிர்ந்த இரு கைகளை (மடியில்) வைத்தலால், अङ्क-मध्ये - மடியின் நடுப்பகுதியில், प्रफुल्ल-राजीवं-इव - மலர்ந்த தாமரை மல்ரையுடையவர் போல் இருப்பவருமான, त्र्यंबकं-ददर्श - சிவபிரானைக் கண்டான்.

(க-து) சிவபிரான் வீராஸனத்தில் அமர்ந்திருந்ததால் அவரது சரீரத்தின் கீழ்ப்பாதி சலனமற்று இருந்தது. மேல்பாகம் நிமிர்ந்து நீண்டு இருந்தது. தமது மடியில் இரு கைகளையும் ஒன்றன் மேல் ஒன்ருக நிமிர்த்தி வைத்திருந்தார். சிவந்த அக்கைகள், தாமரை மலர் இருக்கின்றதோ என்ற ஐயத்தை உண்டாக்கின. மடியிலே கை வைத்திருந்த காரணத்தாலேயே இரு தோள்களும் ஸமமாக சிறிதே தாழ்ந்திருந்தன.

पर्यङ्क - யோகாஸன வகைகளில் ஒன்று. வலது பாதத்தை இடது தொடையின் மேலும் இடது பாதத்தை வலது தொடையின் மேலும் வைத்துக் கொண்டு அமர்வது. இதனை வீராஸனம் என்றும் கூறுவர். சிவபிரான் வீராஸனத்தில் அமர்ந்திருந்ததால் அவரது உடலின் கீழ்ப்பகுதி சிறிதும் அசைவற்று இருந்தது.

पूर्वकायः - உடலின் மேற்பகுதியையும் குறிக்கும் - உடலின் மேற்பகுதியை. ऋज्वायतं - என்று கூறுவதால், இச்சொல் லிற்குக் கீழ்ப்பகுதியை எனப் பொருள் கொள்ளப் பட்டது.

ऋजु-आयतम् - உடலின் மேற்பகுதி வளைவின்றி நிமிர்ந்து இருந்ததால் நீண்டிருந்தது.

उत्तान-पाणिद्वय-सन्निवेशात् - தியானம் செய்பவர்-தமது மடியில் இரு கைகளையும் ஒன்றன் மேல் ஒன்ருக வைத்திருக்க வேண்டும். சிவபிரானது கை அவரது மடியில் செந்தாமரைமலர் போல் இருந்தது.

उत्तानिते करतले करमुत्तानितं परम् ।
आदायाङ्कगतं कृत्वा ध्यायेत् ॥

என்பதனைக் காண்க.

त्रियंबकं-ददर्श - என்ற இருபதங்களையும் தௌிவைக் கருதி ஒவ்வொரு சுலோகத்திலும் சேர்த்துப் பொருள் கூறப் படுகிறது.

**भुजङ्गमोन्नद्धजटाकलापं कर्णावसक्तद्विगुणाक्षसूत्रम् ।**
**कण्ठ प्रभासङ्ग विशेषनीलाम् कृष्णत्वचं ग्रन्थिमतीं दधानम् ॥४६॥**

भुजङ्गम - उन्नद्ध - जटा - कलापम् - பாம்பைக் கொண்டு தூக்கிக் கட்டப்பட்ட சடைக்கூட்டமுடையவரும், कर्ण - अवसक्त - द्विगुण - अक्षसूत्रम्-காதிலே வைக்கப்பட்ட இருமுறை சுற்றிய ருத்ராக்ஷ மாலையுடையவரும், कण्ठ-प्रभा-सङ्ग-विशेष-नीलाम् - கழுத்தின் ஒளி கலப்பதால் அதிகம் கறுத்த நிறமுடைய, ग्रन्थिमतीम् - அழுத்த மான முடிச்சையுடைய, कृष्ण-त्वचम् - மான் தோலை, दधानम् - அணிந்திருப்பவருமான, त्रियंबकं-ददर्श-சிவபிரானைக் கண்டான்.

(க-து) சிவபிரான், தன் சடைகளை, பாம்பினால் தூக்கிக் கட்டி இருந்தார். தியானத்தில் ஆழ்ந்திருந்ததால் அப்பொழுது ஜபம் செய்யவில்லை. எனவே ஜபத்தைக் கணக்கிட உபயோகிக்கும் ருத்ராக்ஷமாலை நீளத்தைக் குறைப்பதற்காக இரண்டாக மடித்து அவரது வலது காதிலே வைக்கப்பட்டிருந்தது. மான் தோல் ஒன்றை நன்கு முடிந்து அணிந்திருந்தார். அவரது கழுத்தின் கறுத்த நிறம் மான்தோல் நிறத்துடன் கலந்து அதனை மேலும் கருநிறமுடையதாக்கியது.

भुजङ्ग......कलापम् - சடையை முடிக்க அவர் உபயோகித்த கயிறு பாம்பு. कर्ण....अक्षसूत्रम् - ஜப மாலையைக் காதிலே வைத்துக் கொள்வது ஒரு முறை. மிக நீளமாக இருந்த தால் அதனை மடித்து வைத்திருந்தார். இரண்டு வடமுள்ள ருத்ராக்ஷமாலை என்றும் பொருள் கூறுவர். ருத்ராக்ஷத்தின் தூய்மை கருதி "இரண்டு வடமுள்ள அம்மாலைகளை இரண்டு

காதுகளிலும் அணிந்திருந்தார்" என்றும் உரைப்பர் சிலர். कृष्णत्वचम्-कृष्ण - மான், त्वच् - தோல். மான் தோலைச்சிவ பிரான் இடுப்பில் கட்டி இருந்ததாக உரைப்பர் நாரா யணர். இடையிலிருந்த மான் சிவபிரானது கழுத்தின் கறுநிறத்தால் அதிகம் கறுத்திருந்தது என்று கூறுவர். பாற்கடலைக் கடைந்த பொழுது தோன்றிய விஷத்தைப் பானம் செய்து தன் நெஞ்சிலே நிறுத்திக் கொண்டதால் சிவபிரானது கழுத்து கறுத்திருந்தது. அதன் நிறம் மான் தோலில் பரவியது என்று கூறியதால் மேலே அணிந்திருந்த மான் தோல் கறுத்திருந்தது எனக் கொள்வது பொருத் தமுடையது.

किञ्चित्प्रकाशस्तिमितोग्रतारैर्भ्रूविक्रियायां विरतप्रसङ्गैः ।
नेत्रैरविस्पन्दितपक्ष्ममालैः लक्ष्यीकृतघ्राणमधोमयूखैः ॥ ४७ ॥

किञ्चित्-प्रकाश-स्तिमित-उग्र-तारैः - சிறிதே ஒளியுடைய அசையாத அச்சுறுத்தும் கருவிழிகளையுடையனவும், भ्रू-विक्रियायाम् - புருவ நெறிப்பினின்றும், विरत-प्रसङ्गैः - நீங்கியவைகளும், अविस्पन्दित - पक्ष्म-मालैः - அசையாத இமைகளையுடையவைகளும், अधः-मयूखैः - கீழ் நோக்கிய ஒளியுடையவைகளுமான, नेत्रैः - மூன்று கண் களாலும், लक्ष्यीकृत - घ्राणम् - நாஸிகையின் நுனியை உற்று நோக்குபவருமான, त्र्यंबकं-ददर्श - சிவபிரானைக் கண்டான்.

(க-து) சிவபிரான் தியானத்தில் இருந்ததால் அவரது கண்கள் கீழ் நோக்கிய பார்வையுடனிருந்தன. விழிகள் அசைவற்று இருந் தன. இமைகளும் அசையவில்லை. புருவங்களில் நெறித்தல் முதலி யனவும் இல்லை. அசையாது இருந்த விழிகள் காண்போர் மனத் தில் அச்சத்தை விளைவித்தன. அத்தகைய விழிகளால் அவர் தமது நாசிகையின் நுனியை உற்று நோக்கிய நிலையிலிருந்தார்.

नेत्रैः लक्ष्यीकृतघ्राणम् - 'கண்களால் (கண்களுக்கு) இலக்காகச் செய்யப்பட்ட நாஸிகையை உடையவரும்' என்பது பதப்

பொருள்: தியானத்தில் இருப்பவர்களின் மன ஒருமையைக் கருதி, வேறு எதனையும் நோக்காது, தமது நாஸிகையின் நுனியிலே பார்வையை நிறுத்தி இருக்க வேண்டுமென சாஸ்த்ரங்கள் கூறும்.

"समं काय शिरोग्रीवं धारयन्नचलं स्थिरः ।
संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥" 6-13.

என்பது பகவத்கீதை.

किञ्चित् प्रकाश - பார்வை கீழ் நோக்கியதாக இருந்ததால் கண்ணின் ஒளி சிறிதே புலனாயிற்று.

उग्र - அசைவற்ற விழிகள் உக்ரமாக இருந்து, பார்ப்பவர்களின் மனத்தில் அச்சுறுத்துவனவாக இருக்கும்.

இச்சுலோகம் யோகம் செய்பவர்களின் பார்வை இருக்க வேண்டிய முறையைக் கூறுகின்றது.

**अवृष्टिसंरम्भमिवाम्बुवाहमपामिवाधारमनुत्तरङ्गम् ।**
**अन्तश्चराणां मरुतां निरोधान्निवातनिष्कम्पमिव प्रदीपम् ॥ ४८ ॥**

अन्तः चराणाम् - உடலுக்குள் ஸஞ்சரிக்கின்ற, मरुताम् - காற்றுக்களை (பிராணவாயுக்களை), निरोधात् - அடக்கியதால், अवृष्टि-संरम्भम् - மழைக்கான ஆடம்பரமற்ற, अम्बुवाहम्-इव - மேகம் போலும், अनुत् - तरङ्गम् - அலைகள் எழாத, अपाम्-आधराम्-इव - நீர் நிலை போலும், निवात-निष्कम्पम् - காற்றின்மையால் அசையாமல் இருக்கின்ற, प्रदीपम्-इव-விளக்குப் போன்றும், (स्थितम्-இருந்த) त्रियंबकम् ददर्श - சிவபிரானைக் கண்டான்.

(க-து) தியானத்தில் இருந்த சிவபிரான், உடலுக்குள்ளிருக்கும் ப்ராணன் முதலான ஐந்து வாயுக்களையும் அடக்கி இருந்தார். எனவே சிறிதும் சலனமற்ற அவர், மழைக்கான சத்தம் முதலிய

ஆடம்பரமற்று நீர் நிறைந்துள்ள மேகம் போலும், அலைகள் எழாத பெரிய நீர் நிலை போலும், காற்றில்லாததால் அசையாமல் இருக்கும் தீபம் போலும் காணப்பட்டார்.

अन्तः चराणाम् - சரீரத்துள் ஐந்து வாயுக்கள் இருப்பதாகக் கூறுவர். பிராணுயாமம் செய்யும் போது இவ்வைந்து காற்றுக்களும் அடக்கப்படுகின்றன. அவ்வைந்து பிராணன் களின் பெயர்கள்: பிராண, அபாந, வ்யான, உதான, ஸமான என்பனவாம்.

अवृष्टिसंरंभम् - संरंभ - முயற்சி. முயற்சியைக் காட்டும் புறச் செயல்கள். இடி, மின்னல் முதலியன. மழை பெய்வதற்கு முன்னும் பெய்யும்பொழுதும் இடி, மின்னல் முதலியன இருக்கும். மழை பெய்தலும் இடி மின்னல் முதலியனவும் இல்லாது, நீர் மாத்திரமே நிறைந்துள்ள மேகம் போல் சிவபிரான் இருந்தார்.

कपालनेत्रान्तरलब्धमार्गैर्ज्योतिः प्ररोहैरुदितैः शिरस्तः ।
मृणालसूत्राधिकसौकुमार्यां बालस्य लक्ष्मीं ग्लपयन्तमिन्दोः ॥४९॥

शिरस्तः - பிரம்மரந்த்ரத்தினின்றும், उदितैः - வெளிக்கிளம் பியவைகளும், कपाल - नेत्र - अन्तर - लब्ध - मार्गैः - மண்டையோட் டின் கண்வழியே வெளிவந்தவைகளுமான, ज्योतिः प्ररोहैः - ஒளிக்கதிர்களால், मृणाल-सूत्र-अधिक-सौकुमार्याम् - தாமரை நூலினை விஞ்சிய மென்மையுடைய, बालस्य इन्दोः - பிறைச்சந்திரனின், लक्ष्मीम् - ஒளியை, ग्लपयन्तम् - மங்கச் செய்கின்ற, त्रियंबकं ददर्श - சிவபிரானைக் கண்டாள்.

(க-து) சிரஸின் உச்சிப்பகுதியை ப்ரம்மரந்த்ரம் என்பர் யோக நூலார். மிகநுட்பமான கண்களுக்குப் புலனுகாத த்வாரம் இங்கு இருப்பதாகக் கூறுவர். யோகாப்யாஸம் செய்து, முதிர்ச்சி பெற்ற வர்கள், பிராணுயாமம் செய்து, தம்மிடமுள்ள தேஜஸை - ஒளியை- ஸுஷும்ன நாடி வழியாகச் செலுத்தி, நாபி, ஹ்ருதயம், புருவங் களின் இடைவெளி இவற்றின் மூலம் மேலே கொண்டு வந்து, முடி

வில் ப்ரம்மரந்த்ரம் வழியாக வெளியில் விடுவர். அவ்வாறு ஒளி வெளி வருதல் கைவரப் பெறின், ஸித்தர் முதலான தேவர்களை நினைத்த பொழுது காணலாம். இவ்வொளி வெண்ணிறமானது. யோகிகளிற் சிறந்த சிவபிரான் தம்முள் இருந்த தேஜஸை பிரம்ம ரந்த்ர வழியே வெளிக் கொணரவும், அது அவர் தலையிலணிந் திருந்த மண்டை ஓட்டின் கண்கள் வழியே வெளி வந்து, மிக வெண்மையாக இருந்த காரணத்தால், அவர்தம் தலையிலணிந் திருந்த இளம் பிறையின் வெண்ணிறத்தையும் மங்கச் செய்தது.

कपोल - नेत्रान्तर - लब्धमार्गैः - ''மண்டை ஓட்டின் கண்க ளின் இடையே பெறப்பட்ட வழியுடைய'' என்பது பதப் பொருள் - சிவபிரான் பிரம்மதேவரது தலையைக்கிள்ளி, அம் மண்டையோட்டைத் தலையில் அணிந்திருந்தார். எனவே ப்ரம்மரந்த்ரத்தினின்றும், புறப்பட்ட ஒளி பிற இடங்களில் இம்மண்டையோடு மறைத்ததால் அதிலுள்ள கண்களின் வழியே வெளிவந்தது.

कपाल - नेत्र என்பதற்கு 'நெற்றிக்கண்' என்ற பொருள் கொண்டு, சிவபிரானது மூன்றுவது கண்வழியே வெளி வந்த ஆத்ம ஜ்யோதி - சந்திரனது ஒளியையும் மங்கச் செய் தது என்பர் ஒரு உரைகாரர்.

मनो नवद्वारनिषिद्धवृत्ति हृदि व्यवस्थाप्य समाधिवश्यम् ।
यमक्षरं क्षेत्रविदो विदुस्तमात्मानमात्मन्यवलोकयन्तम् ॥ ५० ॥

नव - द्वार - निषिद्ध - वृत्ति - (உடலிலுள்ள) ஒன்பது வாயில் வழி களிலும் (செல்லாது) தடுக்கப்பட்ட செயலுடையதும், समाधि-वश्यम् - தியானத்தினுல் தன் வசத்திலிருப்பதுமான, मनः - மனத்தை, हृदि - ஹ்ருதயத்தில், व्यवस्थाप्य - நிறுத்தி, क्षेत्र-विदः - அறிஞர்கள், यम् - எவரை, अक्षरम् - அழிவற்றவராக, विदुः - அறிகின்றனரோ, तम् - அந்த, आत्मानम् - பரமாத்மாவை, आत्मनि - தம்மிடம், अवलोकयन्तम् - காண்பவருமான, त्र्यम्बकं ददर्श - சிவபிரானைக் கண்டான், மன்மதன்.

(க-து) மனம் உடலிலுள்ள ஒன்பது வாசல் வழியே புறத்துள்ள பொருளுடன் சேருகின்றது. மனத்தை அடக்க இவ்வொன்பது வாயில்களையும் அடைக்க வேண்டும். அவ்வழியே மனம் செல்லாது தடுக்க வேண்டும். சிவபிரான், தியானத்தினால் தனக்கு அடங்கியுள்ள மனத்தை புறத்தே செல்ல விடாமல் தடுத்து, அதற்கு உரிய தான ஹ்ருதயத்திலேயே நிறுத்தி அழிவற்ற ஆத்மாவை தம்மிடம் கண்டு கொண்டிருந்தார்.

नवद्वार . . . . கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, மூக்குத்வாரங்கள், வாய் முதலியன - ஒன்பது வாயில்கள். मनः हृदि व्यवस्थाप्य - ஹ்ருதயத்தை மனம் நிற்கும் இடமாகக் கூறுவர்.

यतो निर्याति विषयान् यस्मिंश्चैवप्रलीयते । हृदयं तद्विजानीयान्मनसः स्थितिकारणम् ॥ என்பதனையும், मनोहृदि निरुध्य च - என்ற கீதைப் பகுதியையும் காண்க. क्षेत्र-विदुः—क्षेत्रं-உடல்; உடலை அறிந்தவர்கள். உடல் வேறு ஆத்மா வேறு எனப்பகுத்து அறிந்தவர்கள் என்பது கருத்து. आत्मानं आत्मनि अवलोकयन्तम्-இதற்கு இரண்டு வகையில் பொருள் கூறலாம். ''அந்தர்யாமியான பரமாத்மாவை, தம்மிடம் காண்பவர்'' என்பது ஒன்று. ''தம்மைத் தவிர வேறு ஒரு ஆத்மா இல்லாததால் பரமாத்மாவும் தாமும் ஒன்றே எனக் காண்பவர்'' என்பது மற்றொன்று.

तस्मादेवंवित् शान्तो दान्तः उपरतस्तितिक्षुः समाहितो भूत्वा आत्मन्येवात्मानं पश्यति सर्वमात्मानं पश्यति (பிருஹதாரண்யகம் 6.4.23) என்பதனைக் காண்க.

இவ்வாறு சுலோகங்களாலும் கவி, யோகியின் நிலையிலுள்ள சிவபிரானது திவ்யவடிவம் ரஸிகர்களின் மனத்தில் தெளிவாகப் புலனாகும்படி வர்ணித்திருப்பது கவனிக்கத்தக்கது.

स्मरस्तथाभूतमयुग्मनेत्रं पश्यन्नदूरान्मनसाप्यधृष्यम् ।
नालक्षयत्साध्वससन्नहस्तः स्रस्तं शरं चापमपिस्वहस्तात् ॥ ५१॥

स्मरः - மன்மதன், तथाभूतम् - அவ்வாறு இருப்பவரும், मनसा - अपि - மனத்தினலும் கூட, अधृष्यम् - எதிர்க்கமுடியாத வருமான, अयुग्म-नेत्रम्-சிவபிரானை, अदूरात्-சமீபத்தில் (நின்று), पश्यन् - கண்டு, साध्वस - सन्न - हस्तः - அச்சத்தினல் சோர்ந்த கைகளையுடையவனுக, स्व - हस्तात् - தன் கையினின்றும், स्रस्तम् - (தானே) நழுவிய, शरम् - அம்பையும், चापं - अपि - வில்லேயும், न अलक्षयत् - உணரவில்லை.

(க-து) இத்தகைய யோக நிலையிலிருந்த சிவபிரானை மிக அருகில் நின்று கண்டான் மன்மதன். இவரை வெல்லலாம் என மன்மதன் தன் மனதில் நினைப்பதற்கும் முடியாதபடி மன உறுதியுடையவராகக் காணப்பட்டார் அவர். அவருடைய நிலையையும், தான் வெற்றி பெற முடியாதென்ற எண்ணமும் அவன் மனதில் பெரும் அச்சத்தை உண்டாக்கின. கைகள் பலமிழந்து சோர்ந்தன. கைகளில் படிந்திருந்த அம்பும் வில்லும் தாமே தரையில் விழுந்துள்ளன என்பதையும் மன்மதன் உணரவில்லை.

तथाभूतम् - சிவபிரானது நிலை வர்ணனைக்கு எட்டாதெனக் காட்ட 'அப்படியிருந்த' எனக்கூறினர். मनसा अपि अधृष्यम् - சிவபிரானை வெல்வதென்பது மனத்தில் நினைக்கவும் முடியாத காரியம். अयुग्म नेत्रः - युग्म - இரண்டு. अयुग्म - இரண்டல்லாத, ஒற்றைப்படையான அதாவது மூன்று. नेत्र - கண்கள் - மூன்று கண்களையுடையவர் சிவபிரான்.

निर्वाण भूयिष्ठमथास्यवीर्यं सन्धुक्षयन्तीव वपुर्गुणेन ।
अनुप्रयाता वनदेवताभ्यामदृश्यत स्थावरराजकन्या ॥ ५२ ॥

अथ - பிறகு, निर्वाण भूयिष्ठम् - பெரும்பாலும் அழிந்து போன, अस्य वीर्यम् - மன்மதனுடைய பலத்தை (உத்ஸாகத்தை), वपुः - गुणेन - தன் சரீர அழகினல், संधुक्षयन्ती - इव -

தூண்டுகின்றவள் போல், वन - देवताभ्याम् - இரண்டு வன தேவதைகளால், अनुप्रयाता - பின் தொடரப்பட்டு, स्थावर - राज - कन्या - பார்வதி, अदृश्यत - (அங்கே) காணப்பட்டாள்.

(க-து) மன்மதன் மனம் திகைத்து கைகள் சோர்ந்து நின்ற அச்சமயத்தில் இழந்து போன அவன் மனத்திற்கு தன் அழகினால் ஊக்கம் அளிப்பவள் போல், பார்வதி தன்னிரு தோழிகளுடன் அங்கு வருவதை மன்மதன் கண்டான்.

वीर्यं - பலம், சரீரபலம், மனோபலம், உத்ஸாஹம் இவற்றைக் குறித்தது. மன்மதன் இவை எல்லாவற்றையும் பெரும்பாலும் இழந்துவிட்டான். சிறிதே பலம் அவனிடம் இருந்தது.

वपुर्गुणेन सन्धुक्षयन्ती - சிறிய நெருப்பும் சரியானபடி உபகரணங்களால் வளர்வது போல், மன்மதனது மனோதைர்யம் பார்வதியின் அழகைக் கண்டவுடன் பலம் பெறத் தொடங்கியது. தனது வில்லின் குணத்தால் (நாணால்) பெற முடியாததைப் பார்வதியின் சரீர குணத்தினால் (அழகினால்) பெறமுடியும் என நம்பிக்கை அவன் மனத்தில் உண்டாயிற்று. சுலோகம் 57 - காண்க.

वपुर्गुणः - வடிவினழகு.

वनदेवताभ्याम् - ஓஷதிபிரஸ்தத்தில் இருக்கும் ஸ்த்ரீகள் யாவரும் வனதேவதைகள். எனவே பார்வதியின் தோழிகளாக அவருடன் வந்தவர்களும் வனதேவதைகளே. ஜயா விஜயா என்று மல்லிநாதரும், விஜயா மாலிநீ என்று நாராயணரும் அவர்களது பெயர்களைக் கூறுவர். இனிவரும் நான்கு சுலோகங்கள் பார்வதியை வர்ணிப்பவை.

अशोकनिर्भर्त्सितपद्मरागमाकृष्टहेमद्युतिकर्णिकारम् ।
मुक्ताकलापीकृत सिन्धुवारं वसन्तपुष्पाभरणं वहन्ती ॥ ५३ ॥

**अशोक - निर्भर्त्सित - पद्म - रागम्** - (நிறத்திஞல்) சிவப்பு ரத்னங்களை வென்ற அசோகமலர்களையுடையதும், **आकृष्ट - हेम - द्युति - कर्णिकारम्** - தங்கத்தின் நிறத்தைக் கவர்ந்துள்ள கர்ணிகாரமலர் நிறைந்ததும், **मुक्ता कलापीकृत - सिन्दुवारम्** - முத்து மாலையாக அமைந்த ஸிந்து வார மலருடையதுமான, **वसन्त - पुष्प - आभरणम्** - வஸந்தகால மலர்களாலான அணியினை, **वहन्ती** - அணிந்தவளாக, **अदृश्यत** - பார்வதி அங்கு (காணப் பட்டாள்) தோன்றிஞள்.

(க-து) பார்வதி வஸந்த ருதுவிலே தோன்றிய மலர்களையே ஆபரணங்களாக அணிந்திருந்தாள். சிவப்புரத்னம் பதிந்த ஆபரணங்களணிய வேண்டிய இடங்களில் சிவந்த அசோக மலரும் தங்க நகைகளின் ஸ்தானத்தில் பொன்னிறமான கர்ணிகார மலரும் இருந்தன. ஸிந்துவாரமலர் முத்துமாலையாக உதவியது. பார்வதி வேறு நகை எதுவும் அணியவில்லை.

**अशोक निर्भर्त्सित - पद्मरागम्** - 'அசோக மலரால் அச்சுறுத்தப் பட்ட சிவப்புரத்னமுடையதும்' என்பது பதப்பொருள். சிவப்பு ரத்னங்களுக்குப் பதிலாக சிவந்த அசோக மலர்கள் அணியப்பட்டன. **आकृष्टहेमद्युति कर्णिकारम्** - 'கவரப்பட்ட தங்கத்தின் நிறமுடைய கர்ணிகாரமலருடையதும்' என்பது பதப் பொருள். கர்ணிகாரம் தமிழில் கோங்கு என்பர். **सिन्दुवार** - நீர்ப்புங்கமரம். இதன் மலர் உருண்டு வெண்ணிறமாக இருக்கும். **वसन्तपुष्पाभरणम्** -வஸந்தகால மலர்களே ஆபரணங்களாக இருந்தன. பிற அணிகளைப் பார்வதி உபயோகிக்கவில்லை என்பது குறிப்பு.

**आवर्जिता किञ्चिदिव स्तनाभ्यां वासो वसाना तरुणार्करागम् ।**
**पर्याप्तपुष्पस्तबकावनम्रा सञ्चारिणी पल्लविनीलतेव ॥ ५४ ॥**

**स्तनाभ्याम्** - ஸ்தனங்களாலே, **किंचित् - इव** - சிறிதே, **आवर्जिता** - தாழ்ந்த மேனியுடையவளும், **तरुण - अर्क - रागम्** - இளம்

சூரியன் நிறம் போல் செந்நிறமுடைய, **वासः** வஸ்திரத்தை, **वसाना** - அணிந்திருப்பவளும், **पर्याप्त - पुष्प - स्तबक - अवनम्रा** - நன்கு மலர்ந்த பூங்கொத்திஞல் வணங்கியுள்ள, **पल्लविनी** - தளிரையுடைய, **सञ्चारिणी** - நடமாடுகின்ற, **लता इव** - கொடி போலிருப்பவளுமாக, **अदृश्यत** - (பார்வதி) காணப்பட்டாள்.

(க-து) ஸ்தன பாரத்திஞல் சிறிதே மேனி துவள இளம் சூரியன் போல் சிவந்த உடையுடுத்திய பார்வதி, மலர்ந்த பூங்கொத்திஞல் வளைந்து சிவந்த தளிர்களையுடைய மெல்லிய பூங்கொடி நடந்து வருவது போல் அங்கு வந்தாள்.

பார்வதிக்குக் கொடி உபமானம். செறிந்த ஸ்தனங்களுக்கு மலர்ந்த பூங்கொத்துகளும், செந்நிறவஸ்திரத்திற்கு சிவந்த தளிர்களும் உபமானங்கள். கொடிநடமாடாதாயினும் பார்வதி நடந்துவருமழகைக்காட்ட கொடிக்கு **सञ्चारिणी** - நடந்து வருகின்ற - என்ற அடைமொழி கொடுத்தார் கவி.

இதேபோல் 'நடமாடும் தீபஜ்வாலை போல' என இந்துமதிக்கும் உபமானத்தைக் கூறிஞர் கவி ரகுவம்சத்தில் - **सञ्चारिणी दीपशिखेव रात्रौ यं यं व्यतीयाय नरेन्द्रकन्या** - ஸர்க்கம் 6 சுலோகம் 67 காண்க - **आवर्जिता** என்ற இக்சுலோகத்தின் கருத்தை இனிய தமிழ்க் கவிதையில் ஒரு ரஸிகர் கூறியிருப்பதனையும் காண்க:

> காலைக் கதிர் வண்ணம் காட்டுகின்ற செஞ்செவிய
> சேலை உடுத்திச் செறிந்த தனபாரம்
> தள்ளத்துவண்டு, தழைத்த மலர்க்கொத்தின்
> கொள்ளையிலே முன்ஞேக்கிக் குழைந்து நடந்து வரும்
> வள்ளியென வந்தாள் வரைமகளும் ஈசன் முன்.

**स्रस्तां नितम्बादवलम्बमाना पुनः पुनः केसरदामकाञ्चीम् ।**
**न्यासीकृतां स्थानविदा स्मरेण मौर्वीं द्वितीयामिव कार्मुकस्य ॥ ५५ ॥**

**स्थान - विदा** - இடம் அறிந்த, **स्मरेण** - மன்மதனால், **न्यासीकृताम्** - அடைக்கலமாக வைக்கப்பட்ட, **कार्मुकस्य** - தனது வில்லின், **द्वितीयाम्** - இரண்டாவது, **मौर्वीम्** - **इव** - நாண் கயிறு போலிருக்கின்றதும், **नितम्बात्** - தன் இடையினின்றும், **स्रस्ताम्** - நழுவுகின்றதுமான, **केसर - दाम - काञ्चीम्** - மகிழம்பூ மாலையாலான மேகலையை, - **पुनः पुनः** - அடிக்கடி, **अवलम्बमाना** - கையினால் தாங்கிக் கொண்டு, **अदृश्यत** - (பார்வதி) அங்கு தோன்றினாள்.

(க-து) பார்வதி தனது இடையில் மகிழம்பூவினாலான ஒரு மாலையை மேகலையாக (ஒட்டியாணம் போல்) அணிந்திருந்தாள். அவள் நடக்க நடக்க அம்மாலை அவளது இடையினின்றும் நழுவியது. அவ்வாறு இடம் விட்டு நழுவிய, அம்மாலையை அடிக்கடித் தன் கையினால் தாங்கிக் கொண்டு சென்ற பார்வதி, அங்கு தோன்றினாள். மன்மதனது வில்லிற்கு மற்றொரு நாண்கயிறு போன்ற அம்மகிழம்பூ மாலையைத் தக்க ஸமயத்தில் உபயோகிக்க விரும்பி தகுந்த இடத்தில் பாதுகாப்பைக் கருதி அடைக்கலப் பொருளாக பார்வதியினிடையில் வைத்திருந்தான் போலும் என உத்ப்ரேக்ஷித்தார் கவி.

**वसन्तपुष्पाभरणं वहन्ती** - என்று கூறியதற்கேற்ப - மகிழம்பூ மாலையே பார்வதிக்கு மேகலையாக இருந்தது.

**मौर्वीं द्वितीयामिव** வில்லாளிகள் தங்களது நாண்கயிறு அறுமாயின் உடனே உபயோகிக்க மற்றொன்றை தக்க பாதுகாப்புடன் தக்க இடத்தில் ஆபத்திலே உபயோகிக்கப்படும் பொருள் போல் வைத்திருப்பர்; மன்மதனுக்கு இம்மாலை இரண்டாவது நாண் கயிறாக இருந்தது. காதலைத் தூண்டுவதில் இம்மாலையும் சக்தியுடையதாகையால் இதனை மன்மதனது நாண்கயிறு என உத்ப்ரேக்ஷித்தார்.

**न्यास** - அடைக்கலப்பொருள். **न्यासीकृत** - அடைக்கலமாக வைக்கப்பட்ட என்பது பதப்பொருள்.

स्थानविदा - இடம் அறிந்த மன்மதனால்; எந்த இடத்தில் வைத்தால் தான் மறுபடியும் எளிதில் உபயோகிக்க முடியுமோ அத்தகைய இடமறிந்தவன் மன்மதன். பார்வதியின் மேனியில் இருப்பதே இம் மாலைக்கு அழகையும் சக்தியையும் தரும் என்று அறிந்தவன்.

सुगन्धिनिश्श्वासविवृद्धतृष्णम् बिम्बाधरासन्नचरं द्विरेफम् ।
प्रतिक्षणं संभ्रमलोलदृष्टिर्लीलारविन्देन निवारयन्ती ॥ ५६ ॥

सुगन्धि - निःश्वास - विवृद्ध - तृष्णम् - நறுமணமுள்ள (பார்வதியின்) மூச்சுக்காற்றிலே அதிகம் ஆசையுடையதும், बिम्ब - अधर - आसन्नचरम् - கோவைப்பழம் போன்ற (அவளது) உதட்டின் அருகிலே ஸஞ்சரிக்கின்றதுமான, द्विरेफम् - வண்டை, प्रतिक्षणम् - ஒவ்வொரு க்ஷணமும், संभ्रम - लोल - दृष्टिः - அச்சத்தினால் அலைகின்ற விழியுடையவளாக, लीला - अरविन्देन - (தன் கையிலுள்ள) அழகிய தாமரை மலரால், निवारयन्ती - தடுக்கின்ற, अदृश्यत - பார்வதி அங்கு தோன்றினாள்.

(க-து) பார்வதியின் மூச்சுக்காற்று நறுமணமுடையதாக இருந்தது. எனவே அதில் அதிகம் விருப்பமுற்ற வண்டு கோவைப்பழம் போன்ற அவளது உதட்டருகே அடிக்கடி வட்டமிட்டுத் தொந்தரவளித்ததால் பார்வதி தன் கையில் மன மகிழ்ச்சிக்காக வைத்திருந்த தாமரை மலரால் அதனை தடுத்துக் கொண்டிருந்தாள்.

सुगन्धि ...... तृष्णम् - உத்தம ஜாதி ஸ்த்ரீகளின் மூச்சுக் காற்று நறுமணமுடையதாக இருக்கும் என ஸாமுத்ரிகா சாஸ்த்ரம் கூறும் - बिम्बम् - கோவைப்பழம். சிவந்த நிறம், வடிவம், மென்மை இவற்றினைக் கருதி கோவைப்பழத்தை பெண்களின் உதட்டிற்கு உபமானமாகக் கூறுவர். संभ्रम - அச்சம் அல்லது ஒரு வகை பரபரப்பு; அச்சத்தினால் நால் புறமும் கண்ணேக்கு செல்வதால் அலைகின்ற - என்ற

அடைமொழி பார்வைக்குத் தரப்பட்டது. लीला - அழகு, மனமகிழ்ச்சி. लीलारविन्द - மனமகிழ்ச்சிக்காக கையிலே வைத்துள்ள தாமரைமலர்.

तां वीक्ष्य सर्वावयवानवद्यां रतेरपि ह्रीपदमादधानाम् ।
जितेन्द्रिये शूलिनि पुष्पचापः स्वकार्यसिद्धिं पुनराशशंसे ।। ५७।।

सर्व - अवयव - अनवद्याम्-அவயவங்கள் யாவற்றிலும் சிறிதும் குறையற்றவளும், रतेः अपि - ரதிக்கும், ह्री - पदम् - வெட்கத்தை, आदधानाम् - உண்டாக்குபவளுமான, - ताम् அவளை, वीक्ष्य - கண்டு, पुष्प - चापः - மன்மதன், जित - इन्द्रिये - புலன்களை அடக்கிய, शूलिनि (अपि) சிவபிரானிடத்திலும், स्व - कार्य - सिद्धिम् - தனது முயற்சிக்கான வெற்றியை, पुनः - மறுபடியும், आशशंसे - விரும்பினான்.

(க-து) பார்வதி, பரிபூர்ணமான அழகுடையவள். அவளது அவயவங்கள், எத்தகைய குறையும் கூறமுடியாதபடி எழில் பெற்றிருந்தன. அவளுடைய அழகும் நடையும் மற்ற செயல்களும், அழகில் சிறந்தவள் எனும் புகழ் பெற்றிருந்த ரதியையும் வெட்கமுறச் செய்தன. சிவனைத் தான் வெல்லமுடியாதென முன்பு எண்ணியிருந்த மன்மதனும் அத்தகைய பார்வதியைக் கண்டவுடன் இவளது அழகைக் கொண்டு சிவபிரானை வசீகரிக்கலாம் என நம்பிக்கை கொண்டான்.

ह्री - पदम् - 'வெட்கத்திற்கான ஓர் இடத்தை என்பது பதப் பொருள். பார்வதியைக் கண்டு, அண்மையிலிருந்த ரதி மனத்தில் வெட்கமுற்றதை மன்மதன் கவனித்தான் போலும்.

भविष्यतः पत्युरुमा च शम्भोः समाससाद प्रतिहारभूमिम् ।
योगात् स चान्तः परमात्मसंज्ञं दृष्ट्वा परं ज्योतिरुपारराम ।।५८।।

उमा - च - பார்வதியும், पत्युः- கணவராக, भविष्यत - ஆகப் போகின்ற, शम्भोः - சிவபிரானது. प्रतिहार - भूमिम् - வாசல் இடத்தை, समाससाद - அடைந்தாள். सः- च - சிவபிரானும், अन्तः - ஹ்ருதயத்துள், परमात्म - संज्ञम् - பரமாத்மா எனப் பெயர் பெற்றுள்ள, परम् ज्योतिः - சிறந்த ஒளியை, दृष्ट्वा - கண்ட பின், योगात् - தியானத்தினின்றும், उपरराम - ஓய்ந்தார்.

(க-து) பார்வதி, வருங்காலத்தில் தனக்குக் கணவராகப் போகின்ற சிவபிரானது ஆச்ரமத்தின் வாசலை அடைந்தாள். அதே சமயத்தில் சிவபிரான் தமது ஹ்ருதயத்தில் ஒளி வடிவிலுள்ள பரமாத்மாவினை யோகத்திஞல் கண்டபின், தியானத்தினின்றும் திரும்பினுர்.

उमा च - स च - என்ற இரண்டு चकार ங்களும் பார்வதியின் வரவும் சிவபிரானது த்யானத்தின் முடிவும் ஒரே ஸமயத்தில் நிகழ்ந்ததைக் காட்டும்.

ततो भुजङ्गाधिपतेः फणाग्रैरधः कथञ्चिद्धृतभूमिभागः ।
शनैः कृतप्राणविमुक्तिरीशः पर्यङ्कबन्धं निबिडं बिभेद ॥ ५९ ॥

ततः - பிறகு भुजङ्ग - अधिपतेः - ஸர்ப்பங்களின் தலைவனை ஆதிசேஷனுடைய, फण - अग्रैः - படங்களின் சிகரங்களால், अधः - கீழே, कथंचित् - மிகவும் ச்ரமத்துடன், धृत - भूमि - भागः - தாங்கப்பட்ட பூமியுடையவரும், शनैः - மெதுவாக, कृत- - प्राण - विमुक्तिः - (அடக்கியிருந்த) பிராணவாயுவை வெளியிலே - விடுத்தவருமான, ईशः - சிவபிரான், निबिडम् - உறுதியான पर्यङ्क बन्धम् - வீராஸனத்தை, बिभेद-கலைத்தார் (தளர்த்திஞர்).

(க-து) சிவபிரான் இதுவரை பிராணவாயுவை அடக்கி வைத்திருந்தார். த்யானம் முடிந்தவுடன், யோகசாஸ்திரங்களிலே கூறியபடி, அவ்வாயுவை மெதுவாக விடுத்தார். பிராணுயாமம் செய்தபொழுது அவரது உடலின் கனம் புலப்படாது இருந்தது, அதனை விடுத்தபொழுது உடலில் பாரம் முழுவதும் பூமியில் செல்ல

அப்பூமியை ஆதிசேஷன் தனது தலைகளால் மிக கஷ்டப்பட்டுத் தாங்கினான். சிவபிரானும் தான் இதுவரை அமர்ந்திருந்த வீராஸனத்தைத் தளர்த்தினார்.

**तस्मै शशंस प्रणिपत्य नन्दी शुश्रूषया शैलसुतामुपेताम् ।**
**प्रवेशयामास च भर्तुरेनां भ्रूक्षेपमात्रानुमतप्रवेशाम् ॥ ६० ॥**

**नन्दी** - நந்திகேசுவரன், **तस्मै** - சிவபிரானுக்கு, **प्रणिपत्य** - நமஸ்காரம் செய்தபின், **शुश्रूषया** - பணிவிடை செய்ய விருப்பத்தினால், **उपेताम्** - வந்திருக்கின்ற, **शैल - सुताम्** - பார்வதியைப்பற்றி, **शशंस** - கூறினான்; **भर्तुः** - (தனது) எஜமானரான சிவபிரானுடைய, **भ्रू - क्षेपमात्र - अनुमत - प्रवेशाम्** - புருவ அசைவினால் மாத்திரமே அனுமதிக்கப்பட்ட உட்புகுதலையுடைய, **एनाम्** - அவளை, **प्रवेशयामास - च** - (ஆச்ரமத்துள்) அனுப்பினான்.

(க-து) பார்வதி ஆச்ரமத்தின் வாசலை அடைந்தவுடன், நந்திகேசுவரன் உள்ளே சென்று, வணங்கி, பணிவிடை செய்யப்பார்வதி (தினந்தோறும் வருவது போல, அன்றும்) வந்திருப்பதாகச் சிவபிரானிடம் கூறினான். பார்வதி உள்ளே வருதலை சிவபிரான் தமது புருவ அசைப்பினால் அங்கீரித்ததும், நந்திகேசுவரன் அவளை ஆச்ரமத்துள் அனுப்பினான்.

**भ्रूक्षेप . . . . प्रवेशाम्** - **प्रवेश** - உட்புகுதல்; பார்வதி ஆச்ரமத்துள் புகலாம் - வரலாம் - என்பதைச் சிவபிரான் தமது புருவத்தைச் சிறிதே அசைத்துத் தெரிவித்தார். **शुश्रूषया उपेताम्** - 'பிரதிதினம் வருவதுபோல் அன்றும் பார்வதி பணிவிடை செய்யும் விருப்பத்தினால் வந்திருப்பவளாக' பார்வதி தினந்தோறும் வந்தாள் என்பதை **गिरिशमुपचचार प्रत्यहम् सा सुकेशी** என (ஸர்க்கம் 1 சுலோகம் 60) கவி கூறியுள்ளதைக் காண்க.

**तस्याः सखीभ्यां प्रणिपातपूर्वं स्वहस्तलूनः शिशिरात्ययस्य ।**
**व्यकीर्यत त्र्यम्बकपादमूले पुष्पोच्चयः पल्लवभङ्गभिन्नः ॥ ६१ ॥**

तस्याः - பார்வதியின், सखीभ्याम् - தோழிகள் இருவராலும், स्व - हस्त - लूनः தமது கைகளாலே பறிக்கப்பட்டதும், पल्लव - भङ्ग - भिन्नः - இளம்தளிர்கள் கலந்ததுமான, शिशिर - अत्यय-पुष्प - उच्चयः - வஸந்த ருதுவின் மலர்க்குவியல், त्रि - अम्बक - पाद - मूले - சிவபிரானது பாதங்களுக்கு அருகில், प्रणिपात - पूर्वम् - வணங்கிய பின், व्यकीर्यत - தூவப்பட்டது.

(க-து) பார்வதியின் தோழிகளான விஜயா மாலினீ என்ற இருவரும், வஸந்த ருதுவில் புதிதே மலர்ந்த புஷ்பங்களைச் சிவபிரானது பாதத்தில் வணங்கி வைத்தனர். மணமுள்ள மலர்கள் அழகிய தோற்றமும் உடையனவாக இருக்கவேண்டுமெனக்கருதி, பலநிற முள்ள இளந்தளிர்களை அவற்றுடன் கலந்திருந்தனர். சிவபிரானிடம் உள்ள பக்தியால் மலர்களைப் அப்பெண்கள் தாங்களே கொய்திருந்தனர். பிறரைக் கொண்டு பறிக்கப்பட்டவை அல்ல அவை.

இச்சுலோகம் பார்வதி சிவபிரானை வணங்குவதற்கு முன் அவளது தோழிகள் வணங்கி புஷ்பாஞ்ஜலி அர்ப்பணம் செய்ததைக் கூறுகின்றது. सखीभ्यां पुष्पोच्चयः व्यकीर्यत- என அன்வயிக்க. शिशिर - பனிக்காலம். अत्यय - முடிவு. शिशिरात्यय - பனிக்காலத்தின் முடிவிலுள்ள வஸந்த காலத்தைக் குறித்தது இச்சொல். उच्चय - ஸமூஹம் - குவியல். पुष्प - उच्चय - என்பது இங்கு புஷ்பங்களின் நிறைவைக் காட்டியது.

**उमापि नीलालकमध्यशोभि विस्रंसयन्ती नवकर्णिकारम् ।**
**चकार कर्णच्युतपल्लवेन मूर्ध्ना प्रणामं वृषभध्वजाय ॥ ६२ ॥**

उमा - अपि - பார்வதியும், नील - अलक - मध्य - शोभि - கறுத்த குந்தளத்திடை விளங்குகின்ற, नव-कर्णिकारम् - புதிய கர்ணிகார மலரை, विस्रंसयन्ती - (தன் இடத்தினின்றும்) நழுவும்படி செய்துகொண்டு, कर्ण - च्युत - पल्लवेन - காதினின்றும் நழுவிய தளிரையுடைய मूर्ध्ना - தலையினால், वृषभ - ध्वजाय - சிவபிரானுக்கு, प्रणामम् - நமஸ்காரத்தை, चकार - செய்தாள்.

(க-து) தோழிகள் வணங்கிய பின், பார்வதியும் சிவபிரானுக்கு நமஸ்காரம் செய்தாள். அவள் தன் சிரத்தை மிகவும் தாழ்த்தியதால் காதுகளின் மேல் வைத்திருந்த தளிர்கள் கீழே விழுந்தன. தலையில் கறுத்த குந்தளங்களிடையில் வைத்திருந்த புதிய கர்ணிகார மலரும் சிறிதே தளர்ந்து நழுவியது.

**वसन्तपुष्पाभरणं वहन्ती** - என முன்பு கூறியதற்கு ஏற்ப பார்வதி காதுகளின் மேல் பலநிறமுள்ள தளிர்களை தரித்திருந்தாள்.

'**नवकर्णिकारम्**' பொன்னிறமுள்ள இம்மலர் பார்வதியின் சிரஸில் கறுத்த குந்தளங்களின் இடையில் இருந்ததால் மிக அழகாக விளங்கியது. **अलक**-தலையின் முற்பகுதியிலுள்ள கேசம்.

இந்த சுலோகத்தில் நீண்ட ஒலியுள்ள உயிரெழுத்துக்கள் பலவிருக்கின்றன. எனவே சுலோகத்தைப் படிப்பதற்கான கால அளவும் சிறிது அதிகமாக இருப்பதுடன் மெதுவாகவே படிக்க இயலும். இவை எல்லாம் சேர்ந்து பார்வதி தனது சரீரத்தை வணங்கி மரியாதையுடன் மெதுவாக நமஸ்காரம் செய்வதை நமது மனக்கண்முன் தோன்றச் செய்கின்றன என்பதை ரஸிகர்கள் உணர்வார்கள்.

**अनन्यभाजं पतिमाप्नुहीति सा तथ्यमेवाभिहिता भवेन ।**
**न हीश्वरव्याहृतयः कदाचित्पुष्णन्ति लोके विपरीतमर्थम् ॥६३॥**

**अनन्य - भाजम्** - வேறு ஒரு ஸ்த்ரீயை (மனைவியாக) அடையாத, **पतिम्** - கணவனை. **आप्नुहि**-நீ அடையவேண்டும், **इति** - என்று, **तथ्यं एव** - உண்மையான விஷயத்தையே, **भवेन** - சிவபிரானால், **सा** - அவள், **अभिहिता** - கூறப்பட்டாள்; **ईश्वर - व्याहृतयः** - பெரியோர்களின் சொற்கள், **कदाचित्** - ஒரு

பொழுதும், लोके - இவ்வுலகில், विपरीतम् अर्थम् - பொய்யான பொருளை, न - पुष्णन्ति हि - தெரிவிக்காதன - அல்லவா?

(க-து) 'பார்வதி! உன்னைத்தவிர வேறு ஒரு ஸ்த்ரீயை மனைவியாக ஏற்காத கணவனை நீ அடையவேண்டும்'' என சிவ பிரான் கூறினார். அவர் கூறியதும் முற்றிலும் உண்மையானதே. பெரியோர்களின் வாக்கு ஒரு சமயமும் பொய்யாவதில்லை.

ஏனெனில் பிற்காலத்தில் பார்வதியை மணந்த சிவ பிரான் வேறு ஒருவரையும் மணக்கவில்லை.

**कामस्तु बाणावसरं प्रतीक्ष्य पतङ्गवद्वह्निमुखं विविक्षुः ।**
**उमासमक्षं हरबद्धलक्ष्यः शरासनज्यां मुहुराममर्श ॥ ६४ ॥**

कामः - तु - மன்மதனோ, बाण - अवसरम् - (தனது) அம்பை பிரயோகிப்பதற்கான ஸமயத்தை, प्रतीक्ष्य - எதிர்பார்த்து, पतङ्गवत् - விட்டில் பூச்சி போல், वह्नि - मुखम् - நெருப்பில், विविक्षुः - விழப் போகின்றவனாய், उमा - समक्षम् - பார்வதியின் எதிரில், हर - बद्ध-लक्ष्यः - சிவபிரானைக் குறிவைத்து, शरासन-ज्याम्- தன் வில்லின் நாண் கயிற்றை, मुहुः - அடிக்கடி (பலமுறை யும்), आममर्श - வருடினான்.

(க-து) மன்மதனும் தனது பாணத்தைப் பிரயோகிக்க, தக்க சமயத்தை எதிர்பார்த்து நெருப்பில் விழும் விட்டில் போல், சிவபிரா னது கோபாக்னியில் விழப்போகின்றவனாய், அவரையே குறி பார்த்துக்கொண்டு நாணை வருடிக்கொண்டு அம்பைத்தொடுப்ப தற்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தான்.

बाणावसरम् - சிவபிரானும் பார்வதியும் பரஸ்பரம் நெருங்கிப் பழகும் நேரமே தனது பாணத்தை பிரயோகிக் கத்தக்க தருணம் என்று எதிர்பார்த்து அதற்காகக் காத்திருந்தான்.

'पतङ्गवत्' இவ்வுபமானத்தினால் மன்மதனுக்கு பின் நிகழப்போவதை முன் கூட்டித் தெரிவிக்கின்றார் கவி.

'विविक्षुः' விழப்போகின்ற' என்று பொருள். விழவிரும்பு கின்ற என்ற பொருள் கொள்வது கூடாது. उमासमक्षम् - 'பார்வதியின் எதிரில்' - பார்வதி எதிரில் இருந்தது மன் மதனுக்கு உற்சாகமளித்தது. मुहुः आममर्श - இதனால் வில் லாளிகளின் ஸ்வபாவம் கூறப்பட்டது. குறி பார்க்குங்கால் நாணை வருடிக்கொண்டிருப்பது வில்லாளிகளுக்கு இயற்கை.

'वह्नि - मुखम्' 'நெருப்பின் வாயில்' - என்பது பதப்பொ ருள்; நெருப்பில் என்று கருத்து.

**अथोपनिन्ये गिरिशाय गौरी तपस्विने ताम्ररुचाकरेण।**
**विशोषितां भानुमतो मयूखैर्मन्दाकिनीपुष्करबीजमालाम् ॥ ६५ ॥**

अथ - (வணங்கிய) பிறகு, गौरी - பார்வதி, तपस्विने - தபஸ்வியான, गिरि - शाय - சிவபிரானுக்கு, ताम्र - रुचा - சிவந்த நிறமுள்ள, करेण - தன் கையினால், भानुमतः - சூரிய னுடைய, मयूखैः - கிரணங்களினால், विशोषिताम् - நன்கு உலர்த் தப்பட்ட, मन्दाकिनी - पुष्कर - बीज - मालाम् - ஆகாச கங்கையில் வளர்ந்த தாமரையின் மணிகளாலான மாலையை, उप - निन्ये - அளித்தாள்.

(க-து) வணங்கிய பின், பார்வதி, ஆகாச கங்கையிலுள்ள தாமரை மலர் விதைகளை வெய்யிலில் நன்கு உலர்த்தி தயாரிக்கப் பட்ட மணிமாலையைத் தனது சிவந்த கரத்திலே எடுத்துச் சிவபிரா னுக்கு அளித்தாள்.

अथ - பிறகு. சுலோகம் 62-இல் பார்வதி வணங்கினாள் என்று கூறப்பட்டது. அதன்பின் சிவபிரானது அருளும் மன்மதனுடைய முயற்சியும் இரண்டு சுலோகங்களில் கூறப் பட்டன. இந்த சுலோகத்தை 62-ஆவது சுலோகத்துடன் சேர்த்து, अथ - என்பதற்கு, 'வணங்கியபின்' என்று, பொருள் கொள்ளவேண்டும். तपस्विने - 'தவம் செய்கின்ற'

இவ்விசேஷணம் சிவபிரான் தாமரை மணிமாலையை பெறத் தகுதியுடையவர் என்பதைக் காட்டியது. मन्दाकिनी - . . . मालाम् - ஆகாச கங்கையில் வளர்ந்த தாமரைமணிகள் என்பதால் அவைகளின் தூய்மை புலப்படும். தாமரைக் காய்களினின்றும் விதைகளை - மணிகளை-எடுத்து வெய்யிலில் உலர்த்தி தொளையிட்டுக் கோத்து மாலைகளைச் செய்வர். இம்மாலைகள், அணிபவர்க்குத் தூய்மை அளிப்பன. ஜபம் செய்யும் காலத்திலும் இம்மாலையை உபயோகிப்பர். विशोषिताम् - 'உலர்த்தப்பட்ட'. அம்மாலை நன்கு தயாரிக்கப் பட்டுள்ளதென்பதும் உபயோகிப்பதைத் தவிர அதற்கு இனி செய்யவேண்டியது வேறு ஒன்றும் இல்லை என்பதும் இத ஞல் காட்டப்பட்டன. ताम्ररुचा करेण - 'சிவந்த கரத்திஞல்'. இதஞல் பார்வதியின் கையழகும் சிவபிரானது மனத்தில் காதல் உணர்ச்சியை உண்டாக்கும் அதன் ஆற்றலும் குறிப் பிடப்பட்டன.

प्रतिग्रहीतुं प्रणयिप्रियत्वात्त्रिलोचनस्तामुपचक्रमे च ।
सम्मोहनं नाम च पुष्पधन्वा धनुष्यमोघं समधत्त बाणम् ॥ ६६ ॥

त्रि - लोचनः - சிவபிரான், प्रणयि - प्रियत्वात् - அன்பர்களிடம் அன்புடையவராதலால், ताम् - அம்மாலையை, प्रतिग्रहीतुम् - ஏற்றுக்கொள்ள, उपचक्रमे - தொடங்கிஞர்; पुष्प - धन्वा - च - மன் மதனும், संमोहनं - नाम - ஸம்மோஹனம் (மனத்தை மயக்கு வது) எனப்பிரசித்தி பெற்றதும், अमोघम् - திண்ணமாகப் பயனளிப்பதுமான, बाणम् - அம்பை, धनुषि - வில்லில், समधत्त - தொடுத்தான்;

(க-து) சிவபெருமான் தம்மை நேசிப்பவர்களிடம் அன்புடை யவர். அவர்களது வேண்டுகோளை மறுக்காதவர். ஆதலால் பார்

வதி தந்த அன்பளிப்பான தாமரை மணிமாலையை, மறுக்காது ஏற்றுக்கொண்டார். இவ்வாறு பார்வதியும் சிவபிரானும் நெருங்கி இருக்கும் நேரமே சிவபிரானது மனத்தை மயக்குவதற்கேற்ற சமய மெனக் கருதி மன்மதன் ஒரு நொடியும் தாமதம் செய்யாது, ஸம் மோஹனம் என்ற அஸ்த்ரத்தை தன் வில்லில் பூட்டினன்

त्रिलोचनः - மூன்று கண்களையுடையவர், சிவபிரான். संमोहनम् - மனத்தை மயக்குவதில் திறன் பெற்ற ஓர் அஸ்த்ரம். तापनः, शोषणः, स्तम्भनः, उन्मादनः - என்ற வேறு நான்கு அஸ்த்ரங்களும் உண்டு. அவனுக்கு, द्रावणः, क्षोभणः, वशीकरणः, आकर्षणः, என நான்கைக் கூறுவர் நாராயணர். अमोघम् - ஸம்மோஹனாஸ்த்ரம். இதுவரை ஓரிடத்திலும் பலனளிக்காதிருந்த தில்லை; நிச்சயமாகப் பயனளிப்பது. 'उपचक्रमे च समधत्त च' இங்கு தொடர்ந்து தந்துள்ள இரண்டு चकारங்கள், சிவபிரான் பெற்றுக்கொள்ளத் தொடங்கியதும் மன்மதன் பாணத்தைத் தொடுத்ததும் ஒரே க்ஷணத்தில் நிகழ்ந்தனவென்பதைக் காட்டின. மன்மதன் ஒரு விநாடியும் தாமதிக்கவில்லை.

हरस्तु किञ्चित्परिलुप्तधैर्यश्चन्द्रोदयारम्भ इवाम्बुराशिः ।
उमामुखे बिम्बफलाधरोष्ठे व्यापारयामास विलोचनानि ॥ ६७ ॥

हरः - तु - சிவபிரானோ, चन्द्र - उदय - आरम्भे - சந்திரோதயத் தொடக்கத்தில், अम्बु - राशिः - इव - சமுத்ரம் (சிறிதே கலங்குவது) போல், किंचित् - கொஞ்சம், परिलुप्त - धैर्यः - மன உறுதி குறைந்தவராக, - बिम्ब - फल - अधर - ओष्ठे - கோவைப்பழம் போன்ற உதட்டையுடைய, उमा - मुखे - பார்வதியின் முகத்தில், विलोचनानि - (தமது மூன்று) கண்களையும், व्यापारयामास - செலுத்தினார்.

(க-து) சந்திரன் உதிக்கத் தொடங்கிய பொழுது கடலில் சிறிதே சலனமுண்டாவது போல், பார்வதி அருகில் இருந்ததால் சிவபிரான் மனத்தில் சிறிதே கலக்கமுண்டாயிற்று. (காதலுக்கு

வசப்பட்டது). எனவே அவர் தமது மூன்று கண்களாலும், கோவைப்பழம் போன்ற சிவந்த உதட்டழகு பெற்ற பார்வதியின் முகத்தை ஆவலுடன் நோக்கினார்.

**चन्द्रोदयारम्भे** - சந்திரன் நன்கு உதித்துவிட்டால் கடல் பொங்கிக் கொந்தளிக்கும். ஆனால் உதிக்கத் தொடங்கிய பொழுது சமுத்ரம் சிறிதே கலக்கமுறும். சிவபிரான் மனமும் சிறிதே மயக்கமுற்றதால் அதற்கேற்ப சந்திரன் உதயமாகத் தொடங்கியபொழுது உள்ள கடலையே உபமானமாகக் கூறினான். **बिम्बफलाधरोष्ठे** - சிவந்த நிறத்திலும், வடிவத்திலும் மெல்லிய ஸ்பர்சத்திலும் உதட்டிற்கு உபமானம் கோவைப்பழம். **अधरोष्ठ** - கீழ் உதடு. கீழ் மேல் உதடுகள் என்றும் பொருள் கொள்ளலாம். **विलोचनानि** 'மூன்று கண்களையும்' என்பதால் பார்வதியின் முகத்தைப் பார்ப்பதில் சிவபிரானுக்குள்ள ஆவல் புலனாகும். **विलोचनानि व्यापारयामास** - கண்களைச் (பார்த்தல் என்ற) செயலுடையதாகச் செய்தார் என்பது பதப்பொருள். ஆவலுடன் நோக்கினார் என்பது கருத்து.

**विवृण्वती शैलसुतापि भावमङ्गैः स्फुरद्बालकदम्बकल्पैः ।**
**साचीकृता चारुतरेण तस्थौ मुखेन पर्यस्तविलोचनेन ॥ ६८ ॥**

**शैल-सुता-अपि** - பார்வதியும், **स्फुरत्** - **बाल-कदम्ब-कल्पैः** - மலர்கின்ற புதிய கதம்ப மலர் போன்ற, **अङ्गैः** - அங்கங்களால், **भावम्** - எண்ணத்தை (காதலை), **विवृण्वती** - புலப்படுத்துகின்றவளாக, **पर्यस्त** - **विलोचनेन** - கடைக்கண்ணைக்கு உடையதும், **चारुतरेण मुखेन** - மிக அழகானதுமான முகத்துடன், **साचीकृता** - சிறிதே திரும்பியவளாக, **तस्थौ** - நின்றாள்.

(க-து) சிவபிரான் மாத்திரமே காதலைப்புலப்படுத்தினுர் என்ப தில்லை. பார்வதியும், சரீரம் முற்றிலும் தோன்றிய மயிர்க் கூச்சத் திஞல் தன் ஆசையைத் தெரிவித்துக் கொண்டு, சிறிதே தலை சாய்த் துத் திரும்பியவளாக, கடைக்கண்களால் சிவபிரானை நோக்கி நின்ருள்.

शैलसुता - மலைமகள்; பார்வதி. अपि-இது சிவபிரான் மாத் திரமல்ல 'பார்வதியும்' என்ற கருத்தைக் காட்ட வந்தது.

स्फुरत् - बाल कदम्ब - कल्पैः - பார்வதியின் உடல் முழுவதும் உணர்ச்சியின் மிகுதியால் மயிர்க்கூச்சம் உண்டாகி இருந் தது. அந்நிலையில் அவளது அங்கங்கள் அப்பொழுது மலர்ந்த புத்தம் புதிய கதம்பமலர் போல் இருந்தன. கதம்பமலரிலும் மயிரிழை போன்ற கேஸரங்கள் இருக்கு மாதலால் மயிர்க்கூச்சமுற்ற பார்வதியின் அங்கங்களுக்கு உபமானமாக கதம்பமலர் வந்தது.

கதம்பம் - ஒருவகை மரம். நீர்நிலையருகே வளர்வது. சிவப்பும் வெளுப்பும் கலந்த சிறிய புஷ்பங்களையுடையது. இதனைக் கடம்பம் என்றும் கூறுவர். கதம்ப மரத் தில் மலர்கள் அடியிலிருந்து நுனிமரம் வரை ஒரே ஸமயத் தில் தோன்றும். பார்வதியின் உடலிலும் மயிர்க்கூச்சம் சரீரம் முற்றிலும் ஒரே சமயத்தில் தோன்றியதால் அதற் கேற்ப சிறு புஷ்பங்களால் விளங்குகின்ற சிறிய கதம்ப மரத்தை உபமானமாகக் கூறினர் என்பர். कदम्ब - இச் சொல் மரத்தையும் குறிக்கும்.

अङ्गैः - கை, கன்னம் முதலிய அங்கங்களால்; पर्यस्त- विलो- चनेन - (கண்களின் கடைசியில்) செலுத்தப்பட்ட விழிக ளால்; கடைக்கண் நோக்குடையதுமான, साचीकृता - (சிவபி ரானை நேரிட நோக்காது) சிறிதே உடலைத் திருப்பிக் கொண்டவளாக, चारु - तरेण - முகம் முன்பே (चारु) அழகா

யிருந்தது. கடைக்கண்ணேக்கும் உடலின் சிறிது திருப்பமும் உடையதாக இருந்தபொழுதும் அவள் முகம், चारुतरेण அதிகம் அழகுடையதாயிற்று. साचिक्रिया चारुतरेण - என்பது நாராயணர் கொண்ட பாடம். இச்சொல் முகத்திற்கு விசேஷணமானது. 'திருப்புதல் என்ற செயலால் மிக அழகான' என்பது பதப்பொருள்.

**अथेन्द्रियक्षोभमयुग्मनेत्रः पुनर्वशित्वाद्बलवन्निगृह्य ।**
**हेतुं स्वचेतोविकृतेर्दिदृक्षुर्दिशामुपान्तेषु ससर्ज दृष्टिम् ॥ ६९ ॥**

अथ - பிறகு, अयुग्म - नेत्रः - சிவபிரான், वशित्वात् - புலனே அடக்கிப் பழகியவராதலால், इन्द्रिय - क्षोभम् - மனக்கலக்கத்தை, पुनः - மறுபடியும், बलवत्-உறுதியாக, निगृह्य-அடக்கி, स्व - चेतः - विकृतेः - தமது மனத்தின் வேறுபாட்டிற்கு, हेतुम् - காரணத்தை, दिदृक्षुः - காணவிரும்பியவராக, दिशाम् उपान्ते - திசைகளின் கோடிகளில், दृष्टिम् - பார்வையை, ससर्ज - செலுத்தினார்.

(க-து) சிவபிரான் தமது மனம் சலனமுற்றமைக்குக் காரணம் என்னவென்பதை அறியவேண்டி நான்கு திசைகளிலும் நோக்கினார்.

वशित्वात् - புலனே அடக்கியவராதலால் மனத்தை அடக்குவது அவருக்கு எளிதாக இருந்தது. दिशां उपान्तेषु ससर्ज दृष्टिम् - இயற்கையிலேயே தம்மனத்தை அடக்கியவராதலால் புறத்திலுள்ள காரணங்களால்தான் தம்மனம் நிலை தடுமாறி இருக்கவேண்டுமென நினைத்து அத்தகைய காரணங்களை அறியவிரும்பி நான்கு திசைகளிலும் வெகுதூரம் பார்த்தார். சூழ்நிலையும் மனம் மாறுதற்குக் காரணமாதலால் அதனை அறியவிரும்பினார் என்பது கருத்து.

स दक्षिणापाङ्गनिविष्टमुष्टिं नतांसमाकुञ्चितसव्यपादम् ।
ददर्श चक्रीकृतचारुचापं प्रहर्तुमभ्युद्यतमात्मयोनिम् ॥ ७० ॥

सः - அவர், दक्षिण-अपाङ्ग-निविष्ट-मुष्टिम् - வலது கடைக்கண் அருகில் வைத்த முஷ்டியுடையவனும், नत-अंसम् - சிறிது தழைந்த தோளுடையவனும், आकुञ्चित-सव्य - पादम् - சிறிது வளைக்கப்பட்ட இடது காலையுடையவனும், चक्रीकृत-चारु- चापम्- சக்ரம் போல் (தோன்றும்படி) நன்கு வளைக்கப்பட்ட அழகிய வில்லுடையவனும், प्रहर्तुम् - (தம்மை அம்பினல்) தாக்க, अभ्युद्यतम् - முயலுகின்றவனுமான, आत्म-योनिम् - மன்மதனை, ददर्श - பார்த்தார்.

(க-து) சுற்றிலும் நோக்கிய சிவபிரான், தம்மை அம்பினல் தாக்குவதற்குத் தயாராக இருந்த மன்மதனைப் பார்த்தார். அவன் தனது வில்லை சக்ரம் போல் வளைத்து இருந்தான். நாண்கயிற்றை இழுத்துப்பிடித்து அவனது வலதுகை முஷ்டி வலது கண்ணருகில் இருந்தது. இடது காலை மடக்கி வலது காலை முன்வைத்து, தோள்கள் சிறிதே தாழ, நின்றுகொண்டு குறிப்பார்த்துக்கொண்டிருந்தான்.

இச்சுலோகம் வில்லாளிகள் அம்பெய்வதற்கு முன் நிற்கக்கூடிய ‘ஆலீடம்’ என்ற நிலையைக் கூறுவதாக உரையாசிரியர்கள் கருதுகின்றனர். मुष्टि - மூடியகை. चक्रीकृत - நன்ருக இழுக்கப்பட்டுள்ளதால் நிமிர்ந்திருந்த வில்லும் சக்ரம் போல் வளைக்கப்பட்டிருந்தது. இதனல், அத்தகைய வில்லினின்றும் புறப்படும் பாணத்தின் வேகமும் பலமும் எப்படி இருக்கும் என்பதை ஊஹிக்கலாம்.

तपःपरामर्शविवृद्धमन्योर्भ्रूभङ्गदुष्प्रेक्ष्यमुखस्य तस्य ।
स्फुरन्नुदर्चिः सहसा तृतीयादक्ष्णः कृशानुः किल निष्पपात ॥७१॥

तपः - परामर्श - विवृद्ध-मन्योः - தவத்தின் இடையூற்றினல் மிக அதிகமான கோபமுடையவரும், भ्रू - भङ्ग-दुष्प्रेक्ष - मुखस्य - புருவ நெறிப்பினல் காணமுடியாத (அச்சமுண்டாக்கும்) முக முடைய வருமான, तस्य - அச்சிவபிரானது, तृतीयात् - மூன்ரு வது, अक्ष्णः - கண்ணிலிருந்து, स्फुरन् - ஒளியுடன் கூடியதும், उत् - अर्चिः - மேல் எழும் ஜ்வாலையுடையதுமான, कृशानुः - நெருப்பு, सहसा - உடனே, निष्पपात - किल - வெளிவந்தது.

(க-து) தன் தவத்திற்கு இடையூறு நிகழ்ந்ததை நினைந்து சிவ பிரான் மிகவும் கோபம் கொண்டார். புருவத்தை நெறித்தார். அந் நிலையில் அவர் முகமும் காண்போர் மனத்தில் அச்ச மூட்டுவதாக இருந்தது. அவரது மூன்ருவது கண்ணிலிருந்து, ஒளிர்கின்ற ஜ்வாலையுடன் கூடிய நெருப்பு திடீரெனப் புறப்பட்டது.

दुष्प्रेक्ष 'காண முடியாத'. அச்சம் விளைவிக்கின்ற என்பது கருத்து. स्फुरन् - திடீரென முதலில் ஒளிதோன்றியது, பின், அதுவே उदर्चि - ஜ்வாலையுடன் தென்பட்டது. निष्पपात किल - 'किल' என்ற சொல் இச்சம்பவம் யாவரும் அறிந்ததே எனக்காட்டியது.

**क्रोधं प्रभो संहर संहरेति यावद्गिरः खे मरुतां चरन्ति ।**
**तावत्स वह्निर्भवनेत्रजन्मा भस्मावशेषं मदनं चकार ॥ ७२ ॥**

प्रभो - பிரபுவே, क्रोधम् - கோபத்தை, संहर संहर - 'அடக்குங்கள், அடக்குங்கள்,' इति என, मरुताम् - தேவர்களின், गिरः - சொற்கள், खे - ஆகாயத்தில், यावत् - எந்த க்ஷணத்தில், चरन्ति - எழுந்தனவோ, तावत् - அதே க்ஷணத்தில், भव - नेत्र - जन्मा - சிவபிரானது கண்ணினின்றும் தோன்றிய, स वह्निः - அந்த நெருப்பு, मदनम् - மன்மதனை, भस्म - अवशेषम् - சாம்பல் மாத்திரமே எஞ்சியவனாக, चकार - செய்தது.

(க-து) மன்மதனுடன் தேவர்கள் பலரும் வந்து மறைந்து நின்று மன்மதனது முயற்சியின் பயனைக் காண ஆவலுடன் காத்தி

ருந்தனர். சிவபிரான் கோபமுற்றதைக் கண்ட அவர்கள், 'பிரபுவே கோபம் கொள்ளாதீர்கள்' என்று கூறிக்கொண்டிருக்கும் பொழுதே சிவபிரானது கண்ணினின்றும் தோன்றிய நெருப்பு மன்மதன் மேல் விழுந்து அவனை எரித்தது. அவன் நின்ற இடத்தில் அவன் சாம்பலே எஞ்சியிருந்தது.

'प्रभो' - 'சக்தியுடையவரே' - கோபத்தை அடக்கும் ஆற்றலும் அவருக்கு உண்டு என்பதைக்காட்ட வேறு சொல்லை உபயோகிக்காது இதனை உபயோகித்தனர். संहर - संहर - என இருமுறை கூறியது தேவர்களின் ஆவலையும் த்வரையையும் (அவசரத்தையும்) காட்டியது. यावत् - तावत् - இவ்விரண்டு சொற்களும், இரண்டு செயல்களும் - ஒரே க்ஷணத்தில் நிகழ்ந்தமையைக் காட்டின. தேவர்கள் கூறிய சொல் ஆகாயத்தில் செல்லுதல் என்ற செயலும், மன்மதனை எரித்தல் என்ற செயலும், ஒரே க்ஷணத்தில் நிகழ்ந்தன. ஒலியைவிட ஒளி வேகமாகச் செல்லுமாகையால் தேவர்கள் கூறிய வார்த்தை சிவபிரானை அடையுமுன்பே அவரது நெற்றிக் கண்ணினின்றும் புறப்பட்ட ஒளி - நெருப்பு - மன்மதனை அடைந்து அவனைச் சாம்பலாக்கியது என்றும் உரைக்கலாம்.

भस्मावशेषम् - மன்மதன் இருந்த இடத்தில் அவனது சாம்பலே எஞ்சியிருந்தது.

**तीव्राभिषङ्गप्रभवेण वृत्तिं मोहेन संस्तम्भयतेन्द्रियाणाम् ।**
**अज्ञातभर्तृव्यसना मुहूर्तं कृतोपकारेव रतिर्बभूव ॥ ७३ ॥**

तीव्र - अभिषङ्ग - प्रभवेण - கடுமையான துக்கத்தினின்றும் உண்டானதும், इन्द्रियाणाम् - புலன்களின், वृत्तिम् - செயலை, संस्तम्भयता - ஸ்தம்பிக்கச் செய்வதுமான, (செயலிழக்கச் செய்

கின்றதுமான, मोहेन - மூர்ச்சையின் காரணமாக, अज्ञात-भर्तृ-व्यसना - கணவனது விபத்தை அறியாதவளாக, रतिः-ரதி, मुहूर्तम् - சிறிது நேரம், कृत - उपकारा - इव - (மூர்ச்சையினால்) உதவி செய்யப்பட்டவள் போல், बभूव - இருந்தாள்.

(க-து) திடீரெனப் பெரிய விபத்து நிகழ்ந்ததென்று மாத்திர முணர்ந்த ரதி மூர்ச்சையுற்றாள். தன் கணவன் இறந்துவிட்டான் என்பதை முற்றிலும் உணர ஆற்றலின்றி அவள் தரையில் கிடந்தாள். எனவே மூர்ச்சை என்ற நிலையும் நிகழ்ந்த கஷ்டத்தை உணர முடியாமல் செய்து அவளுக்கு உதவி புரிந்தது போல் இருந்தது.

तमाशु विघ्नं तपसस्तपस्वी वनस्पतिं वज्र इवावभज्य ।
स्त्रीसन्निकर्षं परिहर्तुमिच्छन्नन्तर्दधे भूतपतिः सभूतः ॥ ७४ ॥

तपस्वी - தவம் செய்யும், भूत - पतिः - சிவபிரான், तपसः - தவத்திற்கு, विघ्नम् - இடையூறாக இருந்த, तम् - மன்மதனை, वज्रः - இடி, वनस्पतिं - इव - மரத்தை (முறிப்பது) போல, आशु - நொடிப்பொழுதில், अवभज्य-அழித்துவிட்டு, स्त्री - सन्निकर्षम्-ஸ்த்ரீகளின் அருகில் இருத்தலை, परिहर्तुम् - நீக்க, इच्छन् - விரும்பி, सभूतः - தன் ஸேவகர்களுடன், अन्तर्दधे-மறைந்தார்.

(க-து) தவம் செய்வதில் விருப்பமுள்ள சிவபிரான், தன் தவத்திற்கு இடையூறாக வந்த மன்மதனை, இடி மரத்தை வீழ்த்துவது போல்—நொடிப்பொழுதில் அழித்துவிட்டு, ஸ்த்ரீகள் தம்மருகில் இருப்பதை விரும்பாதவராக, பிரமதகணங்களுடன் அவ்விடத்தை விட்டுச்சென்றார்.

भूत - சிவஸேவகர்கள் ப்ரமதர்கள் என்றும் அழைக்கப் படுவார்கள். वज्रः - वनस्पतिः - இடி விழுமாயின் பச்சைமரமும் எரியும். 'இடி மரத்தை முறிப்பது போல' என்று இவ்வுபமானம் சிவபிரானது பலத்தையும் மன்மதனது பலமற்ற தன்மையையும் நன்கு எடுத்துக்காட்டும். स्त्री - सन्निकर्षम् - 'ஸ்த்ரீ

அருகிலிருத்தலே': பார்வதியும் அவளது தோழிகளும் அருகில் இருப்பதை விரும்பாதவராக வேறு இடம் சென்ருர்.

शैलात्मजापि पितुरुच्छिरसोऽभिलाषं
व्यर्थं समर्थ्य ललितं वपुरात्मनश्च ।
सख्योः समक्षमिति चाधिकजातलज्जा
शून्या जगाम भवनाभिमुखी कथञ्चित् ॥ ७५ ॥

शैल - आत्मजा - अपि - *பார்வதியும்*, उत् - शिरसः - *மானம் மிகுந்த*, पितुः - *(தன்) தந்தையின்*, अभिलाषम् - *ஆசையையும்*, ललितम् - *அழகிய*, आत्मनः - *தன்*, वपुः च - *சரீரத்தையும்*, व्यर्थं - *வீணானதாக (பயனற்றதாக)*, समर्थ्य - *அறிந்து*, सख्योः - *தோழிகளின்*, समक्षम्-*முன்னிலையில் (இது நிகழ்ந்தது)*, इति - च- *என்ற காரணத்திஞல்*, अधिक - जात - लज्जा - *அதிகம் வெட்க முற்று*, शून्या - *வெற்று மனமுடையவளாக*, कथंचित् - *ஒருவாறு*, भवन - अभिमुखी - *(தன்) வீடு நோக்கியவளாக*, जगाम - *சென்ருள்*.

(க-து) சிவபிரானைத் தன் மருமகனுகச் செய்து கொள்ள வேண்டுமென்ற பேரவா கொண்டிருந்தான் ஹிமவான். பார்வதியும் சிவபிரானை மணப்பதாலேயே தன் அழகு பயன் பெறும் என்று எண்ணி இருந்தாள். மன்மதனை அழித்ததால் சிவபிரான் ஹிமவானது ஆசையையும் வீணுகச் செய்தார், பார்வதியின் அழகும் பயனற்றதாயிற்று. இத்தகைய அவமானம் தோழிகளின் முன்னிலையில் நிகழ்ந்ததென்பதால் பார்வதி மிகவெட்கமுற்ருள். மனத்தில் சிறிதும் ஊக்கமின்றி வெற்று மனத்துடன் வீடு நோக்கிப் புறப்பட்டாள்.

उच्छिरसः *நிமிர்ந்த தலையுடைய என்பது பதப் பொருள், மானமுடையவள் என்பது கருத்து.* समर्थ्य - *தன் எண்ணம் மாத்திரமின்றி தந்தையின் எண்ணமும் வீணுயிற்றே என*

வருந்தினாள். अधिकजातलज्जा - தோழிகளின் எதிரில் இத்தகைய அவமானம் நிகழ்ந்ததால் பார்வதி மிகவும் வெட்க முற்றாள். जगाम - சென்றாள்; சென்றாள் என்பதற்கு அடுத்த சுலோகத்தில் கூறப்படும் பொருளை அனுசரித்து செல்ல விரும்பினாள் என்று பொருள் கொள்ளவேண்டும்.

सपदि मुकुलिताक्षीं रुद्रसंरम्भभीत्या
दुहितरमनुकम्प्यामद्रिरादाय दोर्भ्याम् ।
सुरगज इव बिभ्रत्पद्मिनीं दन्तलग्नां
प्रतिपथगतिरासीद्वेगदीर्घीकृताङ्गः ॥ ७६ ॥

रुद्र - संरम्भ - भीत्या - சிவபிரானது கோபத்தைக் கண்டு பயத்தினால், मुकुलित - अक्षीम् - கண்களை மூடியவளும் (மூர்ச்சையுற்றவளும்), अनुकम्प्याम् - இரக்கத்திற்குரியவளுமான, दुहितरम् - தன் மகளை, अद्रिः - ஹிமவான், दोर्भ्याम् - இருகைகளாலும், सपदि - உடனே, आदाय - எடுத்துக்கொண்டு, दन्त - लग्नाम् - தந்தங்களில் சிக்கிய, पद्मिनीं - தாமரைக் கொடியை, बिभ्रत् - தாங்கிச் செல்கின்ற, सुर - गजः - इव - ஐராவதம் போல், वेग - दीर्घीकृत - अङ्गः - வேகமாகச் செல்வதால் நீண்ட சரீரமுடையவனாகவும், प्रति - पथ - गतिः - (தன்) வழியை நோக்கிய நடையுடையவனாகவும், आसीत् - இருந்தான்.

(க-து) சிவபிரானது கோபத்தைக் கண்டு அஞ்சி மூர்ச்சையுற்ற பார்வதியைத் தன் கையிலேந்திக்கொண்டு, ஹிமவான் வீடு சென்றான்.

மூர்ச்சையுற்று துவண்டு கிடந்த பார்வதியைத் தூக்சிச் சென்ற ஹிமவானுக்கு உபமானம் தாமரைக்கொடியைத் தந்தங்களில் தாங்கிச் செல்லும் ஐராவதம். தாமரைக்கொடி பார்வதிக்கு உபமானமாகிறது.

**वेगदीर्घीकृतांगः** - இந்த அடை மொழியை யானைக்கும் ஹிமவானுக்கும் சேர்த்து உரைகாரர்கள் பொருள் உரைக்கின்றனர். வேகமாகச் செல்லும் பொழுது யானையின் உடல் நீண்டு காணப்படலாம். ''ஹிமவானுடைய உடலும் நீண்டிருந்தது'' என்பதற்கு விளக்கம் கூறுவது சிரமமானதே.

உபமானப் பொருத்தமில்லாமையைக் கருதியும், முன் சுலோகத்திலேயே 'பார்வதி வீடு நோக்கிச் சென்றாள் என்று முடித்துவிட்டதாலும், இந்த சுலோகம் தேவை இல்லாததெனத் - தோன்றுகிறது. காளிதாஸர் இதை எழுதவில்லையோ என சந்தேகமும் எழுகின்றது.

**पद्मिनी** - தாமரை மலர் உடையது - தாமரைக் கொடி.

**सुरगजः** - தேவர்களின் யானை ஐராவதம்.

## इति महाकविकालिदासकृतौ महाकाव्ये कुमारसम्भवे
## तृतीयः सर्गः

# चतुर्थः सर्गः

**अथ मोहपरायणा सती विवशा कामवधूर्विबोधिता ।**
**विधिना प्रतिपादयिष्यता नववैधव्यमसह्यवेदनम् ॥ १ ॥**

अथ - பிறகு, मोह - परायणा सती - மூர்ச்சையின் வசத்தில் இருந்தவளும், विवशा - செயலற்றவளுமான, काम - वधूः - மன்மதன் மனைவி ரதி, असह्य - वेदनम् - தாங்கொணுத் துயர முடைய, नव - वैधव्यम् - புதிய கைம்பெண் நிலையை, प्रतिपाद्-यिष्यता - தரப் போகின்ற, विधिना-விதியிஞல் (தெய்வத்தால்), विबोधिता - நினைவுறச் செய்யப்பட்டாள்.

(க-து) சிவபிரானது நெற்றிக் கண்ணினின்றும் கிளர்ந்த நெருப்பு மன்மதனைத் தாக்கிய பொழுது, ரதி மூர்ச்சித்துக் கீழே விழுந்து செயலற்றுக்கிடந்தாள். அந்நிலையில் அவள் தனக்கு நேர்ந்த கஷ்டத்தை உணர வழியில்லாமல் இருந்ததால் அது அவளுக்கு ஒரு வகையில் அனுகூலமாக இருந்தது. பின் அவள் மூர்ச்சை தெளிந்தாள்.

புதிதாக நேர்ந்துள்ளதும் தாங்கமுடியாததுயரம் தருவதுமான கைம்பெண் நிலையை அவள் அறியும்படி-அனுபவிக்கும்படி-செய்ய விதி விரும்பியது. அதஞல், அப்பொல்லாவிதியே அவளை மூர்ச்சையினின்றும் நினைவுபெறச் செய்தது எனக்கவி உத்ப்ரேக்ஷித்தார்.

मोहपरायणा - மூர்ச்சையே - அவளுக்கு உறுதுணையாக - தஞ்சமாக - இருந்தது.

विवशा - அதஞல் தன் வசமிழந்து செயலின்று இருந்தாள். அல்லது விதியின் கைப்பாவையாக இருந்தாள் என்றும் உரைப்பர்.

**अवधानपरे चकार सा प्रलयान्तोन्मिषिते विलोचने ।**
**न विवेद तयोरतृप्तयोः प्रियमत्यन्तविलुप्तदर्शनम् ॥ २ ॥**

**सा** - அவள், **प्रलय - अन्त - उन्मिषिते** - மூர்ச்சையின் முடிவில் (தாமே) விழிப்புற்ற, **विलोचने** - (தன்) இரு கண்களையும், **अवधान - परे** - (உற்று) நோக்குவதில் மிக ஈடுபட்டனவாக, **चकार** - செய்தாள் ; (**सा**) - அவள், **अतृप्तयोः** - (அவனைப்பல முறை கண்டும்) திருப்தியுறாத, **तयोः** - அக்கண்கள் திறத்தில், **प्रियम्** - (தன்) அன்பனை, **अत्यन्त - विलुप्त- दर्शनम्** -காணும் நிலையை அடியோடு இழந்தவளாக, **न विवेद** - அறியவில்லை.

(க-து) மூர்ச்சை தெளிந்தபின் அவளது கண்கள் தாமே சிறிது திறந்தன. திறந்த கண்களை, முயன்று, தன் கணவனிருக்குமிடத்தை உற்று நோக்கச் செய்தாள். ஆனால், மன்மதனைப் பல முறை கண்டும் திருப்திபெறாது மேன்மேலும் காணவிரும்புகின்ற அக்கண்கள், மன்மதனைக் காணும் பேற்றை அடியோடு இழந்து விட்டன என்பதை அவள் முதலில் அறியவில்லை [மன்மதன் இறந்துவிட்டான் என்று முதலில் அவளுக்குத் தெரியவில்லை என்பது கருத்து].

சிவபிரானது நெற்றிக்கண்ணிலிருந்துக் கனல் தோன்றிய பொழுதே ரதி மூர்ச்சித்துவிட்டாள். பின் நிகழ்ந்தவை அவளுக்கு அப்பொழுது தெரியவில்லை.

**अतृप्तयोः** - திருப்தியுறாத - என்பது பதப்பொருள், ''மேன் மேலும் காணவிரும்புகின்ற'' என்பது கருத்து, **अत्यन्तविलुप्त-दर्शनम्** - முற்றிலும் இழந்த காணுதலையுடைய என்பது பதப்பொருள். அக்கண்களுக்கு, தன் கணவனது தர்சனம் (காட்சி) அடியோடு ஒழிந்து போயிற்று என்பது கருத்து. இனி அக்கண்கள் அவளைக் காண முடியா, என்பதனை அவள் அப்பொழுது உணரவில்லை.

**अयि जीवितनाथ जीवसीत्यभिधायोत्थितया तया पुरः ।**
**ददृशे पुरुषाकृति क्षितौ हरकोपानलभस्मकेवलम् ॥ ३ ॥**

**जीवितनाथ** - ' என் ஆருயிர்த்தலைவனே ' **अयि जीवसि** - நீ உயிருடன் இருக்கின்றாயா?' **इति अभिधाय**-எனக் கூறி, **उत्थितया**-

எழுந்த, तया - அவளால் पुरः - (தனக்கு) எதிரில், क्षितौ - தரையில், पुरुष - आकृति - மனிதன் உருவுள்ள, हर - कोप- अनल - भस्म - केवलम् - சிவபிரானது கோபக்கனலால் உண்டான சாம்பல் மாத்திரமே, ददृशे - காணப்பட்டது.

(க-து) தன் கணவன் இறந்திருப்பானே என்று அஞ்சிய ரதி, நாதனே நீ உயிருடன் இருக்கிருயா ? எனக் கூறிக்கொண்டே எழுந்து பார்த்தபொழுது மனித வடிவினில் தரையில் கிடந்த சாம்பலை மாத்திரமே தன் எதிரில் கண்டாள்.

வந்த ஆபத்தை நினைக்கும் பொழுது மன்மதன் இறந்திருப்பானோ என்ற அச்சம் உண்டாயிற்று. தான் பிழைத்திருப்பதுபோல் அவனும் உயிருடன் இருக்கலாம் என்ற நம்பிக்கையும் அவளுக்கு இருந்தது. எனவே அவள் 'நீ உயிருடன் இருக்கிருயா? எனக் கேட்டுக்கொண்டே எழுந்தாள். சிவபிரானது கோபக்கனலினுல் மன்மதன் முற்றிலும் எரிந்ததாலே அவன் இருந்த இடத்தில் மனித வடிவில் சாம்பலே காணப்பட்டது.

पुरुषाकृति - भस्म சாம்பலைக் கண்டு மனித உடல் எரிக்கப்பட்டதென்பதை ஒருவாறு உணரலாம். ரதி பார்த்த சாம்பல் மனிதனின் தோற்றத்தை யுடையதாக இருந்ததால் தன் கணவன் எரிக்கப்பட்டானென்பதை ஊகித்தறிந்தாள்.

अथ सा पुनरेव विह्वला वसुधालिङ्गनधूसरस्तनी ।
विललाप विकीर्णमूर्धजा समदुःखामिव कुर्वती स्थलीम् ॥ ४ ॥

अथ - (தன் கணவன் இறந்ததை அறிந்த) பிறகு, पुनः - एव - மறுபடியும், विह्वला - மிகவும் சோர்வுற்றவளும், वसुधा - आलिङ्गन - धूसर - स्तनी - தரையில் வீழ்தலால் புழுதிபடிந்த உடலுடையவளும், विकीर्ण - मूर्धजा - கலைந்த கூந்தலுடைய

வளுமான, सा - அவள், स्थलीम् - அவ்வனப்பிரதேசத்தை, सम - दुःखाम् - தன்னேடு ஒத்த துக்கமுடையதாக, कुर्वती इव - செய்பவள் போல், विललाप - புலம்பினுள்.

(க-து) கணவன் இறந்ததை அறிந்த ரதி தன்னுடலைத் தாங்கவும் திறனற்றுத் தரையில் விழுந்தாள். தரையிலுள்ள புழுதி படிந்ததால், அவள் உடல் அழுக்கடைந்தது. கூந்தலும் கலைந்தது. அவள் கதறிப் புலம்பினுள். இந்நிலையில், அவள், காடு முழுவதிற்கும் தன் துக்கத்தைத் தெரிவித்து, அதையும் தன்னேடு ஒத்த துக்கமுடையதாகச் செய்பவள் போல் காணப்பட்டாள்.

विह्वला - தன் உடலையும் தாங்கத்திறனற்றவள். धूसरं - அழுக்குற்ற, स्थली - காடு; அதிலுள்ள ஜீவராசிகள் என்று பொருள் கொள்ள வேண்டும். இனிவரும் இருபது சுலோகங்கள் ரதியின் புலம்பலாக உள்ளன.

उपमानमभूद्विलासिनां करणं यत्तव कान्तिमत्तया ।
तदिदं गतमीदृशीं दशां न विदीर्ये कठिनाः खलु स्त्रियः ॥ ५ ॥

प्रिय - அன்பரே, तव - உம்முடைய, यत् - எந்த, करणम् -कान्ति-मत्तया - தேஹம், சிறந்த நிறம் பெற்றிருந்ததால், विलासिनाम् - அழகான மனிதர்களுக்கு, उपमानम् - உபமானமாக, अभूत् - இருந்ததோ, तत् इदम् - அத்தகைய இவ்வுடல், ईदृशीं दशाम् - இத்தகைய நிலையை, गतम् - அடைந்துள்ளது. न विदीर्ये - நான் சிதறிப்போகவில்லை. स्त्रियः - ஸ்த்ரீகள், कठिनाः खलु - கடின மனம் படைத்தவர்கள் தானே.

(க-து) 'அன்பரே, உலகிலுள்ள அழகர்க்கெல்லாம் உபமானமாக 'மன்மதன் போல்' என்று கூறும்படி, சிறந்த பொலிவுடன் இருந்த உமது உடல் இப்போது சாம்பலாகிவிட்டது. இதைக் கண்ணுல் கண்டும் நான் பல சிறு துண்டுகளாகச் சிதறிப் போகாமல் இருக்கிறேன். பொதுவாக ஸ்த்ரீகளின் மனம் மிக அழுத்தமானது. அதனுல் தான் இத்தகைய துக்கத்திலும் நான் இறக்காமல் இருக்கிறேன்.'

विलासी - அணி, பேச்சு, நடை, மற்றும் பிற செயல்கள் என்ற இவைகளை அழகுறச் செய்து கொள்பவர்கள் விலாஸி கள் எனப்படுவர். அழகுடையவர் என்பது கருத்து - विलासो भूषणालापगतिकर्मसु चारुता - என்பதனைக் காண்க.

क्व नु मां त्वदधीनजीवितां विनिकीर्य क्षणभिन्नसौहृदः ।
नलिनीं क्षतसेतुबन्धनो जलसंघात इवासि विद्रुतः ॥ ६ ॥

(प्रिय) - அன்பரே, क्षत - सेतु - बन्धनः - உடைந்த அணைக் கட்டையுடைய (அணை உடைந்த) जल - संघातः - ஜலத்திரள் (வெள்ளம்), नलिनीं इव - (தன்னிடன் இருந்த) தாமரையை (பின் விட்டுச் செல்வது) போல, त्वत् अधीन - जीविताम् -உம் வச மிருக்கும் வாழ்க்கையுடைய, माम् -என்னை, विनिकीर्य-(உதறித்) தள்ளிவிட்டு, क्षण - भिन्न - सौहृदः - ஒரு க்ஷணத்தில் உடைந்த (அழிந்த நமது) அன்புடையவராக, क्व नु - எங்கே, विद्रुतः असि - நீர் ஓடி விட்டீர் '?

(க-து) அணையினால் தடைப்பட்டு நிற்கின்ற நீர்த்திரள், அணை உடைந்தால், தன்னை நம்பி வாழும் தாமரையைப் பின் விட்டு, வேகமாகச்சென்று விடுகிறது. அதுபோல் நம்மிருவரையும் பிணைத்துள்ள அன்பை மறந்து, உமது வசமுள்ள உயிரையும் வாழ்க்கையையுமுடைய என்னைவிட்டு நீர் எங்கு ஓடிச்சென்றீர்?

जलसंघातः ஜலஸமூகம் - தேக்கி வைக்கப்பட்டுள்ள நீர், ஜலத் தேக்கம்.

நதிக்குத் தாமரைக்கொடியும், அன்பிற்கு அணையும், மன்மதனுக்கு ஜலத் தேக்கமும் உபமானங்கள்.

कृतवानसि विप्रियं न मे प्रतिकूलं न च ते मया कृतम् ।
किमकारणमेव दर्शनं विलपन्त्यै रतये न दीयते ॥ ७ ॥

मे - எனக்கு, विप्रियम् - இஷ்டமில்லாததை, कृतवान् न - असि - நீர் (எப்பொழுதும்) செய்தீர் இல்லை. मया च - என்னாலும், ते - உமக்கு, प्रतिकूलम् பிரியமில்லாதது, न कृतम् - செய்யப்படவில்லை, अकारणम् एव - (இவ்விரு காரணங்களில்) ஒன்றுகூட இல்லாத பொழுது. विलपन्त्यै - (உம்மைக்காண வேண்டுமெனப்) புலம்புகின்ற. रतये - ரதிக்கு, किम् - ஏன், दर्शनम् - (உமது தரிசனம்) न दीयते - தரப்படவில்லை.

(க-து) "நீர் எனக்கு ஏதாவது பிழை செய்திருந்தால் என்னைக் காண அஞ்சி, நீர் எங்காவது செல்லலாம். நீர் ஒரு பிழையும் செய்யவில்லை. நான் பிழை செய்திருந்தால் என் மேல் கோபத்தினால் நீர் மறையலாம். நானும் ஒரு தவறும் செய்யவில்லை. எனவே ஒருவரை ஒருவர் விட்டு நீங்குவதற்கான காரணம் ஒன்றுமில்லாத பொழுது, உம்மைக் காணத்துடித்துப் புலம்பும் என் முன் நீர் ஏன் வரவில்லை? ரதி இச்சுலோகத்தில் இரண்டாவது பகுதியில் தன்னைப் படர்க்கைச் சொல்லால் குறிப்பது மன்மதன் தன்னிடம் முன்வைத்த அன்பினைக் காட்டுதற்காக.

विलपन्त्यै - நீர் பரிஹாஸத்திற்காக - ஒளிந்திருப்பீராயின் அதுவும் தகாது. ஏனெனில் நான் புலம்புகின்றேன். பிறரை கதறும் வரை பரிஹாஸம் செய்தலும் தகுந்ததல்ல.

'अलं ते परिहासेन मम बाधावहेन वै'

'न हि सा विलपन्तं मामुपसंप्रैति लक्ष्मण'

(வால்மீகி ராமாயணம் 3-62-5, 81) என ஸீதையைக் காணாத பொழுது ராமர் கூறியவற்றைக் காண்க.

**स्मरसि स्मर मेखलागुणैरुत गोत्रस्खलितेषु बन्धनम् ।**
**च्युतकेसरदूषितेक्षणान्यवतंसोत्पलताडनानि ते ॥ ८ ॥**

स्मर - மன்மதத்தேவே, उत - அல்லது, गोत्रस्खलितेषु - பெயர்களை மாற்றிக்கூறுங்காலங்களில், मेखला - गुणैः - மேகலைக் கயிறுகளால், बन्धनम् - (உம்மைக்) கட்டுதலையோ, च्युत -

केसर - दूषित - ईक्षणानि - உதிர்ந்த மகரந்தத் தூள்களால் கலங்கிய பார்வையுடைய, अवतंस - उत्पल - ताडनानि वा - காதணியான நீலோத்பல மலரால் (உம்மை) அடித்தலேயோ, स्मरसि- (நீர் இப்பொழுது) நினைக்கின்றீரோ?

(க-து) "மன்மத! பல சமயங்கலில் நீர் என்னை வேறு ஸ்த்ரீயின் பெயர் கூறி அழைத்தீர். அதனைத் தவருகக் கருதி உம்மை நான் எனது மேகலேக் கயிற்ருல் கட்டி வைத்தேன். பிறிதொரு சமயம் இதே தவற்றை நீர் செய்தபொழுது, என் காதிலிருந்த நீலோத்பலத்தை எடுத்து உமது முகத்தில் பலமுறை அடித்தேன். அம்மலரிலிருந்த மகரந்தப்பொடி உமது கண்களில் விழுந்து அவற்றைக் கலக்கமுறச் செய்தது. ஒரு வேளை இவ்விரண்டினையும் நான் செய்த பிழையாகக் கருதி நீர் என்னிடம் இப்பொழுது வாராது ஒதுங்கிச் சென்றீரோ?

பல காதலிகளையுடையவர் சிற்சில சமயங்களில் மறதியால் ஒருத்தி பெயரை இட்டு மற்றவளை அழைப்பதுண்டு. அவ்வாறு அழைக்கப்படுபவர் இதனைப் பெறும் குற்றமாகக் கருதுவர். அம்மாதிரி மன்மதன் வேறு பெயரை இட்டு ரதியை அழைத்ததால், அவள் அவனை மேகலேயால் பிணித்தாள். தவறு செய்த வாயின் மேல் நீலோத்பல மலரால் மற்ெருரு சமயம் அடித்தாள். இதை எல்லாம் அன்புடன் ஸஹித்துக்கொண்டு பரமானந்தமாகக் கருதுவர் காதலர்கள்.

गोत्र - स्खलित; गोत्रम् - பெயர்; स्खलित - தவறு. मेखला - பட்டு நூலிலே முத்து முதலியன கோத்து அமைக்கப்பட்டது. இதனைப் பெண்கள் இடையிலே அணிவர். मेखला - गुण - மேகலேயே கயிருக உபயோகப்பட்டது; அல்லது மேகலேயின் கயிறு என்றும் கொள்ளலாம்.

हृदये वससीति मत्प्रियं यदवोचस्तदवैमि कैतवम् ।
उपचारपदं न चेदिदं त्वमनङ्गः कथमक्षता रतिः ॥ ९ ॥

त्वं - நீ (ரதி), हृदये - என் மனத்தில், वससि - வசிக்கிறாய், इति - என்று, मत् - प्रियम् - எனக்குப் பிரியமான, यत् - எந்த வார்த்தையை, अवोचः - நீர் (முன்பெல்லாம்) கூறினீரோ, तत् - அது, कैतवम् - பொய் என, अवैमि - (இப்பொழுது) அறிகிறேன், इदम् - இது, उपचार - पदम् - பெருமைப்படுத்துவதற்கான, வாக்யமாகக் கருதப்படவேண்டும், न चेत् - (அவ்வாறு) இல்லாவிடில், त्वम् - நீர், अनङ्गः - உடம்பிழந்தவராக (ஆகிவிட்டீர்), कथम् - (எனினும்) எவ்வாறு, रतिः - ரதி, अक्षता - சிறு காயமும் அற்றவளாக இருக்கிறாள் ?

(க-து) மன்மத, நான் உமது மனத்தில் இருப்பதாக என்னிடம் கூறினீர். இது வெறும் உபசார மொழியாகும். என்னை மகிழ்விக்கக் கூறியதேயன்றி நான் உண்மையில் உமது மனத்தில் இருக்கவில்லை. ஏனெனில் நீர் சாம்பலானபொழுது உமது ஹ்ருதயத்தில் இருப்பதாகக் கூறப்பட்ட நான் சாம்பலாகாதது எங்ஙனம்? எனக்குச் சிறு காயம் கூட ஏற்படவில்லையே?

நேசிப்பவர் நேசிக்கப்படுபவர்களை எப்பொழுதும் தம் மனத்தில் இருப்பதாகக் கூறுவது மரபு.

उपचार-पदम् - இங்குள்ள பதம் என்ற சொல் வாக்யத்தைக் குறித்தது. न पदं पदमित्याहुः वाक्यं तु पदमुच्यते, என்பதனை நோக்குக. उपचार-பிறரை மகிழ்விப்பதற்காகக் கூறப்படும், पदम् - சொல்-உபசாரவார்த்தை.

**परलोकनवप्रवासिनः प्रतिपत्स्ये पदवीमहं तव ।**
**विधिना जन एष वञ्चितस्त्वदधीनं खलु देहिनां सुखम् ॥ १० ॥**

पर - लोक - नव - प्रवासिनः - மறு உலகிற்கு அண்மையிலே சென்றுள்ள, तव - உமது, पदवीम् - வழியை, अहम् - நான், प्रतिपत्स्ये - பின் தொடர்வேன். विधिना - (ஆனால்) விதியினால் एष-जनः - இவ்வுலக மக்கள், वञ्चितः - ஏமாற்றப்பட்டனர்,

देहिनाम् - (ஏனெனில்) மக்களின், सुखम् - இன்பம், त्वत् - अधीनं खलु - உமது வசத்திலிருப்பதேயாகும்.

(க-து) நீர் இப்பொழுதுதான் மறு உலகு சென்றுள்ளீர். உமது வழியைச் சீக்கிரமே பின்பற்றி நான் உம்மிடம் வந்து சேர்வேன். ஆதலால் இன்பத்தை இழந்தவள் நான் இல்லை. நீர் இல்லாததால் இவ்வுலகில் உள்ள மக்கள் அனைவரும் இன்பம் இழந்தவராவர். பொல்லாவிதி உம்மைக் கொண்டு சென்றதால் மக்கள் பெறவேண்டிய இன்பத்தை (அவர்கள்) பெறமுடியாமல் செய்துவிட்டது. மக்களின் மகிழ்ச்சி நீர் இருந்தாலன்றோ ஏற்படும். காதல் மறையுமாயின் உலகில் இன்பம் ஏது?

परलोक - नव - प्रवासिनः - 'மறு உலகிற்குப் புதிதே சென்று வசிக்கின்ற' என்பது பதப்பொருள். புதிதே சென்றுள்ளதால் உம் வழியைக் கண்டு பிடிப்பதும் கஷ்டமில்லை என்பதாயிற்று. वञ्चितः - ஏமாற்றுதலாவது. மக்கள் பெறவேண்டிய இன்பத்தைப் பெறவொட்டாமற் செய்தது விதி. देहिनां सुखं त्वदधीनम् - மக்களின் ஸுகம் உன் வசமிருப்பது, ஊண். உடை முதலியவற்றால் பெறும் இன்பம் மற்றொரு வகை. மன்மதன் உலகில் இல்லையானால் காதல் இல்லை. காதல் இல்லையானால் இன்பமும் இல்லை.

''காதல், காதல், காதல், காதல் போயிற் காதல் போயிற் சாதல், சாதல், சாதல்'' என்ற பாரதியாரின் பாட்டும் காளிதாஸரின் கருத்தை விளங்கச் செய்யலாம். 'विधिना जन एष वञ्चितः - நான் (ரதி) விதியினால் ஏமாற்றப்பட்டேன்.' ''நீர் சென்ற பொழுது எனக்கு விதி மூர்ச்சையுண்டாக்கியதால் அப்போழுதே நான் உம்மைப் பின் தொடரவில்லை. இது விதி எனக்குச் செய்த சதி,'' என ரதி கூறுவதாக உரைப்பர் அருணகிரியும் நாராயணரும்.

रजनीतिमिरावगुण्ठिते पुरमार्गे घनशब्दविक्लवाः ।
वसतिं प्रिय कामिनां प्रियास्त्वदृते प्रापयितुं क ईश्वरः ॥ ११ ॥

प्रिय - அன்பரே, रजनी - तिमिर - अवगुण्ठिते - இரவில் இருள் போர்த்திய, पुर - मार्गे - நகர மார்க்கத்தில், घन - शब्द - विक्लवाः- மேக ஒலியினால் பயந்துள்ள, प्रियाः - காதலிகளை कामिनाम् - காதலர்களின், वसतिम् - இருப்பிடத்தை, प्रापयितुम् - அடை விக்க, त्वत् ऋते - உம்மைத்தவிர, कः - (வேறு) எவர், ईश्वरः - சக்தியுடையவர்?

(க-து) அபிஸாரிகைகள் என்றழைக்கப்படும் காதலிகள் இருள் சூழ்ந்த இரவில் மேகங்கள் இடித்துப் பேரொலி செய்து அச்சுறுத் தும் போதும் நடுங்கிக்கொண்டே தம் காதலர் இருக்குமிடம் நோக் கிச் செல்வர். அவர்களை அவ்விடங்களுக்குக் கொண்டு செல்ல உம்மைத்தவிர வேறு எவருக்குத் திறமை உண்டு?

காதல் தேவன் மன்மதன் அவர்கள் மனத்திலிருந்து உந்துவதாலன்றோ அப்பெண்கள் இருளையும் இடியையும் மதியாது செல்வது? காதல் இல்லையெனில் அவ்வாறு செல்ல மன உறுதி வராதாகையால் ரதி, மன்மதனே அப் பெண்களைக் காதலர்களினிடத்திற்கு அழைத்துச் செல்வதா கக் கூறினாள்.

प्रियाः - காதலிக்கும் பெண்கள்: முன் கூட்டித் தெரிவித் தபடி காதலர்களை சந்திப்பதற்காக ஒவ்வோர் இடத்திற்குச் செல்பவர்கள். இவர்களை, अभिसारिकाः - என்பர். இரவில் இவர்கள் செல்வதற்கு இரண்டு தடைகள் உள்ளன: (1) நகர வழி இருளில் மூழ்கிக்கிடக்கின்றது. (2) மேகத் தின் ஒலியும் அவர்களை அச்சுறுத்தி சோர்வடையச் செய் கின்றது. தடையிருந்தும் அப்பெண்கள் காதலரிடம் நோக் கிச் செல்வது மன்மதனது தூண்டுதலால் என்க.

**नयनान्यरुणानि घूर्णयन्वचनानि स्खलयन् पदे पदे ।**
**असति त्वयि वारुणीमदः प्रमदानामधुना विडम्बना ॥ १२॥**

प्रमदानां - யுவதிகளின், अरुणानि - சிவந்த, नयनानि-கண்களை-घूर्णयन् - சுழற்றுவதும், पदे पदे - அடிக்கடி, वचनानि - சொற்களை, स्खलयन् - இடறும்படி (குழறும்படி) செய்வதுமான, वारुणी - मदः - மதுபானத்தினுல் வரும் மதமானது, त्वयि - நீர், असति - இல்லாத காலத்தில், अधुना - இப்பொழுது, विडम्बना, நகைப்புக்குக் காரணமாகின்றது.

(க-து) மன்மதன் (காதல்) இல்லாதபொழுது, பெண்கள் மதுவருந்திச் செய்கின்ற செயல்கள் எல்லாம் நகைப்பையே உண்டாக்கும்; மதுவருந்துவதால் கண்கள் சிவந்து சுழலும், வார்த்தைகள் முற்றிலும் உச்சரிக்கப்பெருது குழறும். காதலுணர்ச்சியுடன் சேர்ந்திருப்பின் கண் சுழற்சியினும் இடறுகின்ற சொல்லிலும் கூட ஒரு அழகு காணப்படும். காதலர்கள் இவற்றில் பரவசப்படுவர். மன்மதனில்லாத மது மதம் அழகுடையதாகாது. அது குடிகாரனது விகாரமான பேச்சும் பார்வையுமாக இருந்து, பார்ப்போரின் நகைப்புக்குக் காரணமாகும்.

वारुणी - மது; विडम्बना - நகைப்புக்குறியது - அல்லது, வெறும் நடிப்பாக மாத்திரம் உள்ளது.

**अवगम्य कथीकृतं वपुः प्रियबन्धोस्तवनिष्फलोदयः ।**
**बहुलेऽपि गते निशाकरस्तनुतां दुःखमनङ्ग मोक्ष्यति ॥ १३ ॥**

अनङ्ग - அனங்க (மன்மத), प्रिय - बन्धोः- உறவினரிடம் இன்புடைய, तव -உமது, वपुः - சரீரம், कथीकृतम् - வெறும் பேச்சில் மாத்திரமே (எஞ்சி) இருப்பதை, अवगम्य - அறிந்தபின், निष्फल - उदयः - பயனற்ற உதயமுடைய, निशा - करः - சந்திரன், बहुले - கிருஷ்ணபக்ஷம், गते - अपि - சென்ற பிறகும், तनुताम् - தனது மெலிந்த தன்மையை, दुःखम् - (மிகுத்த) துக்கத்துடன், मोक्ष्यति - விடப்போகின்ருன்.

(க-து) "நீர் சரீரமிழந்தீர் என்பதை அறிந்து சந்திரன், காதலை உண்டாக்கும் மன்மதன் இல்லாதபொழுது, தான் உதிப்பதும் பயனற்றது என்று கருதுவான். கிருஷ்ணபக்ஷம் முடிந்த

வுடன், சுக்லபக்ஷத்தில், மெல்லிய நிலையைவிட்டு வளர்வதிலும் ஊக்கம் கொள்ளமாட்டான்'.

ஏனெனில் மன்மதன் உண்டாக்கிய காதலை வளர்ப்பது சந்திரன் தொழில். காதலே இல்லை எனில் சந்திரன் உதயமாவதும், வளர்வதும் பயனற்றதாகும்.

प्रियबन्धुः - बन्धु - இங்கு நண்பனைக் குறித்தது. மன்மதன் நண்பர்களிடம் அன்புடையவன் என்பதால், நண்பர்களுக்கும் மன்மதன் பிரியமானவன் என்பது கிடைக்கப்பெறும் ப்ரியமான உறவினன் என்பது பதப் பொருள்.

कथीकृतम् - மன்மதன் எரிந்துவிட்டதால் இப்பொழுது அது வெறும் கதையாகப் பேச்சிலே மாத்திரம் உள்ளது.

अनङ्ग - அங்கத்தை - உடலை இழந்தவன். மன்மதனைக் குறிக்கிறது.

**हरितारुणचारुबन्धनः कलपुंस्कोकिलशब्दसूचितः ।**
**वद सम्प्रति कस्य बाणतां नवचूतप्रसवो गमिष्यति ॥ १४ ॥**

हरित - अरुण - चारु - बन्धनः - பச்சையும் சிவப்புமான அழகிய காம்பையுடையதும், कल - पुंस्कोकिल - शब्द - सूचितः - இனிய ஆண் குயிலின் ஒலியினால் தெரிவிக்கப்பட்டதுமான, नव - चूत -प्रसवः- புதிய மாம்பூ, संप्रति - இப்பொழுது, कस्य - யாருக்கு, बाणताम् - பாணம் என்ற நிலையை, गमिष्यति - அடையும்? वद - சொல்வீராக.

(க-து) வஸந்த ருதுவில் மாந்தளிரை உண்டு குயில்கள் இனிதே கூறும். அக்குயில்களின் குரல் மாமரத்தில் மாம்பூ தோன்றி விட்டதென்பதையும் எடுத்துக்காட்டும். பச்சையும் சிவப்புமான அழகிய மாம்பூவை இனி எவர் பாணமாக உபயோகிப்பர்?

தாமரை, அசோகம், மாம்பூ, மல்லிகை, நீலோத்பலம் என்ற இவ்வைந்து மலர்களும் மன்மதனது பாணங்களாம்.

அவைகளை உபயோகித்து மன்மதன் காதலை உண்டாக்கு கின்றான் என்பர். மன்மதன் இல்லாததால் இம்மலரை உபயோகிக்கத் தகுந்த வீரனே இல்லை என்பதாயிற்று. மாம்பூ என்று பிற மலர்களையும் சேர்த்தே கூறியதாகும். மலர்க்கணைகளை உபயோகிப்பவர் இனி யாரும் இல்லை என்றபடி.

अलिपङ्क्तिरनेकशस्त्वया गुणकृत्ये धनुषो नियोजिता ।
विरुतैः करुणस्वनैरियं गुरुशोकामनुरोदितीव माम् ॥ १५ ॥

त्वया - உம்மால், अनेकशः - பலமுறையும், धनुषः-வில்லினது, गुण - कृत्ये - நாண் கயிற்றின் வேலையில், नियोजिता - ஏவப்பட்ட, इयम् - இந்த, अलि - पङ्क्तिः - வண்டினமும், करुण - स्वनैः - இரக்க முண்டாக்கும் சத்தமுடைய, विरुतैः - (தம்முடைய) ஒலிக ளால், गुरु - शोकाम् - அதிகம் துக்கமுடைய, माम् -என்னுடன், अनुरोदिति इव - புலம்புகின்றது போல் காணப்படுகிறது.

(க-து) வண்டினங்கள் உம்மால் வில்லை வளைப்பதில் நாண் கயிருகப் பலமுறையும் உபயோகிக்கப்பட்டன. அவைகள் இப் பொழுது என் துக்கத்தைக் கண்டு துக்கமடைந்து இரங்கத்தக்க குரலில் என்னுடன் சேர்ந்து புலம்புவதுபோல் காணப்படுகின்றன.

வண்டுகளை மன்மதனது நாண் கயிருகக் கூறுவர். गुणकृत्ये - நாண் கயிற்றின் வேலை: அதாவது வில்லை வளைப் பது, अनेकशः - பலமுறை - என்றதால் பல காரியங்களில் உதவிய தாங்கள் இப்பொழுது பயன்படவில்லை என்பதால் இரக்கம் ஏற்படுகிறது. विरुतम् - வண்டுகளின் ரீங்காரம், சோகத்தைக் காட்டும் வகையில் இருந்தது. मां अनुरोदिति - 'என்னைப் பின் தொடர்ந்து அழுகின்றன,' என்பதால் என் னுடன் சேர்ந்து புலம்புகின்றன என்பது கருத்து. इव - வண் டுகளின் ரீங்காரத்தை - அவைகளின் புலம்பலாகக் கவி

உத்ப்ரேக்ஷித்தார். अलि - पङ्क्तिः - வண்டுகளின் வரிசை அல்லது கூட்டம். पङ्क्ति - என்பது பெண்பால் சொல்; பெண்ணினம் மற்ருெரு பெண்ணிடம் இரக்கம் கொள்வது இயற்கை எனக் காட்டவந்தது.

**प्रतिपद्य मनोहरं वपुः पुनरप्यादिश तावदुत्थितः ।**
**रतिदूतिपदेषु कोकिलां मधुरालापनिसर्गपण्डिताम् ॥ १६ ॥**

पुनः - अपि - மறுபடியும், मनोहरम् - மனங்கவரும், वपुः - உடலை, प्रतिपद्य - பெற்று, उत्थितः - எழுந்து, मधुर - आलाप - निसर्ग - पण्डिताम् - இனிய குரல் தருவதில் இயற்கையிலே திறமை வாய்ந்த, कोकिलाम् - பெண் குயிலை, रति - दूति - पदेषु - (காதலர்களின்) கலவிக்கு (ஏற்பாடு செய்யும்) தூதுவர் ஸ்தானத்தில், तावत् - முதலில், आदिश - கட்டளையிடுவீராக.

(க-து) மன்மத, இச்சாம்பல் உடலை நீக்கி அழகிய உருவத்துடன் மறுபடி எழுந்துவந்து, இனிய குரல் தருவதில் பாண்டித்யம் பெற்றுள்ள பெண்குயிலை, காதலர்களின் கலவிக்குத் துணைசெய்யும் தூதாக முதலில் அனுப்புவீராக.

रति - दूति - पदेषु - 'பிரிந்த காதலர்களை அன்புடன் சேர்த்து வைக்கும் தூதர்களாக' என்றும் பொருளுரைப்பர். तावत् - 'முதலில்'; குயில்களை முதலில் தூதாக அனுப்பினுல் அவைகள் வேகமாகப் பறந்து சென்று மன்மதன் எழுந்ததைக் கூறி உலகை மகிழ்விக்கும்.

**शिरसा प्रणिपत्य याचितान्युपगूढानि सवेपथूनि च ।**
**सुरतानि च तानि ते रहः स्मर संस्मृत्य न शान्तिरस्ति मे ॥१७॥**

स्मर - மன்மத, शिरसा - தலையினுல், प्रणिपत्य - காலில் வீழ்ந்து, याचितानि - (நீர் செய்த) வேண்டுகோள்களையும், सवेपथूनि - (உணர்ச்சி மிகுதியால்) நடுக்கத்துடனிருக்கும்,

उपगूढानि च - ஆலிங்கனங்களேயும், रहः - தனிமையில் நிகழ்ந்த, ते - உமது, तानि - அந்த (பலவிதமான), सुरतानि च - கலவிகளே யும் संस्मृत्य - நினேத்து (நினேத்து), (स्थितायाः) - இருக்கின்ற, मे- எனக்கு, शान्तिः - மனவமைதி, न अस्ति - இல்லே.

(க-து) "மன்மத, நான் கோபித்தபொழுது நீர் என் பாதங்க ளில் தலேவைத்து வணங்கி எனது மன்னிப்பைப் பல முறையும் வேண்டினீர். உம்மை மன்னித்து, உம்மிடம் அன்பு காட்டிய பொழுது உணர்ச்சி மிகுதியால் உடல் நடுங்க என்னே ஆலிங்கனம் செய்து கொண்டீர்; இவ்வாறு நாம் வாழ்ந்த வாழ்க்கையை நினேக் கின்றபொழுது என் மனம் அமைதியுருது மேன் மேலும் வருந்து கின்றது."

सवेपथूनि - वेपथु - உடல் நடுக்கம், இது உணர்ச்சி மிகுதி யால் வருவது. மகிழ்ச்சியைத்தருவது; பயத்திஞல் வரு வது இல்லே.

रचितं रतिपण्डित त्वया नवमङ्गेषु ममेदमार्तवम् ।
ध्रियते कुसुमप्रसाधनम् तव तच्चारु वपुर्न दृश्यते ॥ १८ ॥

रति - पण्डित - கலவிக்கலேயை நன்கு அறிந்தவரே, त्वया - உம்மால், मम - என்னுடைய, अङ्गेषु -அவயவங்களில், नवम्-புதி யதாக, रचितम् - செய்யப்பட்ட, आर्तवम् - வஸந்த ருதுவின், इदम् कुसुम - प्रसाधनम् - இந்த புஷ்ப அலங்காரம், ध्रियते - இன்னும் இருக்கிறது; तव - உம்முடைய, तत् चारु - அந்த அழகிய, वपुः - சரீரம், न दृश्यते - காணப்படவில்லே.

(க-து) "மன்மத, கலவியின் முறைகளே அறிந்த நீர் இவ் வஸந்த ருதுவில் தோன்றிய புஷ்பங்களேக் கொண்டு, என் கை, தோள் முதலான அவயவங்களிலே தாமாகவே புத்தம் புதிய அலங் காரங்களேச் செய்தீர். அவ்வலங்காரங்கள் இப்பொழுதும் என் உடலில் வாடாது உதிராது இருக்கின்றன. ஆனல் அவ்வணிகளேச் செய்த உமது உடம்பு, அந்தோ! மறைந்ததே!"

स्वयमङ्गेषु - என்பது மல்லிநாதர் பாடம். ரதியினால் வேண்டப் படாமலேயே மன்மதன் தானே இவ்வணியைச் செய்தான் என்பது கருத்து. இதனால் ரதியினிடம் அவன் கொண்ட காதல் புலனாகும்.

विबुधैरसि यस्य दारुणैरसमाप्ते परिकर्मणि स्मृतः ।
तमिमं कुरु दक्षिणेतरं चरणं निर्मितरागमेहि मे ॥ १९ ॥

दारुणैः - இரக்கமற்ற (கொடிய), विबुधैः - தேவர்களால், यस्य - எந்த பாதத்தின், परिकर्मणि - அலங்காரமானது, असमाप्ते - முடிவுபெறாதபொழுது, स्मृतः असि - நீர் நினைக்கப்பட்டீரோ, तम् - அத்தகைய, इमम् - இந்த, मे - எனது, दक्षिणेतरम् चरणम् - இடது பாதத்தை, निर्मित - रागम् - செம்பஞ்சு 'வர்ணம்' பூசப்பட்டதாக, कुरु-செய்வீராக, एहि-(சீக்கிரமே)வருவீராக.

(க-து) மன்மத! அன்பின் மிகுதியால் நீர் என்னை அலங்கரிக்கத் தொடங்கினீர். முதலில் வலது பாதத்திற்கு செம்பஞ்சு வர்ணம் பூசியபின் இடது பாதத்திற்குப் பூசத் தொடங்கினீர். ஆனால் அது முடிவதன் முன்னமே இப்பொல்லாத் தேவர்கள் உம்மை நினைத்தனர். எனவே நீர் அதனை முடிக்காமலே தேவர்களிடம் சென்றீர். ஆகையால் சீக்கிரமே வந்து இடது காலிற்கும் செம்பஞ்சு வர்ணம் பூசி அவ்வலங்காரத்தை முடித்து வைப்பீராக!

दारुणैः विबुधैः - தேவர்கள், மன்மதனை, செய்யமுடியாத ஒரு காரியத்தில் ஏவி உடலிழக்கச் செய்தமையால் அவர்களுக்குக் 'கொடிய, இரக்கமற்ற' என்ற விசேஷணம் தரப்பட்டது. இடது பாதத்தின் அலங்காரம் முடியும் வரை காத்திராமல் இடையிலே அதனைத் தடையுறச் செய்ததாலும் அவர்களைக் கொடியவர்கள் எனலாம். विबुधैरपि, यत्, निर्मितरागमेत्य, तदिमं - என்பது அருணகிரி பாடம்.

अहमेत्य पतङ्गवर्त्मना पुनरङ्काश्रयिणी भवामि ते ।
चतुरैः सुरकामिनीजनैः प्रिय यावन्न विलोभ्यसे दिवि ॥ २० ॥

प्रिय - அன்பரே, दिवि - ஸ்வர்க்கத்தில், चतुरैः - திறமை மிகுந்த, सुर - कामिनी - जनैः - தேவப் பெண்களால், यावत् - எதற்குள், न विलोभ्यसे - நீர் ஏமாற்றப்படமாட்டீரோ, तावत् - அதற்குள்ளேயே, अहम् - நான், पतङ्ग - वर्त्मना - விட்டில் பூச்சி யின் முறையில், (அக்னியில் புகுந்து), एत्य - வந்து, पुनः - மறு படியும், ते - உமது, अङ्क - आश्रयिणी - மடியில் இருப்பவளாக, भवामि - ஆவேன்.

(க-து) ''அன்பரே! நான் இன்றி நீர் தனியே ஸ்வர்க்கத்திலி ருப்பீராஞல் ஆண்களை வசீகரிப்பதில் மிக கெட்டிக்காரர்களான தேவப்பெண்கள் உம் மனத்தைப் பல வகையிலும் மயக்கி, ஏமாற் றித் தம் வசமிழுக்க முயல்வர். அவர்களின் முயற்சி கை கூடுவதற்கு முன்னமே, நான் விட்டில் பூச்சி போல், நெருப்பில் குதித்து அனு மரணம் செய்து நீர் இருக்கும் ஸ்வர்க்கம் வந்து உமது அருகிலே (மடியிலே) இருப்பேன்''

पतङ्ग - விட்டில்; ஒரு வகைப் பூச்சி; இது விளக்கின் ஒளி யிலே மயங்கி அதில் விழுந்து இறக்கும். விட்டில் பூச்சியின் வழி அல்லது முறை என்றது நெருப்பில் விழுந்து உயிர் துறத்தலை; अङ्कः -ஸமீபம் அல்லது மடி; 'உமது மடியிலே அம ருவேன்'. ரதி மன்மதன் இருவருமே தேவ வகையினர். எனவே ஸ்வர்க்கம் செல்ல ரதி அக்னியில் புகுந்து உயிர் விடத் தேவையில்லை. ஆயினும் துக்கத்தில் தன்னிலை மறந்து பேசுகின்றதால் மனிதர்கள் செய்யும் காரியத்தைத் தானும் செய்யப் போவதாகக் கூறிஞள். कामिनी - जनः- காம உணர்ச்சி மிகுதியும் உடையவர்கள்; பெண்கள்; सुरकामिनी - அத்தகைய தேவமகளிர்.

मदनेन विना कृता रतिः क्षणमात्रं किल जीवितेति मे ।
वचनीयमिदं व्यवस्थितं रमण त्वामनुयामि यद्यपि ॥ २१ ॥

रमण - மகிழ்விப்பவரே, त्वाम् - உம்மை, अनुयामि यदि - अपि - திண்ணமாகப் பின் தொடரப் போகின்றேன் ; (तथापि) - ஆயினும், " रतिः - ரதி, मदनेन विना कृता - மன்மதனை விட்டுப் பிரிக்கப் பட்டவளாக, क्षणमात्रम् - ஒரு க்ஷணம், जीविता - किल - உயிர் வாழ்ந்திருந்தாளே!" इति - என, इदम् वचनीयम् - இந்த வசைச் சொல், मे - எனக்கு, व्यवस्थितम् - உறுதியாக நின்றுவிட்டது.

(க-து) "மகிழ்நனே! நீர் இறந்த விருடியே நானும் இறந்திருக்க வேண்டும். ஆனால் இறக்கவில்லை. இப்பொழுது நான் இறக்கப்போவது திண்ணம். ஆயினும், ஜனங்கள் 'மன்மதன் இறந்த பின் சிறிது நேரம் ரதி உயிருடன் இருந்தாளே! உண்மையான அன்பிருக்குமாயின் உடனே இறந்திருப்பாளே?' என, என்னைப் பற்றி—என் அன்பைப் பற்றி—அவச்சொல் கூறுவர். அது (கல் லின்மேல் எழுதியதுபோல்) நீடித்து நின்று விட்டது."

மன்மதன் உயிரிழந்த பின் தான் உயிருடன் இருப்பதைக் குறித்து ரதி வெட்கமுறுகிறாள். உண்மையன்பு இருக்குமா யின் உடனே இறந்திருக்கவேண்டும் என்பது அவள் கருத்து.

कामं जीवति मे नाथः इति सा विजहौ शुचम्।
प्राङ् मत्वा सत्यमस्यान्तं जीवितास्मीति लज्जिता ॥ (ரகு, 12-75)

என்பதையும் காண்க.

**क्रियतां कथमन्त्यमण्डनम् परलोकान्तरितस्य ते मया ।**
**सममेव गतोऽस्यतर्किताम् गतिमङ्गेन च जीवितेन च ॥ २२ ॥**

परलोक - अन्तरितस्य - மறு உலகினால் மறைக்கப்பட்டுள்ள (இறந்த), ते உமக்கு, अन्त्य - मण्डनम् - இறுதி அலங்காரம், मया - என்னால், कथम् - எவ்வாறு, क्रियताम् - செய்யப்படும்? अङ्गेन- च - (ஏனெனில்) உடலுடனும், जीवितेन च - உயிருடனும், समम् - एव - ஒரே சமயத்தில், अतर्किताम् - எதிர்பாராத, गतिम् - நிலையை गतः असि - நீர் அடைந்துள்ளீர்.

(க-து) ''மன்மத, நீர் இப்பொழுது மறு உலகில் இருக்கின்றீர். உம்மையும் என்னையும் பிரித்து வைப்பது - இப்பொழுது மறு உலகம். நான் அனுமரணம் செய்வதற்கு முன் உமக்கு இறுதி அணிகளைச் செய்ய விரும்பினாலும் எவ்வாறு செய்ய இயலும்? உலகிலே இறப்பவர்களின் உயிர் முதலில் சென்று விடுகிறது. உடல் சிறிது காலம் இருக்கின்றது. ஆனால் உமக்கோ உயிர் உடல் இரண்டும் சேர்ந்தே சென்றுவிட்டன. ஆகையால் எவ்வாறு நான் உமது உடலுக்கு இறுதி அணி செய்ய முடியும்?''

अन्त्यमण्डनम् - இறுதி அணி; இறந்தவர் உடலுக்குச் செய்யும் அலங்காரம்; परलोकान्तरितस्य - மறு உலகினால் மறைக்கப் பட்டுள்ள - அதாவது இறந்த - என்று பொருள், 'परलोकत्वरितस्य' (மறு உலகிற்கு வேகமாகச் சென்ற) என்பது அருணகிரி பாடம்.

**ऋजुतां नयतः स्मरामि ते शरमुत्सङ्गनिषण्णधन्वनः ।**
**मधुना सह सस्मितां कथां नयनोपान्तविलोकितं च तत् ॥ २३ ॥**

शरम् - (வளைந்த) பாணத்தை, ऋजुताम् - नयतः - நிமிர்த்துகின்றவரும், उत्सङ्ग - निषण्ण - धन्वनः - மடியிலே வைத்த வில்லையுடையவருமான, ते உமது, मधुना सह -வஸந்தனோடு, सस्मिताम्- இளநகையுடன் கூடிய, कथाम् ஸம்பாஷணைகளையும், ते - உம்முடைய, तत् - அந்த, नयन - उपान्त - विलोकितम् च - கடைக்கண் நோக்குகளையும், स्मरामि - நினைக்கின்றேன்.

(க-து) ''அன்பரே! எங்கேனும் சென்று வெற்றியுடன் திரும்பியபின் நீர் மடியிலே வில்லை வைத்துக்கொண்டு வளைந்த பாணத்தை நிமிர்த்துவது வழக்கம். அக்காலத்தில் உமக்கு அருகில் அமர்ந்துள்ள வஸந்தனுடன் நீர் புன்னகையுடன் பேசிய ஸம்பாஷணைகளையும், இதற்கிடையில் அன்புடன் அடிக்கடி என்னை கடைக்கண்களால் நீர் நோக்கியதையும் நான் இப்பொழுது நினைக்கின்றேன். அவ்வின்பம் திரும்பவும் எனக்குக் கிடைக்கப்பெறுமோ?''

இச்சுலோகம் வில்லாளிகளின் ஸ்வபாவத்தைக் கூறுகின்றது. நாணை அவிழ்த்து வில்லை மடியிலே வைத்துக்

கொண்டு, வளைந்து போன அம்புகளை நிமிர்த்திப் பழுது பார்ப்பதும், ஸ்நேஹிதர்களுடன் தமது வெற்றியைப் பற்றிப் பேசுவதும் அவ்வீரர்களின் இயற்கையாகும்.

मधुः - வஸந்த ருது. அதன் தேவன் மன்மதனது நண்பன். ते - என்பதை, कथाम् -என்பதுடன் இணைத்துப் பொருள் கொள்ளல் வேண்டும். तत् - विलोकितम् - கடைக்கண் பார்வை இத்தகையதெனக் கூற முடியாததெனக் காட்ட வந்தது तत् - என்ற சொல்; 'அந்த' என்று தான் குறிப்பிடலாம்.

क नु ते हृदयङ्गमः सखा कुसुमायोजितकार्मुको मधुः ।
न खलूग्ररुषा पिनाकिना गमितः सोऽपि सुहृद्गतां गतिम् ॥२४॥

हृदयं - गमः - (உமது) மனத்திற்கு இனியவனும், कुसुम - आयोजित - कार्मुकः - புஷ்பங்களினால் வில்லைத் தயார் செய்பவனும், ते सखा - உமது நண்பனுமான, मधुः - வஸந்தன், क नु - எங்கே இருக்கிறான்? सः अपि - அவனும், उग्र - रुषा - உக்ரமான கோபமுடைய, पिनाकिना - சிவபிரானால், सुहृत् - गताम् - (அவன்) நண்பர் அடைந்த, गतिम् - வழியை, न गमितः खलु - அடைவிக்கப் படவில்லையே!

(க-து) "அன்பரே! புஷ்பங்களைக்கொண்டு உமக்கு எப்பொழுதும் வில்லைச் செய்து தருபவனும் உமக்கு மிக அன்பனுமான நண்பன் வஸந்தன் எங்கே? உக்ரமான கோபமுடைய சிவபிரான் அவனையும் அழிக்காமல் இருப்பாரோ!"

सुहृत् - गताम् - ரதி, மன்மதனை விளித்துப் பேசுவதால் 'நீர் சென்ற' என்று சொல்லவேண்டியிருக்க, 'நண்பர் சென்ற' எனக் கூறியது, சிவபிரான் வஸந்தனை அழிப்பதற்குக் காரணம் உண்டு என்பதனைக் காட்ட. 'துஷ்டனான மன்மதனுக்கு நண்பன் என்பதால் வஸந்தனை அவர் அழிக்க

முற்படலாம். கோபமுடையவர் எதையும் செய்வார் என் பதைக் காட்ட வந்தது उग्ररुषा - என்ற விசேஷணம். உக்ர மான கோபமுடையவர், தம் சத்ருக்களை வென்று, அவர் களின் உறவினரையும் நண்பரையும் கூட அழிக்க முற்படுவர்.

**अथ तैः परिदेविताक्षरैर्हृदये दिग्धशरैरिवाहतः ।**
**रतिमभ्युपपत्तुमातुरां मधुरात्मानमदर्शयत्पुरः ॥ २५ ॥**

अथ - பிறகு, दिग्ध - शरैः इव - விஷம் பூசிய பாணங்கள் போல் (இருந்த), तैः - அந்த, परिदेवित - अक्षरैः - புலம்பல் சொற் களால், हृदये - ஹ்ருதயத்தில், आहतः - தாக்கப்பட்டவனாக, मधुः - வஸந்தன், आतुराम् - துயருற்ற, रतिम् - ரதியை, अभ्युपपत्तुम् - தேற்றுதற்காக, आत्मानम् - தன்னை, पुरः - (அவள்) முன்பு, अदर्शयत् - தோற்றுவித்தான்.

(க-து) ரதி கூறிய புலம்பல் சொற்கள் விஷம் பூசிய பாணங்கள் போல் வஸந்தனின் மனத்தைத் தாக்கி வருத்தின. எனவே, அவ ளுக்கு ஆறுதல் கூற விரும்பி அவள் முன் வந்து நின்றுன் வஸந்தன்.

பாணம் ஹ்ருதயத்தில் புகுமாயின் மிக துன்பத்தைத் தரும். அதுவே விஷம் தடவப்பட்டிருக்குமாயின் துன்பத் தின் எல்லையைப்பற்றிக் கூறவேண்டாம். ரதியின் சொற்கள், வருத்தம் உண்டாக்கும் வகையில் அத்தகைய அம்புகளை ஒத்திருந்தன.

**तमवेक्ष्य रुरोद स भृशं स्तनसम्बाधमुरो जघान च ।**
**स्वजनस्य हि दुःखमग्रतो विवृतद्वारमिवोपजायते ॥ २६ ॥**

सा - அவள், तम् - அவனை, अवेक्ष्य - கண்டு, भृशम् - மிக, रुरोद - அழுது புலம்பினுள்; स्तन - संबाधम् - அங்கம் வருந்தும்

படி, उरः - மார்பில், जघान च - அறைந்து கொண்டாள்; हि - ஏனெனில், स्व - जनस्य - தன்னைச் சேர்ந்தவர்களின், अग्रतः - எதிரில், दुःखम् - துக்கம், विवृत - द्वारं - इव - கதவு திறந்ததுபோல், उपजायते - (தடையின்றி) வெளி வருகின்றது.

(க-து) வஸந்தனைக் கண்டவுடன் முன் புலம்பியதைக் காட்டிலும் அதிகமாக ரதி புலம்பினாள். அங்கம் வருந்தும்படி தன்னை அறைந்து கொண்டாள். தன்னைச் சேர்ந்த மனிதர்களைக் காணும் பொழுது, மூடிவைத்திருந்த துக்கம் (மதகின்) கதவு திறந்தது போல், மிக வேகத்துடன் வெளிவருகின்றது.

विवृतद्वारम् - திறக்கப்பட்ட கதவுடைய என்பது பதப் பொருள். நீர்த் தேக்கத்தின் கதவு திறக்கப்பட்டால் ஜலம் எவ்வாறு வேகமாக வருமோ அதுபோல் ரதியின் மனத்தில் அடைபட்டிருந்த துக்கம் வஸந்தனைக் கண்டவுடன் பீறிட்டுக் கொண்டு வெளிவந்தது.

इति चैनमुवाच दुःखिता सुहृदः पश्य वसन्त किं स्थितम् ।
तदिदं कणशो विकीर्यते पवनैर्भस्म कपोतकर्बुरम् ॥ २७ ॥

दुःखिता - துக்கமடைந்த அவள், एनम् - அவளிடம், इति - இவ்வாறு, उवाच च - கூறினாள். वसन्त - வஸந்தனே! सुहृदः - (உன்) நண்பருக்கு, किम् - என்ன, स्थितम् - மிஞ்சியுள்ளது (என்று) पश्य - பார். कपोत - कर्बुरम् - புறாவைப்போல் பலநிறமான, तत् - इदं - அத்தகைய இந்த, भस्म - சாம்பல், पवनैः - காற்றினால், कणशः - சிறுபொடிகளாக, विकीर्यते - இறைக்கப்படுகின்றது.

(க-து) ரதி வஸந்தனை நோக்கிக் கூறினாள்: "வஸந்தனே! உன் நண்பருக்கு வந்துள்ள நிலையைப் பார். இப்போது அவருடைய சாம்பலே எஞ்சியுள்ளது. புறாவின் நிறமுள்ள அச்சாம்பலைக் காற்று, சிறு சிறு துணுக்குகளாக எங்கும் இறைக்கின்றது." சாம்பலையும் ஓரிடத்தில் இருக்கும்படி காற்று விடவில்லை,

இது முதல் பன்னிரண்டு சுலோகங்கள் ரதி கூறுவதாக உள்ளன.

**अयि सम्प्रति देहि दर्शनम् स्मर पर्युत्सुक एष माधवः ।**
**दयितास्वनवस्थितं नृणाम् न खलु प्रेम चलं सुहृज्जने ॥ २८ ॥**

**अयि स्मर** - அருமை மன்மத, **संप्रति** - இப்பொழுது, **दर्शनम्** - உமது காட்சியை, **देहि** - தந்தருள்வீராக. **एषः** - இந்த, **माधवः** - வஸந்தன், **पर्युत्सुकः**-ஆவலுடையவனுக (இருக்கின்ருன்). **नृणाम्** மனிதர்களுக்கு, **दयितासु** - ஸ்த்ரீகளிடத்தில், **प्रेम** - அன்பு, **अनवस्थितम्** - உறுதியாக இருப்பதில்லை. **सुहृत्** - **जने तु** - நண்பர் களிடத்திலோ, **(प्रेम)** - அன்பு, **चलम्** **न** **खलु** - நிலையற்றதாக இருப்பதில்லை அல்லவா? (உறுதியாக இருக்கின்றது).

(க-து) "மன்மத! உம்மைக் காணவேண்டுமென ஆவலுடன் நிற்கும் வஸந்தனுக்கு உமது உருவைக் காட்டி மகிழ்ச்சியுண்டாக்கு வீராக; மனிதர்கள் மனைவியரிடத்தில் வைக்கும் அன்பு உறுதியாக இருப்பதில்லை. நண்பர்களிடம் வைக்கும் அன்பு உறுதியாக இருப் பது. எனவே என்னிடம் உமக்கு அன்பு குறைவாக இருப்பினும் வஸந்தனிடம் உமது அன்பு குறையாதது. ஸ்திரமாகவும் இருப்பது. ஆகையால் அவனுக்காவது உமது காட்சியைத் தருவீராக."

**दयिता** - "அன்புடன் அணுகப்படுபவள்"-காதலி-மனைவி.

**अमुना ननु पार्श्ववर्तिना जगदाज्ञां ससुरासुरं तव ।**
**बिसतन्तुगुणस्य कारितम् धनुषः पेशलपुष्पपत्रिणः ॥ २९ ॥**

**पार्श्व - वर्तिना** - உமது துணைவனுக இருக்கும், **अमुना ननु**-இவ்வ ஸந்தனுல் தான், **बिसतन्तुगुणस्य**-தாமரை நூலை நாணுக உடை யதும், **पेशल - पुष्प - पत्रिणः** - மிருதுவான புஷ்பங்களை பாணமாக உடையதுமான, **तव** - உமது, **धनुषः** - வில்லினுடைய, **आज्ञाम्** - ஆணையை, **ससुर** - **असुरम्** - தேவர்களுடனும் அஸுரர்களுடனும்

கூடிய, जगत् - இவ்வுலகம், कारितम् - நிறைவேற்றும்படி வற் புறுத்தப்பட்டது.

(க-து) மன்மத! உமது வில்லின் நாண் தாமரை நூல். பாண ங்களோ புஷ்பங்கள். ஆயினும் வில்லின் ஆணைக்குக் கீழ்ப்படியும்படி இவ்வுலகத்தைச் செய்தவன் இவ்வஸந்தன்தான்.

வஸந்த காலம் காதலைத் தூண்டுவதாகக் கருதுவர். எனவே வஸந்தன், மன்மதன் வில்லினது ஆணைக்கு உலகைக் கீழ்ப்படியச் செய்தான் என்று கூறப்பட்டது.

**अमुना जगद् आज्ञां कारितम्** - வஸந்தனால் உலகம் ஆணையை நிறைவேற்றும்படி தூண்டப்பட்டது: வஸந்தன் உலகை ஆணையை நிறைவேற்றச் செய்தான் என்பது இச்சுலோகத் தின் முக்யமான வாக்யம். जगत् - என்றது உலகிலுள்ள ஜீவராசிகள். **बिसतन्तुगुणस्य** - தாமரை நூலையும் மன்மதனது நாணைக் கூறுவர். **पार्श्ववर्ती** - பக்கத்தில் இருப்பவன் - துணை வன். இச்சுலோகத்தில் மன்மதன் வெற்றிக்கு வஸந்தன் உதவியுள்ளான் என்றும், அவனுக்காகவேனும் மன்மதன் திரும்பிவரவேண்டும் என்றும் கூறப்பட்டது.

அடுத்து வரும் ஒன்பது சுலோகங்கள் ரதி, வஸந்தனி டம் கூறுவதாக உள்ளன.

**गत एव न ते निवर्तते स सखा दीप इवानिलाहतः ।**
**अहमस्य दशेव पश्य मामविषह्यव्यसनेन धूमिताम् ॥ ३० ॥**

(வஸந்தனே) ते - உனது, सः - அத்தகைய, सखा - நண் பர்; अनिल- आहतः - காற்றினால் தாக்கப்பட்ட, दीपः इव - விளக்கு போல், गतः एव - சென்றவரே; न निवर्तते - திரும்பப்போவதில்லை. अहम् - நான், अस्य - அந்த தீபத்தின், दशा इव - திரிபோல். (वर्ते) - உள்ளேன்; अविषह्य - व्यसनेन - தாங்கமுடியாத துயரால், धूमिताम् - சோபையிழந்து இருக்கின்ற, माम् - என்னை, पश्य - பார்,

(க-து) வஸந்தனே ! உன் நண்பர் (மன்மதன்) காற்றினால் தாக்கப்பட்ட விளக்கு போல அணைந்து போனார். இனி அவர் திரும்பப் போவதில்லை. சோபை இழந்து, உஷ்ணத்துடன் புகைந்து கொண்டிருக்கும் அணைந்த விளக்கின் திரிபோல் ஒளியிழந்து, மனத்துள் இருக்கும் தாங்கமுடியாத் துயரால் புகைந்து கொண்டிருக்கிறேன். நானிருக்கும் நிலையைப் பார்.

மன்மதனுக்கு தீப ஜ்வாலையும் ரதிக்குத் திரியும் உபமானங்கள்.

धूमिता - திரி புகையுடன் இருக்கும்; ரதியும் விசனம் என்ற புகைப்படலத்தால் மூடப்பட்டு சோபை இழந்து இருக்கிறாள்.

विधिना कृतमर्धवैशसं ननु मां कामवधे विमुञ्चता ।
अनपायिनि संश्रयद्रुमे गजभग्ने पतनाय वल्लरी ॥ ३१ ॥

ननु - வஸந்தனே! काम - वधे - மன்மத தேவனைக் கொல்லும் பொழுது, माम् - என்னை, विमुञ्चता - விட்டுவிட்ட, विधिना - விதியால், अर्ध - वैशसम् - ஒரு பாதியின் கொலையே, कृतम् - செய்யப்பட்டது; अनपायिनि - அழியாதது என (கருதப்பட்டு) இருந்த, संश्रय - द्रुमे - ஆதாரமான மரம், गज - भग्ने - யானையினால் முறிக்கப்பட்டபொழுது, वल्लरी - (அதன் மேல் படர்ந்துள்ள) கொடி, पतनाय - கீழே விழுவதற்குத் தான், भवति - சக்தியுடையதாகின்றது.

(க-து) "கணவனும் மனைவியும் சேர்ந்து, ஒன்றாக ஒரே பொருளாகக் கருதப்படுவர். விதி, மன்மதனைக் கொன்று என்னைக் கொல்லாமல் விட்டது. இது பாதிக் கொலையாகும். என்னையும் கொன்றிருந்தால்தான் கொலை முற்றுப் பெற்றதாகும். எனக்கும் கஷ்டமிராது. உறுதியானதெனக் கருதப்பட்ட ஆதாரமான மரத்தை யானை முறித்துக் கீழே தள்ளிவிடுமாயின் அதன் மேல் படர்ந்துள்ள கொடிக்குக் கீழே விழுவதன்றி வேறு என்ன வழி உண்டு? அது போல் நானும் இங்கு இருந்து கஷ்டப்படுகின்றேன்.

ரதி பாதிக் கொலை கொடியதென்று கூறி முழுக் கொலையை வேண்டுகின்றாள். இவ்வாறு நினைப்பது மிக துக்கமுடையவர்களுக்கு இயல்புதான். वैशसम् - ஹிம்ஸை: இங்கு கொலையைக் குறித்தது. अनपायिनि - "என்றும் நீங்காதது" என்பது பதப் பொருள். अर्धो वा एष आत्मनो यत्पत्नी என வேதமும் மனைவியைக் கணவனின் ஒரு பாதியாகக் கூறுகின்றது.

**तदिदं क्रियतामनन्तरं भवता बन्धुजनप्रयोजनम् ।**
**विधुरां ज्वलनातिसर्जनान्नु मां प्रापय पत्युरन्तिकम् ॥ ३२ ॥**

तत् - ஆகையால், अनन्तरम् - (இடையீடின்றி) சீக்கிரமே, भवता - உன்னால், बन्धुजन - प्रयोजनम् - உறவினர்களின் காரியமான, इदम् - இது (நான் கூறப்போவது), क्रियताम् - செய்யப் படவேண்டும். ननु - வஸந்தனே, ज्वलन-अतिसर्जनाम् - (எனக்கு) அக்னியைத் தருவதால், विधुराम् - கணவன் பிரிவால் துயரமடைந்துள்ள, माम् -என்னை, पत्युः अन्तिकम् -கணவர் ஸமீபத்தை प्रापय - அடைவிப்பாயாக.

(க-து) என் துக்கம் தாங்கமுடியாததால் உறவினர் செய்ய வேண்டிய உதவியை நீ எனக்குச் செய். நெருப்பைத் தந்து அநுமரணத்தின் மூலம் நான் என் கணவரருகில் செல்ல உதவுவாயாக.

ननु - என்பது விளிச் சொல்: இங்கு வஸந்தனை அழைப்பதில் வந்தது. अनन्तरम् - अन्तरम् - இடைவெளி; தாமதம்: अनन्तरम् - 'தாமதமின்றி - உடனே' என்று கருத்து.

**शशिना सह याति शर्वरी सह मेघेन तडित्प्रलीयते ।**
**प्रमदाः पतिवर्त्मगा इति प्रतिपन्नं हि विचेतनैरपि ॥ ३३ ॥**

कौमुदी - நிலவு; शशिना सह - சந்திரனுடன், याति - சென்று விடுகிறது; तडित् - மின்னல், मेघेन सह - மேகத்துடன், प्रलीयते - மறைந்துவிடுகின்றது; प्रमदाः - ஸ்த்ரீகள், पति - वर्त्मगाः - கணவரின் வழியைப் பின் பற்றுபவர்கள், इति - என்பது, विचेतनैः - अपि - சிறிதே அறிவுடையவற்ருலும், प्रतिपन्नम् हि - அறியப்பட்டுள்ள தன்ருே!

(க-து) "சந்திரன் மனைவியான நிலவு அவன் வேறு உலகம் சென்ருல் தானும் அவனுடன் சென்றுவிடுகிறது. மேகத்தின் மனைவியான மின்னல் மேகமழிந்தால் தானும் அழிகிறது. விசேஷமான அறிவற்ற நிலவும் மின்னலும் கூடத் தம் கணவரைப் பின்பற்ற வேண்டுமென அறிந்திருக்குமாயின் அறிவுள்ள நான் கணவரைப் பின்பற்ருமல் இருப்பேனு?"

कौमुदी - तडित् - இரண்டும் பெண்பால் சொற்களாதலால் மனைவியராகக் கருதப்பட்டன. शशी - मेघः - இரண்டும் ஆண்பால் சொற்களாகையால் கணவர்களாகக் கருதப்பட்டன.

अमुनैव कषायितस्तनी सुभगेन प्रियगात्रभस्मना ।
नवपल्लवसंस्तरे यथा रचयिष्यामि तनुं विभावसौ ॥ ३४ ॥

अमुना - (எதிரில் உள்ள), இந்த, सुभगेन - (தற்போது) பிரியமான, प्रिय - गात्र - भस्मना एव - கணவரது உடல் சாம்பலினுலேயே, कषायित - स्तनी - பூசப்பட்ட அங்கமுடையவளாக, नव - पल्लव - संस्तरे - यथा - புதிய தளிர்ப்படுக்கையில் (கிடத்துவது) போல, विभावसौ - அக்னியில், तनुम् - (என்) உடலை, रचयिष्यामि - வைப்பேன்.

(க-து) "இதோ என் எதிரிலிருக்கின்ற, எனக்குப் பிடித்த, என் கணவரது உடல் சாம்பலையே மார்பில் பூசிக்கொண்டு, தளிர்ப்படுக்கையில் என் சரீரத்தை எவ்வளவு விருப்பத்துடன் கிடத்துவேனே அவ்வாறே அனலிலும் வைப்பேன்."

कुसुमास्तरणे सहायताम् बहुशस्सौम्य गतस्त्वमावयोः ॥
कुरु सम्प्रति तावदाशु मे प्रणिपाताञ्जलियाचितश्चिताम् ॥ ३५ ॥

सौम्य - வஸந்தனே! त्वम् - நீ, आवयोः - எங்களிருவருக்கும், बहुशः - பலமுறையும், कुसुम - आस्तरणे - மலர்ப்படுக்கையைச் செய்வதில், सहायताम् गतः - உதவி செய்பவன் நிலையை அடைந்துள்ளாய். संप्रति - இப்பொழுது, प्रणिपात - अञ्जलि - याचितः - அடிபணிதல், கை கூப்புதல் என்ற இரண்டினாலும் வேண்டப்பட்ட, त्वम् - நீ, आशु तावत् - சீக்கிரமே, मे - எனக்கு, चिताम् - சிதையை, कुरु - செய்.

(க-து) "வஸந்தனே! எங்கள் இருவர்க்கும் மலர்ப்படுக்கை தயார் செய்வதில் முன்பு நீ உதவி இருக்கின்றாய். உன்னடி பணிந்து கைகூப்பிக் கேட்டுக்கொள்ளுகிறேன். சிதையை எனக்காகத் தயார் செய்."

चिता - இறந்தவரது உடலை எரிப்பதற்காக வைக்கப்படும் விறகு அடுக்கு.

तदनु ज्वलनं मदर्पितं त्वरयेर्दक्षिणवातवीजनैः ।
विदितं खलु ते यथा स्मरः क्षणमप्युत्सहते न मां विना ॥ ३६ ॥

तद् - अनु - அதற்குப்பின், मद् - अर्पितम् - நான் (சிதையில்) வைத்த, ज्वलनम् - நெருப்பை, दक्षिण - वात - वीजनैः - தென்றல் காற்றை வீசுவதால், त्वरयेः - (ஜ்வலிக்கும்படி) துரிதப்படுத்து. यथा - எவ்வாறு, स्मरः - மன்மததேவன், मां विना - நானின்றி, क्षणम् अपि - ஒரு க்ஷணமும், न उत्सहते - ஸந்தோஷப்படமாட்டாரோ, तथा - அவ்வாறு, ते - உனக்கு, विदितं खलु - தெரிந்தது தான்.

(க-து) "வஸந்தனே! சிதையில் நான் நெருப்பை வைத்தவுடன், தென்னல் காற்றை வீசி, அதனைச் சீக்கிரமே ஜ்வலிக்கச் செய். ஏனெனில், நானின்றி மன்மத தேவன் ஒரு க்ஷணமும் ஸந்தோஷத்துடன் இருக்கமாட்டார் என்பது நீ அறிந்ததே."

मदर्पितम् - அனுமரணம் செய்பவர் தாமே சிதையில் நெருப்பை வைக்க வேண்டுமாதலால், ரதி "நான் வைத்த" என்று கூறினாள்: 'स्वयमेवार्पयेदग्निम्' என்பது ஸ்ம்ருதி; त्वरयेः - ज्वलयेः - என்பது நாராயணர் பாடம்.

इति चापि विधाय दीयताम् सलिलस्याञ्जलिरेक एव नौ ।
अविभज्य परत्र तं मया सहितः पास्यति ते सबान्धवः ॥ ३७ ॥

अपि च - மேலும், इति - இவ்வாறு, विधाय - செய்தபின், नौ - எங்கள் இருவருக்கும், सलिलस्य अञ्जलिः - கைநிறந்த (தர்ப்பண) ஜலமானது, एकः एव - ஒன்றே, दीयताम् - உன்னால் தரப்படவேண்டும். तम् - அதனை, ते - உனது, बान्धवः - நண்பனாகிய, सः - மன்மததேவன், परत्र மறு உலகில், मया सहितः - என்னுடன் சேர்ந்தே, अविभज्य - பங்கிடாது, पास्यति - பானம் செய்வார்.

(க-து) ''சிதையின் நெருப்பை ஜ்வலிக்கச் செய்தபின், எங்கள் இருவர்க்கும் சேர்த்து ஒரு கை ஜலத்தையே தர்ப்பணமாகக் கொடு ; எனக்கு வேறு, மன்மதனுக்கு வேறு, எனத் தனித்தனியே நீரைத் தரவேண்டாம். உன் நண்பர் மறு உலகில் அந்த ஜலத்தைத் தனியே பருகாது என்னுடன் சேர்ந்து பானம் செய்வார். ஏனெனில் என்னுடன் சேர்ந்து சாப்பிடுவதுதான் அவருக்குப் பிரியமானது.

இறந்தவர்களின் நன்மை கருதி கைநிறைய தண்ணீரை எடுத்து மந்திரத்தைக் கூறி விடுவர். अञ्जलि - இணைந்தகை; सलिल- நீர்; सलिलाञ्जलि - நீர் நிறைந்தகை என்பது பதப் பொருள். एकः - ஒன்று, அவ்வாறு தரப்படும் தர்ப்பண ஜலம் ஒன்றே - ஒன்ருகவே - தரப்படவேண்டும் என்பது ரதியின் வேண்டுகோள்.

परलोकविधौ च माधव स्मरमुद्दिश्य विलोलपल्लवाः ।
निवपेः सहकारमञ्जरीः प्रियचूतप्रसवो हि ते सखा ॥ ३८ ॥

(किं) च - மேலும், माधव-வஸந்தனே ! पर-लोक - विधौ-ஈமச் சடங்கு செய்யும்பொழுது, स्मरम् - उद्दिश्य - மன்மததேவனைக் குறித்து, विलोल - पल्लवाः - அசையும் இதழ்களையுடைய, सहकार-मञ्जरीः - மாம்பூங்கொத்துகளை, निवपेः - தருவாயாக, हि -

ஏனெனில், ते सखा - உன் நண்பர், प्रिय - चूत - प्रसवः - மாம் பூவில் பிரியமுடையவர்.

(க-து) வஸந்தனே! அவருக்கு உத்தரகிரியைகளைச் செய்யுங் கால் நீ, மாம்பூவின் கொத்துகளை அவருக்காகத் தருதல் வேண்டும். ஏனெனில் அவருக்கு மாம்பூவில் விருப்பம் அதிகம்.

இறந்தவர்களுக்கு விருப்பமான உணவுகளை சிராத்த காலங்களில் தருவது இப்பொழுதும் வழக்கத்தில் உள் ளதே. मञ्जरी - புதிதாகத் தோன்றியுள்ள தளிர்க் கொத்து என்றும் பொருள் உண்டு. पल्लव - தளிர் அல்லது பூவின் இதழ். नि-वाप - பித்ருக்களைக் கருதி பிண்டம் முதலி யன தருதலை நிவாபம் என்பர்.

इति देहविमुक्तये स्थितां रतिमाकाशभवा सरस्वती ।
शफरीं ह्रदशोषविक्लवां प्रथमा वृष्टिरिवान्वकम्पयत् ॥ ३९ ॥

इति - இவ்வாறு (கூறி), देह - विमुक्तये - உடலை விடுவதற் காக, स्थिताम् - உறுதியாக இருந்த, रतिम् - ரதிக்கு, आकाश - भवा - ஆகாசத்தில் தோன்றிய, सरस्वती - ஒரு வாக்கு, ह्रद् - शोष - विक्लवाम् - நீர் நிலை வற்றியதால் சோர்வுற்ற, शफरीम् - மீனுக்கு, आकाशभवा - ஆகாயத்தினின்றும் வருகின்ற, प्रथमा - वृष्टिः इव - முதல் மழை (ஆறுதல் அளிப்பது போல), अन्व- कम्पयत् - இரங்கிற்று (ஆறுதல் கூறியது).

(க-து) மடுவில் உள்ள நீர் கோடையில் வற்றிவிடுமாயின், அதில் வாழும் மீன் இறந்துவிடும் நிலையில் இருக்கும்; கோடைக்குப் பின் முதன் முதல் வருகின்ற மழை அம்மீனுக்கு ஆறுதல் அளிக்கும். அதுபோல் கணவன் இறந்து உயிர்விடத் துணிந்த ரதிக்கு, ஆகா யத்தில் தோன்றிய அசரீரியான வாக்கு ஆறுதல் அளித்தது.

शफरी - பெண்மீன்; ரதிக்கு உபமானம்; அசரீரிவாக் கிற்கு மழை உபமானம். இரண்டும் ஆறுதளிப்பன. ஆகாயத்தினின்றும் வருவன.

அடுத்து வரும் ஐந்து சுலோகங்கள் அசரீரி வாக்காக உள்ளன.

कुसुमायुधपत्नि दुर्लभस्तव भर्ता नचिराद्भविष्यति ।
शृणु येन स कर्मणा गतः शलभत्वं हरलोचनार्चिषि ॥ ४० ॥

कुसुम - आयुध - पत्नि - மன்மதன் மனைவியே! तव - உன், भर्ता - கணவன், चिरात् - வெகு நாள் வரை, दुर्लभ - (உனக்கு) கிடைக்காதவனாக (இல்லாதவனாக), न भविष्यति - இருக்க மாட்டான். येन कर्मणा - எந்த செயல் காரணமாக, सः - அவன், हर - लोचन - अर्चिषि - சிவபிரானது கண் ஜ்வாலையில், शलभत्वम् - விட்டில் பூச்சியின் நிலையை, गतः - அடைந்தானோ, तत् - அதை, शृणु (நான் கூறக்) கேள்.

(க-து) ரதியே! உன் கணவன் வெகு நாள் வரை உனக்கு அரியனாக இருக்கமாட்டான். சீக்கிரமே நீ அவனை அடைவாய். சிவபிரான் கண் நெருப்பினால் அவன் இறந்ததற்குக் காரணம் கூறுகின்றேன் கேள்.

अभिलाषमुदीरितेन्द्रियः स्वसुतायामकरोत्प्रजापतिः ।
अथ तेन निगृह्य विक्रियामभिशप्तः फलमेतदन्वभूत् ॥ ४१ ॥

उदीरित - इन्द्रियः - (மன்மதனால்) தூண்டப்பட்ட புலன்களையுடைய, प्रजा - पतिः - பிரம்மதேவர், स्व - सुतायाम् - தன் மகளிடம், अभिलाषम् अकरोत् - விருப்பம் கொண்டார். अथ - பிறகு, विक्रियाम् - மனமாறுபாட்டை, निगृह्य - அடக்கி, तेन - அப் பிரம்ம தேவரால், अभिशप्तः - சபிக்கப்பட்டவனாக, एतत् - फलम् - இப்பலனை (சாம்பலாகும் நிலையை), अन्वभूत् - (அவன்) அனுபவித்தான்.

(க-து) ஒரு சமயம் மன்மதன் பிரம்மதேவரிடம் தகாத முறையில் நடந்து கொண்டான். தன் அம்புகளால் அவர் மனத்தைக்

கலக்கி, அவர் தம் மகளிடமும் தவருன எண்ணம் கொள்ளச் செய்தான். இதனை அறிந்த பிரம்ம தேவர் தன் மனத்தை அடக்கி, மன வேறுபாட்டிற்குக் காரணமாக இருந்த மன்மதனைச் சபித்தார். அச் சாபம் காரணமாக அவனுக்கு இந்த நிலை ஏற்பட்டது.

இங்கு கூறப்பட்ட பெண் திலோத்தமை எனச்சிலரும் ஸந்தியை எனச் சிலரும் கூறுவர். अभिशप्तः - சிவபிரானது நெற்றிக்கண் நெருப்பு மன்மதனை எரிக்க வேண்டும் என்பது சாபம்.

परिणेष्यति पार्वतीं यदा तपसा तत्प्रवणीकृतो हरः ।
उपलब्धसुखस्तदा स्मरं वपुषा स्वेन नियोजयिष्यति ॥ ४२ ॥
इति चाह स धर्मयाचितः स्मरशापावधिदां सरस्वतीम् ।
अशनेरमृतस्य चोभयोर्वशिनश्चाम्बुधराश्च योनयः ॥ ४३ ॥

धर्म - याचितः - தர்மன் என்ற தேவனுல் வேண்டப்பட்ட, सः - பிரம்மதேவர், " तपसा - தவத்திஞல், तत् - प्रवणीकृतः- பார்வதிக்கு வசப்பட்டவராக, हरः - சிவபிரான், यदा - எப்பொழுது, पार्वतीम् - பார்வதியை, परिणेष्यति - மணக்கப் போகின்ருரோ, तदा - அப்பொழுது, उपलब्ध - सुखः - (அவர்) சந்தோஷமடைந்தவராக, स्मरम् - மன்மதனை, स्वेन - அவனுடைய, वपुषा - (முன்பு இருந்த) சரீரத்துடன், नियोजयिष्यति - சேர்த்து வைப்பார், इति - என, स्मर - शाप - अवधिदाम् - மன்மதனுடைய சாபத்திற்கு முடிவைத்தரும், सरस्वतीं च - சொல்லையும், आह - கூறிஞர். वशिनः च - புலனடக்க முடைய பெரியோர்களும், अम्बुधराः च - மேகங்களும், अशनेः-இடி (பெரிய ஆபத்து), अमृतस्य च - ஜலம் (நன்மை) ஆகிய, उभयोः - இரண்டிற்கும், योनयः- காரணமாகின்றனர்.

(க-து) தர்மன் என்ற தேவனால் வேண்டப்பட்டு பிரம்ம தேவர், மன்மதனுடைய சாபத்திற்கு முடிவையும் கூறினார்: 'பார்வதியின் தவத்திற்கு வசப்பட்டு சிவபிரான் அவளை மணக்கும் பொழுது, மன்மதன் தனக்கு உதவி செய்பவனே என அறிந்து, தாம் அழித்த அவனது பழைய சரீரத்தையே அவனுக்கு அளித்து, முன்போல் இருக்கச் செய்வார்,' என்பது பிரம்மதேவரின் வாக்கு; பெரியோர்கள் மேகத்திற்கு ஒப்பானவர்கள். மேகம் இடியை வீழ்த்திக் கெடுதலையும் செய்யும். ஜீவராசிகளுக்கு உயிர் தரும் ஜலத்தையும் தரும். அதுபோல, கோபத்தால் இடிபோன்ற சாபத்தையும் தருவர் பெரியோர். கோபம் நீங்கப் பெற்றால் அமிர்தம் போன்ற அருளும் புரிவர்.

பிரம்ம தேவரால் பிரஜைகளை ஸ்ருஷ்டிப்பதற்காக நியமிக்கப்பட்ட தேவர்களில் ஒருவன் தர்மதேவன். धर्मचारिणि என்பது அருணகிரி பாடம். 'பதிவிரதையான ரதியே' என விளியாகக் கொள்ளவேண்டும். அப்படியாயின் சாபத்தின் முடிவு தரும்படி மன்மதனே பிரம்மதேவரை வேண்டியதாகக் கருதவேண்டும். பார்வதியின் தவத்தால் மகிழ்ந்து அவளிடம் சிவபிரான் ஈடுபட்டது ஐந்தாம் ஸர்க்கத்தில் கூறப்பட்டுள்ளது. स्वेन वपुषा - "தனது முன் சரீரத்துடன்". மன்மதனுக்கு வேறு சரீரம் தரப்படின் அவனை ரதியோ மற்றவரோ அறியமுடியாது போம். எனவே மன்மதனுக்கு அவனுடைய பழைய சரீரத்துடனேயே சேர்க்கை ஏற்படும் என்று கூறினார்.

**तदिदं परिरक्ष शोभने भवितव्यप्रियसङ्गमं वपुः ।**
**रविपीतजला तपात्यये पुनरोघेन हि युज्यते नदी ॥ ४४ ॥**

शोभने - மங்கலமுடையவளே, तत् - ஆகையால், भवितव्य - प्रिय - संगमम् - (திண்ணமாக) உன் கணவனுடன் சேரப் போகின்ற, इदम् - இந்த, वपुः (மன்மதனின் இச்சாம்பல்) உடலை, परिरक्ष - காப்பாற்று; रवि - पीत - जला - சூரியனால் நீர் வற்றிய, नदी - நதி, तप - अत्यये - (கோடையின் முடிவில்) மழை காலத்

தில்; पुनः - மறுபடியும், ओघेन - வெள்ளத்துடன், युज्यते हि - சேரு கின்றதல்லவா.

(க-து). "மங்களமுடைய ரதியே! இவ்வுடலைப் பாதுகாத்து வருவாயாக; உரிய காலத்தில் இச்சாம்பல் உடல் நல்ல வடிவினதாகி உன் கணவனை அடையப் போகின்றது. கோடைகாலத்தில், நதியின் ஜலம் முழுவதையும் சூரியன் வற்றும்படி செய்கிறுன். நதி நீரின்றி வெறும் மணலுடன் காணப்படுகின்றது. மழைக்காலம் வந்தவுடன் மறுபடியும் வெள்ளத்தைப் பெறுகின்றது. அதுபோல் சிவபிரான் கோபத்தால் மன்மதன் உடலிழந்தான். மறுபடியும் அவன் தக்க சமயத்தில் உடலைப் பெறுவான்."

நதி சூரியனுல் தன் தண்ணீரை இழப்பது போல் சிவபிரானுல் நீ கணவனை இழந்தாய். மழைக்காலத்தில் நதி நீரைப் பெறுவதுபோல் நீயும் சிவபிரானருளால் கணவனைப் பெறுவாய் என்றும் கருத்துரைக்கலாம். நீர் வற்றுதற்கும் மழைபெய்வதற்கும் ஸூரியனே காரணம்.

शोभने - இச் சொல் ரதி கைம்பெண் நிலையை அடைந்தவளாகக் கருதப்படமாட்டாள் எனக் காட்டவந்தது. तपः - க்ரீஷ்மருது, भवितव्यप्रियसंगमम् உடலுக்கு விசேஷணம். "மன்மதனது சேர்க்கையை அடைகின்ற": மன்மதனுடைய ஆத்மாவுடன் சேரப்போகின்ற என்பது பொருள். भवितव्य - என்பது இங்கே தன்வினைப் பொருளுடையது. भविष्यत् - என்ற பொருளுடையது. भवितव्यः प्राप्तव्यः என்று உரை கூறுவர் சாரித்ர வர்த்தனர் என்ற உரைகாரர். अपि वीतजला - என்று பாடம் கொண்டு "நீரற்றதாயினும் நதி" என்று பொருளுரைப்பர் நாராயணர்.

इत्थं रतेः किमपि भूतमदृश्यरूपं
मन्दीचकार मरणव्यवसाय बुद्धिम् ।
तत्प्रत्ययाच्च कुसुमायुधबन्धुरेना-
माश्वासयत्सुचरितार्थपदैर्वचोभिः ॥ ४५ ॥

इत्थम् - இவ்வாறு (கூறி), अदृश्य - रूपम् - காணமுடியாத வடிவுடைய, किम् - अपि - ஒரு, भूतम् - ஜீவன் (தேவதை), रतेः - ரதியின், मरण - व्यवसाय - बुद्धिम् - மரணத்திலுள்ள உறுதியான எண்ணத்தை, मन्दीचकार - தளரச் செய்தது; कुसुम - आयुध - बन्धुः च - மன்மதனின் நண்பன் வஸந்தனும், सत् - प्रत्ययात् - அசரீரி வாக்கில் நம்பிக்கையால், एनाम् - அவளை, सु - चरित - अर्थ - पदैः - பொருள் சிறந்த சொற்களையுடைய, वचोभिः - வார்த்தைகளால், आश्वासयत् - தேற்றினான்.

(க-து) வடிவம் காண முடியாத நின்ற ஒரு தேவதை, இவ்வாறு கூறி ரதியின் அனுமரண எண்ணத்தைச் சிறிதே தளர்த்தியது. அசரீரியின் வாக்கியத்தில் முற்றிலும் நம்பிக்கை வைத்த வஸந்தன் நல்ல கருத்துள்ள வார்த்தைகளால் அவள் மனத்தில் நம்பிக்கை வரச்செய்து ஆறுதலையுண்டாக்கி, அனுமரணம் செய்யும் எண்ணத்தை முற்றிலும் விடச் செய்தான்.

बन्धुः - இங்கே 'நண்பன்' என்ற பொருளில் வந்தது. सुचरितार्थ - पदैः மிகவும் உண்மையான அர்த்தமுடைய பதங்களையுடைய; வஸந்தன் கூறியது வெற்று வார்த்தைகளாக இல்லை. समभिवृद्धरसैः - என்பது அருணகிரி பாடம்.

अथ मदनवधूरुपप्लवान्तं व्यसनकृशा परिपालयाम्बभूव ।
शशिन इव दिवातनस्य लेखा किरणपरिक्षयधूसरा प्रदोषम् ॥ ४६॥

अथ - பிறகு, किरण - परिक्षय - धूसरा - ஒளிக்கதிரின் அழிவினால் மங்கிய, दिवातनस्य - பகலில் இருக்கின்ற, शशिनः - சந்திரனது, लेखा - கலை, प्रदोषं इव - (தன் நன்மைக்காக) முன் இரவை (எதிர் நோக்கியிருப்பது) போல, व्यसन - कृशा - துக்கத்தினால் இளைத்த, मदन - वधूः - மன்மதன் மனைவி, उपप्लवा-

न्तम् - விபத்தின் (சாபத்தின்) முடிவை, परिपालयांबभूव - எதிர் நோக்கியிருந்தாள்.

(க-து) பகலில் ஒளியிழந்துள்ள சந்திரனது கலை ஒளியைப் பெறுவதற்காக (பகலின் முடிவை) இரவின் தொடக்கத்தை எதிர் நோக்கி இருக்கும். சந்திரகலை போல் மெலிவுற்று ஒளியிழந்த ரதி யும் தன் கணவனை மறுபடி பெறுவதற்காக சாபத்தின் முடிவிற்கான காலத்தை-சிவபிரான் பார்வதியை மணக்கும் பொழுதை—எதிர் பார்த்துக்கொண்டு இருந்தாள். ரதிக்கு சந்திரகலை உபமானம்.

॥ इति महाकविश्रीकालिदासकृतौ कुमारसंभवे महाकाव्ये चतुर्थः सर्गः ॥

# पञ्चमस्सर्गः

**तथा समक्षं दहता मनोभवं पिनाकिना भग्नमनोरथा सती ।**
**निनिन्द रूपं हृदयेन पार्वती प्रियेषु सौभाग्यफला हि चारुता ।।१।।**

**पार्वती** - பார்வதி, **तथा** - அவ்விதம், **समक्षम्** (தன்) கண் முன் பாகவே, **मनोभवम्** - மன்மதனை, **दहता** - எரித்த, **पिनाकिना** - சிவ பிரானால், **भग्नमनोरथा** - முறிக்கப்பட்ட ஆசையுடையவளாக, **सती** - இருந்து கொண்டு, **हृदयेन** - (முழு) மனத்துடன், **रूपम्** (தனது) அழகை, **निनिन्द** - நிந்தித்துக் கொண்டாள்; **हि** - ஏனெனில், **चारुता** - அழகு, **प्रियेषु**-கணவரிடத்தில், **सौभाग्यफला** அன்பு பெறுவதையே பலனாக உடையது.

(க-து) பரமசிவன், பார்வதியின் எதிரிலேயே மன்மதனை எதிர்த்து அவளது விருப்பம் நிறைவேறாதபடி செய்தார். தன் அழகினால் சிவபிரானை வசீகரித்துக் கணவனாக அடைய விரும்பி அவள் செய்த முயற்சி கோரிய பலனை அளிக்கவில்லை. தன் கண்ணெதிரிலேயே அழகு தெய்வத்தை எரித்தது தன் அழகுக்கு நேர்ந்த அவமானமாகக் கருதினாள். பயன் கொடாத அழகை நொந்தாள். ஸ்த்ரீகளின் அழகிற்குப் பயன் ஒன்றுதான்; தன் கணவரின் மனத்தை வசப்படுத்தி அவரது அன்பை நிரந்தரமாகப் பெற அது உதவ வேண்டும்; எனவே சிவபிரானது அன்பைப் பெற உதவாத தன்னழகை பார்வதி நொந்தனள்.

**रूपम् हृदयेन निनिन्द** - மனத்துள் தன் அழகை நொந்து கொண்டாள். உரத்துப்பல சொற்களைக் கூறி நொந்து கொள்ளாமை, அவளது நற்பண்பினைக் காட்டியது.

**सौभाग्यम्** - கணவனால் விரும்பப் படுதல்; இது அழகினாலும் குணங்களாலும் அடையப்படுவது. கணவனுடைய அன்பைப் பெறுதலும் அவனைத் தான் விரும்பியபடி நடக்கச் செய்வதும் அழகின் பயன் ஆகும்.

इयेष सा कर्तुमवन्ध्यरूपतां समाधिमास्थाय तपोभिरात्मनः ।
अवाप्यते वा कथमन्यथा द्वयं तथाविधं प्रेम पतिश्च तादृशः ॥२॥

सा-அவள், समाधिम्-மன ஒருமையை, आस्थाय-அடைந்து, तपोभिः தங்களால், आत्मनः- தனக்கு, अवन्ध्यरूपताम् - பயனுள்ள அழகுடைய தன்மையை, कर्तुम् - செய்து கொள்ள, इयेष - விரும்பினாள். अन्यथा - அவ்வாறு இல்லாவிடில், तथाविधम्- அத்தகைய, प्रेम - அன்பு तादृशः அப்படிப்பட்ட, पतिश्च - கணவர் (என்ற) द्वयम् - இரண்டும், कथम् वा-எவ்வாறுதான், अवाप्यते - அடையப்படும் ?

(க-து) பார்வதி மன ஒருமையுடன் தவம் செய்து, பரமசிவனை அடைவதன் மூலம் தன் அழகைப் பயனுடையதாக்க விரும்பினாள். அவள் அழகுக்குப் பயன் பரமசிவனைக் கணவராக அடைவதுதான். அவ்வாறு அவள் தவம் செய்திராவிடில் சிவபிரானைக் கணவராக அடைந்திருக்க முடியாது. அவர் அழிவற்றவர். அவரது அன்பையும் பெற்றிருக்க முடியாது. அவரது அன்பும் சிறந்ததே. அந்த அன்பினால்தான் அவர் தமது சரீரத்தில் பாதி பாகத்தைப் பார்வதிக்குப் பிறகு அளித்தார்.

तपोभिः வேறு எந்த உபாயத்தினால் அடைய முடியாததையும் தவத்தினால் அடைய முடியும் என்பதை அடியில் வரும் சுலோகம் தெரிவிக்கின்றது.

यत् दुष्करं यद् दुरापं यद् दुर्गं यच्च दुस्तरम् ।
यत्सर्वं तपसा प्राप्यं तपो हि दुरतिक्रमम् ॥

तथाविधं प्रेम - அத்தகைய அன்பு இருந்ததால் தான் சிவபிரான் தனது உடலிலும் பாதி பாகத்தைத் தந்தார். तादृशः पति - अनन्यनारीकमनीयम् - अनन्यभाजं पतिं என்று கூறியபடி. வேறு மனைவியை ஏற்காத கணவர் என்பது கருத்து.

निशम्य चैनां तपसे कृतोद्यमां सुतां गिरीशप्रतिसक्तमानसाम् ।
उवाच मेना परिरभ्य वक्षसा निवारयन्ती महतो मुनिव्रतात् ॥३॥

मेना च - மேனை, गिरीश - प्रतिसक्त - मानसाम् - சிவபிரானிடத்தில் பற்றுள்ள மனமுடையவளும், तपसे - தவத்தின் பொருட்டு, कृत - उद्यमाम् - முயற்சி செய்கின்றவளுமான, सुताम् பெண்ணைப்பற்றி, निशम्य - (தோழிகளின் மூலம்) கேள்வியுற்று, एनाम् - அவளை, वक्षसा - மார்புடன், परिरभ्य - அணைத்துக்கொண்டு, महतः - பெரிய (கடினமான), मुनिव्रतात् - முனிவர்களின் விரதமான தவத்தினின்றும், निवारयन्ती - தடுக்கின்றவளாய், उवाच - சொன்னாள்.

(க-து) மேனை பார்வதியின் கருத்தை அறிந்தாள். முனிவர்களின் தொழிலான தவத்தினின்றும் அவளைத் தடுக்க விரும்பிக் கூறினாள்.

परिरभ्य - அணைத்துக் கொண்டு, - தனது அன்பின் மிகுதிக்கு அடையாளமாக அணைத்துக் கொண்டு.

मनीषितास्सन्ति गृहेषु देवतास्तपः क्व वत्से क्व च तावकं वपुः ।
पदं सहेत भ्रमरस्य पेशलं शिरीषपुष्पं न पुनः पतत्रिणः ॥ ४ ॥

वत्से - குழந்தாய், मनीषिताः - மனத்திற்கு விருப்பமான, देवताः - தேவதைகள், गृहेषु - (நமது) வீடுகளிலேயே, सन्ति - இருக்கின்றனர். तपः - தவம், क्व - எங்கே ? तावकम् - உன்னுடைய, वपुः च - சரீரம், क्व - எங்கே ? पेशलम् - மிருதுவான, शिरीषपुष्पम् - வாகைப்பூ, भ्रमरस्य - வண்டினுடைய, पदम् - (பாதத்தை) அடிவைத்தலை, सहेत - தாங்கும்; पतत्रिणः - பறவையின், (पदं) पुनः - அடிவைத்தலை, न (सहेत) - தாங்காது.

(க-து) உன் மனதிற்குப் பிடித்த தேவர்கள் (விக்ரஹ வடிவில்) நமது வீட்டிலே இருக்கின்றர். அவர்களைப் பூஜித்து, நீ விரும்பிய பயனைப் பெறலாம். உனது மிருதுவான சரீரம் தவப்

செய்வதில் உள்ள கஷ்டத்தைத் தாங்க முடியாது. வாகைப் பூ தேனீயைத் தாங்குமேயன்றி பறவை உட்கார்ந்தால் தாங்குமோ?

मनीषितायार्चे - என்ற பாடம் கொள்வர் நாராயணர். मनीषिताय - விரும்பியதை அடைதற்காக, गृहेषु - வீட்டில் (விக்ரஹ வடிவில் உள்ள), देवताः - இந்திராணி முதலிய தேவதைகளே, अर्च - பூஜி-என்பது பொருள். भ्रमरस्य पदम् - வண்டு ஓரிடத்திலும் அதிக நேரம் இராது. அதனுல் வாகைப் பூ தாங்க இயலும். அவ்வண்டே அதிக நேரம் இருப்பின் தாங்காது என்பது, भ्रमर - 'திரிவது' என்ற பொருள் உள்ள भ्रम् என்ற வினையடியாக வந்தது. அது போல் வீட்டிலுள்ள தேவபூஜையும் அதிகமானுல் பார்வதிக்குக் கஷ்டம் தருவதா கும் என்பது கருத்து.

इति ध्रुवेच्छामनुशासती सुतां शशाक मेना न नियन्तुमुद्यमात् ।
क ईप्सितार्थस्थिरनिश्चयं मनः पयश्च निम्नाभिमुखं प्रतीपयेत् ॥५॥

इति - இவ்வாறு, अनुशासती - உபதேசிக்கின்ற, मेना - மேனை, ध्रुवेच्छाम् - உறுதியான எண்ணமுடைய, सुताम् - தன் மகளை (பார்வதியை), उद्यमात् - முயற்சியினின்றும், नियन्तुम् - தடுக்க, न शशाक - சக்தியுடையவளாக இல்லை. ईप्सित - अर्थ - स्थिर - निश्चयम् - அடைய விரும்பிய பொருளில் உறுதியான எண்ணமுடைய, मनः - மனத்தையும், निम्नाभिमुखम् - தாழ்ந்த இடத்தை நோக்குகின்ற, पयश्च - ஜலத்தையும், कः - எவன், प्रतीपयेत् - திருப்ப முடியும்?

(க-து) பார்வதியின் மனத்தை மேனையால் மாற்ற முடிய வில்லை. பள்ளத்தை நோக்கி ஓடுவது ஜலத்தின் இயற்கை. நீரின் ஸ்வபாவத்தை மாற்ற முடியாததுபோல் உறுதியான எண்ணத்தை யும் யாரும் மாற்ற முடியாது.

**कदाचिदासन्नसखीमुखेन सा मनोरथज्ञम् पितरं मनस्विनी ।**
**अयाचतारण्यनिवासमात्मनः फलोदयान्ताय तपस्समाधये ॥६॥**

कदाचित् - ஒரு ஸமயம், मनस्विनी - உறுதியான மன முடைய, सा - அப்பார்வதி, मनोरथज्ञम् (தனது) விருப்பத்தை யறிந்த, पितरम् - தந்தையை (தந்தையிடம்), आसन्नसखीमुखेन - நெருங்கிய தோழியின் வாயிலாக, फलोदयान्ताय - பயனுண்டா வதையே முடிவாக உடைய, तपस्समाधये - தவத்தின் பொ ருட்டு, आत्मनः - தனக்கு, अरण्यनिवासम् - வனவாஸத்தை, अयाचत- யாசித்தாள், (வேண்டினுள்).

(க-து) பார்வதி, தான் விரும்பிய பயன் கிடைக்கும் வரை தவம் செய்யப்போவதாகக் கூறி, வனவாஸம் செய்யத் தந்தையின் அனுமதியைத் தோழியின் மூலம் கேட்டாள்.

कदाचित् - நல்ல ஸந்தர்ப்பம் கிடைத்த பொழுது, आसन्न-सखीमुखेन - தன்னிடம் விசுவாசம் கொண்டவளும் தந்தையின் நம்பிக்கையைப் பெற்றிருப்பவளுமான தோழியின் மூலம், फलोदय - अन्ताय - தான் விரும்பிய பயன் கிடைக்குமாயின் அதுவே தவத்தை முடிக்கக் காரணமாகும். எனவே, பயன் அடையும் வரை தவம் செய்ய அனுமதி கேட்டாள். अयाचत - யாசித்தாள் என்பதால், பார்வதி தந்தையினிடம் கொண்ட மரியாதை புலனுகும்-

**अथानुरूपाभिनिवेशतोषिणा कृताभ्यनुज्ञा गुरुणा गरीयसा ।**
**प्रजासु पश्चात् प्रथितं तदाख्यया जगाम गौरी शिखरं शिखण्डिमत् ॥**

अथ - பிறகு, गौरी - பார்வதி, अनुरूप - अभिनिवेश - तोषिणा - தகுந்த பற்றுதலினுல் ஸந்தோஷமடைந்தவரும், गरीयसा - மதிப்புக்குரியவருமான, गुरुणा - தந்தையால், कृताभ्यनुज्ञा -

அனுமதி கொடுக்கப்பட்டவளாய், पश्चात् - பிற்காலத்தில், तदाख्यया - அவள் பெயரால், प्रजासु - ஜனங்களிடையில், प्रथितम् - பிரசித்தி பெற்றதும், शिखण्डिमत् - மயில்களையுடையதுமான, शिखरम् - மலைச் சிகரத்தை, जगाम - அடைந்தாள்.

(க-து) தந்தை அவளது ஆசையையறிந்து மகிழ்ந்து அனுமதியளிக்கப் பார்வதி, மயில்கள் நிறைந்த ஒரு மலைச் சிகரத்தையடைந்தாள். அவள் தவம் செய்த காரணத்தால் அச்சிகரம், பிற்காலத்தில் "கௌரீ சிகரம்" என அவள் பெயரை முன்னிட்டு அழைக்கப்படுவதாயிற்று.

कृताभ्यनुज्ञा - 'செய்யப்பட்ட அனுமதியுடையவளாக' என்பது பதப்பொருள். अनुरूप - தகுந்தவரினிடத்தில், अभिनिवेश - ஆசையினால், तोषिणा - ஸந்தோஷம் அடைந்த-எனப் பொருள் உரைப்பர் நாராயணர்,

गौरीशिखरम् - என ஒரே பதமாகவும் கொள்வார் அவர். शिखण्डिमत् - 'மயில்களையுடைய' என்று கூறியதால் பாம்பு முதலியவிஷ ஐந்துக்களும் கொடிய மிருகங்களும் இல்லாத இடம் கௌரீசிகரம் என்பது புலனாகும்.

विमुच्य सा हारमहार्यनिश्चया विलोलयष्टिप्रविलुप्तचन्दनम् ।
बबन्ध बालारुणबभ्रुवल्कलं पयोधरोत्सेधविशीर्णसंहति ॥ ८ ॥

अहार्य - निश्चया - (பிறரால்) விலக்க முடியாத மன உறுதியுடைய, सा - அவள், विलोल - यष्टि - प्रविलुप्तचन्दनम् - அசைகின்ற ஸரங்களினால் அழிந்த சந்தனமுடைய, हारम् - முத்து மாலையை, विमुच्य - விட்டு, बालारुण - बभ्रु - இளம் சூரியன் போல் பழுப்பு நிறமானதும், पयोधर-उत्सेध-विशीर्ण-संहति - ஸ்தனபாரத்தினால் இழைகள் தளர்ந்ததுமான, वल्कलम् - மரவுரியை, बबन्ध - அணிந்தாள்.

(க-து) பார்வதி தவம் செய்வதற்கு ஏற்ற கோலம் பூண்டாள். பல வடங்கள் கொண்ட முத்துமாலையை நீக்கினாள்; மரவுரியை அணிந்தாள்.

विलोकयष्टि. . . . . . . चन्दनम् - பார்வதி மார்பில் பூசியுள்ள சந்தனத்தை, அவள் அணிந்திருந்த முத்து மாலையின் ஸரங்கள் அசைந்தாடி அழித்தன; சந்தனம் படுவதால் அழகாயிருந்த முத்து மாலையையும் அவள் விடுத்தாள். यष्टि - முத்து மாலையிலுள்ள வடங்கள் वल्कलम् बबन्ध - ஸுகமான ஸ்பர்சமுடைய முத்து மாலை அணிந்த இடத்தில் கடின ஸ்பர்சமுள்ள மரவுரி அணிந்தாள். विशीर्णसंहति - அழுத்தமாக அணியப்பட்டதால் மரவுரியின் மெல்லிய இழைகள் தளர்ந்தன.

यथा प्रसिद्धैर्मधुरं शिरोरुहैर्जटाभिरप्येवमभूत्तदाननम् ।
न षट्पदश्रेणिभिरेव पङ्कजं सशैवलासङ्गमपि प्रकाशते ॥ ९ ॥

तदाननम् - அவளது முகம், प्रसिद्धैः - அலங்கரிக்கப்பட்ட, शिरोरुहैः- கூந்தல்களினால், यथा - எவ்வாறு, मधुरम् - அழகாக, अभूत् - இருந்ததோ, एवम् - அவ்வாறே, जटाभिः अपि - சடைகளாலும், मधुरम् அழகாக, अभूत् - இருந்தது. पङ्कजम् தாமரை மலர், षट्पदश्रेणिभिः एव - வண்டுகளின் வரிசைகளினால் தான், प्रकाशते - விளங்குகின்றது (என்பது), न - இல்லை; सशैवलासंगम् अपि - பாசியின் சேர்க்கையுடையதாயினும், प्रकाशते - அழகாகவே இருக்கின்றது.

(க-து) அழகிய தாமரை, வண்டுகள் இருப்பதால்தான் அழகாயிருக்கும் என்பதில்லை. சிறு பாசிக் கொத்துடனிருந்தாலும் அழகாகவே இருக்கும். அது போல, பார்வதியின் முகம் அலங்கரிக்கப்பட்ட கூந்தலினால்தான் அழகாயிருந்ததென்பதில்லை. தவத்திற்காக அவள் செய்து கொண்ட சடைகளும் அவளுக்கு அழகையளித்தன.

सरसिजमनुविद्धं शैवलेनापि रम्यम् - என சகுந்தலையை வர்ணித்தார் என்பதைக் காண்க.

**प्रतिक्षणं सा कृतरोमविक्रियां व्रताय मौञ्जीं त्रिगुणां बभार याम् ।**
**अकारि तत्पूर्वनिबद्धया तया सरागमस्या रशनागुणास्पदम् ॥१०॥**

**सा** - அவள், **प्रतिक्षणम्** - ஒவ்வொரு க்ஷணத்திலும், **कृतरोमविक्रियाम्** - மயிர்க்கூச்சமுண்டாக்கியதும், **त्रिगुणाम्** - முப் புரிகளையுடையதுமான, **याम्** - எந்த, **मौञ्जीम्** - முஞ்சப் புல்லி ஞலான கயிற்றை (மேகலையை), **व्रताय** - தவத்திற்காக, **बभार** - (இடுப்பிலே) அணிந்தாளோ, **तत्पूर्वनिबद्धया** - அதுவே முதல் தடவையாகக் கட்டப்பட்ட, **तया** - அந்த முஞ்ச மேகலையிஞல், **अस्याः** - அவளது, **रशना-गुण** - **आस्पदम्** - மேகலை யணியும் இடமான இடையானது, **सरागम्** - சிவந்ததாக, **अकारि** - செய்யப்பட்டது.

(க-து) தவத்திற்காக அவள் முதல் தடவையாக, முஞ்சத்திஞ லான முப்புரிக் கயிற்றை இடையில் அணிந்தாள். அது தனது கடினஸ்பர்சத்திஞல் பிரதிக்ஷணமும் மயிர்க்கூச்சத்தை உண்டாக் கியதுடன் அவளது இடையும் சிவந்து போகும்படி செய்தது.

**मुञ्ज**-தர்ப்பம் போன்ற ஒருவகைப் புல், தமிழிலும் இதை முஞ்சிப் புல் என்றே கூறுவர். இதனின்றும் மூன்று இழை கள் உள்ள கயிறு பின்னுவர். அதற்கு **मौञ्जी** எனப் பெயர். இதனை பிரம்மசாரிகள் அணிவர். முஞ்சம் தர்ப்பம் போல் தூய பொருளாதலால் அக்கயிற்றைப் பார்வதி தவத்திற்கு அங்கமாக இடையில் அணிந்தாள். **त्रिगुणा** - மூன்று புரிகளை- இழைகளையுடையது. **कृतरोमविक्रियाम्** - புதுமையான ஒரு ஸ்பர்சமுடைய அக்கயிறு ஒவ்வொரு நொடியும் மயிர்க் கூச்சத்தை யுண்டாக்கிற்று. **रागः** - சிவப்பு, **सरागम्** - உறுத்தி இடை சிவக்கும்படியும் செய்தது; மௌஞ்சியை அணிந் தாள் பார்வதி என்பதாலே தங்கத்திஞலான மேகலையை

அவள் நீக்கிவிட்டாள் என்பதும் பெறப்படுமாதலால் அதனைத்தனியே கூறவில்லை.

**विसृष्टरागादधरान्निवर्तितः स्तनांगरागारुणिताच्च कन्दुकात् ।**
**कुशाङ्कुरादान-परिक्षताङ्गुलिः कृतोऽक्षसूत्रप्रणयी तया करः ॥११॥**

विसृष्टरागात् - வர்ணம் (பூசுதலை) விட்ட, अधरात् - உதட்டி னின்றும், निवृत्तः - நீங்கியதும், स्तन - अङ्गराग - अरुणितात् - மார்பி லுள்ள சந்தனம் படுவதால் சிவந்த, कन्दुकात् च - பந்தினின் றும், (निवृत्तः) - நீங்கியதும், कुश - अङ्कुर - आदान - परिक्षत - अङ्गुलिः - இளம் தர்ப்பங்களை எடுப்பதினால் கீறல்கள் கொண்ட விரல்களை யுடையதுமான, करः - கையானது, अक्षसूत्रप्रणयी- ஜபமாலையில் அன்புடையதாக, कृतः - (அவளால்) செய்யப் பட்டது.

(க-து) தவம் செய்யத் தொடங்கிய பார்வதி உதட்டிற்கு வர் ணம் பூசுவதை நிறுத்தினாள்; பந்து விளையாடுவதையும் நிறுத்தி னாள். எனவே இவ்விரண்டு வேலைகளினின்றும் திரும்பிய கைக்கு வேறு இரண்டு வேலைகளைத் தந்தாள். ஒன்று, தவத்திற்கு வேண் டிய இளம் தர்ப்பங்களை எடுத்து வருவது; மற்றொன்று, ஜபம் செய் வதற்காக ஜபமாலையை ஏந்தி இருப்பது.

स्तनांगरागारुणितात् - விளையாடும் பொழுது பந்து உடலில் படுவதால் உடலில் பூசிய சந்தனம் பட்டு பந்தும் சிவந்து இருந்தது. अङ्गरागः - சந்தனம்; कुशाङ्कुर - தர்ப்பத்தின் முளை; இங்கு முதிராத தர்ப்பத்தைக் குறித்தது. परिक्षत - தர்ப்பத் தின் இருபுறமும் கூறாக இருந்து எடுக்கும் பொழுது உள்ளங்கையையும் விரல்களையும் அறுத்து புண்ணுறச் செய்யும். இங்கு விரல்களைச் சிறு கீறல்களையுடையவை யாகக் கூறினார். अक्षमाला - ஸ்படிகக்கல்லினாலான மாலை; ஜபம் செய்தலை எண்ணுவதற்கு உபயோகமானது. சுலோகம் 63-இல் இம்மாலை குறிப்பிடப்படுகிறது. प्रणयी - விருப்ப

முடையது. அவளது கை தானே ஜபமாலையை விருப்பத்துடன் நாடியது.

पार्वती तपस्समये निजकरम्, अधररञ्जन - कन्दुकाघातरूपात् कार्यद्वयात् निवार्य कुशाङ्कुरादान - अक्षमालापरिवर्तनरूप - कार्यद्वयपरम् अकरोत् इत्यर्थः"- नारायणः ॥

महार्हशय्यापरिवर्तनच्युतैः स्वकेशपुष्पैरपि या स्म दूयते ।
अशेत सा बाहुलतोपधायिनी निषेदुषी स्थण्डिल एव केवले ॥१२॥

महार्ह - शय्या - परिवर्तनच्युतैः - விலையுயர்ந்த (சிறந்த) படுக்கையில் (படுத்துப்) புரளுவதால் உதிர்ந்த, स्व - केश - पुष्पैः - अपि - தனது கூந்தல் புஷ்பங்களாலும், या - எவள், दूयते स्म - வருந்தினளோ, सा - அந்த பார்வதி, बाहुलता-उपधायिनी - கொடிபோன்ற மெல்லிய (தன்) கையையே தலையணையாகக் கொண்டவளாய், केवले - ஒன்றுமில்லாத, स्थण्डिले एव - தரையிலேயே, अशेत - படுத்தாள்; निषेदुषी च - உட்காரவும் செய்தாள்.

(க-து) விலையுயர்ந்த - மிக மிருதுவான - படுக்கையில் படுக்கும் பார்வதி, தன் தலைப்பூ உதிர்ந்து அதில் அவள் சரீரம் படுமாயின் வருந்துவாள். அவ்வளவு ஸௌக்கியத்திலே வாழ்ந்த பார்வதி, தவம் செய்யும்பொழுது வெறும் தரையிலேயே உட்கார்ந்தாள்; கடினமான தரையிலேயே கையைத் தலையணையாகக் கொண்டு படுத்தாள்.

पुनर्ग्रहीतुं नियमस्थया तया द्वयेऽपि निक्षेप इवार्पितं द्वयम् ।
लतासु तन्वीषु विलासचेष्टितं विलोलदृष्टं हरिणाङ्गनासु च ॥१३॥

नियम - स्थया - விரதத்தை மேற்கொண்ட, तया - அவளால், तन्वीषु - மெல்லிய, लतासु - கொடிகள், हरिणाङ्गनासु च - பெண்மான்கள் (என்ற), द्वयेऽपि - இவ்விரண்டிடங்களிலும், विलास-चेष्टितम् - அழகான செயல்களும், विलोलदृष्टं - சஞ்சலமான

(அசைகின்ற) பார்வையும் ஆகிய, द्वयम् - இவ்விரண்டும், पुनः - மறுபடியும், ग्रहीतुम् - எடுத்துக்கொள்ள (விரும்பி), निक्षेपः - அடைக்கலப் பொருளாக, अर्पितम् इव - (முறையே) வைக்கப்பட்டன போல் இருந்தன.

(க-து) தவத்தை மேற்கொண்டதால் பார்வதி தவம் செய்வோருக்குப் பொருந்தாத சில காரியங்களை விட்டாள். அவை அங்கங்களின் அழகான சலனங்களும், மருண்ட பார்வையும் ஆகும். இவ்விரண்டில், அங்கங்களின் சலனத்தைக் கொடிகளிடத்திலும் மருண்ட பார்வையைப் பெண் மான்களிடத்திலும் திரும்பப் பெற விரும்பி அடைக்கலப் பொருளாகக் கொடுத்தாள்.

पुनः ग्रहीतुम् - மறுபடியும் எடுத்துக் கொள்ள; சிவபிரானை மணந்தபின் அழகிய நடை முதலிய சலனங்களும் மருண்ட வசீகரமான பார்வையும் வேண்டியவையே; निक्षेपः - பாது காப்பைக் கருதி ஒருவரிடம் ஒப்படைக்கப்பட்ட பொருள்; लतासु - மாலதி முதலிய கொடிகளிடத்தில்; பார்வதி இவைகளை உண்மையிலே தரவில்லை. தவம் செய்யும் ஸமயத்தில் பார்வதியினிடம் இவை காணப்படாமல் கொடிகளிடமும் மான்களிடமும் அவை காணப்பட்டதால் கவி, தந்ததாக உத்ப்ரேக்ஷித்தார்.

“तपस्समये निश्चलशरीरायां नासाग्रदत्तलोचनायां च देव्याम् विलास-विलोलविलोचन-योरदर्शनम्, लतासु मृगीषु च तद्दर्शनं चोत्प्रेक्षाहेतुः” ॥ नारायणः ॥

अतन्द्रिता सा स्वयमेव वृक्षकान् घटस्तनप्रस्रवणैर्व्यवर्धयत् ।
गुहोऽपि येषां प्रथमाप्तजन्मनां न पुत्रवात्सल्यमपाकरिष्यति ॥१४॥

गुहः अपि - (பிறகு பிறந்த) ஸுப்ரமண்யனும் கூட, प्रथम - आप्त - जन्मनाम् - (தனக்கு) முன்னால் பிறப்பைப் பெற்ற, येषाम् - எந்த மரங்களிடமுள்ள, पुत्रवात्सल्यम् - புத்திர ப்ரீதியை, न

अपाकरिष्यति - நீக்க மாட்டாளே, तान् - அப்படிப்பட்ட, वृक्षकान् - இளம் மரங்களை, सा - அவள், स्वयं एव - தானே, अतन्द्रिता - சோம்பலற்றவளாய், घटस्तनप्रस्रवणैः - குடமாகிய ஸ்தனங்களி னின்றும் பெருகிய நீரால், व्यवर्धयत् - வளர்த்தாள்.

(க-து) பார்வதி, ஆச்ரமத்தில் இளம் மரங்களை நட்டுத் தானே குடங்களால் ஜலம் ஊற்றி வளர்த்தாள். அம்மரங்களிடத்தில், குழந்தைகளிடத்தில் வைக்கும் ப்ரீதியை வைத்தாள். பிறகு பிறந்த குமாரனும் பார்வதி இம்மரங்களிடத்தில் வைத்த ப்ரீதியை மாற்ற முடியவில்லை. பிறகும் அம்மரங்களைப் பார்வதி நேசித்து வந்தாள்.

**अरण्यबीजाञ्जलिदानलालितास्तथा च तस्यां हरिणा विशश्वसुः ।**
**यथा तदीयैर्नयनैः कुतूहलात् पुरस्सखीनाममिमीत लोचने ॥१५॥**

कुतूहलात् - ஆவலினால், तदीयैः - அவைகளுடைய (மான் களுடைய) नयनैः - கண்களால், लोचने - (தனது) கண்களை, सखीनां पुरः - தோழிகளின் எதிரில், यथा - எவ்வாறு, अमिमीत - பார்வதி அளந்து பார்த்தனளோ, तथा - அவ்வாறு, अरण्यबीज-अञ्जलि - दान - लालिताः - இருகைகள் நிறைந்த காட்டுத்தான் யத்தை கொடுப்பதால் பிரியமாக வளர்க்கப்பட்ட, हरिणाः च - மான்களும், तस्यां - அவளிடத்தில், विशश्वसुः - அச்சமின்றி இருந்தன.

(க-து) காட்டுத்தான்யங்களைக் கொடுத்து வளர்த்த மான்கள் அவளிடம் அச்சமின்றி இருந்தன. அவள் தனது கண்களை அவை களின் கண்களோடு அளந்த பொழுதும்கூட அவளால் வரும் கஷ்டங் களை அவைகள் பொறுத்துக் கொண்டன. பெண்களின் கண்களுக்கு மான்களுடைய கண்களை உபமானமாகக் கூறுவதை அறியும் ஆவலி னால் பார்வதி தன் தோழிகள் முன்பு கண்களை அளந்து பார்த்தது மான்களுக்குக் கஷ்டமளித்தாலும், அவைகள் அதனைப் பொறுத்துக் கொண்டன. தம்மைக் கண்டு மிருகங்கள் அஞ்சாமல் இருக்கும்படி நடந்து கொள்வது தவம் செய்பவர்களுக்கு முதல் கடமையாகும்.

अञ्जलि - இரு கைகளாலும் அள்ளித் தான்யத்தைக் கையில் ஏந்திப் பார்வதி மான்களுக்குத் தருவாள். பார்வதி உண்மையிலே கண்களை அளந்து பார்த்தாள் என்பதிலே கவிக்கு நோக்கு இல்லை. மான்கள் அச்சமின்றி இருந்தன என்பதைக் கூறுவதிலேதான் கருத்து.

कृताभिषेकां हुतजातवेदसं त्वगुत्तरासङ्गवतीमधीतिनीम् ।
दिदृक्षवस्तामृषयोऽभ्युपागमन् न धर्मवृद्धेषु वयस्समीक्ष्यते ॥१६॥

कृत - अभिषेकाम् - மூன்று காலங்களிலும் சிரஸ் ஸ்நாநம் செய்தவளும், हुतजातवेदसम् - செய்யப்பட்ட அக்னி யுடைய வளும், त्वग् - उत्तर-आसंगवती - மரவுரியாலான மேலாடை அணிந்தவளும், अधीतिनीम् - ஜபம் செய்கின்றவளுமான, ताम् - அவளை, दिदृक्षवः - பார்க்க விரும்பியவர்களாய், ऋषयः - மஹரி ஷிகள், अभ्युपागमन् - வந்தனர். धर्मवृद्धेषु - தர்மத்திஞல் முதிய வர்களிடத்தில், वयः - வயது (பருவம்), न समीक्ष्यते - பார்க்கப் படுவதில்லை.

(க-து) பார்வதி அப் பனிமலையில் பிரதிதினமும் மூன்று தடவை ஸ்நானம் செய்தாள். மரவுரியையே மேலாடையாக அணிந்தாள். எப்பொழுதும் ஜபம் செய்து வந்தாள். அவளது தவத்தின் மேன்மை யைக் கண்ட மகரிஷிகள், அவள் வயதிலே சிறியவளாயினும் தவத் தில் பெரியவளாதலால் அவளைக் காண வந்தனர். குணமுடையவர் கள், வயதிற் சிறியவர்களாஞலும், வயது முதிர்ந்த பெரியோர்களா லும் மதிக்கப்படுவார்கள். அவர்களது இளமையைக் கண்டு புறக் கணிக்க மாட்டார்கள்.

कृताभिषेकाम् - காலை, நடுப்பகல், மாலை என மூன்று வேளை களில் செய்யப்படும் ஸ்நாநம் இங்கு கூறப்பட்டது. हुतजात-

वेदसम् - தவத்திற்கு அங்கமாகச் செய்யப்படும் அக்னி பூஜை, अधीतिनीम् - ஜபம், ஸ்தோத்ரங்களைப் பாராயணம் செய்தல் முதலியன. धर्मवृद्धेषु - वृद्ध - இச்சொல் பொதுவாக வயதினால் வரும் முதுமையைக் குறிப்பது. முதுமையுடையவர்களைப் பிறர் கௌரவிப்பர். பற்றின்மை (वैराग्यम्), அறிவு (ज्ञानम्), நன்னடத்தை (शीलम्), வயது (वयः) என்ற நான்கில் ஏதாவது ஒன்று ஒருவரிடம் இருப்பினும் அவரை முதுமையுடையவர் - வ்ருத்தர் - எனப் போற்றுவர்.

विरोधिसत्त्वोज्झितपूर्वमत्सरं द्रुमैरभीष्टप्रसवार्चितातिथि ।
नवोटजाभ्यन्तरसंभृतानलं तपोवनं तच्च बभूव पावनम् ॥ १७ ॥

विरोधि - सत्त्व - उज्झित - पूर्वमत्सरम् - (இயற்கையிலேயே) பகையுள்ள பிராணிகளால் விடப்பட்ட பழைய பகையுடையதும், द्रुमैः - மரங்களால், अभीष्ट - प्रसव - अर्चित - अतिथि - விரும்பிய பழங்களால் உபசரிக்கப்பட்ட அதிதிகளையுடையதும், नव - उटज - अभ्यन्तर - संभृतानलम् - புதிய பர்ணசாலைகளில் வளர்க்கப்பட்ட அக்னிகளையுடையதுமான, तत् - तपोवनं च - அத்தபோவனமும், पावनम् - தூய்மையளிப்பதாக, बभूव - ஆயிற்று.

(க-து) பார்வதியின் தபோவனம் அங்கு வருபவர்களின் பாபத்தைப் போக்கித் தூய்மையளிப்பதாக இருந்தது. இயற்கையில் பகையுள்ள புலி, மான் முதலிய பிராணிகள் கூட அவ்வனத்தில் பகையை விட்டு வசித்தன. மரங்கள் அதிதிகள் விரும்பும் பழங்களை வருஷம் முழுவதும் அளித்தன. அத்தபோவன ஆச்ரமங்களில் இடையறாது அக்னி வளர்க்கப்பட்டு ஹோமம் முதலியன நடை பெற்றன. எனவே, அத்தபோவனம் தூய்மை பெற்று விளங்கியது.

पूर्वमत्सरम् - पूर्वं - அஞதியாக - தொன்று தொட்டு வந்துள்ள, मत्सर - பகை ; प्रसव - புஷ்பம், பழம் முதலியன.

**यदा फलं पूर्वतपस्समाधिना न तावता लभ्यममंस्त काङ्क्षितम्।**
**तदाऽनवेक्ष्य स्वशरीरमार्दवं तपो महत् सा चरितुं प्रचक्रमे ॥१८॥**

सा - அவள், तावता - அவ்வளவான, पूर्व - तपः - समाधिना - பழைய (இதுவரை செய்த) தவத்திஞல், कांक्षितम् - விரும்பிய, फलम् - பயனை, लभ्यम् - அடையக் கூடியதாக, यदा-எப்பொழுது, न अमंस्त - எண்ணவில்லையோ, तदा -அப்பொழுது, स्वशरीरमार्दवम्- தனது சரீரத்தின் மென்மையை, अनवेक्ष्य - கவனியாமல், महत् - பெரிய, तपः - தவத்தை, चरितुम् - செய்ய, प्रचक्रमे-ஆரம்பித்தாள்.

(க-து) தான் செய்கின்ற அந்த அளவு தவத்திஞல் விரும்பிய பலன் கிடைக்காதென அறிந்தவுடன் தனது உடலையும் கவனியாது உக்கிரமான தவம் செய்ய ஆரம்பித்தாள்.

**क्लमं ययौ कन्दुकलीलयाऽपि या तया मुनीनां चरितं व्यगाह्यत।**
**ध्रुवं वपुः काञ्चनपद्मनिर्मितं मृदु प्रकृत्या च ससारमेव च ॥१९॥**

या - எந்தப் பார்வதி, कन्दुक - लीलया अपि - பந்து விளையாட்டிஞலும், क्लमम् - களைப்பை, ययौ - அடைந்தனளோ, तया - அவளால், मुनीनाम् - முனிவர்களின், चरितम् - நடத்தையான கடுந்தவம், व्यगाह्यत -புகப்பட்டது. ध्रुवम् -உண்மையாக, वपुः - (அவளது) உடம்பு, काञ्चन - पद्म - निर्मितम् - பொன்தாமரைப் புஷ்பங்களால் ஆக்கப்பட்டது. (अतः एव)-அதஞல்தான், प्रकृत्या - இயற்கையிலே, मृदु च - மிருதுவாயினும், ससारं एव च - பலமுடையதாகவும் (கஷ்டங்களை ஸஹிக்கும் ஆற்றலுடையதாகவும்), आसीत् - இருந்தது.

(க-து) பந்து விளையாடுவதிலும் களைப்படைந்த அவள் கடுந் தவம் செய்தாள். அவள் உடல், கஷ்டங்களைப் பொறுத்துக் கடுந் தவத்தைச் செய்ய அவளுக்கு உதவியது. அவளது சரீரம் புஷ்பம் போல் மிருதுவானது. பொன்னிறம் பெற்றது. உடையாது வளைந்து கொடுக்கும் தன்மையுள்ள தங்கம் போல் அவளது மேனி கஷ்டங் களைச் ஸஹிக்கும் தன்மையும் பெற்றிருந்தது. நிறம், ஸ்பர்சம், சிரமங்களைச் ஸஹிக்கும் குணம் என்ற இம் மூன்று தன்மைகளைக் காணும் பொழுது அவளது மேனி, தங்கத்தாமரை மலர்களால் அமைக்கப்பட்டதோ என்று நினைக்க வேண்டி இருக்கிறது.

शुचौ चतुर्णां ज्वलतां हविर्भुजां शुचिस्मिता मध्यगता सुमध्यमा ।
विजित्य नेत्रप्रतिघातिनीं प्रभामनन्यदृष्टिस्सवितारमैक्षत ॥ २० ॥

शुचौ - கடுங்கோடைக் காலத்தில், ज्वलताम् -ஜ்வலிக்கின்ற, चतुर्णाम् - நான்கு, हविर्भुजाम् - அக்னிகளின், मध्य - गता - நடுவை யடைந்த, सुमध्यमा - பார்வதி, शुचि - स्मिता - सती - அழகிய புன்னகையுடையவளாக இருந்து கொண்டு, नेत्र - प्रतिघातिनीम् - கண்களைத் தடுக்கின்ற, प्रभाम्-(ஸூர்யனின்) ஒளியை, विजित्य - வென்று, अनन्यदृष्टिः - வேறு இடத்தில் பார்வையில்லாதவ ளாய், सवितारं - ஸூர்யனை, ऐक्षत - பார்த்தாள்.

(க-து) மிக உஷ்ணமான கோடையில் அவள் நாற்புறத்திலும் அக்னியை ஜ்வலிக்கச் செய்து அதன் மத்தியில் புன்னகையுடன் நின்றாள். வேறு எதையும் பாராது ஸூர்யனையே பார்த்துக் கொண்டு தவம் செய்தாள். சூரியனுடைய ஒளி தன் கண்களைக் குத்துவதையும் பொருட் படுத்தவில்லை.

இவ்வாறு செய்யப்படும் தவம் 'பஞ்சாக்னிதபஸ்' எனப் படும், ஐந்தாவது அக்னியாக கருதப்படுபவன் ஸூர்யன். पञ्चमः पञ्चतपसः तपनो जातवेदसाम् - (2-51) என மாககவி கூறுவ தையும் காண்க.

तथातितप्तं सवितुर्गभस्तिभिर्मुखं तदीयं कमलश्रियं दधौ ।
अपाङ्गयोः केवलमस्य दीर्घयोः शनैश्शनैश्श्यामिकया कृतं पदम् ॥

सवितुः - ஸூர்யனுடைய, गभस्तिभिः -கிரணங்களால், तथा- அவ்விதம், अतितप्तम् - மிகவும் தஹிக்கப்பட்ட, तदीयम् - அவளு டைய, मुखम् - முகம், कमलश्रियम् - தாமரைப் புஷ்பத்தின் சோபையை, दधौ - தரித்தது; अस्य - அம்முகத்தின், दीर्घयोः - நீண்ட, अपांगयोः केवलम् - கடைக்கண்களில் மாத்திரம், शनैः शनैः- சிறிது சிறிதாக, श्यामिकया - கருமையினுல் (கரு நிறத்தால்), पदम् - இடம், कृतम् - பெறப்பட்டது

(க-து) சூரியனுல் தகிக்கப்பட்டும் அவள் முகம் சூரியகிரண ஸ்பர்சத்தால் ஒளி பெறும் தாமரை மலர் போல் அழகு குன்ருது சோபையுடன் விளங்கியது. கடைக்கண்களின் புறமே சிறிது கருமை நிறம் போன்றது. அதுவும் கண்களுக்கு (மைதீட்டியது போன்று) அழகையே தந்தது.

अयाचितोपस्थितमम्बु केवलं रसात्मकस्योडुपतेश्च रश्मयः ।
बभूव तस्याः किल पारणाविधिर्न वृक्षवृत्तिव्यतिरिक्तसाधनः ॥

अयाचित - उपस्थितम् - வேண்டாமல் கிடைத்த, अम्बु केवलम् - ஜலமும், रसात्मकस्य - அம்ருதம் நிறைந்த, उडुपतेः - சந்திரனின், रश्मयः च - கிரணங்களும், तस्याः - அவளுக்கு, पारणाविधिः - உண வாக, बभूव - இருந்தன. (அவளது ஆஹாரம்), वृक्ष - वृत्ति - व्यतिरिक्त - साधनः - மரங்களின் ஜீவனேபாயத்தினின்றும் வேறு பட்ட உபாயமுடையதாக, न बभूव - இருக்கவில்லை.

(க-து) பார்வதி மேகம் மழை பொழிந்தபொழுது தானுகக் கிடைத்த அந்த ஜலத்தையே உணவாகக் கொண்டாள். குளிர்ந்த சந்திர கிரணங்களும் அவளது சிரமத்தை நீக்கின. காட்டில் மரங் கள் மழை நீரால் வாழ்வதுபோல், அவளும் மழை நீராலேயே உயிர் தரித்தாள்.

रसः - அம்ருதம்; சந்திரனிடம் அம்ருதம் இருப்பதாகக் கூறுவர்: ஜலம் என்ற பொருளும் உண்டு.

निकामतप्ता द्विविधेन वह्निना नभश्चरेणेन्धनसम्भृतेन सा ।
तपात्यये वारिभिरुक्षिता नवैर्भुवा सहोष्माणममुञ्चदूर्ध्वगम् ॥२३॥

नभश्चरेण - ஆகாயத்திலிருப்பது, इन्धन - संभृतेन - விறகினால் வளர்க்கப்பட்டது என்ற, द्विविधेन - இரண்டு வகையான, वह्निना - அக்னியால், निकाम - तप्ता - மிகவும் தாபமடைந்த, सा - அவள், तप - अत्यये - கோடையின் முடிவில், नवैः - புதிய, वारिभिः - மழை ஜலத்தினால், उक्षिता - நனைக்கப்பட்டவளாய், भुवा सह - பூமியுடன், ऊर्ध्वगम् - மேல் நோக்கிச் செல்லுகின்ற, ऊष्माणम् - நீராவியை, अमुञ्चत् - விடுத்தாள்.

(க-து) நன்ருகக் காய்ந்த பூமியில் மழை பொழிந்தவுடன், மழைநீர் ஆவியாக மாறி புகை போன்று மேலே எழும். அதுபோல் பஞ்சாக்னிகளால் தஹிக்கப்பட்ட பார்வதியின் உடம்பிலிருந்தும் மழை ஜலம் பட்டவுடன் ஆவி எழுந்தது. அவ்வளவு கடுமையாக அவள் உடல் வெப்பமடைந்திருந்தது.

विविधेन - என்ற பாடம் கொண்டு, பலவகையான -ஐந்து வகையான என்று பொருள் கூறுவர் மல்லிநாதர். ஐந்து நெருப்பையும் नभश्चरेण इन्धनसंभृतेन - என இரு வகையாகப் பிரித்து இச் சுலோகத்திலேயே கவி கூறுவதால், द्विविधेन - என்ற பாடமே பொருத்தமானது. நாராயணர் கொண்ட பாடமும் அதுவே.

கடுங்கோடையில் பார்வதி செய்த தவத்தைக் கூறிய பின் மழைக்காலத்தில் அவள் தவம் செய்த வகை கூறப் படுகின்றது அடுத்து வரும் இரண்டு சுலோகங்களில்.

स्थिताः क्षणं पक्ष्मसु ताडिताधराः पयोधरोत्सेधनिपातचूर्णिताः ।
वलीषु तस्याः स्खलिताः प्रपेदिरे चिरेण नाभिं प्रथमोदबिन्दवः ॥

प्रथम - उदबिन्दवः - (வர்ஷருதுவில்) முதலில் (விழுந்த) மழைத்துளிகள், तस्याः - பார்வதியின், पक्ष्मसु - இமைகளிலே, क्षणम् - ஒரு க்ஷணம், स्थिताः இருந்தன. (பின் அவை), ताडिताधराः- அவளது உதட்டை துன்புறுத்துகின்றனவாகவும், पयोधर - उत्सेध - निपात - चूर्णिताः - ஸ்தனங்கள் மேல் வீழ்ந்து சிதறியன வாகவும், वलीषु - வயிற்றின் மடிப்புக்களிலே, स्खलिताः - தடு மாறுகின்றனவாகவும், चिरेण - வெகு நேரத்திற்குப் பின், नाभिम् - (நாபியை) இடையை, प्रपेदिरे - அடைந்தன.

(க-து) பார்வதி தியானம் செய்பவர்கள் இருக்க வேண்டிய வகையில் உடலின் மேற்பாகத்தை நேரே நிமிர்த்தியவளாக அமர்ந்திருந்தாள். (முதுகு வளைந்திருக்கவில்லை); மழைக் காலத்தில் முதலில் மழை பெய்யத் தொடங்கும் பொழுது முதன் முதலில் அவள் மேல் விழுந்த ஜலத்துளிகள் எவ்வாறு கீழே நோக்கிச் சென்றன என்பதை வர்ணிப்பதின் மூலம் பார்வதியின் உடல் வனப்பையும் அவள் அமர்ந்திருந்த நிலையையும் கவி காட்டுகின்றார்.

பார்வதி கண்களை பாதியே மூடியிருந்ததால், வீழ்ந்த மழைத் துளிகள் ஒரு கணமே இமையில் தங்கின. பின் அவை உதட்டின் மேல் வீழ்ந்தன. அதன்பின் அவை மார்பின் மேல் வீழ்ந்து சிதறின. பிறகுசில ஜலத்துளிகள் வயிற்றின் மடிப்புகளிலே இடறிச் சென்று, முடிவில் அவளது இடையையடைந்தன. இவ்வாறு ஜலத் துளிகள், படிப்படியாகக் கீழே இறங்குவது பார்வதி தன்னுடைய உடலை நேரே நிமிர்த்தி வைத்துக் கொண்டிருந்தால்தான் நிகழும். எனவே யோக சாஸ்திரத்தில் கூறிய முறைப்படி அமர்ந்திருந்தாள் என்பது புலனாகும்.

समं कायशिरोग्रीवं धारयन्नचलस्थितम्। संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानव-लोकयन् ॥ प्रशान्तात्मा विगतभीः ब्रह्मचारिव्रते स्थितः। मनः संयम्य - என்ற கீதா சுலோகங்கள் (6-13-14) த்யானம் செய்பவர்கள் இருக்கவேண்டிய நிலையைக் கூறும்.

स्थिताः क्षणम् - पक्ष्मसु - இமைகளிலே க்ஷணம் இருந்தன என்பதால், பார்வதி கண்களை பாதி மூடி இருந்தாள் என்

பது புலனுகும். முற்றிலும் கண் மூடியிருந்தாலும், திறந்திருந்தாலும் நீர்த்துளிகள் இமைகளில் தங்கமுடியாது. நீர்த்துளிகள் தங்கும்படி இமைகள் அடர்த்தியாக இருந்தன வென்பதும் தெளிவு.

ताडित - अधराः - இமைகளின்றும் இறங்கிய நீர்த்துளிகள் 'உதட்டை அடித்தன' - வருத்தின - என்று கவி கூறியதனுல், உதட்டின் மிருதுவான ஸ்பர்சம் புலனுகும்; 'ताडित - அடிக்கப்பட்ட, अधरा - உதடு உடையன ஜலத்துளிகள்' என்பது பதப்பொருள், पयोधरोत्सेधनिपातचूर्णिताः - உதட்டினின்றும் புறப்பட்ட ஜலத்துளிகள் கடினமான இடத்தில் வீழ்ந்ததால், அத்துளி ஒவ்வொன்றும் பல சிறுதுளிகளாகச் சிதறின. उत्सेधः - உயர்வு, நிமிர்ந்திருத்தல்.

वलीषु - स्खलिताः - சிதறிய நீர்த்துளிகள் வயிற்றின் மடிப்பின் வழியே வரும் பொழுது, கால் இடறி வரும் மனிதன் போல மெதுவாக ஒவ்வொரு மடிப்பிலும் வீழ்ந்து சென்றன. எனவே அவை, வெகுநேரத்திற்குப் பின் இடையை அடைந்தன.

இச்சுலோகத்தில் கூறிய பொருள் பார்வதியின் இமை, உதடு, மார்பு, வயிற்றின் மடிப்பு முதலிய அங்கங்களின் அழகை மறை முகமாக எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது. காவ்ய விமர்சகர்கள் இச்சுலோகத்தின் பொருள் அழகை மிகவும் உகக்கின்றனர்.

शिलाशयां तामनिकेतवासिनीं निरन्तरास्वन्तरवातवृष्टिषु ।
व्यलोकयन्नुन्मिषितैस्तडिन्मयैर्महातपस्साक्ष्य इव स्थिताः क्षपाः ॥

निरन्तरासु - ஓயாத, अन्तर - वात - वृष्टिषु - இடை இடையே காற்ருேடு கூடிய மழைகளில், अनिकेत - वासिनीं - திறந்த வெளி

யில் வஸிப்பவளும், शिलाशयाम् - பாறையில் படுப்பவளுமான, ताम् - அவளை, महातपः साक्ष्ये - பெருந்தவத்திற்குச் சாக்ஷியான தன்மையில், स्थिताः - இருந்த, क्षपाः - இரவுகள், तडिन्मयैः - மின்னல்கள் என்ற, उन्मिषितैः - பார்வைகளால், व्यलोकयन् इव - பார்த்தன போலும் இருந்தன.

(க-து) மழைக்காலத்தில் பார்வதி, கடுமையான காற்றுடன் கூடிய ஓயா மழையில் திறந்த வெளியில் தவம் செய்தாள். குளிர்ந்த பாறைகளிலே படுத்தாள். அவள் தவத்திற்குச் சாக்ஷியாக இருந்த இரவுகள் மின்னற் கண்கொண்டு நோக்கின போல் காணப்பட்டன. இரவுகளுக்கு மின்னல்களைக் கண்களாக உத்ப்ரேக்ஷித்தார்.

निनाय सात्यन्तहिमोत्किरानिलाः सहस्य रात्रीरुदवासतत्परा ।
परस्पराक्रन्दिनि चक्रवाकयोः पुरो वियुक्ते मिथुने कृपावती ॥२६॥

सा - அவள், अत्यन्त - हिम - उत्किर - अनिलाः - அதிகமாகப் பனிக்கட்டியைக் (நாற்புறமும்) இறைக்கின்ற காற்றை யுடைய, सहस्य रात्रीः-பனிக்கால இரவுகளை, उदवास-तत्परा-நீரில் வஸிப்பதில் ஊக்கமுடையவளாக, परस्पर - आक्रन्दिनि - ஒன்றை ஒன்று விரும்பிக் கத்துகின்றனவும், पुरः - தன் கண் முன்பே, वियुक्ते - பிரிந்திருப்பனவுமான, चक्रवाकयोः मिथुने - சக்ரவாக இணைகளிடத்தில், कृपावती - இரக்கமுடையவளாக, निनाय - போக்கினாள்.

(க-து) பார்வதி பனிக்கால இரவுகளில் கழுத்தளவு ஜலத்தில் நின்று தவம் செய்தாள். அவ்விரவுகளில் காற்று பனிக்கட்டிகளை இறைத்துக் கொண்டிருந்தது. தன் கண்ணெதிரிலேயே சக்ரவாகப் பக்ஷிகள் இருளில் கண் தெரியாமல் பிரிந்து, தன் எதிரிலேயே ஒன்றை ஒன்று அடைய விரும்பிக் கத்தும் பொழுது அவைகளி டத்தில் அவள் இரக்கங் கொண்டாள்.

सहस्यः - தை மாதம்; இங்கு பனிக்காலத்தைக் குறிக்கும். चक्रवाकः - ஒருவகை நீர்ப்பறவை. पुरो वियुक्ते - இரவிலே கண் தெரியாத ஆணும் பெண்ணுமான சக்ரவாகப் பறவைகள்;

தன் இனம் எதிரில் இருப்பினும் அதனைக் காணுது கத்தும். कृपावती - தவம் செய்வோர்க்கு முக்கியமான குணம் தயை; அது பார்வதிக்கு மிகுதியும் இருந்தது.

இதுவும் அடுத்த சுலோகமும் பார்வதி பனிக்காலத்தில் தவம் செய்த வகையைக் கூறும்.

मुखेन सा पद्मसुगन्धिना निशि प्रवेपमानाधरपत्रशोभिना ।
तुषारवृष्टिक्षतपद्मसम्पदां सरोजसन्धानमिवाकरोदपाम् ॥ २७ ॥

सा - அவள், निशि - இரவில், पद्म - सुगन्धिना - தாமரை மலர் போல் நறுமணமுடையதும், प्रवेपमान - अधरपत्र - शोभिना - அசைகின்ற இதழ் போன்ற உதட்டினுல் சோபையுடையதுமான, मुखेन - தனது முகத்தால், तुषार - वृष्टि - क्षत - पद्म - संपदां - பனி மழையால் அழிந்த தாமரைச் செல்வமுடைய, अपाम् - ஜலத்திற்கு, सरोज - संधानम् - தாமரைப் பூவின் தொடர்பை, अकरोत् इव - செய்தாள் போலும் இருந்தாள்.

(க-து) பனியால் குளத்திலிருந்த தாமரைகள் அழிந்தன. தாமரை இல்லாத தடாகத்தில் நின்று தவம் செய்யும் பொழுது அவள், அத்தடாகத்தில் தாமரையில்லாத குறையை நீக்கித் தாமரையின் அழகைக் கொடுப்பவள் போல் காணப்பட்டாள். ஏனெனில் நீருக்கு மேலும், நீரில் நிழலாகவும் தென்பட்ட அவள் முகம் தாமரைப் புஷ்பம் போன்றே இருந்தது. குளிரால் நடுங்கும் அவளது உதடு காற்றில் அசையும் தாமரையின் இதழ்போல் காணப்பட்டது.

முகத்தின் நறுமணம், தாமரை இதழ் போன்ற உதடு, நிறம், இவைகள் பார்வதியின் முகத்தைத் தாமரை மலராக நினைக்கச் செய்தன. கழுத்தளவு நீரில் நின்று முகம் மாத்திரமே நீருக்கு மேல் இருந்தது. எனவே பார்வதி-குளத்திற்குப் பனிக்காலத்தில் நேர்ந்த குறையை நீக்கியதாக கவி உத்ப்ரேக்ஷித்தார்.

स्वयंविशीर्णद्रुमपर्णवृत्तिता परा हि काष्ठा तपसस्तया पुनः ।
तदप्यपाकीर्णमतः प्रियंवदां वदन्त्यपर्णेति च तां पुराविदः ॥२८॥

स्वयं - विशीर्ण - द्रुमपर्णवृत्तिता - தாமே உதிர்ந்த மரங்களின் இலைகளினால் ஜீவிப்பது, तपसः-தவத்தின், परा काष्ठा हि-உயர்ந்த எல்லையன்றோ! तया पुनः - பார்வதியினாலோ, तद् - அதுவும், अपाकीर्णम् - நீக்கப்பட்டது; अतः - அதனால், पुराविदः - பழைய சரித்திரம் அறிந்த பெரியோர்கள், प्रियंवदाम् - பிரியமாகப் பேசுகின்ற, ताम् - அவளை, अपर्णा इति च - அபர்ணா (இலையையும் நீக்கியவள்) என்றும், वदन्ति - அழைக்கின்றனர்.

(க-து) மரத்திலிருந்து தாமே உதிர்ந்த சருகுகளை உண்டு வாழ்கின்ற தபஸ்விகள், தவம் செய்பவர்களில் சிறந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். பார்வதி சருகையும் சாப்பிடாமல் தவம் செய்ததால் அம்முனிவர்களைக் காட்டிலும் சிறந்தவளானாள். சருகை விட்டதன் காரணமாகப் பார்வதிக்கு 'அபர்ணா' என்ற பெயர் வந்தது.

काष्ठा-உயர்வு -எல்லை; स्वयं विशीर्ण-காலத்தினால் முதிர்ந்து பழுத்துத் தாமே விழுந்த, पर्ण - இலை; அதையும் விலக்கியவள். अपर्णा-என்பது அவளது தவப்பெருமை காரணமாக வந்த பெயர் இது, பிறந்தகுலம் காரணமாக வந்த பெயர், पार्वती - என்பது. प्रियंवदाः - என்ற பாடம் கொண்டு, पुराविदः - என்பதற்கு விசேஷணமாகக் கொள்வர் நாராயணர்.

मृणालिकापेशलमेवमादिभिर्व्रतैस्स्वमङ्गं ग्लपयन्त्यहर्निशम् ।
तपश्शरीरैः कठिनैरुपार्जितं तपस्विनां दूरमधश्चकार सा ॥ २९ ॥

मृणालिका - पेशलम् - தாமரைக் குருத்து போல் மிருதுவான, स्वम् - தன்னுடைய, अङ्गम् - சரீரத்தை, एवमादिभिः - இவை முதலான, व्रतैः - விரதங்களால், अहर्निशम् - பகலிலும் இரவிலும், ग्लपयन्ती - வருத்திக் கொண்டிருந்த, सा - அவள், कठिनैः உறுதியான, शरीरैः - சரீரங்களினால், उपार्जितम् - சம்பாதிக்கப்பட்ட, तपस्विनाम् - தவம் செய்வோரின், तपः - தவத்தை, दूरं - மிகவும், अधश्चकार - தாழ்ந்ததாக்கினாள்.

(க-து) பார்வதி தாமரைக் குருத்து போல் மிருதுவான தனது சரீரத்தை வருத்தி இவ்வாறு கடுந்தவம் செய்து, மகரிஷிகளின் தவத்தையும் தாழ்ந்ததாகச் செய்தாள்.

दूरम् - अधश्चकार- சிறிதளவில் கூட பார்வதியின் தவத்திற்கு மஹரிஷிகளின் தவம் ஈடாக இல்லை.

இதுவரை பார்வதியின் தவத்தை வர்ணித்து, அது உயர்ந்த நிலையையடைந்திருந்தது என்று கூறி முடித்தார். பார்வதி விரும்பிய பயன் மாத்திரமே இனி வரவேண்டியது. அத்தகைய பலனும் கிட்டியது என்பதை அடுத்து வரும் சுலோகங்களில் கூறுகின்றார்.

**अथाजिनाषाढधरः प्रगल्भवाक् ज्वलन्निव ब्रह्ममयेन तेजसा ।**
**विवेश कश्चिज्जटिलस्तपोवनं शरीरबद्धः प्रथमाश्रमो यथा ॥३०॥**

अथ - பிறகு, अजिन - आषाढ - धरः - மான்தோல், பலாசதண்டம் இவைகளைத் தரித்தவரும், प्रगल्भ - वाक् - கம்பீரமான வாக்கையுடையவரும், ब्रह्ममयेन - வேதாப்யாஸத்தினுல் வந்த, तेजसा - ஒளியினுல், ज्वलन् - ஜ்வலிப்பவருமான, कश्चित् - ஒரு जटिलः - சடையையுடைய ப்ரம்மசாரி, शरीरबद्धः - உருவெடுத்த, प्रथमः आश्रमः यथा - ப்ரம்மசர்யாச்ரமம் போல், तपोवनम् - தபோவனத்தில், विवेश - புகுந்தார்.

(க-து) பார்வதியின் ஆச்ரமத்தில் ஒரு ப்ரம்மசாரி புகுந்தார். அவர் ப்ரம்மசர்யமே உருவெடுத்துள்ளது போல் காணப்பட்டார். பிரம்மசர்ய ஆச்ரமத்திற்கு அடையாளமான மான் தோலும் பலாச தண்டமும் வைத்திருந்தார். வேத தேஜஸ் அவர் முகத்தில் திகழ்ந்தது. சடையும் தரித்திருந்தார்.

अथ - பார்வதியின் தவம் அத்தகைய உயர்ந்த நிலையை யடைந்த பின், कश्चित् - பின் கதையினின்றும் சிவபிரானே வந்தார் என்பது புலப்படுமாயினும் ப்ரம்மசர்ய உருவில்

வந்த பொழுது அவர் சிவபிரானே என அறிய முடியாத தோற்றத்தில் இருந்ததால் - 'யாரோ ஒருவர்' என்ற பொருள் கொண்ட, कश्चित् என்ற பதத்தை உபயோகித்தார். 'कदाप्यदृष्टचरत्वात् प्रत्यभिज्ञागन्धेनापि रहितः ।'

प्रगल्भवाक् - கம்பீரமான குரலுடையவர் அல்லது பேச்சு உடையவர். इव - என்பதற்குப் பொருளில்லை. प्रथमाश्रमः यथा- ப்ரம்மசர்யத்திற்கு உரிய தர்மம் முழுவதும் அவரிடம் இருந்ததால், அவர் ப்ரம்மசர்ய ஆச்ரமமே உருவெடுத்து வந்தது போல் காணப்பட்டார். जटिलः, ज्वलन्निव ब्रह्ममयेन तेजसा - என்ற இரண்டு விசேஷணங்களும் அப் பிரம்மசாரி சிறிது வயது முதிர்ந்தவர் என்பதைக் காட்டுகின்றன. அது காரணத்தினுல் தான் பார்வதியும் தன் விருப்பத்தை அவரிடம் கூறும்படித் தன் தோழிக்கு உத்தரவிட்டாள்.

சிவபிரான் பிரம்மசாரியின் வடிவில் வந்தது எதற்கெனின், பார்வதி தம்மிடம் கொண்ட காதலை அவள் கூறக் கேட்பதிலே உள்ள விருப்பத்தினுல் தான். அவள் மனத்தைப் பரீக்ஷிப்பதற்காகவன்று. ஏனெனில் எல்லாமறிந்த அவர் பார்வதியின் காதலை அறியாதவர் அல்லவே. இது விஷயமாக நாராயணர் கூறுவது கவனத்திற்குரியது.

"अत्र भगवतो देवीहृदयगतस्य निगूढस्याप्यभिप्रायस्य श्रोतुकामत्वात् ब्रह्मचारित्वावलम्बनम्" ।

"अथ एवंकृत - बहुविधतपःप्रकर्षसन्धुक्षित-प्राक्तननैसर्गिकानुरागस्य, 'आयासिताभामशरीरबाणैः नितम्बिनीनां परिदेवितानि । आत्मार्थमाकर्णयतां हि यूनाम् समागमो नाम सुखान्तरायः । ' इति न्यायेन 'न कामवृत्तिर्वचनीयमीक्षते' इत्यादिवचनानि श्रोतुकामस्य भगवतः परमेश्वरस्य व्याजेनाभियोगप्रकारं वर्णयितुमुपक्रमते" अथेति என நாராயணர், இச்சுலோகத்திற்குக் கூறும் முன்னுரை.

तमातिथेयी बहुमानपूर्वया सपर्यया प्रत्युदियाय पार्वती ।
भवन्ति साम्येऽपि निविष्टचेतसां वपुर्विशेषेष्वतिगौरवाः क्रियाः ॥

आतिथेयी - அதிதிகளிடத்தில் பிரியமுள்ள, पार्वती - பார்வதி, तं - அப்பிரம்மசாரியை, बहुमानपूर्वया - மரியாதையுடன் கூடிய, सपर्यया - பூஜா த்ரவ்யங்களுடன், प्रत्युदियाय - எதிர் நோக்கிச் சென்றாள். साम्ये - ஸமபாவனையில், निविष्ट - चेतसां - अपि - உறுதி வைத்த மனமுள்ளவர்களுக்கும், वपुर्विशेषेषु - சிறந்த மனிதர்கள் விஷயத்தில், अतिगौरवाः - அதிக மரியாதையுடன் கூடிய, क्रियाः - செயல்கள், भवन्ति - உண்டாகின்றன.

(க-து) பார்வதி அதிதிகளை உபசரிப்பதில் விருப்பமுடையவள். ஆகையால் அவள் அதிதிபூஜைக்குரிய பொருள்களை எடுத்துக் கொண்டு மிகவும் மரியாதையுடன் பிரம்மசாரியை நோக்கிச் சென்று வரவேற்றாள்.

எல்லோரையும் ஸமமாகப் பார்ப்பவர்களும், எளிதில் விருப்பையோ வெறுப்பையோ அடையாத மனமுடையவர்களும் கூட சிற்சில சமயங்களில் சில மனிதர்களுக்கு அதிக மரியாதை செய்து உபசரிக்கின்றனர். உபசரிக்கப்படுவர்களின் தோற்றம் மிகச் சிறந்த மரியாதையை அளிக்கும்படி தூண்டுகின்றது. அவ்வாறே பிரம்மசாரியின் தோற்றப் பொலிவு அதிக மரியாதை செய்யும்படி பார்வதியைத் தூண்டியது.

बहुमान - மரியாதை அல்லது சிரத்தை; सपर्या - பூஜை - இங்கு பூஜைக்குரிய பொருளைக் குறிக்கும். साम्येऽभिनिविष्ट - என்பது நாராயணர் கொண்ட பாடம். वपुर्विशेषेषु - आकृतिविशेषेषु आदरः पदं करोति எனக் கவி மாளவிகாக்னிமித்ரத்தில் கூறியுள்ளார்.

विधिप्रयुक्तां प्रतिगृह्य सत्क्रियां परिश्रमं नाम विनीय च क्षणम् ।
उमां स पश्यन्नृजुनैव चक्षुषा प्रचक्रमे वक्तुमनुज्झितक्रमः ॥३२॥

सः - அவர், विधिप्रयुक्ताम् - (சாஸ்த்ர) முறைப்படி செய்யப் பட்ட, सत्क्रियाम् - மரியாதையை, प्रतिगृह्य - ஏற்றுக்கொண்டு, क्षणम् - சிறிது நேரம், परिश्रमम् - களைப்பை, विनीय नाम च - போக்கிக் கொண்ட பின், उमाम् - பார்வதியை, ऋजुना - நேரான, चक्षुषा - கண்களால், पश्यन् - பார்த்துக்கொண்டு, अनुज्झित - क्रमः - (பேசும்) முறை கைவிடாதவராக, वक्तुम् - பேசுவதற்கு, प्रचक्रमे - ஆரம்பித்தார்.

(க-து) பார்வதி கொடுத்த உபசாரத்தைப் பெற்றுக் கொண்டு, சிரமம் நீக்கிக் கொள்வது போல் பாவனை செய்தபின், தன் மனத்தி லுள்ள எண்ணத்தைக் கண்வழியே காட்டாது நேரான பார்வையுடன் தாம் கூற விரும்பியதை ஒழுங்காகக் கூற ஆரம்பித்தார் பிரம்மசாரி.

विनीय नाम च - ச்ரமத்தை போக்கியது போல் பாவனை செய்து என்பது கருத்து. नाम - என்பது இதனைக் காட்டியது. ऋजुना - நேரான; மனத்திலுள்ள உணர்ச்சியைக் காட்டாத கண்களால் சிவபிரான் பார்த்தார். अनुज्झितक्रमः - பேச வேண்டிய விஷயங்களை முறை தவருது பேசினார்; க்ஷேமம் விசாரிப்பது தொடங்கித் தவம் செய்வதின் காரணம் வரையுள்ள விஷயங்களை ஒழுங்குபடுத்திப் பேசினார். "कुशलप्रश्नमारभ्य तपश्चरणकारणप्रश्नपर्यन्तो वक्ष्यमाणो वचनविन्यासक्रमोऽत्र क्रमशब्देन विवक्षितः" அல்லது புது மனிதர்களிடம் பேச வேண்டிய முறையிலிருந்து சிறிதும் வழுவாமல் பேசத் தொடங்கினார் என்றும் கூறலாம்.

अपि क्रियार्थं सुलभं समित्कुशं जलान्यपि स्नानविधिक्षमाणि ते ।
अपि स्वशक्त्या तपसि प्रवर्तसे शरीरमाद्यं खलु धर्मसाधनम् ॥३३॥

क्रियार्थं - (ஹோமம் முதலான) காரியங்களுக்கான, समित्कुशम् - ஸமித்தும் தர்ப்பமும், अपि सुलभम् - எளிதில் கிடைக்

கின்றனவா? जलानि - ஜலமும், ते - உனக்கு, अपि स्नान-विधि-क्षमाणि - ஸ்நாநம் செய்யத்தக்கதாகஇருக்கின்றதா? स्वशक्त्या - தன் சக்தியால், तपसि - தவத்தில், अपि प्रवर्तसे-முயலுகின்றாயா? (ஏனெனில்), शरीरम् - சரீரம், आद्यम् - முதலாவதான, धर्मसाधनम्-खलु - தர்மத்தின் கருவியல்லவா?

(க-து) ஹோமம் முதலிய செயல்களுக்கு வேண்டிய ஸமித்தும் தர்ப்பமும் இத்தபோவனத்தில் எளிதில் கிடைக்கின்றனவா? இங்குள்ள நீர் உன் ஸ்நானத்திற்குத் தகுந்ததாய்த் தீங்கு செய்யாது இருக்கின்றதா? தர்மத்தை ஸம்பாதிப்பதற்கான கருவிகள் பலவற்றிலும் சரீரம் மிக முக்கியமானதொன்று. ஆதலால் தேக நிலையை அனுசரித்து, சக்திக்கு மீருது தவம் செய்கின்ருயா?

இது முதல் பதினெட்டு சுலோகங்கள் பிரம்மசாரி கூறுபவையாக உள்ளன. அவற்றில் முதல் மூன்று சுலோகங்கள் தவம் செய்வோரைக் கேட்கவேண்டிய குசலப்ரச்னமாக இருப்பன.

अपि त्वदावर्जितवारिसंभृतं प्रवालमासामनुबन्धि वीरुधाम् ।
चिरोज्झितालक्तकपाटलेन ते तुलां यदारोहति दन्तवाससा ॥ ३४ ॥

त्वद् - आवर्जित - वारि - संभृतम् - உன்ஞல் ஊற்றப்பட்ட ஜலத்திஞல் உண்டான, आसाम् - இந்த, वीरुधाम् - கொடிகளின், प्रवालम् - துளிர், अपि अनुबन्धि - தொடர்ந்து வளர்கின்றதா? यद् - துளிர், चिर-उज्झित-अलक्तक-पाटलेन - வெகுகாலமாய் செம்பஞ்சின்றி இருப்பினும் செந்நிறமுடைய, ते - உனது, दन्तवाससा - உதட்டுடன், तुलाम् - ஒத்திருக்கும் தன்மையை, आरोहति - அடைகின்றது.

(க-து) நீ நீர் ஊற்றி வளர்த்த கொடிகளின் துளிர்கள் மேன்மேலும் தொடர்ந்து வளர்கின்றனவா? உதட்டுக்குச் செம்பஞ்சு வர்ணம் பூசுவதை விட்டாலும் உன் உதடு இயற்கையிலே சிவந்திருக்கின்றது. இத்துளிர்கள் உன் உதடு போல் சிவந்தனவாக இருக்கின்றன.

பார்வதியிஞல் பிரியமாக வளர்க்கப்படுவதால் கொடிகளின் நலனை விசாரித்தார் பிரம்மசாரி. இச்சுலோகத்தின்

பிற்பகுதி பிரியமாக பேசுவதிலே நோக்குள்ளது. दन्तवासस् - பற்களை மறைப்பது என்பது பதப் பொருள் - உதடு.

यत् - என்பதற்குப் பொருள் விளக்கம் கருதி - துளிர் என்று, இடத்திற்குச் சேர பொருள் கூறப்பட்டது.

अपि प्रसन्नं हरिणेषु ते मनः करस्थदर्भप्रणयापहारिषु ।
य उत्पलाक्षि प्रचलैर्विलोचनैस्तवाक्षिसादृश्यमिव प्रयुञ्जते ॥ ३५ ॥

करस्थ - दर्भ-प्रणय-अपहारिषु - கையிலுள்ள தர்ப்பங்களை அன்பினால் அபகரிக்கின்ற, हरिणेषु - மான்களிடத்தில், ते - உன்னுடைய, मनः - மனது, अपि प्रसन्नम् - (கலங்காமல்) மகிழ்ச்சியுடன் இருக்கின்றதா? उत्पलाक्षि - நீலோத்பலம் போன்ற கண்ணுடையவளே, ये - அவைகள், प्रचलैः - அசைகின்ற, (தமது, विलोचनैः - கண்களால், तव - உன்னுடைய, अक्षि - सादृश्यम् ) கண்களுக்கு ஸமமாக இருக்கும் நிலையை, प्रयुञ्जते इव - செய்கின்றனபோலும் இருக்கின்றன.

(க-து) உன் கையிலுள்ள தர்ப்பத்தை அபகரிக்கின்ற மான்களிடம் கோபம் அடையாமல் இருக்கின்றாயா? தபஸ்விகள் குற்றம் செய்தவர்களிடத்தும் கோபங்கொள்ள மாட்டார்கள். அந்த மான்கள், உனது கண்களுக்கு உபமானமாக இருக்கும்படித் தங்கள் கண்களைச் செய்து கொள்ள முயலுகின்றன போல் காணப்படுகின்றன. உன்னிடம் அன்புடையன அவை.

प्रणयापराद्धिषु - கையில் உள்ள தர்ப்பங்களில் ஆசை வைப்பதால் குற்றம் செய்கின்ற - என்றும், उत्पलाक्षेपचलैः அசைக்கப்படும் நீலத்தாம்ரை போல் சஞ்சலமான கண்களாலே, என்றும் பொருள் உரைப்பர் நாராயணர். சுலோகத்தின் பிற்பகுதி-பிரியமான கருத்தைக் கூறுவதிலே நோக்குள்ளது.

यदुच्यते पार्वति पापवृत्तये न रूपमित्यव्यभिचारि तद्वचः ।
तथा हि ते शीलमुदारदर्शने तपस्विनामप्युपदेशतां गतम् ॥३६॥

पार्वति - பார்வதி, रूपम् - அழகு (நல்ல தோற்றமுடையவர்), पापवृत्तये - பாவம் செய்வதின் பொருட்டு, न - இல்லை, इति - என்று, यद् - எது (எந்த ஒரு கருத்து), उच्यते - சொல்லப்படுகிறதோ. तद्वचः - அந்தவார்த்தை; अव्यभिचारि - உண்மையானதே. तथा हि - (அது) அவ்வாறுதான்; उदारदर्शने - அழகிய கண்களையுடையவளே, ते - உன்னுடைய, शीलं - நடத்தை तपस्विनाम् अपि - மகரிஷிகளுக்கும் கூட, उपदेशताम् - உபதேசமான தன்மையை, गतम् - அடைந்திருக்கின்றது.

(க-து) "நல்ல தோற்றம் உடையவர்கள் தீய காரியங்களைச் செய்யார்" என்பது உலகத்தினர் கூறும் வாக்கு. அது உண்மையானதே. உனது அழகுபோல் உனது நடத்தையும் சிறந்ததே. சாதாரண ஜனங்கள் மாத்திரமேயன்றி மஹரிஷிகளும் பின்பற்றும்படி உனது நடத்தை அவ்வளவு உயர்ந்ததாக அமைந்துள்ளது.

पापवृत्तये न रूपम् - प्रायः शरीराकारानुवर्तिनो हि गुणाः दोषाश्च भवन्ति என வராஹமிஹிரர் ப்ருஹத்ஸம்ஹிதையில் கூறுவர். न दुष्कुलानामियमाकृतिर्भवेत् न वृत्तभेदी भवतीदृशो जनः (विराटपर्व - 11 - 21) என்பதையும் காண்க.

विकीर्णसप्तर्षिबलिप्रहारिभिस्तथा न गाङ्गैस्सलिलैर्दिवश्च्युतैः ।
यथा त्वदीयैश्चरितैरनाविलैर्महीधरः पावित एष सान्वयः ॥३७॥

एषः - இந்த, महीधरः - மலை, (ஹிமயமலை), अनाविलैः - குற்றமற்ற, त्वदीयैः - உன்னுடைய, चरितैः - நடத்தைகளால், सान्वयः - வம்சத்துடன், यथा - எவ்வாறு, पावितः - தூயதாக்கப்பட்டதோ, तथा - அவ்வாறு, विकीर्ण - सप्तर्षि - बलि - प्रहारिभिः - ஸப்தரிஷிகள் தூவிய பூஜைப்-புஷ்பங்களைக் கொண்டு வருவதும், दिवः -

ஸ்வர்க்கத்தினின்றும், च्युतैः - வந்ததுமான, गाङ्गैः सलिलैः கங்கையின் ஜலத்திலும், न पावितः - பரிசுத்தமாக்கப் படவில்லை.

(க-து) "உன் தந்தை, நிர்மலமான நடத்தையுள்ள உன்னால் தூய்மை பெற்ற அளவு கங்கை ஜலத்திலும் பெறவில்லை. கங்கை ஜலம் ஸ்வர்க்கத்தினின்றும் வருவது. ஸப்தர்ஷிகள், புஷ்பங்களைத் தூவி பூஜை செய்கின்றனர் அத்தகைய புஷ்பங்களைக் கொண்டு வருகின்ற கங்கை அதனாலும் பெருமை பெற்றுள்ளது. இவ்வளவு பெருமை வாய்ந்த கங்கையினும் சிறந்தவள் நீ".

प्रहासिभिः என்பதற்குப் பதிலாக प्रहासिभिः, प्रभासिभिः என இரண்டு பாடபேதங்கள் உண்டு." புஷ்பங்களாலே சிரிப் பனவும், சிறந்து விளங்குகின்றனவும்" - என முறையே பொருள் கொள்ளவேண்டும்.

अनेन धर्मस्सविशेषमद्य मे त्रिवर्गसारः प्रतिभाति भामिनि ।
त्वया मनोनिर्विषयार्थकामया यदेक एव प्रतिगृह्य सेव्यते ॥ ३८ ॥

भामिनि - அழகுடையவளே, यत् - யாதொரு காரணத் தினால், मनो - निर्विषय - अर्थ - कामया - மனத்திலும் நினைக்கப் படாத அர்த்த காமங்களுடைய, त्वया - உன்னால், एकः एव - (தர்மம்) ஒன்றே, प्रतिगृह्य - ஏற்கப்பட்டு, सेव्यते - அனுஷ்டிக் கப்படுகின்றதோ, अनेन - அக்காரணத்தினால், अद्य - இப் பொழுது, मे - எனக்கு, धर्मः - தர்மமே, त्रिवर्गसारः - தர்மார்த்த காமங்களில் மேலானதாக, सविशेषम् - நன்கு, प्रतिभाति - புலப் படுகின்றது.

(க-து) தர்மம், அர்த்தம், காமம் என்ற மூன்று புருஷார்த்தங் களில் தர்மமே உயர்ந்ததென்பது எனக்கு இப்பொழுதுதான் நன்கு விளங்குகின்றது. ஏனெனில் செல்வத்தையும் ஸுகத்தையும் மனத் திலும் நினையாமல் நீ தர்மத்தையனுஷ்டிப்பதே நான் அவ்வாறு நினைப்பதற்குக் காரணம். தர்மம் சிறந்ததாயில்லாவிடில் நீ அதை அனுஷ்டிக்கமாட்டாயல்லவா?

"यस्मात् त्वया यौवनोचितान् कामान् पितृगृहगतानि अतिसुलभानि धनान्यनादृत्य धर्म एव साभिप्रायं सेव्यते तस्मात् धर्मार्थकामानां मध्ये धर्मस्यैव प्राधान्यमिति संप्रति मे निश्चयो जात इति भावः।"

**प्रयुक्तसत्कारविशेषमात्मना न मां परं सम्प्रतिपत्तुमर्हसि।**
**यतस्सतां सन्नतगात्रि सङ्गतं मनीषिभिस्साप्तपदीनमुच्यते॥ ३९॥**

आत्मना - தன்னாலே (உன்னால்), प्रयुक्त - सत्कार - विशेषम् - செய்யப்பட்ட சிறந்த மரியாதையுடைய (சிறந்த மரியாதை செய்யப்பட்டுள்ள), माम् - என்னை, परम् - அன்னியனாக, (வேற்று மனிதனாக), संप्रतिपत्तुं - எண்ணுதற்கு, न अर्हसि - நீ தகுந்தவளில்லை. सन्नतगात्रि - அழகிய சரீரமுடையவளே, यतः - ஏனெனில், मनीषिभिः - வித்வான்களால், सताम् सङ्गतम् - பெரியோர்களின் நட்பு, साप्तपदीनम् - ஏழு வார்த்தைகளால் உண்டாவதாக, उच्यते - சொல்லப்படுகின்றது.

(க-து) பெரியோர்களின் நட்பு, அவர்களுடன் ஏழு வார்த்தை பேசுவதால் (அல்லது ஏழு அடி தூரம் சேர்ந்து நடப்பதால்) உண்டாகும் என அறிந்தவர் கூறுவர். உன்னுடன் பல வார்த்தைகள் பேசிய எனக்கு உன் நட்பு கிடைப்பதற்கு யாதொரு தடையும் இல்லை. மேலும் நீ எனக்குச் சிறந்த மரியாதையும் செய்திருக்கிறாய். என்னை உனது நண்பனாக ஏற்றுக் கொள். அன்னியனாக எண்ணாதே.

सन्नतम् - அழகான; नतम् - चारु सन्नतं - என இதன் பொருளைக் கூறுவர் போஜராஜர்.

சில விஷயங்களைக் கேட்க விருப்பமுற்ற பிரம்மசாரி, பார்வதியின் நம்பிக்கையைப் பெற விரும்பி முதலிலே தன்னை அன்னியனாக அவள் கருத வேண்டாம் என இச்சுலோகத்தில் கேட்டுக் கொள்ளுகிறார்.

**अतोऽत्र किञ्चिद् भवतीं बहुक्षमां द्विजातिभावादुपपन्नचापलः।**
**अयं जनः प्रष्टुमनास्तपोधने न चेद् रहस्यं प्रतिवक्तुमर्हसि॥४०॥**

तपोधने - தவச் செல்வமுடையவளே, अतः - அதனால், अत्र - இப்பொழுது, द्विजातिभावात् - பிராம்மண ஸ்வபாவத்தி ஞல், उपपन्नचापलः - பொருந்திய ஆசையையுடைய, अयं जनः - இந்த மனிதன் (நான்), बहुक्षमाम् - மிகப் பொறுமையுள்ள, भवतीम् - உன்னிடத்தில், किञ्चित् - ஒரு விஷயத்தைப் பற்றி, प्रष्टुमनाः - கேட்க விருப்பமுடையவனுக இருக்கின்முன். रहस्यम् न चेत् - ரஹஸ்யமில்லாவிடில், प्रतिवक्तुं - பதில் சொல்வதற்கு, अर्हसि - தகுந்தவளாகின்முய்.

(க-து) நாமிருவரும் நண்பர்களானதாலும், நீ மிகவும் பொறுமையுடையவளாதலாலும், ப்ராம்மணர்களின் ஸ்வபாவத்திற் கேற்ப எனது ஆசை பொருத்தமானதாலும், இப்பொழுது நான் உன்னிடம் ஒன்று கேட்க விரும்புகின்றேன். ரஹஸ்யமில்லாவிடில் பதில் கூறு.

अयं जनः - என்று தன்னையே படர்க்கையில் கூறுவது ஒரு வகை மரியாதையாகும்.

कुले प्रसूतिः प्रथमस्य वेधसस्त्रिलोकसौन्दर्यमिवोदितं वपुः ।
अमृग्यमैश्वर्यसुखं नवं वयस्तपः फलं स्यात् किमतः परं वद ॥

प्रथमस्य - முதலாவது, वेधसः - பிரம்ம தேவரின், कुले - வம் சத்தில், प्रसूतिः - (உனக்குப்) பிறப்பு இருக்கின்றது; वपुः - சரீ ரம், त्रिलोक - सौन्दर्यं इव - மூவுலகின் அழகைப் போல், उदितम् - உண்டாகியிருக்கின்றது. ऐश्वर्यसुखम् - செல்வத்திஞல் கிடைக் கும் ஸுகமும், अमृग्यम् (உன்ஞல்) தேடப்படவேண்டியதன்று. वयः - பருவமும், नवम्-புதியது (யௌவனம்); अतः - இவைகளைக் காட்டிலும், परम् - வேறு, तपः फलम् - (உன்) தவத்தின் பயன், किं स्यात् - என்ன இருக்கும்?

(க-து) நீ எந்த பலனை விரும்பித் தவம் செய்கின்முய்? நற்குடிப் பிறப்பு, செல்வம், யௌவனம் இவைகளை விரும்பித் தவம்

செய்பவர்கள் உலகில் உண்டு. ஆனால் உனக்கு இவைகள் முன்பே உள்ளன.

कुले प्रसूतिः प्रथमस्य वेधसः - "यज्ञांगार्थं मया सृष्टो हिमवानचलेश्वरः" 'யாகப் பொருளைத் தருவதற்காக ஹிமவான் ஸ்ருஷ்டிக்கப் பட்டான்'' என ப்ராஹ்ம புராணம் கூறும். எனவே ப்ரம்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஹிமவானது மகளாத லால் பார்வதி நற்குலப் பிறப்பைப் பெற்றுள்ளாள். त्रिलोकसौन्दर्यमिव - மற்ற அழகிகளைப் படைக்க உபயோகித்த பொருள்களை பார்வதியைப் படைக்க உபயோகிக்கவில்லை. மூவுலகிலும் உள்ள அழகைத்திரட்டி எடுத்து படைத்துள் ளார் பிரம்மதேவர். अमृग्यमैश्वर्यसुखम् - ஹிமவான் செல்வம் மிகுந்தவராதலால் அதற்காகவும் பார்வதி தவம் செய்ய வேண்டாம். नवं वयः - யௌவனம் இப்பொழுதுதான் தொடங்கி இருக்கிறது. வயது முதிர்ந்தவர் செய்ய வேண்டு வதன்றோ தவம்?

இது முதல் ஐந்து சுலோகங்களிலே பார்வதி எந்த எந்த பயனைக் கருதி தவம் செய்யலாம் என்று தானே ஊஹித்து அவை எல்லாம் பயனாக இருக்க முடியாதென விலக்கிவிட்டு, நல்ல ஒரு கணவனை அடைய விரும்பித் தவம் செய்யலாம் என்ற முடிவினைக் கூறுகின்றார் பிரம்மசாரி.

भवत्यनिष्टादपि नाम दुस्सहान्मनस्विनीनां प्रतिपत्तिरीदृशी ।
विचारमार्गप्रहितेन चेतसा न दृश्यते तच्च कृशोदरि त्वयि ॥४२॥

दुस्सहात् - தாங்கமுடியாத, अनिष्टात् अपि - கஷ்டத்தினாலும், मनस्विनीनाम्-ஸ்த்ரீகளுக்கு, ईदृशी-இப்படிப்பட்ட, प्रतिपत्तिः-முயற்சி, भवति नाम - உண்டாகலாம். विचार-मार्ग-प्रहितेन- ஆலோசனை என்ற வழியில் செலுத்தப்பட்ட, चेतसा - மனத்தால், तच्च - அத்த

கைய கஷ்டமும், कृशोदरि - பார்வதி, त्वयि - உன்னிடத்தில், न दृश्यते - காணப்படவில்லை.

(க-து) மானமுடைய சில ஸ்த்ரீகள், தாங்க முடியாத கஷ்டம் தங்களுக்கு வருமாயின் அப்போது இம்மாதிரியான தவம் முதலிய வற்றைச் செய்வது உண்டு. நன்கு ஆலோசித்தும் கூட அப்படிப் பட்ட கஷ்டம் ஒன்றும் உனக்கு நேர்ந்திருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை.

முன் சுலோகத்தில் ஏதாவது ஒரு பலனைப் பெற விரும்பித் தவம் செய்ய வேண்டுவதில்லை என்றார். நேர்ந்துள்ள கெடுதலை நீக்கிக் கொள்வதற்காகவும் தவம் வேண்டியதில்லை என்பதை இதிலும் அடுத்து வரும் சுலோகத்திலும் கூறுகின்றார் பிரம்மசாரி.

अलभ्यशोकाभिभवेयमाकृतिर्विमानना सुभ्रु कुतः पितुर्गृहे ।
पराभिमर्शो न तवास्ति कः करं प्रसारयेत् पन्नगरत्नसूतये ॥४३॥

सुभ्रु - அழகிய புருவமுடைய பார்வதி, इयम् - இந்த (உனது), आकृतिः - வடிவம், अलभ्यशोकाभिभवा - துக்கத்தையும் அவமானத்தையும் அடையத் தகுந்ததன்று; पितुः गृहे - தந்தை யின் வீட்டில், विमानना - அவமதிப்பு, कुतः - எவ்வாறு நேரும்? पराभिमर्शः - மற்றவர்களால் வரும் அவமானமும், तव - உனக்கு. न अस्ति - இல்லை. कः - யார், पन्नगरत्नसूतये - பாம்பின் (தலையி லுள்ள) ரத்னத்தை அசைக்க (எடுக்க), करम् - கையை, प्रसारयेत्- நீட்டுவார் ?

(க-து) பார்வதி, ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் கூறியபடி சுபமான லக்ஷணமுடைய உனது வடிவம், ஒரு நாளும் துக்கத்தையோ அவமானத்தையோ அடையாது; பலம் பொருந்தியவர் உனது தந்தை; எனவே உன் தந்தையின் வீட்டில் உறவினராலும் உனக்கு அவமானம் நிகழ்ந்திருக்க இடமில்லை. வேறு எவரேனும் அவமதித் திருப்பரோ எனின் அதுவும் சாத்யமன்று. பாம்பின் தலையிலுள்ள ரத்னத்தை எடுக்க எவரேனும் கை நீட்டுவார்களா? உனக்குக் கெடுதி செய்ய முற்படுவரேல் அவர்கள் உன் தந்தையால் கடுமை யாகத் தண்டிக்கப்படுவர் அல்லவா ?

सूच्ये - என்பதற்குப் பதிலாக மல்லிநாதர் கொண்ட பாடம், सूच्ये - என்பது ; பாம்பின் தலையிலுள்ள ரத்னத்தின் நுனியை - என்று பொருள் கொள்ளவேண்டும்.

**किमित्यपास्याभरणानि यौवने धृतं त्वया वार्धकशोभि वल्कलम् ।**
**वद प्रदोषे स्फुटचन्द्रतारका विभावरी यद्यरुणाय कल्पते ॥ ४४ ॥**

किमिति - எக்காரணத்தினால், यौवने - யௌவனப் பருவத்தில், आभरणानि - ஆபரணங்களை, अपास्य - விட்டு, वार्धकशोभि - கிழப்பருவத்தில் விளங்குகின்ற, वल्कलम् - மரவுரி, त्वया - உன்னால், धृतम् - தரிக்கப்பட்டது? प्रदोषे - இரவின் ஆரம்பத்தில் (ஸாயங்காலத்தில்), स्फुट - चन्द्र - तारका - பிரகாசமான சந்திரனையும் நக்ஷத்திரங்களையுமுடைய, विभावरी - இரவு, अरुणाय - அருணனை (உதயகாலத்தை) அடைய, कल्पते यदि - தகுமா? वद - சொல்.

(க-து) யௌவனப் பருவத்தில் - ஆபரணங்களையணிந்து சோபிக்க வேண்டிய காலத்தில்-அவைகளையணியாததன்றி, அணிந்திருந்த ஆபரணங்களையும் நீக்கிப் பின், கிழவர்களுக்குப் பொருந்துகின்ற இம்மரவுரியை ஏனோ தரித்தாய்? இரவாகிய பெண்ணுக்கு நக்ஷத்திரங்களும், சந்திரனும் ஆபரணங்களாகும். இரவுப்பெண், அவளது யௌவனத் தொடக்கமான முன்னிரவிலேயே அவ்வாபரணங்களை விட்டுச் செக்கச் சிவந்த மரவுரி போன்ற அருணோதயத்தை அடைவது, நன்றாக இருக்குமா? யௌவனத்தில் மரவுரி தரிப்பது, சூரியன் அஸ்தமித்துச் சந்திரன் உதிக்க வேண்டிய காலத்தில் அருணன் உதிப்பது போல் அன்றோ உள்ளது.

அருணன் - ஸூர்ய ஸாரதி, கருடனது அண்ணன்.

ஒரு பயனையும் கருதாமலும் தவம் செய்வதுண்டே எனில், அத்தகைய தவத்தை வயது முதிர்ந்தவர்கள் செய்யலாமேயன்றி யுவதிகள் செய்வது உசிதமன்று என்பது இச்சுலோகத்தில் கூறப்படுகிறது. பொருத்தமில்லாத உடை

யும் சடையும் அணிந்துள்ள பார்வதியின் மனத்தில் படும்படி பிரம்மசாரி கூறும் மாற்று உதாரணம் கவனிக்கத்தக்கது. சந்திரன் நக்ஷத்ரங்களுடன் பிரகாசிக்கும் முன்னிரவு, எல்லாவற்றையும் திடீரெனவிட்டு அருணோதயத்தை அடைவதற்குத் தகுமா? அது எவ்வாறு பொருத்தமற்றதோ அதுபோல் தான் உள்ளது யௌவனம் ததும்பும் பார்வதி ஆபரணங்களை நீக்கி மரவுரி தரிப்பதும் தவமியற்றுவதும்.

विनिकीर्ण - तारका - என்ற பாடத்திற்கு விலக்கப்பட்ட நக்ஷத்ரங்களுடைய என்பது பொருள்.

**दिवं यदि प्रार्थयसे वृथा श्रमः पितुः प्रदेशास्तव देवभूमयः ।**
**अथोपयन्तारमलं समाधिना न रत्नमन्विष्यति मृग्यते हि तत् ॥**

दिवम् - ஸ்வர்க்கத்தை, प्रार्थयसे यदि - விரும்புவாயாகில், श्रमः - (உனது) சிரமமெல்லாம், वृथा - வீணானதே; तव - உன்னுடைய, पितुः - தந்தையின், प्रदेशाः - இடங்கள், देवभूमयः - தேவர்களின் வாஸ ஸ்தானங்கள்; अथ - அல்லது, उपयन्तारम् - கணவனை, प्रार्थयसे यदि - அடைய விரும்புவாயானால், समाधिना अलम् - (அதற்காகவும்) தவம் வேண்டியதில்லை. रत्नम् - ரத்னம், न अन्विष्यति (தன்னை அணியும் மனிதனைத்) தேடுவதில்லை; तद् हि - அது அல்லவா, मृग्यते - (மனிதர்களால்) தேடப்படுகின்றது.

(க-து) ஸ்வர்க்கத்தை விரும்பித் தவம் செய்யின் உன் தவம் பயனற்றதே. ஸ்வர்க்கத்தில் வசிக்கும் தேவர்களும் விரும்பி வாஸம் செய்யும் இடமன்றோ உன் தந்தையின் நாடு. இதைவிட ஸ்வர்க்கம் சிறந்ததா? கணவனை அடைய விரும்பியும் தவம் செய்யத் தேவையில்லை. அழகு முதலான குணங்களில்லாத பெண்கள் தவம் செய்யலாமேயன்றி நீ செய்ய வேண்டியதில்லை. ரத்னம் தன்னை அணிபவனைத் தேடிச் செல்லுமோ? ரத்னத்தையன்றோ மனிதர் தேடித் திரிவர். நீ அவனைத் தேடுவது நன்றன்று.

ஒரு வரன் உன்னையல்லவா தேடிவரவேண்டும். கணவனை யடையவும் அவள் தவம் செய்ய வேண்டாம் என்பதை, न रत्नम् - என்பதன் மூலம் தெளிவுபடுத்துகின்றார்.

निवेदितं निश्श्वसितेन सोष्मणा मनस्तु मे संशयमेव गाहते ।
न दृश्यते प्रार्थयितव्य एव ते भविष्यति प्रार्थितदुर्लभः कथम् ॥

सोष्मणा - உஷ்ணமான, निःश्वसितेन - மூச்சுக் காற்றினாலே, निवेदितम् - (உனது விருப்பம்) தெரிவிக்கப்பட்டது. मे मनः तु - என் மனமோ, संशयम् एव - ஸந்தேகத்தையே, गाहते - அடைகின்றது. ते - உன்னால், प्रार्थयितव्यः एव - வேண்டத்தகுந்தவனே, न दृश्यते (இவ்வுலகில்) காணப்படவில்லை. प्रार्थितदुर्लभः - வேண்டப் பட்டும் கிடைக்காதவன், कथम् - எவ்வாறு, भविष्यति - இருப்பான்?

(க-து) கணவனைப் பற்றி நான் பிரஸ்தாபம் செய்த பொழுது தோன்றிய உனது உஷ்ணமான பெருமூச்சு நீ கணவனைத்தான் விரும்புகின்றாய் எனத் தெரிவிக்கின்றது. என் மனமோ அதை நம்ப மறுத்து, இவ்வளவு அழகுள்ள பார்வதி, தானே வலுவில் ஒரு புருஷனைத் தேடும்படி நேருமா என்று சந்தேஹிக்கின்றது. நீ போய்க் கெஞ்சும்படியான மனிதன் கூட இவ்வுலகில் இருக்கின்றானா? அல்லது நீ விரும்பியபின் உன்னை மறுக்கின்ற மனிதன் தான் எவன்? அவன் எப்படியிருப்பான்?

सोष्मणा - निःश्वसितेन - கணவன் என்ற சொல்லைக் கேட்டவுடன் பார்வதியின் மனத்துள் கிடந்த ஏக்கம் பெருமூச்சாக வெளிவந்தது. அது உஷ்ணமாக இருந்ததென்பதையும், கவலையுற்றபொழுதுதான் அத்தகைய நெடுமூச்சு உண்டாகும் என்பதையும் மனிதர்களின் மனப்போக்கையும் அறிந்த பிரம்மசாரியின் சாதுர்யமான பேச்சு கவனத்திற்குரியது. न दृश्यते - ' உன்னை அடையத் தகுந்த குணச் சிறப்புடையவன் மூவுலகிலும் எவனுமில்லை. எனவே நீ வேண்டத்தக்க மனிதனே கிடையாது.'

प्रार्थितदुर्लभः - அப்படி ஒருவன் உன்னால் வேண்டப்படின் அது அவனுடைய அத்ருஷ்டம் காரணமாக இருக்கவேண்டும். குணப்பெருமையினால் இருக்க முடியாது. எனவே அவன் ஓடிவரமாட்டானோ? நீ வேண்டியும் கிடைக்காத மனிதன் எப்படி இருப்பான்?

अहो स्थिरः कोऽपि तवेप्सितो युवा चिराय कर्णोत्पलशून्यतां गते।
उपेक्षते यश्श्लथलम्बिनीर्जटाः कपोलदेशे कलमाग्रपिङ्गलाः ॥४७॥

अहो - என்ன ஆச்சரியம்! तव - உன்னால், ईप्सितः - அடைவதற்கு விரும்பப்பட்ட, युवा - யுவன், कोऽपि स्थिरः - ஒரு கடினமான மனமுடையவன்; यः - அவன், चिराय - வெகுகாலமாக, कर्ण - उत्पल - शून्यताम् गते - காதணியான நீலோத்பலமற்ற, कपोलदेशे - (உனது) கன்னங்களில், श्लथ - लम्बिनीः - அவிழ்ந்து தொங்குகின்றவைகளும், कलम-अग्र - पिङ्गलाः- முதிர்ந்த நெற்பயிரின் முனை போல் பழுப்பு நிறமுடையவைகளுமான, जटाः - சடைகளை, उपेक्षते - கவனியாது இருக்கின்றான்.

(க-து) நீ விரும்பும் மனிதன் கடின சித்த முடையவன் என்று நினைக்கின்றேன். ஏனெனில், நீலோத்பலம் அணிந்து அழகுடன் இருக்க வேண்டிய உன் கன்னங்களில் பழுப்பு நிறமுள்ள சடைகள் தொங்குவதைக் கண்டும் அவன் இரக்கம் கொள்ளவில்லையே!

कोऽपि - அவன் யாராயிருப்பினும் - சிவபெருமானேயானாலும் - என்று பொருள் கொள்வர் நாராயணர். कोऽपि सः कृष्णोऽपि, साक्षादीश्वरो वा भवत्वित्यर्थः, कर्णोत्पल .... காதில் அணியும் நீலோத்பலம் கன்னத்திற்கு அழகு தருவதாகும். எனவே காதின் அணியான நீலோத்பலமில்லாத கன்னம் என்றார். श्लथलम्बिनीः - என்பது நாராயணர் கொண்ட பாடம்; 'முடிச்சு அவிழ்ந்த' என்று பொருள். उपेक्षते - அலக்ஷ்யம் செய்கின்

ருன். 'தனக்காகச் சடையிட்டுத் தவம் செய்து கஷ்டம் அனுபவிக்கும் உன்னிடத்திற்கு ஓடி வந்து சடையை அவிழ்த்து கூந்தலுக்கு அணிசெய்யாது பராமுகமாயிருக்கின்றனே; அந்தோ அவன் ஒரு கடின சித்த முடையவன்.'

இது முதல் மூன்று சுலோகங்களில் அவள் விரும்பும் கணவன் ரஸிகத் தன்மை குறைந்திருக்கிறனே எனக்கூறி வருத்தப்படுகிறார் பிரம்மசாரி.

मुनिव्रतैस्त्वामतिमात्रकर्शितां दिवाकराप्लुष्टविभूषणास्पदाम् ।
शशाङ्कलेखामिव पश्यतो दिवा सचेतसः कस्य मनो न दूयते ॥४८॥

मुनिव्रतैः - முனிவர்களின் விரதங்களினுல், अतिमात्र - कर्शिताम् - மிக மெலிந்தவளும், दिवाकर - आप्लुष्ट - विभूषण-आस्पदाम् - ஸூர்யனுல் தஹிக்கப்பட்ட ஆபரணங்களின் (அணியப்படும்) இடமுடையவளும், दिवा - பகலிலுள்ள, शशांक - लेखाम् - इव - சந்திரகலைபோல் இருப்பவளுமான, त्वाम् - உன்னை, पश्यतः - பார்க்கின்ற, सचेतसः - அறிவுடைய, कस्य मनः - எந்த மனிதனுடைய மனம், न दूयते - வருந்தாது?

(க-து) தவத்தினுல் உனது உடல் மெலிந்திருக்கின்றது. வளையல் முதலான ஆபரணம் அணிந்திருந்த இடங்கள் வெய்யிலினுல் தஹிக்கப்பட்டுள்ளன. பகலிலுள்ள சந்திரகலை போல் ஒளி குன்றி இருக்கின்றாய். உன்னைக் காண்கின்ற எவனும் உனது நிலைக்காக வருந்துவான்.

मुनिव्रतैः - தவத்தினுலே; दिवाकराप्लुष्टविभूषणास्पदाम् - ஆபரணமணிந்துள்ள இடங்கள் சூரியஒளி படாததால் மிக நிறம் பெற்று மிருதுவாக இருக்கும். இப்பொழுது அத்தகைய இடங்களும் வெய்யிலினுல் தகிக்கப்பட்டுள்ளன. न दूयते - அறிவுள்ள மனிதன் எவன்தான் வருந்தமாட்டான். நீ விரும்பும் மனிதன் இரக்கமற்றிருப்பதால் அவன் மனம்

கல் போன்று உணர்வற்றதென நினைக்கவேண்டியிருக்கிறது. न दीर्यते - எனப் பாடம் கொண்டு 'எவன் மனம்தான் வெடிக்காது' எனப் பொருள் கொள்வர் நாராயணர்.

अवैमि सौभाग्यमदेन वञ्चितं तव प्रियं यश्चतुरावलोकिनः ।
करोति लक्ष्यं चिरमस्य चक्षुषो न वक्त्रमात्मीयमरालपक्ष्मणः ॥

चतुरावलोकिनः அழகாகப் பார்க்கின்றதும், अरालपक्ष्मणः - வளைந்த இமைகளையுடையதுமான, अस्य - இந்த, चक्षुषः (உனது) கண்ணால், लक्ष्यम् - காணும்படி, आत्मीयं - தனது, वक्त्रम्- முகத்தை, यः - எந்த மனிதன், चिरम् - வெகுநாளாக, न करोति- செய்யாமல் இருக்கின்றானோ, तम् - அப்படிப்பட்ட, तव प्रियं - உனது அன்பனை, सौभाग्य - मदेन - அழகு கர்வத்தினால், वञ्चितं - ஏமாற்றப்பட்டவனாக, अवैमि - நான் எண்ணுகின்றேன்.

(க-து) உன்னால் விரும்பப்படுவதாலேயே அம்மனிதன் தான் மிக அழகன் என எண்ணிக் கர்வம் அடைந்திருக்கிறான். இவ்வழகுக் கர்வம், நன்மைக்குப் பதிலாகத் தீமையையே அவனுக்குச் செய்திருக்கின்றது. உன்னிடம் வரவொட்டாமற் செய்து உன்னை அடைவதினின்றும் அவனை ஏமாற்றி விட்டது. இவ்வளவு ஸௌந்தர்யமுடைய கண்களால் பார்க்கப்படும்படியான பாக்யத்தை அவன் பெறவில்லை. உன்னைக்காணாத ஒவ்வொரு நிமிஷமும் அவனுக்குப் பெரும் நஷ்டமே. வந்து பார்த்திருப்பானாயின் தனது நஷ்டத்தை உணர்ந்திருப்பான்.

सौभाग्य - मदः - அழகு கர்வம்; பார்வதியும் தன்னை விரும்புவதால் தன்னைவிட அழகன் எவனுமில்லை என்ற எண்ணம் அவனுக்கு இருக்கிறது. चतुरावलोकि, अरालपक्ष्म - இவ்விரண்டு விசேஷணங்களும் கண்ணழகைக் கூறுகின்றன. 'பிற அவயவங்களின் அழகைப்பற்றிப் பேசவேண்டாம். இக் கண்ணழகிற்கே அவன் அடிமையாக வேண்டாமோ' என்பது

கருத்து. वञ्चितम् - "நல்ல பயனைப் பெருமல் ஏமாந்தானே அம் மனிதன்", என வருந்துகின்ருர் பிரம்மசாரி. करोति लक्ष्यं रविम् - எனப் பாடம் கொள்வர் நாராயணர் 'பஞ்சாக்னி தவம் செய் யும்படியான நிலையில் பார்வதியை வைத்து இக்கண்ணிற் குப் பார்க்கப்படும் பொருளாக சூரியனை அமைத்துள்ளான்' என்பர்.

कियच्चिरं श्राम्यसि गौरि विद्यते ममापि पूर्वाश्रमसञ्चितं तपः ।
तदर्धभागेन लभस्व काङ्क्षितं वरं तमिच्छामि च साधु वेदितुम् ॥

गौरि - பார்வதி, कियच्चिरम् - எவ்வளவு காலம், श्राम्यसि - கஷ்டப்படுவாய்? मम अपि - எனக்கும், पूर्वाश्रम - संचितम् - முதல் ஆச்ரமமான ப்ரம்மசர்ய நிலையில் சேமிக்கப்பட்ட, तपः-தவம், विद्यते - இருக்கின்றது. तदर्धभागेन - அதன் பாதி பாகத்தினுல், कांक्षितम् - விரும்பிய, वरम् - வரனை, लभस्व - அடைவாயாக. तम् - அந்த வரனை, साधु - நன்கு, वेदितुम् - அறிந்து கொள்ள, इच्छामि च - விரும்புகின்றேன்.

(க-து) பார்வதி, நீ வெகுகாலம் கஷ்டப்பட வேண்டாம். என் தவத்தில் பாதியை உனக்குக் கொடுக்கிறேன். நீ விரும்பிய கண வனை அடையலாம். ஆனுல் தவத்தைக் கொடுப்பதற்கு முன் நீ விரும்பும் மனிதன் எவன் என நன்கு அறிய விரும்புகிறேன்.

इति प्रविश्याभिहिता द्विजन्मना मनोगतं सा न शशाक शंसितुम् ।
अथो वयस्यां परिपार्श्ववर्तिनीं विवर्तितानञ्जननेत्रमैक्षत ॥ ५१ ॥

इति - இவ்வாறு, प्रविश्य - புகுந்து, द्विजन्मना-பிராம்மணரால், अभिहिता - சொல்லப்பட்ட, सा - அவள், मनोगतम् - மனத்திலுள் ளதை, शंसितुम् - சொல்ல, न शशाक - சக்தியுடையவளாக

இல்லை. अथो-பிறகு, परिपार्श्व - वर्तिनीम् - பக்கத்திலுள்ள, वयस्याम् - தோழியை, विवर्तित - अनञ्जन - नेत्रम् - சிறிதே திருப்பப்பட்டதும், மையிடப் பெறுததுமான கண்ணுல், ऐक्षत - பார்த்தாள்.

(க-து) பார்வதியின் மனத்தில் புகுந்து அவள் எண்ணங்களை அறிந்து பிரம்மசாரி இவ்வாறு கூறிப் பதில் வேண்டினுர். பார்வதியோ வெட்கத்தினுல் நேரே பதில் கூறுது பக்கத்திலுள்ள தோழியை மையிடப்பெறுத தனது கடைக்கண்ணுல் நோக்கினுள்.

प्रविश्य - புகுந்து, மனத்துள் புகுந்து என்பது பொருள். பார்வதியின் மனமறிந்து அதற்கு ஏற்றவாறு பேசியதால், பார்வதி மறுத்துக் கூறமுடியாமல் நேரே பேச வெட்கமுற்று, பதில் கூறும்படி தூண்டுதற்காகத் தன் தோழியை நோக்கினுள். अनञ्जन - தவம் செய்வதால் கண்கள் மையின்றி இருந்தன.

सखी तदीया तमुवाच वर्णिनं निबोध साधो तव चेत् कुतूहलम् ।
यदर्थमम्भोजमिवोष्णवारणं कृतं तपस्साधनमेतया वपुः ॥ ५२ ॥

तदीया - அவளுடைய, सखी - தோழி, तम् - அந்த, वर्णिनम् - பிரம்மசாரியை நோக்கி, उवाच - சொன்னுள். साधो - பரோபகார குணமுடையவரே, अम्भोजम् - தாமரைப் புஷ்பம், उष्णवारणम् इव - குடையாகச் செய்யப்பட்டது போல், एतया - இவளால், यदर्थम् - எந்தப் பயனுக்காக, वपुः - சரீரமானது, तपस्साधनम् - தவத்தின் கருவியாக, कृतम् - செய்யப்பட்டதோ, तत् - அதை, तव - உமக்கு, कुतूहलं चेत् - (அறிய) ஆவல் இருக்குமாயின், निबोध - அறிந்து கொள்ளும்.

(க-து) தோழி கூறினுள். தாமரைப் புஷ்பத்தைக் கொண்டு வெய்யிலைத் தடுப்பது போல் மிருதுவான உடலை வருத்தி இப் பார்வதி தவம் செய்வதன் காரணத்தைஅறிய உமக்கு விருப்பமிருக்குமாயின், சொல்லுகிறேன்; கேளும்.

பார்த்தும் முகர்ந்தும் அனுபவிக்க வேண்டிய மிருதுவான தாமரை மலரைக் கொண்டு வெய்யிலைத் தடுத்தல் தகாது. அதுபோல் பார்வதியும் தவத்திற்காக உடம்பை வருத்துதல் தகாததே. ஆனுல் அதற்குத் தக்க பெரியதொரு காரணம் உண்டு.

இது முதல் பத்து சுலோகங்கள் தோழியின் பேச்சாக அமைந்துள்ளன.

इयं महेन्द्रप्रभृतीनधिश्रियश्चतुर्दिगीशानवमत्य मानिनी ।
अरूपहार्यं मदनस्य निग्रहात् पिनाकपाणिं पतिमाप्तुमिच्छति ॥

मानिनी - உறுதியான மனமுடைய, इयम् - இவள், अधिश्रियः - அதிகம் செல்வமுள்ள, महेन्द्र-प्रभृतीन् -இந்திரன் முதலான, चतुर्दिगीशान् - நான்கு திக்பாலர்களையும், अवमत्य - மதியாமல், मदनस्य - மன்மதனை, निग्रहात् - அழித்ததால், अरूप - हार्यम् - அழகினுல் வசீகரிக்க முடியாத, पिनाकपाणिम् - சிவபிரானை, पतिम् - கணவராக, आप्तुम् - அடைய, इच्छति - விரும்புகிருள்.

(க-து) இந்திரன் முதலான தேவர்களை விரும்பாது இவள் சிவபிரானையே கணவராக அடைய விரும்புகிருள். மன்மதனை அழித்த அவர் மனத்தில் காதல் உண்டாகவில்லை. அழகுக்கு வசமாகாத அவரைத் தவத்தால் வசப்படுத்த விரும்புகிருள்.

अवमत्य - " திக்பதிகளை மதியாமல் '' என்பதால் பார்வதி விரும்பினுல் அவர்களில் ஒருவர் எளிதில் கிடைப்பார் என்பதும், பார்வதி அவர்களை லக்ஷ்யம் செய்யவில்லை என்பதும்

புலனாகும். ஸம்ஸ்க்ருத கவிகள், காதலைப் பத்து, அல்லது பன்னிரண்டு நிலைகளை யுடைதாகக் கூறுவர். அவை கண் மகிழ்ச்சி, மன ஈடுபாடு, விருப்பம், தூக்கமின்மை, உடல் மெலிவு பிறவற்றில் வெறுப்பு, வெட்கத்தைத் துறந்து காதலை வெளியிடுதல், பித்தம் பிடித்தல், நினைவிழத்தல் எனப் பத்து ஆம். ஜ்வரம், பிதற்றுதல் என இரண்டைச் சேர்த்துப் பன்னிரண்டு நிலைகளாகவும் கூறுவர். दृङ् मनः संग - संकल्पाः - जागरः कृशताऽरतिः ह्रीत्याग - उन्माद मूर्च्छान्ताः इत्यनंगदशा दश - என்பதைக் காண்க. கண் மகிழ்ச்சி மன ஈடுபாடு இரண்டும் மூன்றாவது ஸர்க்கத்தில் विवृण्वती - என்ற சுலோகத்தில் கூறப்பட்டுள்ளன. இந்த சுலோகத்தில், संकल्प - அல்லது மனவுறுதி என்ற நிலை பேசப்பட்டுள்ளது. வரும் சுலோகங்களில் பிற நிலைகளைக் காணலாம்.

असह्यहुङ्कारनिवर्तितः पुरा पुरारिमप्राप्तमुखः शिलीमुखः ।
इमां हृदि व्यायतपातमक्षिणोद् विशीर्णमूर्तेरपि पुष्पधन्वनः ॥५४॥

विशीर्णमूर्तेः - அழிந்த உருவமுடையவனாயினும், पुष्पधन्वनः - மன்மதனின், शिलीमुखः-பாணம், पुरा-முன்பு, असह्य-हुंकार-निवर्तितः- ஸஹிக்க முடியாத, (சிவபிரானது) ஹூம் என்ற சத்தத்தினால் திருப்பப்பட்டு, पुरारिम् - பரமசிவனை, अप्राप्तमुखः - அடையாத முனையுடையதாக, हृदि - (இவளது) ஹ்ருதயத்தில், व्यायतपातं - ஆழமாகப் பாய்ந்து, इमाम् - இவளை, अक्षिणोत् - துன்புறுத்தியது.

(க-து) முன்பு மன்மதன் தனது புஷ்ப பாணத்தைப் பரமசிவன் மேல் பிரயோகித்த பொழுது, அது அவரது ஹூங்காரத்தினால் தடை பெற்றுத் திரும்பியது. மன்மதனும் இறந்தான். அவன் இறந்தானாயினும் அவன் எறிந்த பாணம் பரமசிவன் மேல் விழத் திறனற்று, இவள் மேல் ஆழப் பாய்ந்து துன்புறுத்தியது.

பரமசிவன் இவளை விரும்பாவிடினும் இவளுக்கு அவர் மேல் காதல் அதிகமாயிற்று என்பது கருத்து.

தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்ற மூன்று அஸுரர்களின் மூன்று புரங்களையும் அழித்ததால் சிவபிரான், पुरारि - எனப் பெயர் பெற்ருர்.

हुङ्कार - கோபத்திஞல் உண்டாகும் ஒலி; அச்சமூட்டுவதற்காகச் செய்யப்படுவது. அந்த ஒலியே மன்மத பாணத்தைச் சிவபிரான் மேல் விழாமல் திருப்பியது. எனவே சிவபிரான் எதிரில் நின்றிருந்த பார்வதியின் ஹ்ருதயத்தில் ஆழப் பாய்ந்தது என்று தோழி, கவிகள் கூறும் முறையை அனுசரித்துக் கூறுகின்ருள். பரமசிவன் காதல் கொள்ளாவிடினும், பார்வதி அவரை அதிகம் விரும்பிஞள் என்பது கருத்து. இந்த சுலோகமும் கண் மகிழ்ச்சி, மனவுறுதி என்ற இரண்டு நிலைகளைக் கூறுவதாகக் கொள்ளவேண்டும்.

तदा प्रभृत्युन्मदना पितुर्गृहे ललाटिकाचन्दनधूसरालका ।
न जातु बाला लभते स्म निर्वृतिं तुषारसङ्घातशिलातलेष्वपि ॥

तदा प्रभृति - அப்பொழுது முதல், उन्मदना - அதிக ஆசையுடையவளும், ललाटिका - चन्दन - धूसरालका - நெற்றியிலுள்ள சந்தனத்திஞல் பழுப்பான அலகங்களையுடையவளுமான, बाला - இவள், जातु - ஒரு பொழுதும், पितुः - தந்தையின், गृहे - வீட்டில், तुषार - संघात - शिलातलेषु अपि - பனிக்கட்டிகளாலான பாறைப் பிரதேசங்களிலும் கூட, निर्वृतिम् - மன அமைதியை, न लभते स्म - அடையவில்லை.

(க-து) பரமசிவன் மறுத்தது முதல் இவளுக்கு அவரிடம் காதல் அதிகமாயிற்று. குளிர்ச்சிக்காக இவள் நெற்றியில் பூசிய சந்தனமும்

சரீர உஷ்ணத்திஞல் உலர்ந்து பொடியாகி அவளது முன்னுச்சியில் பதிந்து, அதை மங்கிய வெண்ணிறமாக்கியது. பனிப்பாறைகளில் இருந்தாலும் இவளுக்கு ஸுகமுண்டாகவில்லை.

उन्मदना - காதல் மிகுந்தவளாக; காதல் மறுக்கப்பட்டதால் வந்த மன வேதனையதிக முடையவளாக; ललाटिका - நெற்றிக்கு அணிகலனுக இடப்பட்ட சந்தனம். சரீரதாபத்திஞல் ஈரமான சந்தனமும் உலர்ந்து பொடியாகி முன்னுச்சியில் படிந்து அதனைப் பழுப்பு நிறமாக்கியது. तुषारसंघात - பனிக்கட்டி, शिलातल - பாறைகள் - பனிப்பாறைகள், निर्विश्य न लभते स्म - பனிப்பாறைகளில் படுத்தாலும் அவை உருகுகின்றனவேயன்றி இவளது சரீரதாபம் குறையவில்லை. तलेषु - என்ற பன்மையால் பார்வதி பல பாறைகளிலும் இருந்திருக்கிருள் என்பது புலஞகும்.

இந்த சுலோகம் अरति - பிறவற்றில் வெறுப்பு அல்லது ஜ்வரம் என்ற நிலையைக் கூறுவது.

उपात्तवर्णे चरिते पिनाकिनः सबाष्पकण्ठस्खलितैः पदैरियम् ।
अनेकशः किन्नरराजकन्यका वनान्तसङ्गीतसखीररोदयत् ॥५६॥

इयम् - இவள், पिनाकिनः - பரமசிவனுடைய, चरिते - (வீரச்) செயல், उपात्तवर्णे सति - பாட ஆரம்பிக்கப்பட்ட பொழுது, सबाष्प - कण्ठ - स्खलितैः - தழுதழுத்த குரலுடன் சிதறிய (கூறப்பட்ட), पदैः - சொற்களால், वनान्त - संगीत - सखीः - காட்டில் ஸங்கீதம் காரணமாகத் தோழிகளாக ஆன, किन्नर - राज - कन्यकाः கின்னர ராஜனின் பெண்களை, अनेकशः - பல முறை, अरोदयत् - அழும்படி செய்தாள்.

(க-து) இவள் தனது வருத்தத்தை மறந்திருக்கவும், பொழுது போக்கிற்காகவும், பரமசிவனுடைய வீரச்செயல்களை வர்ணிக்

கின்ற பாடல்களைப் பாட ஆரம்பிப்பாள். அவ்வாறு பாடத் தொடங்கும் பொழுது உணர்ச்சி மிகுதியினால் இவள் குரல் தழுதழுத்துச் சொற்கள் முழுவதும் உச்சரிக்கப்படாமல் இருக்கும்; இந்த நிலையில் இவளைக் காண்கின்ற ஸ்நேகிதிகளும் இவளுக்காக வருந்திக் கண்ணீர் விடுவார்கள்.

वर्णः - பாட்டின் தொடக்கம்; बाष्प - துக்கத்தின் மிகுதி, "बाष्पः-कण्ठाधःस्थितः दुःख - वेगः" भोजः; वनान्त - வனப் பிரதேசம்; கின்னரர்களின் குரல் இனிமைக்குப் பெயர் பெற்றது. பார்வதியின் குரலினிமை காரணமாகவும் ஸங்கீதம் காரணமாகவும் கின்னரப் பெண்களும் ஸ்நேகிதிகளாயினர். பாட வந்தவர்களும் இவளது கஷ்டத்தைக் கண்டு புலம்பினர். இந்த சுலோகம் பன்னிரண்டு நிலைகளில் ஒன்றாகிய, प्रलाप - பிதற்றுதல், காதலனது குணங்களைப் பேசுதல் என்ற நிலையைக் கூறுகின்றது.

त्रिभागशेषासु निशासु च क्षणम् निमील्य नेत्रे सहसा व्यबुध्यत।
क्व नीलकण्ठ व्रजसीत्यलक्ष्यवागसत्यकण्ठार्पितबाहुबन्धना ॥

किञ्च - மேலும், त्रिभाग - शेषासु - மூன்றாவது ஜாமத்தையே எஞ்சியதாக உடைய, निशासु - இரவுகளில், क्षणम् - ஒரு க்ஷணம், नेत्रे - கண்களை, निमील्य-மூடி (தூங்கி), सहसा - உடனே- 'नीलकण्ठ - சிவபிரானே! क्व गच्छसि - எங்கு செல்லுகின்றீர்?' इति - என, अलक्ष्यवाक् - எதிரில் இல்லாதவரிடம் கூறிய சொல்லுடையவளாகவும், असत्य - कण्ठ - अर्पित बाहुबन्धना - எதிரில் இல்லாத (சிவபிரானது) கழுத்தைத் தழுவ முயல்பவளாகவும், व्यबुध्यत - கண் விழித்தாள்.

(க-து) காதல் நோயினால் இவள் தூங்குவதும் இல்லை. இரவின் பின் பாதியிலே ஒரு கணமே தூங்க முற்படுவாள். அப்பொழுதும் சிவபிரானைக் கனவில் கண்டு, அவர் தன்னை விட்டு எங்கோ செல்

வது போல் கருதி, 'எங்கே செல்கின்றீர்?' என்று கூறிப் பிதற்று வாள். அங்கு அவர் இல்லாத பொழுதும் அவரை அணைத்துக் கொள்ள முற்பட்டுக் கண் விழிப்பாள்.

त्रिभाग - மூன்று ஜாமங்களையுடையது இரவு; இரவில் முதல் ஜாமத்தின் முற்பகுதியிலும் நான்காவது ஜாமத் தின் பிற்பகுதியிலும் ஜனங்கள் விழித்துக் கொண்டு தம் வேலைகளைக் கவனிப்பதால், இரவை மூன்று ஜாமமுடையது என்பர்; त्रियामा - என்ற சொல்லால் குறிப்பர். பார்வதி முதல் இரண்டு ஜாமங்களில் தூங்குவதில்லை. மூன்றுவது ஜாமத்தில் சிறிது கண்ணயர்ந்த பொழுது சிவபிரான் வரு வது போலும் செல்வது போலும் கனவு கண்டு, அவரைப் போகாதிருக்கச் செய்ய முயல்வாள். எங்கே போகின்றீர் எனக் கேட்பாள்; தழுவ முற்பட்டுப் போகாதிருக்கச் செய்ய முயல்வாள். அவளுடைய சொல், அங்கில்லாத மனிதரை நோக்கிக் கூறப்படுவதாயிற்று. अलक्ष्य - காணமுடியாதவர், இல்லாதவர். கை நீட்டித் தழுவுவதற்காக செய்த முயற்சி யும் அங்கு இல்லாதவரை நோக்கியதாகவே இருந்தது. असत्य - அங்கில்லாத, कण्ठ - சிவபிரானது கழுத்திலே, எனப் பதப் பொருள். वाहुबन्धन - கைகளால் பிடித்தல், இறுகத் தழுவுதல்.

இச்சுலோகம் தூக்கமின்மை, பிதற்றுதல் என்ற இரண்டு நிலைகளைக் கூறுவதாகக் கொள்வர்.

यदा बुधैः सर्वगतस्त्वमुच्यसे न वेत्सि भावस्थमिमं कथं जनम् ।
इति स्वहस्तोल्लिखितश्च मुग्धया रहस्युपालभ्यत चन्द्रशेखरः ॥५८॥

'' यदा - எக்காரணத்தினால், त्वम् - நீர், बुधैः - அறிந்தவர் களால், सर्वगतः - எங்கும் இருப்பவராக, उच्यसे - சொல்லப்

படுகின்றீரோ, (ततः) - அக்காரணத்திலுலேயே, भावस्थम् - உம்மிடம் அன்புடன் இருக்கின்றவளாக, इमम् जनम् - இவளை (என்னை), कथम् - எவ்வாறு, न वेत्सि - நீர் அறியாமலிருக்கின்றீர்? '', इति - என்று (கூறி), मुग्धया - இப்பேதையால், स्वहस्तोल्लिखितः - தன் கையால் எழுதப்பட்ட, चन्द्रशेखरः - பரமசிவன், रहसि - தனிமையில், उपालभ्यत च - நிந்திக்கப்பட்டார்.

(க-து) 'எங்கும் தேவரீர் இருப்பதாக அறிந்தவர் கூறுவதால் என் மனத்திலும் தாங்கள் இருக்க வேண்டுமே. என் மனத்திலிருந்து கொண்டே, நான் உம்மிடம் காதலுடையவள் என்பதை நீர் ஏனோ அறியாமலே இருக்கின்றீர்?' என்று சொல்லி இப்பேதைப் பெண் தன் கையினால் எழுதிய பரமசிவனது உருவத்தைத் தனிமையில் நிந்தித்தாள்.

यदा ; सदा என்றும் பாடம் உண்டு ; எப்பொழுதும் என்பது பொருள். मुग्धा - பேதை. இது படம் என அறியாதவள். 'इमं जनम्' - இந்த ஜனத்தை என்பது பொருள். இவ்வாறு தன்னைக் குறித்துக் கொள்வது கூறுபவரின் பணிவைக் காட்டும். 'என்னை' என்பது கருத்து.

यदा च तस्याधिगमे जगत्पतेरपश्यदन्यं न विधिं विचिन्वती ।
तदा सहास्माभिरनुज्ञया गुरोरियं प्रपन्ना तपसे तपोवनम् ॥ ५९ ॥

जगत्पतेः - உலகத்திற்கு நாதனுன, तस्य - அவரை, अधिगमे - அடைவதில், विधिम् - உபாயத்தை, विचिन्वती - தேடுகின்றவளாய், यदा - எப்பொழுது, अन्यम् - (தவத்தைத் தவிர்த்து) வேறு உபாயத்தை, न अपश्यत् - காணவில்லையோ, तदा - அப்பொழுது, इयम् - இவள், गुरोः - தந்தையின், अनुज्ञया - அனுமதியினுல், तपसे - தவம் செய்வதற்காக, अस्माभिः सह - எங்களுடன் கூட, तपोवनम् - தபோவனத்தை, प्रपन्ना च - அடைந்தாள்.

(க-து) பரமசிவனை அடைய விரும்பிய இவள் அதற்கான உபாயங்களை யோசித்தாள். வேறு உபாயம் எதுவும் அவளுக்குப் புலப்படவில்லை. தவம் ஒன்றே தகுந்த வழியாகும் என்பதை உணர்ந்து தந்தையின் அனுமதி பெற்றுத் தவம் செய்வதற்காக இந்த வனத்திற்கு எங்களுடன் வந்தாள்.

गुरोः अनुज्ञया - என்பது பார்வதியின் பண்பினைக் காட்டுவதாகும்.

द्रुमेषु सख्या कृतजन्मसु स्वयं फलं तपस्साक्षिषु दृष्टमेष्वपि ।
न च प्ररोहाभिमुखोऽपि दृश्यते मनोरथोऽस्याश्शशिमौलिसंश्रयः॥

सख्या - स्वयम् - (எங்கள்) தோழியினாலேயே, कृतजन्मसु - நடப்பட்டவைகளும், तपस्साक्षिषु - (பார்வதியின்) தவத்தை நேரிலே காண்கின்றவைகளுமான, एषु - இந்த, द्रुमेषु - மரங்களிடத்திலும், फलम् - பயன் (பழம் முதலியன), दृष्टम् - காணப்பட்டது. शशि - मौलि - संश्रयः - பரமசிவனைப்பற்றியுள்ள, अस्याः - இவளுடைய, मनोरथः च - ஆசையோவெனில், प्ररोह - अभिमुखः - முளைப்பதை நோக்கியதாகவும் (முளைக்கும் நிலையுடையதாகவும்), न दृश्यते - காணப்படவில்லை.

(க-து) இதோ தெரிகின்ற இம்மரங்கள் எல்லாம், பார்வதி இங்கு வந்தபின் அவள் கையாலேயே நடப்பட்டன. அவைகள் இப்பார்வதியின் தவத்திற்குச் சாக்ஷிகள் போன்றவை. அதிக அறிவற்ற இம் மரங்கள் கூடப் பார்வதியின் கஷ்டத்தைக் கண்டு இரங்கியவைபோல் பலன் அளித்து விட்டன. ஆனால் பார்வதியின் மனோரதமோ முளைப்பதாகவும் இல்லை. அது எப்பொழுது முளைத்துத் துளிர்த்துக் கிளைத்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பலனளிக்குமோ ?

सख्या - தோழியினால்; தன் அன்பு தோன்றக் கூறும் சொல்; எனவே, पार्वत्या - என்று கூறவில்லை. एषु - என்பது எதிரிலுள்ள மரங்களை சுட்டிக் காட்டுவது. द्रुमेषु - உணர்ச்சி

யின்மைக்கு உதாரணமான மரமும் பலனளித்தது என்பதால், "சிவபிரானது கடின சித்தத்தை நீங்களே அறிந்து கொள்ளலாம்; இந்தமரம் பலனளித்தது. स्थाणु - (மரம்) என்ற பெயருள்ள சிவன் எப்பொழுது அருள்வாரோ" என்பதும் பெறப்படும். कृतजन्म - 'செய்யப்பட்ட பிறப்புடைய' என்பது பதப்பொருள்.

न वेद्मि स प्रार्थितदुर्लभः कदा सखीभिरस्रोत्तरमीक्षितामिमाम् ।
तपः कृशामभ्युपपत्स्यते सखीं वृषेव सीतां तदवग्रहक्षताम् ॥६१॥

प्रार्थितः - दुर्लभः - வேண்டப்பட்டும் கிடைக்காத, सः - அவர். तपः कृशाम् - தவத்தினுல் இளைத்தவளும், सखीभिः -தோழிகளால், अस्रोत्तरम् - கண்ணீருடன், ईक्षिताम् - பார்க்கப்பட்டவளுமான, इमाम् - இந்த, सखीम् - (எங்கள்) தோழியை, अवग्रह - क्षताम् - வரட்சியால் பாதிக்கப்பட்டுள்ள, सीताम् - உழுத நிலத்தை, वृषा इव - இந்திரன் (மழையினுல் அனுக்கிரஹிப்பது) போல, कदा - எப்பொழுது, अभ्युपपत्स्यते - அனுக்கிரஹிக்கப் போகின்ருரோ? तत् - அதை, न वेद्मि - நான் அறியேன்.

(க-து) பார்வதி தவத்தால் இளைத்திருக்கின்ருள். இவளைப் பார்க்கின்ற தோழியர் யாவரும் கண்களில் நீர்மல்கக் காண்கின்றனர். மழையின்மையால் கஷ்டப்படுகின்ற நிலத்திற்கு மழை அளித்து அருள் புரியும் இந்திரன் போல், தவத்தால் இளைத்து வருந்தும் பார்வதிக்குப் பரமசிவன் எப்பொழுது அருள்மழை பொழிவாரோ நான் அறியேன்.

वृषा - இந்திரன், மழை அளிப்பவன்; "यथा इयं क्षता भूमिः इन्द्रप्रसादमात्रशरणा तथैवेयं परमेश्वरमात्रशरणा वयं तु देवीमात्रशरणाः" என்பது நாராயணர் விளக்கம்,

अगूढसद्भावमितीङ्गितज्ञया निवेदितो नैष्ठिकसुन्दरस्तया ।
अयीदमेवं परिहास इत्युमामपृच्छदव्यञ्जितहर्षलक्षणः ॥ ६२ ॥

इङ्गितज्ञया - பார்வதியின் எண்ணத்தை அறிந்த, तया - அத் தோழியினால், इति - இவ்வாறு, अगूढसद्भावम् - மனத்திலுள் ளதை ஒளிக்காமற்படி, निवेदितः - தெரிவிக்கப்பட்ட, नैष्ठिक - सुन्दरः - நைஷ்டிகப் பிரம்மசாரியான அவ்வழகர், अव्यञ्जितहर्ष - लक्षणः - மன மகிழ்ச்சிக்கான அடையாளங்களை வெளிக்காட் டாதவராய், ''अयि - பார்வதி, इदम् - இது, एवम् - இவ்வாறு தானா? (உண்மையா?); परिहासः-பரிஹாஸமோ?'', इति - என்று, उमाम् - பார்வதியை, अपृच्छत् - கேட்டார்.

(க-து) பார்வதியின் கருத்தையும், பிரம்மசாரியின் எண்ணத் தையும் நன்கு அறிந்த தோழி எதையும் ஒளிக்காமல் உள்ளது உள்ளபடிக் கூறவே, பிரம்மசாரியின் வேஷத்தில் வந்த பரமசிவன் மிக மகிழ்ச்சியடைந்தாராயினும் தமது மகிழ்ச்சியை வெளிக்காட்டாத படி பார்வதியை நோக்கி, 'உன் தோழி கூறியது உண்மையோ, விளையாட்டோ? எனக் கேட்டார்.

பிரம்மசாரி இருவகைப்படுவர். வாழ்நாள் முழுவதும் விவாஹம் செய்து கொள்ளாமல் பிரம்மசர்ய ஆச்ரமத்தில் இருப்பவர் நைஷ்டிகர். சிறிது காலம் பிரம்மசர்யத்தை அனுஷ்டித்து மணம் செய்து கொள்பவர் உபகுர்வாணர் எனப்படுவர். சிவபிரான் நைஷ்டிகப் பிரம்மசாரியின் தோற்றத்தில் வந்தார்.

अव्यञ्जितहर्षलक्षणः - தன்னிடம் காதல் கொண்டுள்ளாள் பார் வதி என்பதைக் கேட்க சிவபிரான் மகிழ்ச்சியடைந்தார். ஆயினும் அதைக் காட்டவில்லை. ''परममायिनः कपटवटोः वञ्चने कः प्रयासः''

अथाग्रहस्ते मुकुलीकृताङ्गुलौ समर्पयन्ती स्फटिकाक्षमालिकाम् ।
कथञ्चिदद्रेस्तनया मिताक्षरं चिरव्यवस्थापितवागभाषत ॥ ६३ ॥

अथ - பிறகு, चिरव्यवस्थापित वाक् - வெகு நாட்களாகப் பேசாமல் இருந்த, अद्रेः तनया - பார்வதி, मुकुलीकृत - अङ्गुलौ - குவிக்கப் பட்ட விரல்களையுடைய, अग्रहस्ते - நுனிக்கையில், स्फटिक अक्षमालिकाम् - ஸ்படிகக் கல்லினாலான ஜபமாலையை, समर्पयन्ती -வைத்துக் கொண்டு, कथंचित् - சிரமத்துடன், मिताक्षरम् - அளவான வார்த்தையுடன், अभाषत - கூறினாள்.

(க-து) பார்வதி விரல்களை ஒன்று சேர்த்துக் குவித்து அஞ்சலி செய்தாள். அப்பொழுது அவள் கை தாமரை மொட்டுப்போல் காணப்பட்டது. ஜபமாலையை நுனிக்கையில் வைத்துக்கொண்டு, என்ன சொல்வது என்பதை நன்கு ஆலோசித்துச் சில வார்த்தைகளாலேயே தனது கருத்தைத் தெரிவிக்க விரும்பிச் சிறிது நேரத்தில் பேச ஆரம்பித்தாள்.

चिरव्यवस्थापितवाक् - வெகுகாலமாகப் பேசுவதை நிறுத்தியவள், அதிகம் பேசாமல் மௌனவிரதம் கொண்டவள்; இதுவும் தவத்திற்கு அங்கமாகும். 'மிக்க தயக்கத்திற்குப் பின் பேசத் தொடங்கியவளாக' என்று பொருள் கூறுவர் மல்லிநாதர். कथञ्चित् - வெட்கத்தினாலும் மௌன விரதத்தை விட வேண்டி வருவதாலும், சிறிது சிரமத்துடன் பேசினாள். मिताक्षरम् - சில சொற்களில். நல்ல பெண்கள் அதிகம் பேச மாட்டார்கள். "मितभाषित्वं उत्तमनायिकाधर्मः" "अक्षरशब्दः शब्दवाची - शब्दानामेवात्र परिमितत्वम् नार्थानामिति भावः" नारायणः ।

यथाश्रुतं वेदविदां वर त्वया जनोऽयमुच्चैःपदलङ्घनोत्सुकः ।
तपः किलेदं तदवाप्तिसाधनं मनोरथानामगतिर्न विद्यते ॥ ६४ ॥

वेदविदाम् - வேதமறிந்தவர்களில், वर - சிறந்தவரே, त्वया - உம்மால், यत् - எவ்விஷயம், यथा - எவ்வாறு, श्रुतम् - கேட்கப் பட்டதோ, तत् - அது, तथा - அவ்வாறு தான், (अस्ति) - இருக் கின்றது; अयं जनः - இந்த ஜனம், उच्चैःपद - लङ्घन - उत्सुकः -உயர்ந்த பதவியையடைய விருப்ப முடையது. इदम् - இந்த, तपः-தவம், तद् - अवाप्ति - साधनं किल - அதை அடைவதற்குரிய சாதனமல் லவா! मनोरथानाम् - ஆசைகளுக்கு, अगतिः - எட்டாதது, न विद्यते - எதுவும் இல்லை.

(க-து) வேதமறிந்தவரே, தாங்கள் கேள்வியுற்றதெல்லாம் உண்மையே; சிவபிரானுடைய மனைவியாயிருத்தல் என்ற பெரும் பதவியை விரும்பித் தவம் செய்கின்றேன். நான் செய்கின்ற தவம் அதை அடைவதற்குரிய சாதனமாகுமோ? கிட்டாத பொருளில் ஆசைவைப்பது கூடாததே என்றாலும் ஆசைக்கு ஓர் அளவுமில்லை. இப்பொருள்தான் என்பதுமில்லை. ஆசை எதையும் தனக்குரிய பொருளாகக் கொள்ளும் தன்மையுடையதாதலால் நான் பரம சிவனை அடைய விரும்புகின்றேன்.

अयं जनः - இந்த ஜனம்; பார்வதி விநயத்தால் தன்னையே படர்க்கைச் சொல்லால் குறித்தாள். मनोरथानां अगतिः न विद्यते - मनोराज्यानां अगतिः अविषयः न विद्यते - 'கிடைக்குமா என்பதை யோசிக்காமலேயே மனம் ஆசைப்படும். எனவே நானும் அத்தகைய ஆசையுடையவள்தான். தோழி கூறியது பரி ஹாஸமன்று என்று கருத்து.

अथाह वर्णी विदितो महेश्वरस्तदर्थिनी त्वं पुनरेव वर्तसे ।
अमङ्गलाभ्यासरतिं विचिन्त्य तं तवानुवृत्तिं न च कर्तुमुत्सहे ॥

अथ - பிறகு, वर्णी - பிரம்மசாரி, आह - சொன்னார். महेश्वरः - பரமசிவன், विदितः - அறியப்பட்டிருக்கின்றார்; पुनरेव - மறு படியும், त्वम् - நீ, तदर्थिनी - அவரை விரும்புகின்றவளாக, वर्तसे -

இருக்கின்ருய் ; अमङ्गल - अभ्यासरति -மங்களமல்லாத காரியத்தை செய்வதில் சந்தோஷமடைகின்ற, तम् - அவரைப் பற்றி, विचिन्त्य - எண்ணியபின், तव - உனக்கு (உன் விருப்பத்திற்கு), अनुवृत्तिम् - ஒப்புதலை, कर्तुम् - செய்ய, न उत्सहे च - நான் சக்தி யற்றவனுகின்றேன்.

(க-து) பார்வதி! பரமசிவனை நான் நன்கு அறிவேன். மன்மதனை அவர் எரித்ததன் மூலம் நீயும் நன்கு அறிவாய். இவ்வுலகமும் அவரை நன்கு அறியும். உன் காதலை அவர் லக்ஷ்யம் செய்ய வில்லை என்பதை அறிந்தும் நீ அவரையே மறுபடியும் விரும்புகின்ருய். அவர் அருவருக்கத் தக்க காரியங்களைச் செய்து சந்தோஷிப்பவர். அவரைப் பற்றி நினைக்கின்ற என் மனம், உனது விருப்பத்தை சிறிதும் ஆமோதிக்க மறுக்கின்றது.

பார்வதிக்குக் கோபத்தை உண்டாக்கி அதன் பின், அவள் கூறும் சொற்களைக் கேட்க விரும்பி சிவபிரான், அவளுக்குக் கோபம் உண்டாக்கும் வகையில் இது முதல் ஒன்பது சுலோகங்களில் பேசுகின்ருர். கோபமடைந்தவர், தூக்கத்தில் உளறுபவர், மதுபானம் செய்த பின் மதி மயங்கிப் பிதற்றுபவர் என இம்மூவரும் மனத்திலுள்ளதை வெளியிட்டுவிடுவர். எனவே கோபமடைந்தால் பார்வதியின் முழு மனத்தையும் அவள் கூறக் கேட்டு மகிழலாம் என்பது இவ்வாறு பேசுதற்கு முக்கிய கருத்து.

अवस्तुनिर्बन्धपरे कथं नु ते करोऽयमामुक्तविवाहकौतुकः ।
करेण शम्भोर्वलयीकृताहिना सहिष्यते तत्प्रथमावलम्बनम् ॥६६॥

अवस्तु - निर्बन्ध - परे - அல்பப் பொருளில் பற்றுள்ளவளே, आमुक्त - विवाह - कौतुकः - கட்டப்பெற்ற மங்களக் காப்பு நூலையுடைய, ते - உன்னுடைய, अयम् - இந்த, करः - கை, वलयीकृत - अहिना - வளையமாக (அணியாக)ச் செய்யப்பட்ட பாம்பை

யுடையதான, करेण - (பரமசிவனுடைய) கையினுல் (செய்யப் படுகின்ற) तत् - அந்த, प्रथम - अवलंबनम् - முதற் பிடிப்பை, कथं नु - எவ்வாறுதான், सहिष्यते - ஸஹித்துக் கொள்ளுமோ !

(க-து) உனக்குச் சிறிதும் தகாத பரமசிவனிடத்தில் பற்று வைத்திருக்கிருய். கணவன், மனைவியின் கையை விவாஹ காலத் தில் முதன் முதல் பிடிக்கின்றான் என்பது எல்லோரும் அறிந்ததே. மங்கள நூல் கட்டியுள்ள உன் கரத்தை, பாம்பு சுற்றிய தன் கையி ஞல் பரமசிவன் பிடிப்பாரே! உனக்கு அப்பொழுது அச்சமுண் டாகாதோ ? நீ அதை எவ்வாறு ஸஹிப்பாய் ? நீ அவருடன் இருந்து வாழ்வதைப் பற்றி யோசிக்குமுன், கைப்பிடிக்கும் காலத்தி லேயே வரும் கஷ்டங்களை யோசித்துப் பார்.

अवस्तु - ஸாரமில்லாத பொருள் ; மதிப்பில்லாதது. சிவ பிரானை இச்சொல் குறிக்கின்றது இங்கே. பார்வதியின் அழகு முதலியவற்றைக் கவனிக்கும் பொழுது சிவன் எதற் கும் பற்ருத அல்பப் பொருள் போன்றவர். आमुक्तविवाहकौतुकः - முன்பே அழகுடனிருந்த பார்வதியின் கை மங்கள நூல் அணிந்த பின் மிக அழகு பெறும் என்பதனைக் காட்டியது இந்த அடைமொழி. ஸர்க்கம் 7 சுலோகம் 25 - காண்க.

त्वमेव तावत् परिचिन्तय स्वयं कदाचिदेते यदि योगमर्हतः ।
वधूदुकूलं कलहंसलक्षणं गजाजिनं शोणितबिन्दुवर्षि च ॥ ६७ ॥

त्वम् - நீ, स्वयं एव - தானுகவே, तावत् - சிறிது, परिचिन्तय - யோசித்துப் பார். कलहंस-लक्षणम् - அழகிய ஹம்ஸங்களை அடை யாளமாகவுடைய, वधू - दुकूलम् - மணமகளின் பட்டு, शोणित - बिन्दु - वर्षि - ரத்தத் துளிகளை வர்ஷிக்கின்ற (சொட்டுகின்ற), गज - अजिनम् - (மணமகனது) யானைத்தோல் (என்ற), एते - இவ்

விரண்டும், कदाचित् - எப்பொழுதேனும், योगम् - பொருத்த மான) சேர்க்கையை, अर्हतः यदि - பெறத்தகுமா ?

(க-து) யானைத் தோலுக்கும் பட்டு வஸ்திரத்திற்கும் என்றேனும் பொருத்தமுண்டோ ? நீ விவாஹ காலத்தில் அன்ன உருவம் பதித்த வெண்பட்டுச் சேலை உடுத்தியிருப்பாய்; அவர் ரத்தம் சொட்டும் யானைத் தோலை உடுப்பார். பொருத்தமில்லாப் பொருள்கள் ஒன்று சேர்வது எப்படி ? இதை ஒருகணமேனும் நீயே யோசித்துப்பார்.

कलहंसलक्षणम् - பட்டின் ஓரங்களில் அன்னத்தின் உருவம், கோரோசனை முதலிய வர்ணப் பொருள்களால் வரையப் பட்டிருக்கும். शोणितबिन्दुवर्षि - மணமகன் புதியதை உடுத்துக் கொள்ளவேண்டுமாகையால் சிவபிரான் அப்பொழுது உரித்த யானைத்தோலை உடுத்துவார். ஆதலால் அதனின்றும் ரத்தம் சொட்டிக் கொண்டிருக்கும். कदाचित् - 'எப்பொழு தேனும்'; உனக்கு ஏற்ற கணவன் கிடைக்காத காலத்திலும் கூட இத்தகையவனை நீ மணப்பது பொருந்துமா ? அப் பொழுதும்கூட இது பொருந்தாது என்றே எல்லோரும் கருதுவார்கள். वधूदुकूलं क्व च हंसलक्षणं क्व चाजिनं शोणितबिन्दुवर्षि च என்பது நாராயணர் கொண்ட பாடம். "அன்ன அடையாளம் கொண்ட பட்டு எங்கே ? ரத்தம் சொட்டும் யானைத் தோல் எங்கே" என்பது பொருள்.

चतुष्कपुष्पप्रकरावकीर्णयोः परोऽपि को नाम तवानुमन्यते ।
अलक्तकाङ्कानि पदानि पादयोर्विकीर्णकेशासु परेतभूमिषु ॥६८॥

चतुष्क - पुष्पप्रकर - अवकीर्णयो: - விசாலமான அறைகளில் புஷ்ப விரிப்புகளின் மேல் நடந்த. तव - உன்னுடைய, पादयो: - கால் களின், अलक्तकाङ्कानि - செம்பஞ்சு வர்ணமுடைய, पदानि - அடிச்

சுவடுகளை, विकीर्ण - केशासु - இறைந்து கிடக்கின்ற மயிர்களை யுடைய, परेत भूमिषु - சுடுகாட்டுத் தரைகளிலே (வைக்கும்படி), परः अपि - சத்ருவாயினும், को नाम - எவன்தான், अनुमन्यते - சம்மதிப்பான் ?

(க-து) உன்னுடைய பாதம் விசாலமான அறைகளில் புஷ்பங்களின் மேல் நடந்து பழகியது. செவ்வர்ணம் தீட்டப்பெற்று அழகாயுள்ளது. நீ நடக்கும் பொழுது செவ்வர்ணச் சுவடுகள் அவ்வறைகளிலே பதியும். நீ சிவபிரானைக் கல்யாணம் செய்து கொண்டால், அவருடைய வாஸஸ்தலமான சுடுகாட்டில் பிணத்தின் தலைமயிர் இறைந்து கிடக்கின்ற தரையில் நடக்க வேண்டி நேருமே. உன் சத்ரு கூட உனக்கு அப்படிப்பட்ட கஷ்டம் நேரும்படி விரும்ப மாட்டான். அவ்வளவு கொடியது நீ சிவபிரானை விவாஹம் செய்ய விரும்புவது. நாங்கள் இத்தகைய இழிநிலை உனக்கு வருதலை விரும்புவோமா ?

चतुष्कम् - ஒருவகை மண்டபம்; விசாலமான அறை, "चतुष्कं सचतुस्तम्भं विवाहस्नानमण्डपम् - " भोजः.

अयुक्तरूपम् किमतः परं वद त्रिनेत्रवक्षःसुलभं तवापि यत् ।
स्तनद्वयेऽस्मिन् हरिचन्दनास्पदे पदं चिताभस्मरजः करिष्यति ॥ ६९ ॥

त्रिनेत्र - वक्षः - सुलभम् - சிவபிரானது மார்பிலே எளிதிலே இருக்கின்ற, चिताभस्म - रजः - சிதையின் சாம்பல் பொடி, हरिचन्दन - आस्पदे - சிறந்த சந்தனம் பூசத் தகுந்த, अस्मिन् - இந்த, तवापि स्तनद्वये - உனது மார்பிலும், पदं करिष्यति - இடம் பெறப் போகின்றது(என்ற), यत् - யாதொரு விஷயம் இருக்கின்றதோ, अतः परम् - இதைக் காட்டிலும், अयुक्तरूपम् - தகாத ஒன்று, किम् अस्ति?- (உலகில்) என்ன இருக்கின்றது; वद-சொல்.

(க-து) "சிவபிரான் சுடுகாட்டில் சிதைகளில் உள்ள சாம்பல் பொடியைத் தம்முடலிலும், மார்பிலும் அணிகின்றார். இப்பொடிதான்

அவரிடம் எளிதிலே கிடைப்பது. நீ அவரை மணந்து வாழும் பொழுது அச்சாம்பல் பொடி உன் உடலிலும் படுமே. அந்தோ! இதைக்காட்டிலும் பொருத்தமில்லாததொன்று உண்டா? உன் உடல் சிறந்த சந்தனத்தைப் பெறவன்றோ தகுதியுடையது. சிதை- பிணம் கொளுத்த சுடுகாட்டில் அடுக்கியுள்ள விறகுத் தொகுதி. அவ்விறகு எரிந்தபின் இருக்கும் சாம்பலை சிவபிரான் அணிகின்றார். அவரை அணைத்துக் கொள்பவர்களுக்கு எளிதில் கிடைப்பது இச்சாம்பல்தான்.

हरिचन्दनम् - சிறந்த ஒருவகைச் சந்தனம். சிறந்த சந் தனத்தைப் பெற தகுதி பெற்ற உன் உடலில் சாம்பல் அன்றோ படுவது. तव अपि - உலகம் முழுவதும் போற்றும் அழகு வாய்ந்த உன் மார்பில் என்ற கருத்தைக் காட்டு கின்றது अपि - என்ற சொல். स्तनद्वयेऽपि - என்று அன்வயித் தால் அவர் மார்பில் மாத்திரமேயன்றி உன் மார்பிலும் படும் என்று பொருள்.

इयं च तेऽन्या पुरतो विडम्बना यदूढया वारणराजहार्यया ।
विलोक्य वृद्धोक्षमधिष्ठितं त्वया महाजनस्स्मेरमुखो भविष्यति ॥ ७० ॥

ऊढया - விவாஹம் செய்யப்பட்டவளும், वारणराज - हार्यया சிறந்த யானையின் மூலம் அழைத்துச் செல்லத்தக்கவளுமான, त्वया-உன்னால், अधिष्ठितम् - அமரப்பட்ட, वृद्धोक्षम् - கிழ எருதை, विलोक्य - கண்டு, महाजनः - (உனது) நகர ஜனங்கள், स्मेर - मुखः - புன்னகை கொண்ட முகத்தினராக, भविष्यति - ஆவார்கள், (इति - என, यत् - யாதொன்று உண்டோ,) इयम् च - இதுவும், ते - உனக்கு, पुरतः - முதலிலேயே நேரப்போகின்ற, अन्या - மற்றொரு, विडम्बना - அவமானம்.

(க-து) முதன் முதலிலேயே உனக்கு மற்ருெரு அவமானமும் காத்திருக்கிறது. மணமான பின் உனது அழகிற்கும், குலத்திற்கும், செல்வத்திற்கும் பொருந்த, நல்ல ஒரு யானையின் மேல் உட்கார வைத்துப் பரமசிவன் உன்னைத்தம்மிடத்திற்கு அழைத்துப் போனால் நன்ருக இருக்கும். ஆனல் அவ்வாறு செய்ய மாட்டார் அவர். தமது கிழ எருதின் மேல் உட்கார வைத்து உன்னை அழைத்துப் போவார். அப்பொழுது ஊரிலுள்ள ஜனங்கள் உன்னைக் கண்டு வாய்விட்டுச் சிரிக்கமாட்டார்கள்தான். ஆனல் அவர்கள் முகத்தில் பரிகாசத்தைக் காட்டும் புன்னகை தோன்றும். இந்த அவமானத்தை நீ எவ்வாறு பொறுத்துக் கொள்வாய்?

विडंबना - हासकारणम् - *பரிஹாஸகாரணம்,* महाजनः - *ஹிமவா னுடைய நகரத்திலுள்ள ஜனங்கள்,* पुरतः - *முதலிலே உள் ளது. சிவபிரான் வீட்டிற்குப் போனபின் நேருவது முன் கலோகத்தில் சொல்லப்பட்டது; வீட்டிற்குப் போவதற்கு முன்பே நிகழப் போவது இது.* स्मेरमुखः - *வாய்விட்டுச் சிரிக்காமைக்குக் காரணம் இரண்டு; அவர்களது பண்பு காரணமாக உரத்துச் சிரிக்காமல் இருக்கலாம். மற்ருென்று தம் அரசனுகிய ஹிமவான் நாம் பரிஹஸித்தோம் என்பதை அறிந்தால் கோபமோ வருத்தமோ அடைவான் என்று கருதியது இரண்டாவது காரணம்.* ऊढया वारणराजभार्यया - *என் பது நாராயணர் கொண்ட பாடம். "தந்தையின் வீட்டில் சிறந்த பெண்யானையின் மேல் சென்று பழகிய" பார்வதி யால் கிழ எருது அமரப்படுமாயின் மக்கள் சிரிப்பர்" என்று பொருள்.*

**द्वयं गतं सम्प्रति शोचनीयतां समागमप्रार्थनया पिनाकिनः ।**
**कला च सा कान्तिमती कलावतस्त्वमस्य लोकस्य च नेत्रकौमुदी ॥७१॥**

पिनाकिनः - *பரமசிவனை,* समागम - प्रार्थनया - *அடைவதில் விருப்பத்தினல்,* कलावतः - *கலைகளையுடைய சந்திரனின்,*

कान्तिमती - ஒளி பொருந்திய, सा - அந்த, कला च - கலை, अस्य - இந்த, लोकस्य - உலகத்தின், नेत्र - कौमुदी - கண்களுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கின்ற, त्वम् च - நீ (ஆக), द्वयम् - இவ்விரண்டு பொருள்கள், संप्रति - இப்பொழுது, शोचनीयताम् -வருந்தத்தக்க நிலையை, गतम् - அடைந்தன.

(க-து) பரமசிவனை அடைந்து சந்திரகலை முன்பே வருந்தும் நிலையை அடைந்தது. உனக்கு எவ்விதத்திலும் தகாத பரமசிவனைக் கணவனாக அடைய விரும்புவதால் நீ ' இப்பொழுது ' வருந்தத்தக்க நிலையை அடைந்தாய். பார்வதிக்கு இந்த நிலை வந்ததே என்பர் உலகினர். உலகத்திலே நல்ல நிலையில் இருக்கவேண்டிய இரண்டு பொருள்கள் கெட்டனவே என எண்ணி ரஸிகர்கள் வருந்துவர்.

संप्रति - ''இப்பொழுது''. முன்பு சந்திரகலை ஒன்றுதான், சிவனை அடைந்து உலகத்தினர் சோகிக்கும்படி இருக்கிறது. இப்பொழுது சிவபிரானை அடைய நீயும் விரும்புவதால் அத்தகைய பொருள் இரண்டு ஆகிவிட்டது. சந்திரனது பதினாறுவது கலை சிவபிரான் தலையில் அணியாயுள்ளதை மனத்தில் கொண்டு பிரம்மசாரி அவ்விதம் கூறுகின்றார்.

**वपुर्विरूपाक्षमलक्षिता जनिः दिगम्बरत्वेन निवेदितं वसु ।**
**वरेषु यद् बालमृगाक्षि मृग्यते तदस्ति किं व्यस्तमपि त्रिलोचने ॥७२॥**

वपुः - (பரமசிவனது) சரீரம், विरूपाक्षम् - விகாரமான வடிவமுடைய கண்களையுடையது; जनिः - அவரது பிறப்பும், अलक्षिता - அறியப்படாதது. वसु - அவரது செல்வம், दिगम्बरत्वेन - திசைகளை வஸ்திரமாயுடைய தன்மையால், निवेदितम् - தெரிவிக்கப்பட்டது. बालमृग - अक्षि - இளம் மானுடையவை போன்ற கண்களையுடைய பார்வதி, वरेषु - வரர்களிடத்தில்

यत् - எந்த குணம், मृग्यते - தேடப்படுகின்றதோ, तत् - அந்த குணம், त्रिलोचने - பரமசிவனிடத்தில், व्यस्तम् अपि - தனித்தேனும், अस्ति किम् - இருக்கின்றதா?

(க-து) அழகு, நற்குடிப்பிறப்பு, செல்வம் இவைகள் எல்லாம், தாம் தேடுகின்ற வரர்களிடத்தில் உள்ளனவா எனப்பெண்ணும், பெண்ணின் தாய் தந்தையரும் அறிந்து விவாஹம் செய்வார்கள். இவை வரர்களுக்கு முக்கியமாக இருக்க வேண்டிய குணங்கள். இம்மூன்றும் இல்லாவிடினும் ஒன்றுவது அவசியம் இருக்கவேண்டும். பரமசிவனிடத்தில் ஒன்று கூட இல்லை. கண்கள் மூன்று; அவையும் விகாரமானவை; அவர் பிறந்த குலம் யாரும் அறியார். வஸ்திரம் கூட இல்லை அவருக்கு. திசைகளே அவரது உடை.

विरूपाक्षम् - நெற்றியில் ஒரு கண் விகாரமாக இருக்கிறது. அங்கக்குறைவு அழகின்மைக்குக் காரணமாவது போல் அங்கம் அதிகமாக இருப்பதும் அழகின்மைக்குக் காரணமாகின்றது. " हानिवदाधिक्यमप्यङ्गानां विकार: " என்பது ஸாமுத்ரிகா சாஸ்த்ரம். பார்வதி, बालमृगाक्षी - சிவன் विरूपाक्षः இதனால் பொருத்தமின்மை எடுத்துக் காட்டப்பட்டது. दिगंबरत्वेन निवेदितं वसु - செல்வமுடையவர் நல்ல வஸ்த்ரமணிவர். ஏழைகள் கந்தையாயினும் அணிந்திருப்பர். சிவபிரானுக்கோ அது கூட இல்லை.

वरेषु यद् मृग्यते - " कन्या वरयते रूपं माता वित्तं पिता श्रुतम् । बान्धवाः कुलमिच्छन्ति मिष्टान्नमितरे जनाः " ॥ என்பதையும் காண்க.

**निवर्तयास्मादसदीप्सितान्मनः क्व तद्विधस्त्वं क्व च पुण्यलक्षणा ।**
**अपेक्ष्यते साधुजनेन वैदिकी श्मशानशूलस्य न यूपसत्क्रिया ॥ ७३ ॥**

अस्मात् - இந்த, असद् - ईप्सितात् - தகாத விருப்பத்தினின்றும், मनः - (உன்) மனத்தை, निवर्तय - திருப்பு; तद्विधः அத்த

கைய பரமசிவன், क - எங்கே! पुण्य - लक्षणा - சிறந்த பாக்கியத்திற்கான லக்ஷணங்களையுடைய, त्वम् च - நீ, क - எங்கே! साधुजनेन - பெரியோர்களால், वैदिकी - வேதத்தில் கூறப்பட்ட, यूपसत्क्रिया - யூபஸ்தம்பத்திற்கான பூஜை, श्मशान - शूलस्य - சுடுகாட்டிலிலுள்ள சூலத்திற்குச் (செய்யத் தக்கதாக), न अपेक्ष्यते - விரும்பப்படுவதில்லை.

(க-து) தகாத ஆசையை விட்டுவிடு; கெட்ட காரியங்களில் பற்றுடன் சுடுகாட்டில் வசிக்கும் பரமசிவன் எங்கே? நல்வாழ்வுக்கான சுப லக்ஷணங்களையுடைய நீ எங்கே? உங்கள் இருவருக்கும் பொருத்தம் சிறிதுமில்லை. யாகத்திலே பரிசுத்தமான யூபஸ்தம்பத்திற்கு செய்கின்ற பூஜையை மயானத்திலுள்ள சூலத்திற்குச் செய்ய பெரியோர் ஒப்பார்; யூபத்தின் பூஜை போன்ற நீ, ச்மசான சூலம் போன்ற பரமசிவனையடைவதை யாரும் சம்மதிக்க மாட்டார்கள்.

यूपः - யாகத்தில் பிராணிகளைக் கட்டுவதற்கான தூண்; இதற்குப் பூஜை முதலியவை செய்வர்.

श्मशान शूलम् - தூக்கிலிடப்படவேண்டிய மனிதனைக் கொல்வதற்கான இரும்பு முனையுள்ள தூண்.

इति द्विजातौ प्रतिकूलवादिनि प्रवेपमानाधरलक्ष्यकोपया ।
विकुञ्चितभ्रूलतमाहिते तया विलोचने तिर्यगुपान्तलोहिते ॥७४॥

इति - இவ்வாறு, द्विजातौ - பிராம்மணர், प्रतिकूल - वादिनि सति - பிரதிகூலமாகப் பேசுகின்ற பொழுது, प्रवेपमान - अधर - लक्ष्य - कोपया - அதிகம் துடிக்கின்ற உதட்டினுல் ஊஹிக்கத் தக்க கோபமுடைய, तया - அப்பார்வதியால், उपान्त - लोहिते - ஓரங்களில் சிவந்த, विलोचने - கண்கள், विकुञ्चित - भ्रूलतम् - நெறிக்கப்பட்ட கொடி போன்ற புருவமுடையனவாகவும், तिर्यक् - சிறிது குறுக்காகவும், आहिते - வைக்கப்பட்டன.

(க-து) இவ்வாறு பிராம்மணர் அவள் எண்ணத்திற்கு மாருகப் பேசும் பொழுது பார்வதி மிகவும் கோபம் கொண்டாள். அவள் உதடு துடித்தது; கடைக்கண்கள் சிவந்தன; கொடி போன்ற புருவத்தைக் கோபத்தால் நெறித்து அவமதிப்புத் தோன்றச் சிறிதே தலைசாய்த்து அவரைப் பார்த்தாள்.

**उवाच चैनं परमार्थतो हरं न वेत्सि नूनं यत एवमात्थ माम् ।**
**अलोकसामान्यमचिन्त्यहेतुकं द्विषन्ति मन्दाश्चरितं महात्मनाम् ॥ ७५ ॥**

एनम् - அவரை நோக்கி, उवाच च - பதிலும் சொன்னாள். यतः - எக்காரணத்தினால், माम् - என்னிடம், एवम् - இவ்வாறு, आत्थ - சொல்லுகின்றீரோ, (अतः) - அதனாலேயே, हरम् - சிவ பெருமானை, परमार्थतः - உண்மையாக, न वेत्सि - நீர் அறிய வில்லை (என்பது), नूनम् - உண்மையே ; अलोक - सामान्यम् - மற்ற வர்களுடையது போல் இல்லாததும், अचिन्त्य - हेतुकम् - அறிய முடியாத காரணங்களையுடையதுமான, महात्मनाम् - மஹான் களுடைய, चरितम् - நடத்தையை, मन्दाः - அற்ப அறிவுள்ள வர்கள், द्विषन्ति - வெறுக்கின்றனர்.

(க-து) பார்வதி பேசினாள். இவ்வாறு கூறியதிலிருந்தே சிவபிரானை நீர் நன்கு அறியவில்லை என்பது தெற்றெனப் புலனாகின்றது. மஹான்களுடைய நடத்தை மற்ற ஸாதாரண மனிதர் களுடையது போல் இராது. அவர்கள் அவ்வாறு தனிவகையில் நடத்தலுக்குக் காரணமும் எளிதில் உம் போன்றவர்களால் அறிய முடியாததொன்றாகும். இவ்வுண்மையை அறியாத மூடர்கள், மஹான்கள் செய்யும் காரியங்களை வெறுப்பார்கள். நிந்தனையும் செய்வார்கள்.

இதிலிருந்து பத்து சுலோகங்கள் பார்வதி கூறும் பதி லாக அமைந்துள்ளன.

विदितो महेश्वरः - என்று பிரம்மசாரி கூறியதற்குப் பதில். "परमार्थतो हरं न वेत्सि" - என்பது. 'यत एवं आत्थ माम्' - என்பது

சிவபிரானை பிரம்மசாரி நன்கு அறிந்தவரில்லை என்பதற்குக் காரணம் காட்டுகின்றது. பிரம்மசாரி ஒருவர் மாத்திரமே யன்றி சிவபிரானை அறியாதவர் உலகில் பலர் உண்டு என் பதை, சுலோகத்தின் பிற்பகுதி கூறுகின்றது.

विपत्प्रतीकारपरेण मङ्गलं निषेव्यते भूतिसमुत्सुकेन वा ।
जगच्छरण्यस्य निराशिषस्सतः किमेभिराशोपहतात्मवृत्तिभिः ॥७६॥

विपत् - प्रतीकारपरेण தீங்கைப் போக்க விருப்பமுடைய வனுலோ, भूति - समुत्सुकेन वा - செல்வத்தில் (நன்மையில்) ஆவ லுடையவனுலோ, मंगलम् - மங்களப் பொருள், निषेव्यते - அனு பவிக்கப் படுகின்றது. जगत् - शरण्यस्य - உலகத்திற்கு ரக்ஷகரும், निराशिषः - ஆசையற்றவருமான, सतः - சிவபிரானுக்கு, आशा - उपहत - आत्मवृत्तिभिः - ஆசையினுல் மனநிலையைக் கெடுக்கின்ற, एभिः - இம்மங்களப் பொருள்களால், किम् - யாது பயன்?

(க-து) மனிதர்களில் சிலர் தங்கள் குறைவைப் போக்கிக் கொள்ளவும் நிறைவைப் பெறவும் மங்களப் பொருள்களான ஆடை, அணி, வாசனைத் திரவியங்கள் முதலியவற்றை உபயோகிக்கின்றனர். நற்காரியங்களான யாகம் முதலியவைகளையும் செய்கின்றனர். அவர்கள் மனம் ஆசைகளால் கெடுக்கப்பட்டிருக்கின்றது. பரம சிவனே லோகரக்ஷகர். அவருக்கு குறைவு எதுவும் இல்லை. ஒன்றைப் பெற வேண்டும் என்ற ஆசையும் இல்லை. ஆதலால் ஆசையையுண்டாக்கி மனத்தைக் கெடுக்கின்ற இப்பொருள்களால் அவர் பெறவேண்டிய பயன் எதுவுமில்லை.

சிவபிரான் அமங்களமான காரியத்தில் பற்றுடையவர். என்று பிரம்மசாரி கூறியதற்கு (சுலோகம் 65) பதிலாக உள்ளது இந்த சுலோகம்,

अकिञ्चनः सन् प्रभवः स सम्पदां त्रिलोकनाथः पितृसद्मगोचरः ।
स भीमरूपः शिव इत्युदीर्यते न सन्ति याथार्थ्यविदः पिनाकिनः ॥७७॥

सः - அவர், अकिञ्चनः सन् - வறியராக இருந்தும், संपदाम् - செல்வங்களுக்கு, प्रभवः - காரணமாகின்ருர். पितृसद्मगोचरः सन् - சுடுகாட்டில் வஸிப்பவராயினும், त्रिलोकनाथः - மூவுலகிற்கும் தலைவராகின்ருர் ; सः - அவர், भीमरूपः सन् - பயங்கரமான வடிவ முடையவராயினும், शिवः - அழகான உருவமுடையவர்; इति - என்று, उदीर्यते - சொல்லப்படுகின்ருர் ; पिनाकिनः - சிவபிரானு டைய, यथार्थ्यविदः - உண்மையான தன்மையை அறிந்த வர்கள், न सन्ति - இல்லை.

(க-து) தான் செல்வமற்றவராயினும் வேண்டுபவர்க்கு வேண்டிய செல்வமளிப்பவர் அவர். சுடுகாட்டில் வசிப்பினும் மூவுலகுக்கும் அவர் தலைவர். பாம்பணி முதலியவற்ருல் அச்சுறுத்தும் தோற்றம் உடையவராலும் சாந்தஸ்வரூப முடையவர் என்ற பொருளுள்ள शिव - என்ற பெயர் பெற்றுள்ளார். அவரிடம் மாறு பட்ட குணங்களும் உள்ளன. அவரை உண்மையாக அறிந்தவர் யாருமில்லை.

दिगंबरत्वेन निवेदितं वसु- என சுலோகம் 72-இல் கூறியதற்குப் பதில், अकिञ्चनः... என்பது. अलक्तकांकानि - என சுலோகம் 68-இல் கூறியதற்குப் பதில், त्रिलोकनाथ . . . என்பது. करेण शम्भोः- என சு. 66-இல் கூறியதற்குப் பதில், स भीमरूप . . . என்பது.

विभूषणोद्भासि पिनद्धभोगि वा गजाजिनालम्बि दुकूलधारि वा ।
कपालि वा स्यादथवेन्दुशेखरं न विश्वमूर्तेरवधार्यते वपुः ॥ ७८ ॥

विश्व - मूर्तेः - உலகத்தையே தம் சரீரமாக உடைய சிவ பிரானின், वपुः - சரீரம், विभूषण - उद्भासि - ஆபரணங்களால் விளங்குவதாகவோ, पिनद्ध - भोगि वा - அணியப்பட்ட பாம்பு களையுடையதாகவோ, स्यात् - இருக்கலாம். गज-अजिन - आलम्बि - யானைத்தோலை உடுத்தியதாகவோ, दुकूल - धारि - वा - வெண் பட்டைத்தரித்ததாகவோ, स्यात् - இருச்கலாம்; कपालि वा - மண்டை ஓடு அணிந்ததாகவோ, अथ वा - அல்லது, इन्दुशेखरं - சந்திரனை அணிந்ததாகவோ, स्यात् - இருக்கலாம். न अवधार्यते - நிச்சயிக்கப்படுகின்றதில்லை.

(க-து) உலகமே சிவபிரானுடைய உடல். அவருடைய வடிவம் இத்தகையதென நாம் அறிய முடியாது. அவர் விரும்பினால் ஆபரணங்களையும் அணிவார். பாம்பையும் தரிப்பார். யானைத் தோலும் பட்டு வஸ்திரமும் அவருக்கு ஒன்றுதான். மண்டை ஓடோ சந்திர கலையோ எதுவும் அவருக்கு தலையணி ஆகும். ஸர்வேச்வர ராகையால் அவர் எவ்வகையிலும் காணப்படுவார்; முரண்பட்ட தர்மங்களும் அவரிடம் ஒன்றுபட்டு காணப்படும். அவரை முற்றும் அறிந்தவர் யாருமில்லை.

वधूदुकूलं कलहंसलक्षणं - என சுலோகம் 67-இல் கூறியதற்கு இச்சுலோகத்தில் பார்வதி பதில் கூறுகின்றாள்.

**तदङ्गसंसर्गमवाप्य कल्पते ध्रुवं चिताभस्मरजो विशुद्धये ।**
**तथा हि नृत्याभिनयक्रियाच्युतं विलिप्यते मौलिभिरम्बरौकसाम् ॥७९॥**

तदङ्ग - संसर्गम् - அவருடைய சரீர ஸம்பந்தத்தை, अवाप्य - அடைந்த பின், चिता - भस्म - रजः - சிதையின் சாம்பற்பொடி, विशुद्धये - தூய்மையைத் தருவதற்கு, कल्पते - சக்தியுடையதாகி

றது. ध्रुवम् - இது உண்மைதான். तथाहि - எவ்வாறெனில், नृत्य - अभिनय - क्रियाच्युतं - நர்த்தன காலத்தில் செய்யப்படுகின்ற அபிநயத்தினால் - உதிர்ந்த சாம்பற்பொடி, अम्बरौकसाम् - தேவர்களின், मौलिभिः - தலைகளால், विक्षिप्यते - தரிக்கப்படுகின்றது.

(க-து) சுடுகாட்டுச் சாம்பலும் பரமசிவனது சரீர ஸம்பந்தம் பெற்றபின் தானும் தூயதாகி பிறவற்றையும் தூயதாக்குகின்றது. இது உண்மை. இதை நிரூபிக்க வேறு ஆதாரம் தேவையில்லை. சிவபிரான் தாண்டவ நர்த்தனம் செய்யும் பொழுது அவர் சரீரத்தில் பூசிய சாம்பல் தரையில் உதிரும். அதை தேவர்களும் எடுத்து சிரசில் தரிக்கின்றார்கள் என்பதே இதற்குச் சான்று.

இச்சுலோகம் பிரம்மசாரி கூறிய अयुक्तरूपम् (சு - 69) என்பதற்குப் பதிலாக அமைந்துள்ளது.

असम्पदस्तस्य वृषेण गच्छतः प्रभिन्नदिग्वारणवाहनो वृषा ।
करोति पादावुपगम्य मौलिना विनिद्रमन्दाररजोरुणाङ्गुली ॥ ८० ॥

प्रभिन्न - दिग्वारण - वाहनः - மதங்கொண்ட திக் கஜத்தை வாஹனமாக உடைய, वृषा - இந்திரன், असंपदः - செல்வமற்றவரும், वृषेण - எருதின் மூலம், गच्छतः - செல்கின்றவருமான, तस्य - அவருடைய, पादौ - பாதங்களை, मौलिना - தன் சிரசினால், उपगम्य - அடைந்து (வணங்கி), विनिद्र - मन्दार - रजः अरुण - अङ्गुलो - மலர்ந்த மந்தார புஷ்பங்களின் மகரந்தப் பொடிகளால் - சிவந்த விரல்களையுடையனவாக, करोति - செய்கின்றான்.

(க-து) யானையின் மேல் செல்லுகின்ற இந்திரனும் எருதின் மேல் ஏறிப்போகின்ற சிவபிரானைக் கண்டவுடன் தன் வாஹனத்தினின்றும் இறங்கி அவர் பாதங்களில் தன் தலை நன்கு படும்படி வைத்து வணங்குகின்றான். அவன் தலையிலுள்ள மந்தார புஷ்பங்களின் சிவந்த மகரந்த பொடிகள் அவருடைய பாதத்தின் விரல்களில் பட்டு அவைகளைச் சிவப்பாகச் செய்கின்றன.

इयञ्च तेऽन्या - என்பதற்கு (சுலோகம் 70) பதிலாக உள்ளது இந்த சுலோகம். दिगम्बरत्वेन - என்று கூறியதற்கும் இதுவே பதிலாகும்.

**विवक्षता दोषमपि च्युतात्मना त्वयैकमीशं प्रति साधु भाषितम् ।**
**यमामनन्त्यात्मभुवोऽपि कारणं कथं स लक्ष्यप्रभवो भविष्यति ॥ ८१ ॥**

दोषम् - குற்றத்தையே, विवक्षता अपि - சொல்ல விரும்புகின்றவராயினும், च्युत - आत्मना - நல்ல ஸ்வபாவமற்ற, त्वया - உம்மால், ईशम् प्रति - சிவபிரானைக் குறித்து, एकम् - ஒரு வார்த்தை, साधु - நன்று, भाषितम् - சொல்லப்பட்டது. यम् - எவரை, आत्मभुवः अपि - பிரம்ம தேவருக்கும், कारणम् - காரணமாக, आमनन्ति - (வேதங்கள்) கூறுகின்றனவோ, सः - அத்தகைய சிவபிரான், कथम् - எவ்வாறு, लक्ष्य - प्रभवः - அறியக் கூடிய பிறப்புடையவராக, भविष्यति - இருப்பார்.

(க-து) 'பிரம்மசாரியே' நீர் குற்றத்தையே சொல்லுபவர். உமது மனம் கெட்டுள்ளது. உம்மையறியாதும் நல் வார்த்தை ஒன்று பரமசிவனைப் பற்றிக்கூறிவிட்டீர். 'அவர் பிறப்பு அறியப்படாதது; அவரது தாய் தந்தையரும் குலமும் நாம் அறியோம்' என்றீர். வாஸ்தவம். உலகைப் படைத்த பிரம்மனை அவர் படைத்தார். எல்லாவற்றிற்கும் முதலில் இருக்கின்ற அவருக்குப் பிறப்பேது? அவர் ஆதி அந்த மில்லாதவர் என்பதுதான் நீர் கூறியதற்குப் பொருள். நீர் நல்ல வார்த்தையே சொன்னீர்.

अलक्षिता जनिः - என சுலோகம் 72 - இல் கூறியதற்கு மறுப்பு இதில் கூறப்பட்டது.

**अलं विवादेन यथा श्रुतस्त्वया तथाविधस्तावदशेषमस्तु सः ।**
**ममात्र भावैकरसं मनः स्थितं न कामवृत्तिर्वचनीयमीक्षते ॥ ८२ ॥**

विवादेन अलम् - விவாதம் போதும். त्वया तावत् - உம்மால், यथा - எவ்வாறு, सः - அவர், श्रुतः - அறியப்பட்டிருக்கிறாரோ,

अशेषम् - முழுவதும், तथाविधः - அத்தகையவராக, अस्तु - (அவர்) இருக்கட்டும். मम - என்னுடைய, मनः - மனம், अत्र - அவரிடத்தில். भाव - एकरसम् - காதல் என்ற ஒரு சுவையினையே யுடையதாக, स्थितम् - இருக்கின்றது. काम - वृत्तिः - மன விருப்பப்படி நடப்பவர், वचनीयम् - அபவாதத்தை, न ईक्षते - பார்ப்பதில்லை.

(க-து) உம்மோடு செய்த விவாதம் போதும். நீர் சொல்லுகின்றபடியே பரமசிவனார் ஸகல துர்க்குணங்களுடையவராகவே இருக்கட்டும். என் மனம் அவரையே விரும்புகின்றது. மனம் போகின்றபடி நடப்பவர் பிறர் கூறுவதை லக்ஷியம் செய்யார். நானும் நீர் கூறுவதை மதிக்கவில்லை.

स्थितम् ; स्थिरम् - என்றும் பாடம் உண்டு ; मनः स्थिरम् - மனம் உறுதியாக உள்ளது என்பது பொருள். 'कामवृत्तिः - காதலின் இயற்கை, वचनीयं - வசையை, न ईक्षते - கருதாது' என்றும் பொருள் கூறுவர்.

निवार्यतामालि किमप्ययं वटुः पुनर्विवक्षुः स्फुरितोत्तराधरः ।
न केवलं यो महतोऽपभाषते शृणोति तस्मादपि यः स पापभाक् ॥८३॥

आलि - தோழியே ! स्फुरित - उत्तराधरः - துடிக்கின்ற உதடுகளையுடைய, अयं वटुः - இந்தப் பிரம்மசாரி, पुनः - மறுபடியும், किमपि - எதையோ, विवक्षुः - சொல்ல விரும்புகின்றவராக, (अस्ति) - இருக்கின்றார். निवार्यताम् - இவர் தடுக்கப்படவேண்டும். यः - எவன், महतः - மஹான்களை, अपभाषते - நிந்திக்கின்றானோ, सः केवलम् - அவன் மாத்திரமே, पाप - भाक् - பாவமடைகின்றான் (என்பது), न - இல்லை ; (किं तु) - ஆனால், तस्मात् - அவனிடமிருந்து, यः - எவன், शृणोति - (நிந்தனையைக்) கேட்

கின்றானே, सोऽपि - அவனும், पापभाक् - பாவமடைகின்றவனாக, भवति - ஆகின்றான்.

(க-து) தோழி, இப்பிரம்மசாரி மேலும் ஏதோ பேச விரும்புகின்றார். சிவநிந்தனைதான் செய்வார். அவ்வாறு பேசும்படி விடாதே. பெரியோர்களை நிந்திப்பவர்களுக்குத்தான் பாவம் என்பதில்லை; அதை கேட்டுக் கொண்டிருப்பவர்களுக்கும் பாவமுண்டு.

स पापभाक् - கேட்பவர்கள் இருந்தால்தான் நிந்தனை செய்பவர்களுக்கு உத்ஸாஹம் அதிகம். எனவே பொறுமையாக கேட்கும் ஒருவர், நிந்தனை செய்பவருக்கு ஊக்கமளிக்கின்றார். ஆதலால் கேட்பவருக்கும் பாபம் உண்டு. "श्रोतरि श्रवणोत्सुके सति वक्ता सविस्तरं वदतीति लोकस्वभावः । . . . तस्मात् श्रोतुरपि निन्दावचनस्य कारयितृत्वं अवश्यं भवत्येवेति कारयितृत्व - श्रोतृत्व - जनितयोर्दोषयोः संभूय संभवात् दोषाधिक्योपपत्तिः" नारायणः ॥

**इतो गमिष्याम्यथवेति वादिनी चचाल बाला स्तनभिन्नवल्कला ।**
**स्वरूपमास्थाय च तां कृतस्मितस्समाललम्बे वृषराजकेतनः ॥ ८४ ॥**

अथवा - அல்லது, इतः - இந்த இடத்தினின்றும், गमिष्यामि - நானே செல்வேன், इति - என்று, वादिनी - சொல்லிக்கொண்டு, स्तन - भिन्न - वल्कला - மார்பினின்றும் நழுவிய மரவுரியுடையவளாக, बाला - அந்தப் பெண் (பார்வதி), चचाल - வேகமாக நகர்ந்தாள். वृष - राज - केतनः च - சிவபிரானும், स्वरूपम् - தமது வடிவத்தை (சிவவடிவத்தை), आस्थाय - அடைந்து, कृत - स्मितः புன்னகையுடையவராய், ताम् - அவளை, समालम्बे - பற்றினார்.

(க-து) 'நானே இவ்விடத்தை விட்டுச் செல்வேன்' என்று கூறிப் பார்வதி, வேகத்தினால் மேலாடையான மரவுரி நழுவப் புறப்பட்டாள். எதிரிலிருந்த பிரம்மசாரி, சிவபிரான் வடிவத்தில் தோன்றி அவளைப் பற்றினார்.

गुरोर्यत्र परीवादो निन्दा वापि प्रवर्तते । कर्णौ तत्र पिधातव्यौ गन्तव्यं वा ततोऽन्यतः *(2-200)* என்பர் மனு. ''பெரியோர்களை நிந்திக்குமிடத்தில் இருக்க நேரின் காதுகளைப் பொத்திக் கொள்; அல்லது வேறிடத்திற்காவது போ'' என்பது இதன் பொருள். कृत - स्मितः - *புன்னகை புரிபவராக; அவர் பேசியதெல்லாம் பரிஹாஸத்திற்காக எனக்காட்ட புன்னகை செய்தார். அதுவே அவளது கோபத்தைத் தணிப்பதாகவும் ஆயிற்று.*

**तं वीक्ष्य वेपथुमती सरसाङ्गयष्टिः निक्षेपणाय पदमुद्धृतमुद्वहन्ती ।**
**मार्गाचलव्यतिकराकुलितेव सिन्धुः शैलाधिराजतनया न ययौ न तस्थौ ॥**

तम् - *அவரை,* वीक्ष्य - *பார்த்து,* वेपथुमती - *நடுக்கமடைந்தவளும்,* सरसाङ्गयष्टिः - *வியர்த்த மெல்லிய சரீரமுடையவளும்,* निक्षेपणाय - *வைப்பதற்காக,* उद्धृतम् - *எடுத்த,* पदम् - *பாதத்தை,* उद्वहन्ती - *(அந்நிலையிலேயே) வைத்துக் கொண்டிருப்பவளுமான,* शैलाधिराज - तनया - *பார்வதி,* मार्ग - अचल - व्यतिकर - आकुलिता- *வழியிலுள்ள மலையில் மோதுவதால் குழப்பமடைந்த (தடையுற்ற),* सिन्धुः इव - *நதி போல்,* न ययौ - *செல்லவுமில்லை;* न तस्थौ - *நிற்கவுமில்லை.*

(க-து) எதிர்பாராது சிவபிரானைச் சந்தித்ததாலும், வாய் விட்டு அவரைப் புகழ்ந்து பேசித் தன் காதலை வெளியிட்டதாலும் அவளுக்கு வெட்கமும் அச்சமும் ஏற்பட்டன. அதனால் அவள் உடம்பு திடீரென வியர்த்து நடுங்கியது. வேறு இடம் செல்லக் கருதி எடுத்த அடியையும், கீழே வைக்க மறந்தாள். அந்த ஒரு விநாடி வரை அவள் சென்றாள் என்றோ, நின்றாள் என்றோ சொல்ல முடியாதபடி காணப்பட்டாள். இந்நிலையில் அவளுக்கு உபமானம்:- மலையினால்

தடைப்பெற்ற நதி கிழக்கிலோ மேற்கிலோ செல்லாமல் தடையுற்ற இடத்திலே குழம்பி நிற்பதுபோல் பார்வதியும் விவரிக்க முடியாத மனக் குழப்பத்துடன் நின்ருள். இவ்வாறு அவள் இருந்தது ஒன்றிரண்டு க்ஷணங்களே.

இச் சுலோகத்தில் கவி, பரமசிவனைத் திடீரெனக் கண்ட பார்வதி ஒன்றிரண்டு விநாடி எவ்வாறு இருந்தாள் என்பதைக் கூறுகின்ருர்.

நதி தான் செல்லும் மார்க்கத்தில் சிறு குன்றின் ஓரமாகச் சென்று குன்றினுடைய அடிப்பாகத்தை அறுப்பின், அக்குன்று நதியில் சரியும். நதியின் போக்கும் தடைப்படும். அத்தகைய நதிபோல் பார்வதி திகைத்து நின்ருள் என்பர் நாராயணர்.

मार्गाचलः . . . . सिन्धुः '' मार्ग - प्रवाहमार्गे यः अचलव्यतिकरः - नदीपर्यन्तवर्तिना तत्प्रवाहविलुप्तमूलेन अतर्कितपतनेन शैलेन संपर्कः तेनाकुलिता परवशीकृता सिन्धुः नदी इव '' नारायणः । न ययौ न तस्थौ என்பதில் கூறிய கருத்தை ச்லாகித்த வேதாந்த தேசிகர், தமது கோபாலவிம்சதியில் ' தாயிடம் அச்சம் கொண்ட கிருஷ்ணன், இடத்தைவிட்டுப் போகவுமில்லை, நிற்கவுமில்லை ' எனக் கூறியுள்ளதைக் காண்க. हर्तुं कुम्भे विनिहितकरः स्वादु हैयङ्गवीनं दृष्ट्वा दाम - ग्रहण - चटुलां मातरं जातरोषाम् । पायादीषत्प्रचलित - पदो नापगच्छन् नतिष्ठन् मिथ्या गोपः सपदि नयने मीलयन् विश्वगोप्ता ॥

**अद्य प्रभृत्यवनताङ्गि तवास्मि दासः क्रीतस्तपोभिरिति वादिनि चन्द्रमौलौ ।**
**अह्नाय सा नियमजं क्लममुत्ससर्ज क्लेशः फलेन हि पुनर्नवतां विधत्ते ॥८६॥**

अवनत - अङ्गि - அழகிய அங்கங்களையுடைய பார்வதியே, अद्य - प्रभृति - இப்பொழுது முதல், तपोभिः - தவங்களினுல், क्रीतः-

விலைக்கு வாங்கப்பட்ட, तव - உனது, दासः - அடிமையாக, अस्मि - இருக்கின்றேன், इति - என்று, चन्द्रमौलौ - பரமசிவன், वादिनि - பேசும்பொழுது, सा - பார்வதி, अह्नाय - உடனே, नियमजम् - தவத்தால் உண்டான, क्लमम् - கஷ்டத்தை, उत्ससर्ज - விட்டாள் (மறந்தாள்); हि - ஏனெனில், क्लेशः - கஷ்டம், फलेन - பயனையளிப்பதினால், पुनर्नवतां - மறுபடியும் புதிதாக இருக்கும் தன்மையை, विधत्ते - செய்கின்றது.

(க-து) "உனது தவம் என்ற விலையைக் கொடுத்து, நீ என்னை வாங்கி விட்டாய். இன்று முதல் நான் உனது அடிமை" எனப் பரமசிவன் கூறினார். அதைக் கேட்ட பார்வதி தவம் செய்த தால் வந்த கஷ்டங்களை எல்லாம் மறந்தாள். புதிய உத்ஸாகமும் ஸந்தோஷமும் அடைந்தாள்.

ஒரு பலனைக் கருதிக் கஷ்டப்படுபவர் தாம் விரும்பிய பலன் கிடைத்தால் பட்ட கஷ்டத்தைப் பாராட்டமாட்டார். கஷ்டங்களே வெற்றியின் மூலம் அவருக்கு ஊக்கமளித்துப் புதிய மனிதராகச் செய்யும். அது போல் பார்வதியும் தான் கோரிய பயன் கிடைக்கப் பெற்றதால் புதுமை பெற்று விளங்கினாள்.

अवनत - சிறிதே தாழ்ந்த, अङ्गि - சரீரமுடையவள் என்பது பதப் பொருள்; "அழகுடையவளே" என்பது கருத்து.

## इति महाकवि-श्री-कालिदासकृतौ कुमारसंभवे महाकाव्ये पञ्चमः सर्गः ॥

# षष्ठः सर्गः

**अथ विश्वात्मने गौरी संदिदेश मिथः सखीम् ।**
**दाता मे भूभृतां नाथः प्रमाणीक्रियतामिति ॥ १ ॥**

अथ - பிறகு, गौरी - பார்வதி, भू - भृताम् - மலைகளின், नाथः - தலைவர் (என் பிதா), मे दाता - என்னைத்தருகின்ற, प्रमाणीक्रियताम्- அதிகாரியாகச் செய்யப்படவேண்டும், इति - என்று, मिथः - (அம்மூவரும்) தனித்திருக்கும்போது, सखीम् - தோழி யின் மூலம், विश्वात्मने - சிவபிரானுக்கு, सन्दिदेश - கூறினாள்.

(க-து) "என்னை விவாஹம் செய்துகொடுக்க என் தந்தையை கேட்டுக்கொள்ளுங்கள்" எனப் பார்வதி தானே நேரில் சொல்லா மல் தன் தோழியின் மூலம் சிவபிரானுக்குத் தெரிவித்தாள்.

முன் ஸர்க்கத்தின் முடிவில் சிவபிரான், தவத்தால் விலைக்கு வாங்கப்பட்ட அடிமையாகத் தம்மைக் கூறிக் கொண்டதன் மூலம் பார்வதியின் மனோரதத்தை நிறை வேற்றத் தாம் சித்தம் என்பதை அறிவித்தார். பார்வதி, சிவபிரான் மேற்கொண்டு செய்ய வேண்டிய காரியத்தை இதில் தெரிவித்துள்ளாள். லஜ்ஜையினால் தானே கூறாமல் தோழியின் மூலம் கூறினாள். இது விஷயம் தனிமையில் கூறப்படத்தக்கதே ஆகும். ஒருவரை ஒருவர் நேசித்து விவாஹம் செய்து கொள்வதாக நிச்சயித்தாலும் பெற்றோர் களின் ஸம்மதியைப் பெற்று மணந்து கொள்வதே சிறந்த தாகும் என்பதைப் பார்வதி இதனால் தெரிவிக்கின்றாள். अथ-என்பது வேறு ஒரு ஸர்க்கத்தின் தொடக்கத்தைக் காட்ட

வந்தது. विश्वात्मने - உலகின் உயிர்; இங்கு சிவபிரான். सखीम् - பார்வதி தவம் புரியத் தந்தையிடம் அனுமதி பெற்றவளும், இடையிலே பிரம்மசாரியிடம் பேசியவளும், இப்பொழுது தூது சென்றவளும் இத் தோழியே.

பார்வதியை சிவபிரான் சந்தித்த இடத்திலேயே அப்போதே பார்வதி தோழி மூலம் கூறினள். சிவபிரானுடைய பதிலை எதிர்நோக்கி வாளா இருந்தாள் என்பது அடுத்த சுலோகத்தில் கூறப்படுகிறது.

**तया व्याहृतसन्देशा सा बभौ निभृता प्रिये ।**
**चूतयष्टिरिवाभ्यासे मधौ परभृतोन्मुखी ॥ २ ॥**

तया - தோழியின் மூலம், प्रिये - சிவபிரானிடத்தில், व्याहृत - संदेशा - (தனது) விருப்பத்தைக் கூறிய, सा - அப்பார்வதி, मधौ - வஸந்த ருதுவினிடத்தில், परभृत - उन्मुखी - குயிலின் மூலம் பேசுகின்ற, चूत - यष्टिः इव - மாங்கொடி போல், अभ्यासे - (சிவபிரான்) அருகில், निभृता - மௌனமாக, बभौ - இருந்தாள்.

(க-து) தோழியின் மூலம் தனது கருத்தைத் தெரிவித்த பார்வதி யாதும் பேசாது வாளா இருந்தாள்.

தான் மணக்கப்போகும் மனிதருடன் நாணத்தினல் பெண்கள், நேரில் பேசமுற்பட மாட்டார்கள். இது பார்வதியின் குணத்திற்கும் பண்பிற்கும் சான்ருகின்றது. இதற்கு உபமானம்: வஸந்தருது வந்தவுடன் மாங்கொம்பு தளிர்த்துப் பூத்து மகிழ்கின்றது. ஆயினும் அது வஸந்த ருதுவுடன் நேரில் பேசித்தன் மகிழ்ச்சியைத் தெரிவிப்பதில்லை. தன்னிடமுள்ள குயிலைக்கூவச்செய்து அதன் மூலமே தெரிவிக்கின்றது. பார்வதிக்கு உபமானம் மாங்கொடி. சிவபிரானுக்கு

வஸந்த ருதுவும், தோழிக்குக் குயிலும் உபமானங்கள். பேசாது இருத்தல் என்பது மாங்கொடிக்கும் பார்வதிக்கு முள்ள பொதுவான இயல்பு. चूतयष्टिः - மெல்லிய மாமரக் கிளையை மாங்கொடி என்பர். अभ्यासे - 'அருகில்' என்பதால் சிவபிரான் அருகில் இருப்பதாகக் கருதவேண்டும். உபமான மும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றது. முன் சுலோகத்தி லுள்ள सन्दिदेश - என்ற சொல்லைக் கருத்தில் கொண்டு சிவபிரான் எங்கோ தொலைவில் இருந்ததாகக் கொள்வர் சிலர். இது சரியில்லை. அடுத்த சுலோகத்தில் "பார்வதியை யனுப்பிய பின்" என்று கூறியிருப்பதைக் காண்க.

स तथेति प्रतिज्ञाय विसृज्य कथमप्युमाम् ।
ऋषीञ्ज्योतिर्मयान्सप्त सस्मार स्मरशासनः ॥ ३ ॥

सः - அந்த, स्मर-शासनः - சிவபிரான், तथा - 'அவ்வாறே' इति - என, प्रतिज्ञाय - உறுதி கூறி, उमाम् - பார்வதியை, कथम् - अपि - மிக ச்ரமத்துடன், विसृज्य - அனுப்பிய பின், ज्योतिर्मयान् - ஒளிவடிவினரான, सप्त - ஏழு, ऋषीन् - மஹர்ஷிகளையும், सस्मार - நினைத்தார்.

(க-து) பார்வதியினால் வேண்டப்பட்ட சிவபிரான் அவ்வாறே செய்வதாகக் கூறி அவளையும், தோழியையும் அனுப்பியபின், ஸப்தர்ஷிகள் தம்முன் வரவேண்டுமென நினைத்தார்.

स्मरशासनः - மன்மதனை தண்டித்தவர்; அவனை அழித்த வர் அல்லர். தபஸ்விகளுக்குத் தவறு இழைத்தல் கூடாது என அவனுக்கு அறிவுறுத்தியவர். कथमपि - பார்வதியின் குணநலன்களால் வசீகரிப்பட்டவராகையால் சிவபிரா னுக்கு அவளைவிட்டுப் பிரிவது கஷ்டமாக இருந்தது. सप्त - ऋषयः - அங்கிரஸ், மரீசி, அத்ரி, புலஸ்த்யர், புலஹர்,

க்ரது, வஸிஷ்டர் என்பவர். ज्योतिर्मयान् - அவர்கள் நக்ஷத்ர வடிவிலும் இருப்பதால் 'ஒளிவடிவினரான' என விசேஷ ணம் தரப்பட்டது. सस्मार - ஹிமவானிடம் 'பெண் கேட்க'த் தக்க பெரியவர்கள் இவர்கள் எனக்கருதி அவர்கள் தம்முன் வரவேண்டுமென நினைத்தார்.

ते प्रभामण्डलैर्व्योम द्योतयन्तस्तपोधनाः ।
सारुन्धतीकाः सपदि प्रादुरासन्पुरः प्रभोः ॥ ४ ॥

ते - அந்த, तपः - धनाः - தவச்செல்வர்கள், प्रभा - मण्डलैः - தங்களது ஒளிவட்டத்தினுல், व्योम - ஆகாசத்தை, द्योतयन्तः - ஒளியுடைதாகச் செய்து கொண்டு, स - अरुन्धतीकाः - அருந்ததி யுடன், सपदि - உடனே, प्रभोः - ஸர்வேச்வரரின், पुरः - முன்னிலை யில், प्रादुरासन् - தோன்றினர்.

(க-து) சிவபிரானது நினைவு ஸப்தர்ஷிகளுக்கு உடனே தெரிந் தது. எனவே அவர்கள், வஸிஷ்டரின் மனைவியான அருந்ததி யுடன் அவர் முன் தோன்றினர்.

तपोधनाः - தவத்தைச் செல்வமாக உடையவர்கள்; இத்த வச்செல்வமே சிவபிரானுக்குத் தொண்டு புரியும் பாக்யத்தை ஸப்தரிஷிகளுக்கு அளித்தது. स - अरुन्धतीकाः - வஸிஷ்டரின் பத்னி பதிவ்ரதைகளுக்கு உதாஹரணமாக விளங்குபவள். சிவபிரானது கருத்தை அறிந்தவர்களாதலால் ஸப்தர்ஷிகள் விவாஹ ப்ரஸ்தாவத்தில் ஸ்த்ரீயின் உதவியும் வேண்டும் என அவளை அழைத்து வந்தனர். விவாஹமான பின் மணமக்கள், அருந்ததியையும் ஸப்தர்ஷிகளையும் காணுதல்

மரபு. இங்கு விவாஹத்திற்கு முன்னரே வரனும், வதூவும் அருந்ததியையும் ஸப்தர்ஷிகளையும் தனித்தனியே காண்கின்றனர். அருந்ததியும் ஸப்தர்ஷிகளும் அவர்களது விவாஹத்திற்கான ஏற்பாடுகளைச் செய்வதும் இவ்விவாஹத்திற்குள்ள விசேஷமாகும்.

**आप्लुतास्तीरमन्दारकुसुमोत्किरवीचिषु ।**
**व्योमगङ्गाप्रवाहेषु दिङ्नागमदगन्धिषु ॥ ५ ॥**

तीर - मन्दार - कुसुम - उत्किर - वीचिषु - கரையிலுள்ள மந்தார மரங்களின் புஷ்பங்களை (அலைகளின் மூலம் கரையிலே) ஒதுக்குப்வையும், दिक् - नाग - मद - गन्धिषु - திக்கஜங்களின் மத ஜல வாசனையுடையவையுமான, व्योम - गङ्गा - प्रवाहेषु - ஆகாச கங்கையின் நீர்களிலே, आप्लुताः - ஸ்நானம் செய்த (மஹர்ஷிகள்), प्रादुरासन् - தோன்றினர்.

(க-து) தூய்மை வாய்ந்த அம்முனிவர்கள், சிவபிரான் முன் வருமுன், தூய்மையுடன் வரவிரும்பி ஆகாச-கங்கையின் நீரில் ஸ்நானம் செய்து வந்தனர்.

तीर - वीचिषु - கங்கையின் கரையில் உள்ள மந்தார மரங்களின் புஷ்பங்கள் கங்கையின் நீரில் விழும். விழுந்த புஷ்பங்களை நீரின் அலைகள் மறுபடியும் கரைகளிலே ஒதுக்கும். दिग् . . . नाग . . . गन्धिषु - திக்கஜங்கள் ஆகாச கங்கையில் குளிப்பதால் யானைகளின் மணமுள்ள மதஜலம் கங்கை நீரில் கலந்து அதனை வாசனையுடையதாக்குகின்றது. கங்கையின் நீருக்குத் தரப்பட்டுள்ள இவ்விரண்டு விசேஷணங்களும், கங்கையில் குளிப்பது புண்யம் தருவதுடன் மகிழ்ச்சி தருவதாகவும் இருந்ததென்பதைக் காட்டுகின்றது.

கங்கை, ஆகாசம், பூமி, பாதாளம் என்ற மூன்றிடங்களிலும் பிரவஹிப்பதாகக் கூறுவர். முன் சுலோகத்திலுள்ள प्रादुरासन् என்ற வினைச்சொல்லைச் சேர்த்துப்பொருள் கூறவேண்டும். இது முதல் ஆறு சுலோகங்கள் ஸப்தர்ஷிகளைப் பற்றிக் கூறுபவை.

मुक्तायज्ञोपवीतानि बिभ्रतो हैमवल्कलाः ।
रत्नाक्षसूत्राः प्रव्रज्यां कल्पवृक्षा इवाश्रिताः ॥ ६ ॥

मुक्ता - यज्ञोपवीतानि - முத்துக்களாலான பூணூலை, बिभ्रतः - தரித்திருப்பவர்களும், हैम - वल्कलाः - பொன்மயமான மரவுரி அணிந்தவர்களும், रत्न - अक्षसूत्राः - ரத்னங்களாலான ஜபமாலையுடையவர்களும், प्रव्रज्याम् - வானபிரஸ்தாச்ரமத்தை, आश्रिताः - அடைந்த, कल्प - वृक्षाः - इव - கல்பக மரங்கள் போல் இருப்பவர்களுமான மஹர்ஷிகள், प्रादुरासन् - தோன்றினர்.

(க-து) ஸப்தர்ஷிகள் முத்து ஸரங்களாலான பூணூலையும் பொன் மரவுரியையும் ரத்னங்களாலான ஜபமாலைகளையும் அணிந்து வந்தனர். முத்தும் பொன்னும் ரத்னமும் அவர்களது உலகில் எளிதில் கிடைப்பதால் அவைகளாலான அணிகளை அவர்கள் அணிந்திருந்தனர். பொருளில் ஆசையால் அன்று. பற்றின்றி இவ்வணிகலன்களுடன் இருந்த மஹர்ஷிகள், உலகைத்துறந்து வனத்திலே வளரும் கல்பக விருக்ஷங்கள் போல் காணப்பட்டனர்.

கல்பக விருக்ஷங்கள் ஐந்து; அவை ஸ்வர்க்கத்தில் இந்திரனது உத்யானத்தில் இருப்பன. வேண்டினவர் வேண்டியவற்றையெல்லாம் தருபவையாயினும் ரத்னங்களையும், முத்துக்களையும், தங்கத்தையும், பட்டையும் தமது

காய், புஷ்பம், தளிர், இலை இவைகளாகக் கொண்டவை. இம்மரங்கள் வானபிரஸ்தாச்ரமம் மேற்கொண்டாலும் தமக்கு இயற்கையான முத்து முதலியவற்றை விடமுடியாதன அல்லவா? எனவே இம்மரங்கள் மஹர்ஷிகளுக்கு உபமானமாக வந்தன.

अक्ष सूत्राः - ஜபமாலை என்றும் ருத்ராக்ஷமாலை என்றும் கூறுவர். प्रव्रज्या - இச்சொல் ஸந்நியாஸ ஆச்ரமத்தைக் குறிக்குமாயினும் வானப்பிரஸ்தம் என்றே பொருள் கொள்ள வேண்டும். உபமேயமான ஸப்தர்ஷிகள் ஸந்நியாஸிகள் அல்லர்; மனைவியுடன் வசிக்கும் வானபிரஸ்தர்கள்.

अधःप्रस्थापिताश्वेन समावर्जितकेतुना ।
सहस्ररश्मिना शश्वत् सप्रणाममुदीक्षिताः ॥ ७ ॥

अधः - प्रस्थापित - अश्वेन - (ஸப்தர்ஷிகளின் மார்க்கத்திற்கும்) கீழே (தன்) குதிரைகளை ஓட்டுபவனும், समावर्जित - केतुना - (கீழே) தாழ்த்தப்பட்ட (ரதத்தின்) துவஜமுடையவனுமான, सहस्र - रश्मिना - சூரியனால், शश्वत् - அடிக்கடி, स - प्रणामम् - வணக்கத்துடன் उदीक्षिताः- (தலை) நிமிர்ந்து பார்க்கப்படுகின்ற ஸப்தர்ஷிகள், प्रादुरासन् - தோன்றினர்.

(க-து) ஸப்தர்ஷிகளின் மண்டலம் சூர்ய மண்டலத்திற்கும் மேலுள்ளது. அவர்கள் வருவதைக்கண்ட சூரியன், அவர்களுக்கு வழிகொடுக்க விரும்பித் தனது குதிரைகளை அவை வழக்கமாகச் செல்லும் பாதையினின்றும் கீழே செல்லும்படி ஓட்டினன். தனது ரதத்திலுள்ள த்வஜம் அவர்களது ஸஞ்சாரத்திற்குத் தடைசெய்யுமோ என எண்ணி அதையும் கீழே இறக்கினன். அவர்கள் தன்னைக் கடந்து செல்லும்வரை கைகூப்பி, தலைநிமிர்த்தி அவர்களையே நோக்கிக் கொண்டிருந்தான்,

உலகம் வணங்கும் சூரியனும் ஸப்தர்ஷிகளை வணங்கினான் என்பதால் அவர்களது பெருமை புலனாகும். शश्वत् - என்பதற்குப் பதிலாக 'साक्षात्' - என்று பாடம் கொண்டு, सहस्ररश्मिना - என்பதுடன் சேர்த்து, "சூரியனாலும்" எனப் பொருள் கூறுவர் மல்லிநாதர். सहस्ररश्मि - ஆயிரம் கிரணமுடையவன் - சூரியன்.

**आसक्तबाहुलतया सार्धमुद्धृतया भुवा ।**
**महावराहदंष्ट्रायां विश्रान्ताः प्रलयापदि ॥ ८ ॥**

प्रलय - आपदि - பிரளயமாகிய ஆபத்துக்காலத்தில், महा-वराह-दंष्ट्रायाम् - ஆதிவராக மூர்த்தியின் கோரைப்பல்லில், उद्धृतया (நீரினின்றும்) எடுக்கப்பட்ட வளும், आसक्त - बाहुलतया- கொடிபோன்ற கைகளை ஆதிவராக மூர்த்தியின் சரீரத்தில் பதியச் செய்தவளுமான, भुवा सार्धम् - பூமிதேவியுடன், महावराह - दंष्ट्रायाम् - வராஹப்பெருமானின் பெரும் பல்லின்மேல், विश्रान्ताः - களைப்பாற்றிக் கொண்டவர்களுமான ஸப்தர்ஷிகள், प्रादुरासन् - தோன்றினர்.

(க-து) உலகம் அழிந்து எங்கும் ஒரே ஜலமாக இருந்தபொழுது ஸப்தர்ஷிகளும் அந்த ஜலத்திலே இருந்தனர். பின் விஷ்ணு வராஹ மூர்த்தியாகத் தோன்றி நீரில் மூழ்கிய பூமியை எடுத்துத்தமது பெரும் பல்லின்மேல் தூக்கி நிறுத்திக் கொண்டார். பூமிதேவி அச்சத்தினால் தனது கைகளாலே வராஹப்பெருமானின் திருமேனியைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டிருந்தாள். ஸப்தர்ஷிகளும் அவ்வராஹப் பெருமானின் பெரும் பல்லின்மேல் பூமிதேவியுடன் தங்கி இருந்தனர்.

பிரளயகாலத்திலும் அழியாதவர்கள் ஸப்தர்ஷிகள் என்பதும், விஷ்ணுவினால் அபிமானத்துடன் காக்கப்பட்டவர் என்பதும் இதனால் புலனாகின்றது.

प्रलय - आपत् - உலகத்தை அழிப்பதால் பிரளயத்தை ஆபத்தெனக் குறித்தார்.

भुवा - பூமிக்கு இரண்டு வடிவங்கள் இருப்பதாக நினைவில் கொள்ளவேண்டும்; ஒன்று மண்வடிவம்; மற்றொன்று அதன் அதிதேவதையான ஸ்த்ரீயின் வடிவம். आसक्तबाहुलतया ' என்பது ஸ்த்ரீ வடிவத்தையும், भुवा - என்பது மண்வடிவத்தையும் குறித்தன. वसति दशनशिखरे धरणी तव लग्ना . . . केशव (गीतगोविन्दम्) என்பதை ஒப்புநோக்குக.

सर्गशेषप्रणयनाद्विश्वयोनेरनन्तरम् ।
पुरातनाः पुराविद्भिर्धातार इति कीर्तिताः ॥ ९ ॥

विश्व - योनेः - உலகின் உத்பத்திக்குக் காரணமான பிரம்மதேவருக்கு, अनन्तरम् - பிறகு, सर्ग - शेष - प्रणयनात् - எஞ்சியுள்ள படைப்புத் தொழிலைச் செய்வதால், पुरा - विद्भिः - பழைய வரலாறுகளை அறிந்த (வியாஸர் முதலிய) பெரியோர்களால், पुरातनाः - பழைமையான, धातारः - பிரம்மதேவர்கள் (படைப்பாளர்கள்), इति - என, कीर्तिताः - வர்ணிக்கப்பட்ட ஸப்தர்ஷிகள், प्रादुरासन् - தோன்றினர்.

(க-து) உலகங்களைப் படைப்பவர் பிரம்மதேவர். அவர் சிலவற்றைப் படைத்து எஞ்சியுள்ள படைப்புத் தொழிலைச் செய்யும்படி தமது மானஸ புத்திரர்களான ஸப்தர்ஷிகளுக்கு உத்தரவிட்டார். ஸப்தர்ஷிகளும் பிரம்மதேவருக்கு உதவியாகப் பல ஜீவராசிகளைப் படைத்தனர். இதனால் வியாஸர் முதலிய பெரியோர்கள், இவர்களைத் ' தொன்மை வாய்ந்த பிரம்மதேவர்கள் " என வர்ணித்துள்ளனர்.

இதனால் ஸப்தர்ஷிகள் படைப்புத் தொழிலைச் செய்யும் பிரம்மதேவருக்கு ஒப்பானவர்கள் என்பது பெறப்படும்.

प्राक्तनानां विशुद्धानां परिपाकमुपेयुषाम् ।
तपसामुपभुञ्जानाः फलान्यपि तपस्विनः ॥ १० ॥

प्राक्तनानाम् - முன்பு செய்யப்பட்டவைகளும், विशुद्धानाम् - மிகத்தூயவையும், परिपाकम् - பலனளிக்கும் தன்மையை, उपेयुषाम् - அடைந்திருக்கின்றவையுமான, तपसाम् - தவத்தின், फलानि - பயன்களை, उपभुञ्जानाः - अपि - அனுபவிக்கின்ற பொழுதும், - तपस्विनः - தவம் செய்கின்றவர்களான ஸப்தர்ஷிகள் प्रादुरासन् - தோன்றினர்.

(க-து) ஸப்தர்ஷிகள், முன்பு தாம் செய்துள்ள தவத்தின் நற்பலனை இப்பொழுது அனுபவிக்கின்றனர். அவர்களது தவம் வெகுகாலமாகச் செய்யப்பட்டதால் மிகவும் பழைமை வாய்ந்தது. தீச்செயல் சிறிதும் கலக்காததால் தூய்மையும் உடையது. வெகுகாலமாகிவிட்டதால் பழம்தரும் மரங்கள் போல், தாமே பலன் கொடுக்கத் தொடங்கியவை. கஷ்டப்பட்டுச்செய்த தவத்தின் பலனை அனுபவிக்கும் இச்சமயத்திலும் கூட அம்முனிவர்கள் மேன்மேலும் தவம் செய்கின்றனர்.

தவம் செய்வதும் பலன் அனுபவிப்பதும் ஒரே காலத்தில் நிகழக்கூடியன அல்ல. தவம் முதலில் செய்வர். பலனைப் பிறகு அனுபவிப்பர். சிலர் பலன் கிட்டியதுடன் தவத்தை நிறுத்திவிடுவர். ஸப்தர்ஷிகளோ இவ்வகையைச் சேர்ந்தவர்களல்லர்; தொடர்ந்து தவம் செய்து வருபவர்கள்.

இதே கருத்தைக் கவி சாகுந்தலத்திலும் கூறியுள்ளார்:
यत्काङ्क्षन्ति तपोभिरन्यमुनयः तस्मिन् तपस्यन्त्यमी - (7-12).

तेषां मध्यगता साध्वी पत्युः पादार्पितेक्षणा ।
साक्षादिव तपः सिद्धिर्बभासे बह्वरुन्धती ॥ ११ ॥

तेषाम् - அம்முனிவர்களின், - मध्य - गता-மத்தியில் இருந்தவளும், साध्वी - பதிவ்ரதையும், पत्युः - கணவரது, पाद - अर्पित - ईक्षणा - பாதத்திலே வைத்த கண்ணுடையவளுமான, अरुन्धती - அருந்ததி, साक्षात् - கண்களுக்குப் புலனாகின்ற (உருவெடுத்த), तपः सिद्धिः - इव - (கணவரின்) தவப்பயன் போல், बहु - மிகவும், बभासे - விளங்கினாள்.

(க-து) அம்மஹர்ஷிகளிடையில் தலைகுனிந்து தன் கணவரான வஸிஷ்டரின் பாதத்தையே நோக்கி நின்ற பதிவ்ரதை அருந்ததி வஸிஷ்டரின் உருவெடுத்த தவப்பயன் போல் காணப்பட்டாள்.

बहु बभासे - ஏழுமஹர்ஷிகளின் ஒன்று சேர்ந்த சோபையைக் காட்டிலும் அருந்ததியின் சோபை அதிகம் என்றும் பொருள் கூறலாம்.

पत्युः पादार्पितेक्षणा - கற்புடைய பெண்கள் கணவனது பாதத்தை நோக்கி நிற்பதாகக் கூறுவது அவர்கள் வேறு இடங்களில் மனம் செலுத்தவில்லை என்பதைக் காட்டுவதாகும்.

तामगौरवभेदेन मुनींश्चापश्यदीश्वरः ।
स्त्री पुमानित्यनास्थैषा वृत्तं हि महितं सताम् ॥ १२ ॥

ईश्वरः - சிவபிரான், ताम् - அவளையும், मुनीन् च - முனிவர்களையும், अगौरव - भेदेन - சமமான மரியாதையுடன், अपश्यत् - நோக்கினார் (வரவேற்றார்); हि - ஏனெனில், स्त्री - पुमान् -

ஸ்த்ரீ, புருஷன், इति एषा - என்ற இப்பிரிவு, (सतां) - பெரியோர் களுக்கு, अनास्था - விருப்பமானதன்று, सताम् - பெரியோர் களாலே, वृत्तम् - நன்னடத்தையே, महितम् - கௌரவிக்கப் படுவதாகும்.

(க-து) சிவபிரான் ஸப்தர்ஷிகளையும், அருந்ததியையும், சமமான மரியாதையுடன் வரவேற்றார். ஸ்த்ரீ எனக் கருதி அருந்ததிக்குக் குறைவான மரியாதை செய்தவரல்லர். ஏனெனில், ஸ்த்ரீ புருஷன் என்ற பேதத்தைக் கருதி மரியாதையைப் பெரி யோர்கள் செய்வதில்லை. நடத்தையைத் தான் முக்கியமாகக் கருதுவர். நன்னடத்தையுடையவர் ஆணாயினும் பெண்ணாயினும் ஒரே வகையில் மரியாதை செய்யப்படுவர்.

तद्दर्शनादभूच्छंभोर्भूयान्दारक्रियादरः ।
क्रियाणां खलु धर्म्याणां सत्पत्न्यो मूलकारणम् ॥ १३ ॥

तद् - दर्शनात् - அருந்ததியைக் கண்டதால், शंभोः - சிவபிரா னுக்கு, दार- क्रिया - आदरः - விவாஹத்தில் பற்றுதலானது, भूयान् - அதிகமாக, अभूत् - ஆயிற்று. धर्म्याणाम् - தர்மத்தினின்றும் நீங்காத, क्रियाणाम् - நற்செயல்களுக்கு, सत् - पत्न्यः - நல்ல மனைவியரே, मूल - कारणम् खलु - முதல் காரணமல்லவா?

(க-து) மஹா பதிவ்ரதையான அருந்ததியையும் அவளால் பெருமை பெற்ற வஸிஷ்டரையும் கண்டபொழுது, சிவபிரான், தாம் விவாஹம் செய்ய விரும்பியது சரியானதெனக் கருதி அதில் விசேஷ மான ஆசை கொண்டார். ஏனெனில் தவம் முதலிய நற்காரியங் களுக்கு நல்லமனைவியர் உறுதுணையாவர் என்பது அருந்ததி- வஸிஷ்ட தம்பதிகளை நோக்கியபொழுது சிவபிரானது மனதில் தோன்றியது.

दारार्थं आदरः - என்பது மல்லிநாதர் பாடம்.

धर्मेणापि पदं शर्वे कारिते पार्वतीं प्रति ।
पूर्वापराधभीतस्य कामस्योच्छ्वसितं मनः ॥ १४ ॥

धर्मेण - अपि - (கிருஹஸ்த) தர்மத்திலும், शर्वे - சிவபிரான், पार्वतीं - प्रति - பார்வதியைப் பற்றி, पदम् - உறுதியான எண்ணத்தை (உடையவராக), कारिते सति - செய்விக்கப்பட்ட பொழுது, पूर्व - अपराध - भीतस्य - முன் (தானிழைத்த) குற்றத்திஞல் பயந்த, कामस्य - மன்மதனது, मनः - மனம், उच्छ्वसितम् - ஆறுதல் அடைந்தது (நம்பிக்கையுற்றது).

(க-து) முன்பு காமன், பார்வதியினிடத்தில் ஆசை கொள்ளும்படி சிவபிரானைத் தூண்டினன். அதன் பலஞக அவன் அழிந்தான். ஆனல் இப்பொழுது பார்வதியின் தவத்திற்குப்பின் நால்வகைப் புருஷார்த்தங்களில் ஒன்ருகிய தர்மம்-கிருஹஸ்ததர்மம், பார்வதியை மணக்கும்படி சிவபிரானை தூண்டியது. இத்தூண்டுதலுக்கு அவர் இணங்கினர். ஸப்தர்ஷிகளைக் கூப்பிட்டு மணம் முடிக்க முயன்ருர். இதனைக் கண்ணுற்ற காமன், தான் தோற்ற காரியத்தில் தன் சஹோதரன் தர்மன் வெற்றி பெற்ருன் என்பதாலும், இனி விவாஹத்திற்குப்பின் தனக்கும் சிவபிரான் அருள் புரிவார் என்பதாலும், தான் முன்பு செய்ததையும் பிழையாகக் கருதமாட்டார் என்பதாலும் மனம் சிறிது ஆறுதல் பெற்ருன்.

காமத்திஞல் செய்வதிலும் தர்மம் கருதிச் செய்வது சிறந்தது.

पदम् - உறுதியான எண்ணம். இங்கு பார்வதியை மணக்கச் சிவபிரான் தீர்மானித்தது. पदं व्यवसिति என்பது அமரம்.

शर्वः पार्वतीं प्रति पदं कृतवान् - சிவபிரான் பார்வதியைக் குறித்து நிச்சயமான எண்ணம் கொண்டார்.

धर्मेण शर्वः पार्वतीं प्रति पदं कारितः - பார்வதியைப் பற்றி உறுதியான எண்ணம் கொள்ளும்படி தர்மத்தினல் சிவபிரான் தூண்டப்பட்டார். शर्वे - कारिते - சிவபிரான் தூண்டப்பட்ட பொழுது என இச்சுலோகத்தின் விளக்கம் தரலாம்.

**अथ ते मुनयः सर्वे मानयित्वा जगद्गुरुम् ।**
**इदमूचुरनूचानाः प्रीतिकण्टकितत्वचः ॥ १५ ॥**

अथ - பிறகு, अनूचानाः-அங்கங்களுடன் வேதங்களை நன்கு பயின்ற, प्रीति - कण्टकित - त्वचः - மகிழ்ச்சியினல் மயிர்க்கூச்ச முற்ற சரீரமுடைய, ते मुनयः सर्वे-அம்முனிவர்கள் எல்லோரும், जगद् - गुरुम् உலகத்தின் தலைவரான சிவபிரானை, मानयित्वा - (நமஸ்காரம் முதலியவைகளால்) பூஜித்து, इदम् - இதனை (மேற் கூறுவதை), ऊचुः-சொன்ஞர்கள்.

(க-து) அம்முனிவர்கள் தாம் செய்த தவப்பயனைக் சிவபிரானை நேரில் கண்டதும் மகிழ்ச்சியினல் புளகாங்கிதமான தேஹமுடையவர்களாக, அவரை வணங்கிப் பூஜித்த பின் சில வார்த்தைகள் கூறினுர்கள்.

ஏழு மஹர்ஷிகள் ஒரே காலத்தில் ஒருவர் பின் மற்ருெருவர் என்ற முறையில் பேசினுர்களாயினும், அவர்கள் கூறியதில் கருத்து வேறுபாடில்லை. எல்லோரும் ஞானிகளாதலால் பிறர் கருத்தை அறிந்தே பேசினர். சிவபிரானது அருளும் அவர்களுக்குத் துணை செய்தது.

अनूचानाः - வேதங்களையும், வேதங்களின் அங்கங்களையும் படித்தவர்கள். எனவே அவர்களது பேச்சில் வேதத்தின் கருத்துக்கள் பிரதிபலிப்பதைக் காணலாம்.

प्रीति . . . . त्वचः - त्वक् - தோல்; இங்கு சரீரம் முழுவதையும் குறித்தது. பின்வரும் ஒன்பது சுலோகங்கள் ஸப்தர்ஷிகள் கூறுபவை.

**यद्ब्रह्म सम्यगाम्नातं यदग्नौ विधिना हुतम् ।**
**यच्च तप्तं तपस्तस्य विपक्वं फलमद्य नः ॥ १६ ॥**

ब्रह्म - வேதமானது, सम्यक् - நன்கு, आम्नातम् - அத்யயனம் செய்யப்பட்டது என்ற, यत् - எந்த நற்செயல் உளதோ, अग्नौ - அக்னியில், विधिना - முறைப்படி, हुतम् - ஹோமம் செய்யப்பட்டது என்ற, यत् - எந்த நற்செயல் (எங்களுக்கு இருக்கிறதோ), तपः-நற்றவம், तप्तम् - ஸம்பாதிக்கப்பட்டது, इति-च - என்ற, यत् - எந்த நற்செயல் உள்ளதோ, तस्य - அத்தகைய இம் மூவகை நற்செயலுக்கும், फलम् - பயன், अद्य - இப்பொழுது, नः - எங்களுக்கு, विपक्वम् - சிறப்பாக அனுபவிக்கும் நிலையை அடைந்துள்ளது.

(க-து) குருகுலத்திலே இருந்து குருவிற்கு சுச்ரூஷை செய்தல் முதலான பிரம்மசர்ய தர்மத்தைக்கடைப்பிடித்து வேதம் பயில்தல் என்ற நற்காரியத்தைச் செய்துள்ளோம். பின் க்ருஹஸ்தாச்ரமத்தில் யாகம், ஹோமம் முதலிய நற்காரியங்களையும் செய்துள்ளோம். பிறகு வானபிரஸ்தர்களாக வெகுகாலம் தவம் செய்தோம். இந்த நற்செயல்களின் பயனை இப்பொழுது நாங்கள் பெற்றோம்.

வேதம் படித்தல் என்பது பிரம்மசர்ய ஆச்ரம தர்மம். ஹோமம் செய்தல் முதலியன கிருஹஸ்த தர்மம். தவம் செய்தல் வானபிரஸ்த தர்மம். இவற்றின் பயனெல்லாம் ஈசுவரனை நேரில் காண்பதே ஆகும். தற்போது அப் பயன் கிடைக்கப் பெற்றதால் மஹர்ஷிகள் தாங்கள் இதுவரை

செய்துவந்த நற்காரியம் பலித்ததெனக் கூறினார்கள். सम्यक् - "குரு சுச்ரூஷை முதலியன செய்து முறைப்படி" என்பது கருத்து.

यदध्यक्षेण जगतां वयमारोपितास्त्वया ।
मनोरथस्याविषयं मनोविषयमात्मनः ॥ १७ ॥

यत् - ஏனெனில், जगतां - உலகங்களின், अध्यक्षेण - தலைவராகிய, त्वया - தங்களால், वयम् - நாங்கள், मनोरथस्य अविषयम् - (எங்கள்) ஆசைக்கும் எட்டாத, आत्मनः - தங்களுடைய, मनो-विषयम् - மனம் என்ற (உன்னத) ஸ்தானத்தில், आरोपिताः - ஏற்றி வைக்கப்பட்டிருக்கிறோம். (தங்களால் நினைக்கப்பட்டிருக்கிறோம்).

(க-து) "ஸகல ஜீவராசிகளை அடக்கி ஆள்கின்ற தாங்கள் எங்களை நினைத்தது" என்பது நாங்கள் விரும்பினாலும் கிடைக்கப் பெறாததாகும். அத்தகைய பாக்யம் எங்களுக்கு இப்பொழுது கிடைத்திருப்பது எங்களது நற்செயல்களின் பயனும்.

முன் சுலோகத்தில் ஈசுவரனை நேரில் காணப்பெறுதல் தவப்பயனாகக் கூறப்பட்டது. இதில் அவரால் நினைக்கப்படுவதையும் பெரும் பாக்யமாக மஹர்ஷிகள் கூறுகின்றனர். मनोरथस्य अविषयम् - சிவபிரான் தங்களை நினைக்க வேண்டும் என ஸப்தர்ஷிகள் ஆசைப்பட்டிருக்கவும் முடியாது. ஏனெனில் அத்தகைய ஆசை நிறைவேறும் என எண்ணவும் இடமில்லை. அதனால் 'ஆசைக்கெட்டாத' என்கிறார்கள். मनो-विषयम् - சிவபிரானது மனம் என்ற இடம்; विषयः - இடம்; आरोपिताः - அடைவிக்கப்பட்டோம். சிவபிரானது மனம் என்ற இடத்தில் அவர்கள் இருக்கும்படி சிவபிரானால் வைக்கப்பட்டனர்.

**यस्य चेतसि वर्तेथाः स तावत्कृतिनां वरः ।**
**किं पुनर्ब्रह्मयोनेर्यस्तव चेतसि वर्तते ॥ १८ ॥**

यस्य - எந்த சேதனனுடைய, चेतसि - மனத்தில், वर्तेथाः - தாங்கள் இருப்பீர்களோ, सः तावत् - அவனே, कृतिनाम् - பாக்ய சாலிகளிலே, वरः - தலை சிறந்தவனாகின்றான்; ब्रह्म- योनेः - வேதங்களின் உத்பத்திக்குக் காரணமான, तव - தங்களது, चेतसि - மனத்தில், यः - எவன், वर्तते - இருக்கின்றானோ, सः - அவன் சிறந்தவன் என, किं-पुनः (वक्तव्यम्) - மேலும் கூற வேண்டுமா?

(க-து) "எவன் உம்மை நினைக்கின்றானோ அவனைச் சிறந்த பக்தன் என உலகம் கொண்டாடுகின்றது. அவ்வாறிருக்க, உம்மாலேயே நினைக்கப்படும் பாக்கியம் பெற்ற மனிதனின் பெருமையைப் பேசவும் வேண்டுமோ?"

ஈசுவரனை நினைப்பவர் பலர் இருக்கலாம். ஈசுவரனால் நினைக்கப்படும் நிலையுடையவர் சிலரே ஆவர். அவாப்த ஸமஸ்த காமனாகிய ஈசுவரன் யாரைப்பற்றி நினைக்கவேண்டும்? எனவே, தமது கட்டளையை நிறைவேற்றத் தகுதியுடையவர்கள் எனக்கருதி சிவபிரானால் நினைக்கப்படுவதே தாங்கள் பெரும் பாக்யம் பெற்றமைக்கு அடையாளம் என ஸப்தர்ஷிகள் கூறினார்கள்.

**सत्यमर्काच्च सोमाच्च परमध्यास्महे पदम् ।**
**अद्य तूच्चैस्तरं ताभ्यां स्मरणानुग्रहात्तव ॥ १९ ॥**

अर्कात् - च - சூரியனுக்கும், सोमात् - च - சந்திரனுக்கும், परम् - மேலேயுள்ள, पदम् - இடத்தில், अध्यास्महे - நாங்கள் இருக்கின்றோம்; सत्यम् - இது உண்மையானதே; अद्य - तु - இப்பொழுதோ, तव - தங்களது, स्मरण - अनुग्रहात् - நினைத்தல் என்ற

அருளால், ताभ्याम् - அவ்விரண்டு இடங்களைக் காட்டிலும், उच्चैस्तरम् - மிக உன்னதமான, पदम् - (தங்களது உள்ளம் என்ற) இடத்தை, अध्यास्महे - இருக்கின்றோம் (பெற்றிருக்கின்றோம்).

(க-து) "நாங்கள் சூரிய சந்திர மண்டலத்திற்கும் மேலே முன்பே இருக்கின்றோம். இப்பொழுது தங்களால் நினைக்கப்படுதல் என்ற அருள் பெற்றமையால் மேலும் மஹோன்னதமான இடத்தைப் பெற்றுள்ளோம்."

இதனால் தாங்கள் பெற்ற பெருமையைக் கூறுகின்றனர் ஸப்தர்ஷிகள்.

ताभ्याम् - उच्चैस्तरम् - முன்பு சூரிய சந்திர மண்டலத்திற்கு மேல் இருந்தோம். இப்பொழுது அவைகளுக்கு மேல் மிக உயரமான ஸ்தானத்தில் இருக்கின்றோம். स्मरणानुग्रहात् - நினைத்தல், அருளுதல் என்ற இரண்டினாலும் என்பர் அருணகிரிநாதர். सत्यम् - என்பதற்குப் பதிலாக नित्यम् - என்ற பாடம் கொண்டு 'எப்பொழுதும்' எனப்பொருள் உரைப்பர்.

त्वत्संभावितमात्मानं बहु मन्यामहे वयम् ।
प्रायः प्रत्ययमाधत्ते स्वगुणेषूत्तमादरः ॥ २० ॥

वयम् - நாங்கள், त्वत्-संभावितम् - தங்களால் கௌரவிக்கப் பட்டுள்ள, आत्मानम् - எங்களை, बहु मन्यामहे - அதிகம் மதிக்கின்றோம்; उत्तम - आदरः - பெரியோர்களின் ஆதரவு, स्व - गुणेषु - (ஒருவருக்குத்) தம்முடைய குணங்களில், प्रायः - அதிகம், प्रत्ययम् - நம்பிக்கையை, आधत्ते - உண்டாக்குகின்றது.

(க-து) "தங்களால் மதிக்கப்பட்ட காரணத்தில் நாங்கள் எங்களைப்பற்றிச் சிறிது உயர்வாகவே கருதுகின்றோம். பெரியோர்கள்,

சிறியவர்களிடம் ஆதரவு காட்டுவார்களாயின், அச்சிறியவர்கள் தங்களது பணி ஆற்றும் திறமையில் சிறிது அதிகமாகவே நம்பிக்கை கொள்வர்.

'தங்களுக்கு ஆற்றல் இருக்கும் காரணத்தால்தான் சிவபிரான் தங்களை நினைத்தார். சக்தி இல்லாதவர்களை அவர் நினைக்கமாட்டார் அல்லவா?' இவ்வாறு யோசித்த பொழுது ஸப்தர்ஷிகளுக்கும் தன்னம்பிக்கை அதிகமாயிற்று.

आत्मानं - ஸப்தர்களில் ஒவ்வொருவரும் தம்மைக்குறித்துக் கொண்டதால் आत्मानं - என ஒருமைவந்ததென்பர். प्राय: அதிகம். இது प्रत्ययं என்ற சொல்லுக்கு விசேஷணம் என்பர் அருணகிரிநாதர். प्रायो वयसि बाहुल्ये என்பது வைஜயந்தி நிகண்டு.

या नः प्रीतिर्विरूपाक्ष तव निध्यानसंभवा ।
सा किमावेद्यते तुभ्यमन्तरात्मासि देहिनाम् ॥ २१ ॥

विरूप - अक्ष - சிவபிரானே, तव - உம்மை, निध्यान - संभवा - தர்சனம் செய்வதால் உண்டானதாக, नः - எங்களுக்கு, या - யாதொரு, प्रीतिः- மகிழ்ச்சி (இருக்கின்றதோ), सा-அம்மகிழ்ச்சியானது, तुभ्यम् - தங்களுக்கு, किं आवेद्यते - தெரிவிக்கப்படவேண்டுமோ? देहिनाम् - ஸகல ஜீவராசிகளுக்கும், अन्तरात्मा அந்தராத்மாவாக (உள்ளுறைபவராக), असि - நீர் இருக்கின்றீர்.

(க-து) தங்களைத் தர்சனம் செய்வதால் உண்டான மகிழ்ச்சியை நாங்கள் எடுத்துக்கூற வேண்டியதில்லை. ஸகல சேதனர்களின் உயிருக்கும் உயிராக இருக்கின்ற தாங்கள் அறியாதது ஒன்றுமில்லை.

विरूपाक्ष-विरूप-விலக்ஷணமான, உலக இயற்கைக்குப் புறம்பான, अक्ष - மூன்று கண்களையுடையவர். अन्तरात्मा - ஆத்மாவிற்கும் ஆத்மாவாக இருப்பவர். ஆத்மா அறிவதை அந்தராத்மாவும் அறிவர். त्वदनुध्यान-என்பது மல்லிநாதர் பாடம்.

**साक्षाद् दृष्टोऽसि न पुनर्विद्मस्त्वां वयमञ्जसा ।**
**प्रसीद कथयात्मानं न धियां पथि वर्तसे ॥ २२ ॥**

साक्षात् - நேரிலே, दृष्टः असि - (எங்களால்) காணப்பட்டு இருக்கின்றீர்கள். वयम् पुनः - நாங்களோ, त्वाम् - (ஆயினும்) தங்களை, अञ्जसा - முற்றிலும் (உண்மையாக), न विद्मः - அறிந்து கொள்ளவில்லை; प्रसीद-தயை செய்வீராக ; आत्मानम् -(தங்களது) முழு வடிவினைப் பற்றியும், कथय - கூறுங்கள். धियाम् - எங்களுடைய சிற்றறிவின், पथि - வழியில், न - वर्तसे - தாங்கள் இல்லை.

(க-து) தங்களை நாங்கள் கண்களால் கண்டோம் என்பது உண்மையே. ஆயினும் நாங்கள் தங்களது உண்மை முழுவதையும் அறிந்தோமில்லை. தயை செய்து தங்களது முழுவடிவினையும் குணங்களையும் பற்றி எங்களுக்குக் கூறவேண்டும். தாங்கள் கூறுவிடின் எங்களது சிற்றறிவு தங்களை அறியும் ஆற்றல் உடையதன்று.

ஒருவர் தாம் காண்பதை எல்லாம் முற்றும் அறிந்துள்ளார் எனக்கொள்வதற்கில்லை. எண்ணற்ற குணநலன்களுக்கு இருப்பிடமான சிவபிரானைக் கண்டதனால் மாத்திரமே அவரை முற்றிலும் அறிவது முடியாதாகையால் ஸப்தர்ஷிகள் சிவபிரானைப் பற்றிய முழு அறிவையும் வேண்டுகின்றனர்.

இந்த சுலோகத்தில் உள்ள प्रसीद - முதலான சொற்கள் ஈசுவரன் அருளில்லையேல் அவனை அறிய முடியாதென்பதை வலியுறுத்தும்,

**किं येन सृजसि व्यक्तमुत येन बिभर्षि तत् ।**
**अथ विश्वस्य संहर्ता भागः कतम एष ते ॥ २३ ॥**

एषः - (எங்களால் பார்க்கப்படுகின்ற) இத்திருமேனி, ते - உமது, कतमः भागः - எந்தப் பகுதியாகும் ? येन - எந்தப் பாகத்திஞல், व्यक्तम् - இவ்வுலகை, सृजसि - படைக்கின்றீரோ, किं सः - அந்தப் பாகமா ? उत - அல்லது, येन - எந்தப் பாகத்திஞல், तत् - அப்பிரபஞ்சத்தை, बिभर्षि - காப்பாற்றுகின்றீரோ, किं सः - அப்பாகமா ? अथ - அல்லது, यः - எப்பகுதி, विश्वस्य - இவ்வுலகை, संहर्ता - அழிக்கின்றதோ, किं सः - அப்பகுதியா ?

(க-து) சிவபிரானே, தாங்கள் தங்களை மூன்றுகப் பகுத்துக் கொண்டு, ஒரு பகுதியிஞல் இவ்வுலகைப் படைத்து மற்றெரு பகுதியிஞல் அதனைக்காத்து மூன்ருவது பகுதியிஞல் பிரளயகாலத்தில் இவ்வுலகை அழித்துத் தம்முள் கொள்கின்றீர்.

நாங்கள் இப்பொழுது காணும் இத்திருமேனி இம் மூன்றனுள் எப்பகுதியாகும்? படைக்கும் தொழில் செய்யும் பிரம்மவடிவமா? விஷ்ணுவடிவமா? ஸம்ஹார மூர்த்தியான சிவவடிவமா ?

மூர்த்தி ஒன்றே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற மூன்று தொழிலைக் கருதி மூவடிவினைத் தாங்குகின்றது என்ற கருத்தைக் காளிதாஸர் ஏழாவது ஸர்க்கத்திலும் (சு.44) கூறியுள்ளார்.

**अथ वा सुमहत्येषा प्रार्थना देव तिष्ठतु ।**
**चिन्तितोपस्थितांस्तावच्छाधि नः करवाम किम् ॥ २४ ॥**

देव - தேவரே, अथवा - அல்லது, सु - महती - மிகப் பெரிய, एषा प्रार्थना - இவ்வேண்டுகோள், तिष्ठतु - இருக்கட்டும்; चिन्तित -

उपस्थितान् - நினைக்கப்பட்டு (இவ்விடம்) வந்துள்ள, नः - எங்களுக்கு, तावत् - முதலில், शाधि - கட்டளையிடுங்கள். किं करवाम - நாங்கள் என்ன செய்ய வேண்டும்?

(க-து) "எங்களது இவ்வேண்டுகோள் மிகப்பெரியது. இது இருக்கட்டும். எங்களை நினைத்ததிலிருந்து, நாங்கள் செய்ய வேண்டிய காரியம் ஒன்று உண்டெனத் தெரிகின்றது. முதலில் அதனைக் கூறுவீர்களாக. நாங்கள் பணியை முடித்தபின் எங்கள் முதற் கேள்விக்குப் பதில் கூறலாம்.

सुमहती - ஈசுவரனைப் பற்றி முற்றும் அறிவதற்கான வேண்டுகோளாகையால் 'மிகப் பெரிய' என விசேஷணம் வந்தது. இந்த சுலோகத்துடன் ஸப்தர்ஷிகளின் பேச்சு முடிவடைகின்றது.

**अथ मौलिगतस्येन्दोर्विशदैर्दशनांशुभिः ।**
**उपचिन्वन्प्रभां तन्वीं प्रत्याह परमेश्वरः ॥ २५ ॥**

अथ - பிறகு, परमेश्वरः - சிவபிரான், मौलि - गतस्य - தமது ஜடையிலுள்ள, इन्दोः - சந்திரனுடைய, तन्वीम् प्रभाम् - மெல்லிய ஒளியை, विशदैः - களங்கமற்ற, दशन - अंशुभिः - (தமது) பற்களின் காந்திகளால், उपचिन्वन् - அதிகமாக்கிக் கொண்டு, प्रत्याह - பதில் கூறினார்.

(க-து) சிவபிரான் ஸப்தர்ஷிகளுக்குப் பதில் கூறத்தொடங்கினார். அவர் பேசிய பொழுது புன்னகையுடன் பேசியதால், பற்களின் காந்தி அவரது ஜடாபாரத்தில் உள்ள இளம் பிறையின் ஒளியுடன் சேர்ந்து அதனை அதிகமாக்கியது

சிவபிரான் புன்னகையுடன் பேசினார் என்பது கருத்து. இனிவரும் எட்டு சுலோகங்கள் சிவபிரானது பேச்சாக அமைந்துள்ளன.

विदितं वो यथा स्वार्था न मे काश्चित्प्रवृत्तयः ।
ननु मूर्तिभिरष्टाभिरित्थंभूतोऽस्मि सूचितः ॥ २६ ॥

(मुनयः) - முனிவர்களே, मे - என்னுடைய, काश्चित् - अपि प्रवृत्तयः - எல்லா முயற்சிகளும், यथा - எவ்வாறு, स्वार्थाः - தன் னலனைக் கருதியவையாக, (न भवन्ति) - இருக்கவில்லையோ, तथा - அவ்வாறு (இருக்கவில்லை என்று), (इदम्) - இது, वः - உங்களால், विदितम् - அறியப்பட்டுள்ளது. अष्टाभिः - (எனது) எட்டு, मूर्तिभिः - சரீரங்களாலும், इत्थंभूतः - (நான்) இத்தகை யோனாக, ननु सूचितः - உலகிற்கு காண்பிக்கப்பட்டவனாகவே, अस्मि - இருக்கின்றேன்.

(க-து) "முனிவர்களே, என் முயற்சிகள் யாவும் பிறர் நன்மைக்காகவேயன்றி சுயநலத்தைக் கருதியவை அல்ல என்பதை நீங்கள் அறிவீர்கள். உலகும் அறியும். எனது உடலாகிய மண், நீர், முதலியவையும் பிறர்க்காகவே இருக்கின்றன. அவைகளும் நான் சுயநலமில்லாதவன், பிறர் நலத்தையே கருதுபவன் என்பதை உலகிற்குத் திண்ணமாகக் காட்டுகின்றன".

சிவபிரானை அஷ்டமூர்த்தி என்பர். மண், நீர், நெருப்பு, காற்று, ஆத்மா, ஆகாயம், சூரியன், சந்திரன் என்ற இவ்வெட்டும் சிவபிரானது சரீரங்களாம். இவை பிறர்க்கே பயன் படுவன. ஆத்மாவிற்குப் பதிலாக யாகம் செய்கின்ற மனிதனைச் சிவபிரானது சரீரமாகக் கூறுவர்.

सोऽहं तृष्णातुरैर्वृष्टिं विद्युत्वानिव चातकैः ।
अरिविप्रकृतैर्देवैः प्रसूतिं प्रति याचितः ॥ २७ ॥

सः - அத்தகைய, अहम् - நான், तृष्णा - आतुरैः - தாகத்தினால் வருந்தும், चातकैः - சாதகப் பக்ஷிகளால், विद्युत्वान् - மேக

மானது, वृष्टिम् इव - மழையைக் குறித்து யாசிக்கப்படுவது போல், अरि - विप्रकृतैः - சத்ருக்களால் துன்புறுத்தப்பட்ட, देवैः, தேவர்களால், प्रसूतिम् प्रति - புத்ரன் அடைவதைப்பற்றி, याचितः - வேண்டப்பட்டுள்ளேன்.

(க-து) ''தாரகாஸுரனால் துன்புறுத்தப்பட்ட தேவர்கள், நான் ஒரு மகனைப் பெற்று, அவனை அவர்களின் ஸேனைக்குத் தலைவனாக அளிக்க, சாதகப்பட்சி மேகத்தினிடம் ஜலம் வேண்டுவதுபோல், என்னிடம் வேண்டிக் கொண்டனர்''.

சாதகப்பக்ஷி, மேகத்தினின்று வரும் மழை நீரைக் குடிக்குமேயன்றி தரையில் விழுந்த நீரைக் குடிக்காது. தாகம் தணிய மேகத்தையே எதிர் நோக்கி இருக்கும். தேவர்களை சாதகப்பக்ஷிகளுடன் ஒப்பிட்டதால், தேவர்களும் சிவபிரானையன்றி வேறு ஒருவரையும் அணுகவிரும்பவில்லை என்பது புலனாகும். பிரம்மாவிடம் அணுகிய தேவர்கள், மன்மதன் மூலம் சிவபிரானை வசீகரிக்க முயன்று தோல்வியுற்றபின் சிவபிரானிடம் நேரில் வந்து வேண்டிக்கொண்டனர் என்பது முன்பு கூறப்படாவிடினும் சிவபிரான் இங்கு கூறியதிலிருந்து புலனாகின்றது.

अत आहर्तुमिच्छामि पार्वतीमात्मजन्मने ।
उत्पत्तये हविर्भोक्तुर्यजमान इवारणिम् ॥ २८ ॥

अतः - ஆகையால், आत्म - जन्मने - மகனை அடைவதற்காக, यजमानः - யாகம் செய்பவர், हविः भोक्तुः - அவிஸை உண்ணும் அக்னியை, उत्पत्तये - உண்டாக்குவதற்காக, अरणिम् - इव அரணிக்கட்டையை அடைய விரும்புவதுபோல, पार्वतीम् - பார்வதியை, आहर्तुम् - மணம் செய்துகொள்ள, इच्छामि - விரும்புகிறேன்.

(க-து) யாகம் செய்பவருக்கு அக்னி தேவை. அதனை அரணிக்கட்டையினின்றுமே உண்டாக்க வேண்டுமாகையால் அவர் அதனைப் பெறமுயல்வர். அதுபோல், மகனை அடைய விரும்பி நான் பார்வதியை மணக்க விரும்புகின்றேன்.

சிவபிரானுக்கு யாகம் செய்பவரும், பார்வதிக்கு அரணியும், பிறக்கப்போகும் புத்ரனுக்கு அக்னியும் உபமானங்கள். இவ்வுபமானத்திலிருந்து சிவபிரான் புத்ரோத்பத்தியை எவ்வளவு தூய்மை வாய்ந்ததாகக் கருதுகின்றுர் எனப் புலனுகும்.

ஐந்தாம் ஸர்க்கத்தில் பார்வதியின் அடிமையாகத் தம்மைக் கூறிக்கொண்ட சிவபிரான், இங்குத் தேவர்கள் வேண்டியதால் பார்வதியை மணக்க முற்படுவதாக கூறிய தன் கருத்து என்னவெனில், பார்வதியின் அடிமையாகத் தம்மை ஆக்கிக்கொண்டதும் கூட தேவர்களின் விருப்பைப் பூர்த்தி செய்வதற்கேயென அவர்கள் உணர்வதற்கு என்க. अरणि - வன்னி மரத்தின் இரண்டு துண்டுகள்.

तामस्मदर्थे युष्माभिर्याचितव्यो हिमालयः ।
विक्रियायै न कल्पन्ते संबन्धाः सदनुष्ठिताः ॥ २९ ॥

अस्मद् - अर्थे - எனது இப்பயனுக்காக, युष्माभिः-உங்களால் हिम - आलयः - ஹிமவான், ताम् - அவளைத் தரும்படி, याचितव्यः - வேண்டப்பட வேண்டும்; सत् - अनुष्ठिताः - பெரியோர்களால் செய்து வைக்கப்பட்ட, संबन्धाः - விவாஹங்கள், विक्रियायै - கெடுதலைச் செய்வதற்கு, न कल्पन्ते - சக்தி உடையனவல்ல.

(க-து) "எனக்காக நீங்கள் ஹிமவானிடம் சென்று, பார்வதியைத் தரவேண்டுமென அவரிடம் கேட்டுக் கொள்ளவேண்டும்.

பெரியோர்கள் செய்து வைக்கும் விவாஹம் ஒருநாளும் தீங்கை விளைவிப்பதில்லை; ஆதலால் உங்களை வேண்டிக்கொள்கின்றேன்.

எத்தகைய விவாஹம் சிறந்ததெனக் கவி தமது கருத்தை இச்சுலோகத்தில் வெளியிட்டுள்ளார். अनुष्ठिता: - என்பதனை, अनुष्ठापिता: - எனக்கொள்ள வேண்டும்.

उन्नतेन स्थितिमता धुरमुद्वहता भुवः ।
तेन योजितसंबन्धं वित्त मामप्यवञ्चितम् ॥ ३० ॥

उन्नतेन - (நன்னடக்கையால்) உயர்ந்தவனும், स्थितिमता- (பிறர் கௌரவிக்கும்) நிலையில் இருப்பவனும், भुवः - பூமியின், धुरम् - பாரத்தை, उद्वहता - தாங்குபவனுமாகிய, तेन - அந்த ஹிமவானுடன், (युष्माभिः) - உங்களால், योजित - संबन्धं - செய்து வைக்கப்பட்ட ஸம்பந்தமுடைய, माम् - अपि - என்னையும், अवञ्चितम् - பாக்யசாலியாக, वित्त - நீங்கள் நினைக்கவேண்டும்.

(க-து) ஹிமவான் நன்னடக்கையால் உயர்ந்தவன். யாகாதிகளில் பாகம் உடையவனுகையால் பிறரால் கௌரவிக்கப்படும் நிலையுடையவன். பூமியை ரக்ஷிக்கும் ஸார்வபௌமன். எனவே, அவனுடன் நீங்கள் எனக்குச் செய்துவைக்கும் இச்சம்பந்தம் நிச்சயமாக என்னையும் பெருமை அடையச்செய்யும். என்பதை நீங்கள் கருதவேண்டும்.

உலகின் தலைவராகிய சிவபிரானுக்கு எவ்வகையிலும் சமமில்லாத ஹிமவானுடன் சம்பந்தம் செய்வது தகுமோ என்ற கேள்விக்கு பதில் கூறுகின்றது இச்சுலோகம். ஹிமவானுக்கு இரண்டு வடிவங்கள் உண்டு. ஒன்று மலைவடிவம், மற்றொன்று தேவவடிவம். இரண்டு வடிவங்களுக்கும் பொருந்துமாறு மூன்று விசேஷணங்கள் ஹிமவானுக்குத் தரப்பட்டுள்ளன.

(1) उन्नतेन - மலைவடிவமும் உயரமானது, தேவவடிவம் நன்னடத்தையால் உயர்ந்தது.

(2) स्थितिमता - மலையாகையால் அசையாத நிலையுடையது. தேவவடிவம் பிறரால் கௌரவிக்கப்படுவது.

(3) भुवः उद्वहता - மலைகள் பூமியைத் தாங்குவதாகக் கூறுவர்; தேவன் ஹிமவான் மலைகளுக்கு அரசனுகையால் சக்ரவர்த்தி.

मामपि - "என்னோடு ஸம்பந்தம் செய்யின் ஹிமவானை நீங்கள் பாக்கியசாலியாகக் கருதுவீர்கள். அதேபோல் என்னையும் கருதவேண்டும்'' என अपि - என்ற சொல் காட்டியது.

एवं वाच्यः स कन्यार्थमिति वो नोपदिश्यते ।
भवत्प्रणीतमाचारमामनन्ति हि साधवः ॥ ३१ ॥

कन्यार्थम् - பெண்ணிற்காக, सः - அவர், एवम् - இவ்வாறு, वाच्यः - பேசப்படவேண்டும், इति - என, वः - உங்களுக்கு, न - उपदिश्यते - (என்னுல்) உபதேசம் செய்யப்பட வேண்டியதில்லை; हि - ஏனெனில், साधवः - பெரியோர்கள், भवत् - प्रणीतम् - தாங்கள் செய்துள்ளதையே, आचारम् - நல்ல செயலாக, आमनन्ति - கூறுகின்றனர்.

(க-து) பெண் விஷயமாக ஹிமவானிடம் நீங்கள் இப்படிப் பேசவேண்டும் எனப் பேசவேண்டிய முறையைப்பற்றி நான் உங்களுக்குக் கூறவேண்டியதில்லை. நீங்கள் எழுதியுள்ள ஸ்ம்ருதி நூல்களில் கூறப்பட்டுள்ளதையே பெரியோர்கள் ஸதாசாரமாகக் கருதுகின்றனர். (ஸப்தர்ஷிகளில், அங்கிரஸ், அத்ரி, வஸிஷ்டர் என்ற மூவரும் ஸ்ம்ருதி நூல்கள் எழுதியுள்ளனர்.)

**आर्याऽप्यरुन्धती तत्र साहाय्यं कर्तुमर्हति ।**
**प्रायेणैवंविधे कार्ये पुरन्ध्रीणां प्रगल्भता ॥ ३२ ॥**

**आर्या** - பூஜிக்கத்தக்க, **अरुन्धती** - **अपि** - அருந்ததியும், **तत्र** - பெண்ணைக் கேட்கும் விஷயத்தில், **साहाय्यम्** - உதவியை, **कर्तुम्** - செய்ய, **अर्हति** - தகுதியுடையவளாகின்றாள்; **प्रायेण** - பெரும் பாலும், **एवंविधे** - இத்தகைய, **कार्ये** - காரியத்தில், **पुरन्ध्रीणाम्** - குடும்பஸ்த்ரீகளுக்கு, **प्रगल्भता** - ஸாமர்த்தியம் (உண்டு).

(க-து) அருந்ததியும் இவ்விஷயத்தில் உங்களுக்கு உறுதுணை யாக இருப்பாள். விவாஹத்தை நிச்சயிக்கும் விஷயத்தில் குடும்ப ஸ்த்ரீகளுக்குச் சாமர்த்தியம் உண்டு.

**साहाय्यम्** - **व्यापारम्** - என்று பாட பேதம் உண்டு. பொருள் ஒன்று தான்.

**तत्प्रयातौषधिप्रस्थं सिद्धये हिमवत्पुरम् ।**
**महाकोशीप्रपातेऽस्मिन्सङ्गमः पुनरेव नः ॥ ३३ ॥**

**तत्** - ஆகையால், **ओषधिप्रस्थम्** - ஓஷதிப்ரஸ்தம் என்ற, **हिमवत्** - **पुरम्** - ஹிமவானுடைய நகரத்திற்கு, **सिद्धये** - (காரியத்தை) சாதிப்பதற்காக, **प्रयात** - செல்லுங்கள். **अस्मिन्** - இந்த, **महाकोशी** - **प्रपाते** - (**एव**) - மஹாகோசி - அருவி விழும் இடத்திலே, **नः** - நமக்கு, **पुनः एव** - மறுபடியும், **संगमः** - சந்திப்பு, **अस्तु** - இருக்கும்.

(க-து) ஆதலால் நீங்கள் ஓஷதிப்ரஸ்தம் என்ற ஹிமவானது நகரத்திற்குச் செல்லுங்கள். காரியத்தை முடித்தபின், இங்கு சமீப மாகவுள்ள மஹாகோசீ அருவியின் அருகிலேயே மறுபடியும் நீங்கள் என்னைக் காணலாம்.

**महाकोशी** - ஹிமாலயத்தில் தோன்றிய ஒரு நதி என்பர்,

तस्मिन्संयमिनामाद्ये जाते परिणयोन्मुखे ।
जहुः परिग्रहव्रीडां प्राजापत्यास्तपस्विनः ॥ ३४ ॥

संयमिनाम् - புலனை அடக்கியவர்களில், आद्ये - முதல்வரான, तस्मिन् - அச்சிவபிரான், परिणय - उन्मुखे - விவாஹத்தில் நோக்குடையவராக, जाते - ஆனபொழுது, प्राजापत्याः - பிரம்ம தேவரின் (மானஸ) புதல்வர்களான, तपस्विनः - அம்மஹரிஷிகள், परिग्रह - व्रीडाम् - மனைவியுடன் இருத்தலால் உண்டான லஜ்ஜையை, जहुः - விட்டனர்.

(க-து) ஸப்தர்ஷிகள் மனைவியருடன் வஸிப்பவர்கள். வானப்ரஸ்தர்களாக இருப்பதால் உலகப்பற்று சிறிதளவேனும் உடையவர்களே. மனைவியருடன் இருப்பதே அவர்களின் பற்றுடைமைக்கு அடையாளமாகும். அவர்கள், பற்றற்ற சிவபிரான் முன் வரும்பொழுது தங்கள் நிலையை - பற்றுடைய தன்மையை - எண்ணி வெட்கத்துடன் வந்தனர். வந்தபின், சிவபிரானும் மனைவியையடைய விருப்புடையவராக இருக்கின்றார் என்பதை அறிந்த பொழுது அவர்களது வெட்கம் நீங்கியது.

ततः परममित्युक्त्वा प्रतस्थे मुनिमण्डलम् ।
भगवानपि संप्राप्तः प्रथमोद्दिष्टमास्पदम् ॥ ३५ ॥

ततः - பிறகு, मुनि - मण्डलम् - அம்முனிவர்கள் ஸமூஹம், 'परमम् - நல்லது' इति - என, उक्त्वा கூறிவிட்டு, प्रतस्थे - புறப்பட்டது; भगवान् - अपि - சிவபிரானும், प्रथम - उद्दिष्टम् - (தாம்) முதலில் குறிப்பிட்ட, आस्पदम् - இடத்தை, संप्राप्तः - வந்தடைந்தார்.

(க-து) அம்முனிவர்கள் சிவபிரான் கட்டளைப்படி செய்வதாகக் கூறிவிட்டுப் புறப்பட்டனர். சிவபிரானும் தாம் குறிப்பிட்ட மஹாகோசீ அருவி விழும் இடத்திற்கு வந்துசேர்ந்தார்.

परमम् - இச்சொல் ஸம்மதத்தைக் குறிப்பதாகும். ओमेवं परमं मतम् - என்பது அமரம். 'संप्रास:' - संक्रान्तः - என்பது அருணகிரிநாதர் பாடம்.

ते चाकाशमसिश्यामम्रुत्पत्य परमर्षयः ।
आसेदुरोषधिप्रस्थं मनसा समरंहसः ॥ ३६ ॥

मनसा - மனத்திற்கு (மனத்தின் வேகத்திற்கு), सम - रंहसः - ஸமமான வேகமுடைய, ते - அந்த, परम - ऋषयः च - சிறந்த முனிவர்கள், असि - श्यामम् - கத்திபோல் நீலநிற முடைய, आकाशम् - ஆகாசத்தில், उत्पत्य - கிளம்பி, ओषधिप्रस्थम् - ஓஷதிப்ரஸ்த நகரத்தை, आसेदुः - அடைந்தனர்.

(க-து) மனோவேகமுடையவர்களாக அம்முனிவர்கள் எஃகு கத்திபோல் நீலநிறமுடைய ஆகாயத்தில் கிளம்பி ஓஷதிப்ரஸ்தம் நோக்கிச் சென்றனர்.

மஹர்ஷிகளின் வேகத்தை மனோவேகத்துடன் ஒப்பிட்ட தால் அவர்கள் சிவபிரானது ஆணையை நிறைவேற்றுவதில் எவ்வளவு ஊக்கமுடையவராக இருந்தனர் என்பது புலனாகும்.

असि-श्यामम् - கத்திபோல் கறுப்பு நிறமுடைய என்றும் பொருள் கூறலாம். இனிவரும் பத்து சுலோகங்களில் ஓஷதிப்ரஸ்தம் வர்ணிக்கப் படுகின்றது. ஒவ்வொரு சுலோ கத்திலும் ते आसेदुः - என்பதனைக் கூட்டிப்பொருள் கூற வேண்டும்.

अलकामतिवाह्येव वसतिं वसुसंपदाम् ।
स्वर्गाभिष्यन्दवमनं कृत्वेवोपनिवेशितम् ॥ ३७ ॥

वसु - संपदाम् - செல்வங்களின் நிறைவுக்கு, वसतिम् -இடமான, अलकाम् - அளகாபுரியை (அளகாபுரியின் செல்வத்தை), अतिवाह्य - கொண்டுவந்து, उपनिवेशितम् इव - அமைக்கப்பட்டது போன்றதும், स्वर्ग - अभिष्यन्द - वमनम् कृत्वा - ஸ்வர்க்கத்திலுள்ள அதிக ஜனங்களைக் கொண்டு வந்து, उपनिवेशितम् इव - அமைக் கப்பட்டது போன்றதுமான, ओषधिप्रस्थं आसेदुः - ஓஷதிப்ரஸ் தத்தை அடைந்தனர்.

(க-து) ஹிமவானது நகரம் செல்வம் நிறைந்து இருந்தது. நகரஜனங்கள் மிகவும் தோற்றப் பொலிவுடன் இருந்தனர். அத்தகைய நகரத்தை முனிவர்கள் அடைந்தனர். செல்வத்திலே தலைசிறந்தது குபேரனுடைய நகரமான அளகாபுரி. குபேரனுடைய பிரஜைகளான யக்ஷர்களைக் காட்டிலும் ஸௌந்தர்யம் வாய்ந்த வர்கள் ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்கள். எனவே அளகாபுரியின் செல்வத்தினாலும் ஸ்வர்க்க ஜனங்களைக் குடியேறச் செய்தும் அமைக்கப்பட்டது போல் இருந்தது அந்த நகரம்.

ஒரு நகரத்தைப் புதியதாக அமைக்க விரும்புபவன், தன்னுட்டில் உள்ள அதிக ஜனங்களையோ தான்வென்ற நாட்டிலுள்ள ஜனங்களையோ கொண்டு வந்து குடியேறச் செய்யலாம் என கௌடில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் கூறியுள்ளார்.

अभिष्यन्दः - (ஒரு நகரத்தில் குடியிருக்க அனுமதிக்கப் பட்ட தொகைக்கு மேல்) அதிகமாயுள்ள ஜனங்கள். वमनम् - கொண்டுவருதல்; குடியேற்றுதல்; अभिष्यन्दन - என்ற சொல் லிற்கு செல்வம் என்ற பொருள் கொண்டு, "ஸ்வர்க்கத்தில் அடங்காத செல்வத்தினைக் கொண்டு அமைக்கப்பட்டது" என்பர் நாராயணரும் அருணகிரியும்.

गङ्गास्रोतःपरिक्षिप्तं वप्रान्तज्वलितौषधि ।
बृहन्मणिशिलासालं गुप्तावपि मनोहरम् ॥ ३८ ॥

गङ्गा - स्रोतः - परिक्षिप्तम् - கங்கையின் பிரவாஹத்தால் சூழப்பட்டதும், वप्र - अन्त - ज्वलित - ओषधि - கோட்டைச் சுவரின் அடித்தளத்தின் ஓரங்களிலே ஒளிருகின்ற செடியையுடையதும், बृहत्-मणिशिला-सालम् - பெரிய ரத்னக்கற்களான கோட்டைச் சுவர்களையுடையதும், गुप्तौ - अपि - அரண் அமைப்பிலும், मन-हरम् -மனங்கவரும் அழகுடையதுமான, ओषधिप्रस्थम् - आसेदुः - ஓஷதிப்ரஸ்தத்தை அடைந்தனர்.

(க-து) அந்நகரைச் சுற்றிலும் கங்கையின் பிரவாஹம் ஓடியதால் அதுவே அதற்கு அகழாக அமைந்தது. கோட்டைச்சுவரின் அடித்தளம் மிளிருகின்ற ஒருவகைச் செடிகளால் அழகு பெற்றிருந்தது. ரத்னப் பாறைகளான கோட்டைச் சுவர் அதனைக்காத்தது. இவ்வாறு நகருக்கு அமைந்திருந்த அரண்கூட மனங்கவரும் வகையில் இருந்தது.

பிற நகரங்களின் அகழ் சேறும் சகதியுமுடையதாக இருக்கும். இங்கு பாவனமான கங்கை நீர் ஓடிக்கொண்டிருந்தது. கோட்டைச் சுவரின் அடித்தளத்தில் முள் மரங்கள் வளர்ந்திருக்கும். ஓஷதிப்ரஸ்தத்தில் ஒளிருகின்ற செடிகள் வளர்ந்து அழகு செய்தன. இவ்வோஷதி அதிகமாக இருந்ததாலேயே இந்நகரம் ஓஷதிப்ரஸ்தம் எனப்பெயர் பெற்றதாகவும் கூறலாம். "ஓஷதியுடன் கூடிய प्रस्थ - மலைமேலுள்ள ஸம நிலம்" என்பது இதன் பொருள். இவ்வோஷதிகள் இரவில் ஒளிவிடுபவை. वप्र - கோட்டைச் சுவரைத் தாங்குவதற்காக உள்ள விசாலமான அடித்தளம்; वप्रान्तः - என்று பாடம் கொண்டு அடித்தளங்களின் மத்தியில் என்று பொருளுரைப்பர் மல்லிநாதர்.

वृहन् . . . सालम् ; सालम्-கோட்டைச் சுவர். பிற கோட்டைச் சுவர்கள் பாறைகளாலமைந்து கவர்ச்சியற்று இருக்கும். ஓஷதிப்ரஸ்தத்தில் உள்ள சுவர்கள் ரத்னங்களாலானவை; கவர்ச்சி உடையவை. गुप्तावपि मनोहरम् - அரண் அமைப்பும் அழகாக அமைந்துள்ளது. கோட்டைச் சுவர்கள் பொதுவாக நகரின் அழகை மறைப்பவை. ஓஷதிப்ரஸ்த நகரம் கண்களுக்குப்புலனுகாவிடினும், அரணைப்பார்ப்பவர்களும் மகிழும்படி அந்நகரின் பாதுகாப்பு அமைந்திருந்தது.

वीतसिंहभवा नागा यत्राश्वा बिलयोनयः ।
यक्षाः किम्पुरुषाः पौरा योषितो वनदेवताः ॥ ३९ ॥

यत्र - எந்நகரத்தில், नागाः - யானைகள், वीत - सिंह - भयाः- ஸிம்ஹ பயம் அற்றனவோ, अश्वाः - குதிரைகள், बिल - योनयः - உச்சைசிரவஸினிடமிருந்து தோன்றியவைகளோ, यक्षाः - யக்ஷர்களும், किंपुरुषाः - கிம்புருஷர்களும், पौराः - நகரமாந்தர்களோ, वनदेवताः - வனதேவதைகள், योषितः - ஸ்த்ரீகளோ, तत् ओषधिप्रस्थम् - அத்தகைய ஓஷதிப்ரஸ்தத்தை, आसेदुः - அடைந்தனர்.

(க-து) அந்நகரத்தில் ஹிமவானது நல்லாட்சியால், யானைகள் சிங்கத்தினிடம் பயமின்றி இருந்தன. குதிரைகள் எல்லாம் உயர்ந்த வகையைச் சேர்ந்தவை. இந்திரன் குதிரையான உச்சைச்ரவஸின் ஸந்ததிகள். நகரமாந்தர்கள், யக்ஷர்களும், கிம்புருஷர்களும். ஸ்த்ரீகள் ஸௌந்தர்யம் மிகுந்த வனதேவதைகள்.

பாற்கடலை கடைந்த பொழுது அதனின்றும் தோன்றியது உச்சைச்ரவஸ் என்ற குதிரை. இதை இந்திரன் எடுத்துக் கொண்டான். இதன் வம்சத்தில் வந்தவைகள்தாம் ஓஷதி

ப்ரஸ்தத்தில் உள்ள குதிரைகள். विकः - உச்சைஸ்ரவஸ் என்று பொருள் உண்டு. विलं छिद्रे गुहायाञ्च पुमान् उच्चैश्रवोहये" என்பது மேதிநீ கோசம். குதிரைகள் தரத்தை அவற்றின் தந்தைவழியைக் கொண்டு நிர்ணயிப்பர்.

शिखरासक्तमेघानां व्यज्यन्ते यत्र वेश्मनाम् ।
अनुगर्जितसंदिग्धाः करणैर्मुरजस्वनाः ॥ ४० ॥

यत्र - எந்த நகரத்தில், वेश्मनाम् - வீடுகளுடைய, शिखर - आसक्त - मेघानाम् - சிகரங்களில் தங்கிய மேகங்களின், अनुगर्जित - संदिग्धाः - தொடர்ந்த ஒலி என ஸந்தேகிக்கப்பட்ட, मुरज-स्वनाः - மிருதங்க சப்தங்கள், करणैः - தாளங்களினல், व्यज्यन्ते - (மேக. ஒலியினின்றும் பிரித்து) காட்டப்பட்டனவோ, तत् - ओषधि- प्रस्थम् - அத்தகைய ஒஷதிப்ரஸ்தத்தை, आसेदुः - முனிவர்கள் அடைந்தனர்.

(க-து) ஓஷதிப்ரஸ்தத்தில் மாளிகைகள் வானளாவி இருந்தன வாதலால் அம்மாளிகைகளின் சிகரங்களில் மேகங்கள் தங்கி கர்ஜிக்கும் நகரமாந்தர்கள் சுகமுடையவர்களாக இருந்தமையால் ஸங்கீதம் முதலியவைகளில் ஈடுபட்டவர்களாக மிருதங்கம் முதலிய வாத்தியங்களை வாசித்து மகிழ்வர். எனவே மாளிகைகளின் சிகரங்களிலிருந்து மேகங்களின் ஒலியும் கேட்கும். மிருதங்கங்களின் சத்தமும் வரும். மிருதங்க சப்தமும் மேக ஒலிபோல் கம்பீரமாக இருப்பதால் இவ்விரண்டு ஒலிகளில் எது மேக கர்ஜனை? எது மிருதங்க சப்தம்? என அறிய தாளம் உதவியது. மிருதங்க சப்தம் தாளத்தை அனுசரித்து இருக்கும். மேக சப்தம் தாளத்தை அனுசரித்து இராது. தாளமாவது, காலப்பிரமாணத்தை அனுசரித்துச் செய்யப்படும் ஒலி.

இந்த சுலோகத்தில் கூறப்படும் கருத்து என்னவென்றால் ''அந்நகரத்தில் மாளிகைகள் வானளாவி இருந்தன. மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர்'' என்பதாம்.

नृत्यवादित्रगीतानां प्रयोगवशभेदिनाम् संस्थाने ताडनं ताक करणानि प्रचक्षते - என்பது மூன்று வகைக் கரணங்களைக் கூறுவது. अनुगर्जित என்ற சொல்லை எதிர் ஒலி என்று கொண்டு மேககர்ஜனை யின் எதிர் ஒலி என ஸந்தேகிக்கப்பட்ட மிருதங்க நாதம், தாளத்தை அனுசரித்திருத்தலால் பகுத்து அறியப்பட்டது என்பர் மல்லிநாதர்.

यत्र कल्पद्रुमैरेव विलोलविटपांशुकैः ।
गृहयन्त्रपताकाश्रीरपौरादरनिर्मिता ॥ ४१ ॥

यत्र - எந்த நகரத்தில், गृह - यन्त्र - पताका - श्रीः - வீடுகளில் பெருங்கொடிகளாலான சோபையானது, विलोल - विटप - अंशुकैः - அசைகின்ற கிளைகளிலுள்ள பட்டுத்துணிகளையுடைய, कल्पद्रुमैः - एव - கல்பக விருக்ஷங்களினலேயே, अपौरादर - निर्मिता - நகரமக்களின் முயற்சியின்றியே அமைக்கபட்டதாக, भवति - இருக்கின்றதோ, तत् ओषधिप्रस्थम् - அத்தகைய நகரத்தை, आसेदुः - ஸப்தர்ஷிகள் அடைந்தனர்.

(க-து) ஸுபிக்ஷமான நாட்டில் ஜனங்கள் தமது வீடுகளில் துவஜங்களைக் கட்டி அலங்கரிப்பர். அத்துவஜங்கள் உயரமாக இருப்பதற்காக மரங்களை ஒன்ருேடு ஒன்று இணைப்பர். இத்தகைய துவஜத்திற்கு 'யந்த்ர பதாகா' எனப்பெயர். அம்மரத்தின் நுனியில் பட்டினலான கொடியை கட்டுவர். இதனல் வீடுகளும் நகரமும் அழகு பெறும். இவ்வாறு கொடியை அமைக்க நகரமாந்தர்களின் முயற்சி தேவையானதே. ஓஷதிப்ரஸ்தத்தின் தனிப்பெருமை என்னவென்ருல் வீடுதோறும் உயரமான கல்பக விருக்ஷங்கள் இருந்தன. கல்பக விருக்ஷங்களின் கிளைகளிலே பட்டுத்துணிகள் தாமே வளர்ந்து காற்றிலே அசைந்தாடிக் கொண்டிருந்தன. ஆகையால் நகரஜனங்களின் யத்னமின்றியே அந்நகரத்தில் யந்த்ர பதாகையின் (பெருங்கொடிகளின்) அழகு இருந்தது என்பதாம்.

கல்பக விருக்ஷங்களில் பட்டுத்துணிகள் தோன்று வதாகக் கூறுவர்.

अपौरादर..... आदर - என்ற சொல் இங்கு முயற்சியைக் குறித்தது. अंशुक -பருத்தி, பட்டு இவைகளாலான வஸ்த்ரம்.

यत्र स्फटिकहर्म्येषु नक्तं सोपानपङ्क्तिषु ।
ज्योतिषां प्रतिबिम्बानि प्राप्नुवन्त्युपहारताम् ॥ ४२ ॥

यत्र - எந்த நகரத்தில், नक्तम् - இரவில், स्फटिक - हर्म्येषु - ஸ்படிக மாளிகைகளில், सोपानपङ्क्तिषु-படிகளின் வரிசைகளிலே, ज्योतिषाम् - நக்ஷத்ரங்களின், प्रतिबिम्बानि - பிரதிபிம்பங்கள், उपहारताम् - பூஜா புஷ்பங்களாக இருக்கும் நிலையை, प्राप्नुवन्ति - அடைகின்றனவோ, तत् ओषधिप्रस्थम् - அந்த ஓஷதிபிரஸ்தத்தை, आसेदुः - அடைந்தனர்.

(க-து) ஸ்படிக மாளிகைகளின் மேல் தளத்திற்குச் செல்லும் படிகள் வீட்டிற்குப் புறத்திலே அமைந்துள்ளன போலும். அப்படிகள் ஸ்படிகக்கற்களாலானவையே. படிகளிலே புஷ்பங்களை வைத்துப் பூஜை செய்வர். அது படிகளுக்கு, அலங்காரமாகவும் இருக்கும். ஓஷதிபிரஸ்தத்தில், ஸ்படிகப் படிகளில் இரவில் பிரதிபலிக்க நக்ஷத்ரங்கள் புஷ்பங்கள்போல் காணப்படுவனவாய் பூஜைக்காக வைக்கப்படும் புஷ்பங்களின் காரியத்தைச் செய்தன. இதுவும் ஜனங்களின் முயற்சியின்றி நகரத்திலுள்ள மாளிகைகளுக்கு அமைந்த அழகாகும்.

'सोपान पङ्क्तिषु'-'आपानभूमिषु' என்ற பாடம் கொள்வர் மல்லி நாதர். आपानभूमि - மதுபானம் செய்யும் இடம். மதுபானம் செய்யுமிடத்தில் தரையில் புஷ்பங்களைத்தூவி அலங்கரிப்பர். "ஸ்படிக மாளிகையின் மேல் தளத்தில் திறந்த வெளியில் ஸ்படிகத்தரையிலே இரவில் பிரதிபலித்த நக்ஷத்ரங்கள்,

அலங்காரத்திற்கான புஷ்பங்கள் செய்த கார்யத்தைச் செய்தன" என்பது அவரது உரை.

**यत्रौषधिप्रकाशेन नक्तं दर्शितसञ्चराः ।**
**अनभिज्ञास्तमिस्राणां दुर्दिनेष्वभिसारिकाः ॥ ४३ ॥**

यत्र - எந்த நகரத்தில், दुर्दिनेषु - மேகங்கள் சூழ்ந்த நாட்களிலும், नक्तम् - இரவிலே, ओषधि - प्रकाशेन - ஓஷதிகளின் ஒளிகளால், दर्शित - संचराः - காண்பிக்கப்பட்ட மார்க்கமுடையவர்களாக, अभिसारिकाः-அபிஸாரிகைகள், तमिस्राणाम् - இருட்டை, अनभिज्ञाः - அறியாதவர்களாக (இருந்தனரோ), तत् ओषधिप्रस्थम् - அவ்வோஷதிப்ரஸ்த நகரத்தை, आसेदुः - அடைந்தனர்.

(க-து) தாம் விரும்பும் மனிதரைக் குறிப்பிட்ட ஓர் இடத்தில் சந்திக்கச் செல்லும் ஸ்த்ரீகள் அபிஸாரிகைகள் எனப்படுவர். பெரும்பாலும் இவர்கள் இரவிலேதான் செல்வர். ஆகாசம் மேகங்களால் மூடப்படுமாயின், சந்திரனது ஒளியோ, நக்ஷத்திரத்தின் பிரகாசமோ இல்லாமையால் பிற நகரங்களிலுள்ள அபிஸாரிகைகள் இரவிலே வழிதெரியாமல் கஷ்டப்படுவர். ஓஷதிபிரஸ்தத்திலோ வெனில் மேகம் மூடிய இரவிலும், ஒளிரும் ஓஷதிகள் அந்த ஸ்த்ரீகளுக்கு வழியைக்காட்டும். எனவே அவர்கள் இருட்டையே அறியார். இருட்டின் கஷ்டம் அவர்களுக்கு இல்லை என்பது கருத்து.

இங்கு கூறப்பட்ட அபிஸாரிகைகள் நடத்தை கெட்டவர்கள் என்று கருதுதல் கூடாது. காந்தர்வ மணம் புரிய அனுமதிக்கப்பட்டுள்ள இனத்தைச் சேர்ந்தவர்களாகவும், காதலித்த மனிதனைச் சந்திக்க செல்பவர்களாகவும் இருக்கலாம். தேவப்பொது மகளிராகவும் இருக்கலாம்.

**यौवनान्तं वयो यस्मिन्नातङ्कः कुसुमायुधात् ।**
**रतिखेदसमुत्पन्ना निद्रा संज्ञाविपर्ययः ॥ ४४ ॥**

यस्मिन् - எந்த நகரத்தில், वयः - (மனிதர்களின்) பருவமானது, यौवन - अन्तम् (எப்பொழுதும்) யௌவனமாகவே இருந்ததோ, कुसुम - आयुधात् - மன்மதனிடமிருந்தே, आतङ्कः - தாபம் உண்டாயிற்ரே, रति - खेद - समुत्पन्ना - இன்ப நுகர்ச்சியின் ச்ரமத்திஞல் வரும், निद्रा - தூக்கமே, संज्ञा - विपर्ययः - மூர்ச்சையாக (நினைவிழந்த நிலையாக) இருந்ததோ, तत् ओषधिप्रस्थम् - அத்தகைய ஓஷதிப்ரஸ்தத்தை, आसेदुः - அடைந்தனர்.

(க-து) அந்நகர மாந்தர்கள் தேவர்களாகையால் எப்பொழுதும் யௌவனப்பருவத்திலேயே இருத்தனர். பால்யமோ, கிழத்தனமோ கிடையாது. காதலை உண்டாக்கும் மன்மதன் ஒருவனே அவர்களின் தாபத்திற்குக் காரணமாயிருந்தான். வேறு பகைவர்கள் இல்லை. புலன் நுகர்ச்சிக்குப்பின் நித்திரை செய்யும் பொழுது மாத்திரமே அவர்கள் பிரக்ஞையின்றி இருந்தனர். வேறு வியாதி முதலியவற்ருல் இல்லை. மரணம் முதலியனவும் இல்லை.

அந்நகர பிரஜைகள் மூப்பு, பிணி, சாவு முதலியன இல்லாதவர்கள் என்பது இதஞல் கூறப்பட்டது.

नान्तकः कुसुमायुधात् - என்பது மல்லிநாதர் பாடம். " कुसुमायुधात् अन्यः अन्तकः न " மன்மதனைக் காட்டிலும் வேறு எமன் அவர்களுக்குக் கிடையாது. எமன் இல்லாததால் மரணமும் இல்லை யென்பது பெறப்படும் பிரிந்தவர்களின் மனத்தில் காதலைத்தூண்டி பெரும் கஷ்டத்தை விளைவிப்பதால் மன்மதனை எமன் என்று கூறியபடி" என்று உரைசெய்வர்.

आतङ्कः - रुक्तापशङ्कास्वातङ्कः; என்பது அமரம்.

भ्रूभेदिभिः सकम्पोष्ठैर्ललिताङ्गुलितर्जनैः ।
यत्र कोपैः कृताः स्त्रीणामप्रसादार्थिनः प्रियाः ॥ ४५ ॥

भ्रू - भेदिभिः - புருவநெறித்தலையுடையவையும், सकम्प-ओष्ठैः - துடிக்கின்ற உதடுகளையுடையனவையும், ललित - अङ्गुलि - तर्जनैः - அழகாக விரல்களை அசைத்துச் செய்யப்படும் அச்சுறுத்தலை யுடையவையுமான, स्त्रीणां कोपैः - ஸ்த்ரீகளின் கோபங்களால், प्रियाः - காதலர்கள் (கணவர்கள்), अ प्रसाद - अर्थिनः - (ஸ்த்ரீகளின்) கோபம் நீங்கிய நிலையை வேண்டாதவர்களாக, यत्र - எந்த நகரத்தில், कृताः - செய்யப்பட்டனரோ, तत् ओषधिप्रस्थम् - அத்தகைய ஓஷதிப்ரஸ்தத்தை, आसेदुः - அடைந்தனர்.

(க-து) பிற நகரங்களில் காதலிகள் கோபித்தால், காதலர்கள் அவர்களிடம் நல்ல வார்த்தை கூறி மன்னிப்பைக் கோரி மன மகிழ்ச்சியை வேண்டி நிற்பர். ஓஷதிபிரஸ்தத்திலோவெனில், ஏதாவது ஒரு காரணத்தினால் ஸ்த்ரீகள் கோபிப்பார்களாயின், காதலர்கள் அவர்களது கோபத்தை மாற்ற முயல்வதே இல்லை. கோபமுற்ற காலத்தில் மாத்திரமே காணக்கூடிய பலவித பாவங்களை அவர்களின் முகத்தில் கண்டு களித்தனர். கோபத்திலும் அவர்களின் முகம் அழகாக இருந்தது. எனவே ஸ்த்ரீகளின் கோபம், புருஷர்களை மன்னிப்புக் கோரும்படி தூண்டவேயில்லை.

கோபகாலத்தில் ஸ்த்ரீகள் இருந்த நிலையைக் கூறுவன மூன்று விசேஷணங்கள்:

(1) भ्रूभेदिभिः - கோபமுடையவர் புருவத்தை நெறிப்பர்.

(2) सकम्पोष्ठैः - அவர்களது உதடு துடிக்கும் ;

(3) ललिताङ्गुलितर्जनैः - விரல்களை அசைத்து அச்சுறுத்துதல்; புருவநெறிப்பிலும், உதடுகளின் துடிப்பிலும், விரல்களின் அசைவிலும் அழகு இருந்தது. அந்நகரஸ்த்ரீகள் எந்நிலையிலும் ஸௌந்தர்யமுடையவராக இருந்தனர் என்பது கருத்து. कोपेऽपि कान्तं मुखम् - என்பதனையும் காண்க.

आ प्रसादार्थिनः कृताः - என்பது மல்லிநாதர் பாடம். "ஸ்த்ரீகளின் கோபம், அவர்களது மனம் சமாதானம் அடையும்

வரை ஆண்களை - மன்னிப்புக் கோருபவர்களாகச் செய்தது. சத்ருக்களின் கோபம் அல்ல" என்று உரை கூறுவர்; அந்நகரில் ஆண்கள் மன்னிப்புக் கோரியது தம் காதலிகளிடமேயன்றி சத்ருக்களிடம் அல்ல. ஏனெனில், அவ்வாண்கள் பெரும் வீரர்கள், அவர்களுக்குச் சத்ருக்களும் இல்லை" எனக் கருத்துரைப்பர் தக்ஷிணாவர்த்தர் என்பவர். வீரர்களான ஆண்களும் பெண்களுக்கு உரிய மரியாதையைத் தந்தனர் என்பதும் புலனாகும். प्रसादः - மனம் மகிழ்ந்துள்ள நிலை; கோபமில்லாத நிலை எனவும் கொள்ளலாம்.

सन्तानकतरुच्छायासुप्तविद्याधराध्वगम् ।
यस्य चोपवनं बाह्यं गन्धवद्गन्धमादनम् ॥ ४६ ॥

(कि) च - மேலும், सन्तानक - तरु - छाया - सुप्त - विद्याधर - अध्वगम् - ஸந்தானம் என்ற மரத்தின் நிழலில் அயர்ந்து தூங்கும் வித்யாதர வழிப்போக்கர்களையுடையதும், गन्धवत् - நறுமணமுடையதுமான, गन्धमादनम् - கந்தமாதனம் என்ற மலை, यस्य - எந்த நகரத்திற்கு, बाह्यम् - புறத்திலுள்ள, उपवनम् - நந்தவனமோ, तत् ओषधिप्रस्थम् - அத்தகைய ஓஷதிப்ரஸ்தத்தை, आसेदुः - அடைந்தனர்.

(க-து) நகரத்தின் உட்புறம்தான் அழகாகவும் ஆனந்தமளிப்பதாகவும் இருந்ததென்பதில்லை. நகரத்திற்கு வெளியிலுள்ள நறுமணமுள்ள கந்தமாதனம் என்ற மலையே அந்நகரத்திற்கு உத்யானவனமாகவும் இருந்தது. கந்தமாதன பர்வதத்திலுள்ள ஸந்தான விருக்ஷங்களினடியில், வழிப்போக்கர்களான வித்யாதரர்கள் களைப்பாறித்தூங்கினர். ஹிமவானது பாதுகாப்பில் இருந்ததால் யாரும் அச்சமின்றி இருக்க முடிந்தது. நகரஜனங்கள் சென்று அனுபவிக்கும்படி கந்தமாதனம் அண்மையிலும் இருந்தது.

இக்கந்தமாதனத்தைப் பற்றிக் காளிதாஸர் விக்ரமோர்வசீயத்திலும் கூறுகின்றார். 'கந்தமாதனத்தில் நுகரும் இன்பம் தான் இன்பம்' என்று அவர் கூறுவதிலிருந்து அம்மலையைப்பற்றி அவர் கொண்டுள்ள கருத்து புலனாகும். "स नाम संभोगः यस्तादृशेषु प्रदेशेषु" - விக். அங்கம். 4. गन्धवत् गन्धमादनं என்பது புதிய பாடம் எனவும் सुगन्धिर्गन्धमादनः - என்பது பழைய பாடம் எனவும் மல்லிநாதர் கூறுவர். பழைய பாடமே அருணகிரி அங்கீகரித்தது. அர்த்தத்தில் அதிகம் பேதம் இல்லை.

अथ ते मुनयो दिव्याः प्रेक्ष्य हैमवतं पुरम् ।
स्वर्गाभिसंधि सुकृताम् वञ्चनामिव मेनिरे ॥ ४७ ॥

अथ - பிறகு, ते - அந்த, दिव्याः मुनयः - தேவரிஷிகள், हैमवतम् - ஹிமவானுடைய, पुरम् - நகரத்தை, प्रेक्ष्य - பார்த்து, सुकृताम् - யாகம் முதலிய நற்காரியம் செய்பவர்களுக்கு, स्वर्ग - अभिसन्धिम् - ஸ்வர்க்கத்திலுள்ள விருப்பத்தை, वञ्चनां इव - (பிறர்) ஏமாற்றியதால் உண்டானதாக, मेनिरे - எண்ணினர்.

(க-து) ஸப்தர்ஷிகள் இதுவரை, 'ஸ்வர்க்கமே உயர்ந்தது. ஸகல ஸுகங்களுக்கும் இருப்பிடமானது' என எண்ணி இருந்தனர். இப்பொழுது அதைவிட உயர்ந்ததான ஹிமவானது நகரத்தைக் கண்டவுடன் யாகாதிகளின் பயனாக ஸ்வர்க்கம் அடைய விரும்புவர்களின் விருப்பம் ஒரு ஏமாற்றமே என எண்ணினர்.

अथ ते - என்பதற்குப் பதிலாக तत्कान्तं என்று ஒரு பாடமுண்டு. 'அழகிய அந்த நகரத்தை' என்பது பொருள். இந்த சுலோகத்திலுள்ள इव என்பதற்குப் பொருள் இல்லை. சந்தம் கருதி வந்தது. உரைகாரர்களில் சிலர் இதனை 'मेनिरे

इव' எனச்சேர்த்து, 'மஹர்ஷிகள் நினைத்தனர் போலும்' எனவும் 'वञ्चनां इव' 'வஞ்சனைபோலும்' கருதினர் எனவும் உரை கூறுவர்.

वञ्चना - ஏமாற்றம்; இங்கு, 'ஏமாற்றத்திலுண்டானது' எனப்பொருள் கொள்ளவேண்டும்.

**ते सद्मनि गिरेर्वेगादुन्मुखद्वाःस्थवीक्षिताः ।**
**अवतेरुर्जटाभारैर्लिखितानलनिश्चलैः ॥ ४८ ॥**

लिखित - अनल - निश्चलैः (படத்தில்) எழுதப்பட்ட அக்னி ஜ்வாலை போல் அசையாது இருந்த, जटा - भारैः - சடை முடிகளுடன் கூடிய, ते - அம்முனிவர்கள், उत् - मुख - द्वाः - स्थ - वीक्षिताः - தலை நிமிர்த்திய வாயிற்காப்பாளர்களால் பார்க்கப்பட்டவர்களாக, गिरेः - ஹிமவானின், सद्मनि - வீட்டில் (அரண்மனையில்), वेगात् - வேகமாக, अवतेरुः - (ஆகாயத்திலிருந்தும்) இறங்கினர்.

(க-து) அம்முனிவர்கள் ஆகாயத்தினின்றும் வேகமாக ஹிமவானது அரண்மனை வாயிலில் இறங்கினர். வேகமாக இறங்கியதால், பொன்னிறமுள்ள அவர்களது சடைமுடி படத்தில் எழுதப்பட்ட அக்னிஜ்வாலைபோல் மேல் நோக்கி இருப்பதாகக் காணப்பட்டது. வாசற்காப்பாளர்களும் தலைநிமிர்ந்து நோக்கினர்.

जटाभारः - மிகுதியான சடை. अनल - அக்னி. இங்கு அக்னியின் ஜ்வாலையைக் குறித்தது.

**गगनादवतीर्णा सा यथावृद्धपुरःसरा ।**
**तोयान्तर्भास्करालीव रेजे मुनिपरम्परा ॥ ४९ ॥**

गगनात् - ஆகாயத்தினின்றும், अवतीर्णा - இறங்கியதும், यथावृद्ध - पुरः - सरा - முதுமையை அனுசரித்து முன் செல்வது

மான, सा - அந்த, मुनि - परंपरा - முனிவர்களின் வரிசை, तोय - अन्तः - நீருக்குள் காணப்படும், भास्कर - अली - इव - சூரிய (பிம்பங்களின்) வரிசை போல், रेजे - காணப்பட்டது.

(க-து) அம்முனிவர்கள் ஆகாயத்தினின்றும் இறங்கினர். வயதில் முதியவர்கள் முன்னே இருக்கும்படி வரிசையை அமைத்துக்கொண்டு முன்னேக்கி நடந்தனர். ஒளி பொருந்திய அம்முனிவர்கள் நீரின் அலைகளிலே தென்படும் சூரியனது பல பிரதி பிம்பங்கள் போல் காணப்பட்டனர்.

यथावृद्ध - पुरस्सरा - மஹர்ஷிகளில் மிகவயது முதிர்ந்தவர் மரீசி. அவர் முதலில் இருந்தார். அவருக்குப்பின் சிறிதே இளைவரான வஸிஷ்டர். அவர் அருகில் அருந்ததி. அவருக்குப்பின் அங்கிரஸ், அத்ரி, புலஸ்த்யர், புலஹர், க்ரது என அம்முனிவர்களின் வரிசை இருந்தது.

मरीचिः पूर्वभागस्थः वसिष्ठः परतस्ततः ।
ततोऽङ्गिरास्ततश्चात्रिः पुलस्त्यः पुलहः क्रतुः ॥

என்பதனைக்காண்க.

तोय - நீர்; இங்கு அலையைக் குறித்தது. तोय - என்பதற்கு 'நீரின் அலைகள்' என்று கொள்ளாமல் 'பல நீர்நிலைகளில்' என்றும் பொருள் கொள்ளலாம். भास्कर - ஸூர்யன்; ஸூர்யனது பல பிரதிபிம்பங்களைக் குறித்தது. பலமஹர்ஷிகளுக்கு ஒரு பிம்பத்தை உபமானமாகக் கூறுவது பொருந்தாது.

तानर्घ्यानर्घ्यमादाय दूरात्प्रत्युद्ययौ गिरिः ।
नमयन्सारगुरुभिः पादन्यासैर्वसुन्धराम् ॥ ५० ॥

गिरिः - ஹிமவான், अर्घ्यम् - பூஜைக்கான தீர்த்தத்தை, आदाय - எடுத்துக்கொண்டு, सार - गुरुभिः - (தன் சரீர) பலத்தி

ணுல் அழுத்தமான, पाद - न्यासैः - காலடி வைப்புக்களால், वसुन्धराम् - பூமியை, नमयन् - அழுத்துகின்றவனுக, अर्घ्यान् - பூஜிக்கத்தக்க, तान् - அம்மஹரிஷிகளை நோக்கி, दूरात् - வெகு தொலைவிலிருந்தே, प्रत्युद्ययौ - எதிர்கொண்டு சென்ருன்.

(க-து) ஹிமவான், மஹர்ஷிகளைத் தொலைவில் கண்ட வுடனேயே அர்க்கியத்தை எடுத்துக்கொண்டு நடந்து சென்ருன். அவன் சென்ற பொழுது, கம்பீரமான அவனது சரீரகனத்திஞல் ஒவ்வொரு அடிவைப்பிலும் பூமி அழுந்தியது போல் காணப்பட்டது.

'नमयन्' இங்கு इव என்பதனைச் சேர்த்து "பூமியை அழுத்துபவன் போல்" என உத்ப்ரேக்ஷையாகக் கொள்ள வேண்டும். இது அவன் மிகப்பெரிய உருவம் உடையவன் என்பதனையும், கம்பீரமாக நடப்பவன் என்பதனையும் காட்ட வந்தது. உண்மையில் பூமி அழுந்தியது, வளைந்தது எனக் கூற வந்ததன்று.

धातुताम्राधरः प्रांशुर्देवदारुबृहद्भुजः ।
प्रकृत्यैव शिलोरस्कः सुव्यक्तो हिमवानिति ॥ ५१ ॥

धातु - ताम्र - अधरः - தாதுப் பொடிபோல் சிவந்த உதடு உடையவனும், प्रांशुः - உயரமானவனும், देवदारु - बृहत् - भुजः - தேவதாரு மரம் போல் பெரிய கைகளையுடையவனும், प्रकृत्या - एव - இயற்கையிலேயே, शिला - उरस्कः - கற்பாறை போல் (விசாலமான) மார்பையுடையவனுமான அவன், हिमवान्-इति- ஹிமவான் என, सुव्यक्तः - (யாரும் கூருமலே ஸப்தர்ஷிகளால்) அறியப்பட்டவனுக, अभूत् - இருந்தான்.

(க-து) அர்க்கியத்தை எடுத்து வருபவன், ஹிமவானே என, ஸப்தர்ஷிகள் அவனுடைய சரீர அமைப்பைக் கொண்டு யாரும் கூருமலே அறிந்தனர்.

தேவசரீரம், மலைவடிவம் போன்றே இருந்ததால் மஹர்ஷிகள், யாரும் கூறுமலேயே ஹிமவானை அறிந்தனர்.

(1) மலைவடிவில் செந்நிற தாதுப்பொடிகள் உண்டு. தேவவடிவில் தாதுபோன்ற சிவந்த உதடு அவனுக்கு இருந்தது.

(2) மலைபோல் தேவவடிவமும் உயரமாக இருந்தது.

(3) மலையிலுள்ள தேவதாரு மரங்கள் போல் நீண்ட பருத்த புஜங்கள் தேவவடிவில் காணப்பட்டன.

(4) மலைவடிவிலிருந்த பெரும்பாறைபோல் அழுத்த மான, விசாலமான மார்பு, இயற்கையாக அவனுக்கு அமைந்திருந்தது.

**विधिप्रयुक्तसत्कारैः स्वयं मार्गस्य दर्शकः ।**
**स तैराक्रमयामास शुद्धान्तं शुद्धकर्मभिः ॥ ५२ ॥**

सः - ஹிமவான், विधि - प्रयुक्त - सत्कारैः - சாஸ்திரப்படி மரியாதை செய்யப்பட்டவர்களும், शुद्ध - कर्मभिः - தூய செய லுடையவர்களுமான, तैः - அவர்களை, स्वयम् - தானே (அவர் களுக்கு), मार्गस्य - வழியை, दर्शकः (सन्) - காட்டும் பணியாள ஞக இருந்துகொண்டு, शुद्धान्तम् - அந்தப்புரத்தில், आक्रमयामास - புகச் செய்தான்.

(க-து) ஹிமவான், எதிர்கொண்டு சென்று அர்க்கியம் முதலிய வற்றை அளித்து மரியாதை செய்தபின், தானே வழிகாண்பிப்ப வஞக முன் சென்று, ஸப்தர்ஷிகளை அந்தப்புரம் அழைத்துச் சென்ருன்.

स्वयं मार्गस्य दर्शकः - வழிகாட்ட வேறு பணியாளனை வைக்காமல் தானே முன்சென்று வழிகாட்டி அழைத்து வந்தான். மஹர்ஷிகளிடம் அவன் கொண்ட மரியாதையை இதனால் அறியலாம். शुद्धान्तः - நன்னடத்தையுள்ள வேலைக்காரர்களையுடையது என்பது பதப்பொருள். அரசனது மனைவியர் வசிக்கும் அந்தப்புரம்.

तत्र वेत्रासनासीनान्कृतासनपरिग्रहः ।
इत्युवाचेश्वरान् वाचं प्राञ्जलिर्भूधरेश्वरः ॥ ५३ ॥

तत्र - அங்கே, वेत्र - आसन - आसीनान् - பிரம்பு ஆஸனத்தில் அமர்ந்த, ईश्वरान् - யோகஸித்திகளைப் பெற்றுள்ள அம்மகரிஷிகளை நோக்கி, भू - धर - ईश्वरः - மலைகளின் அரசன் ஹிமவான், कृत - आसन - परिग्रहः - ஆஸனத்தில் அமர்ந்தவனாக, प्राञ्जलिः - கைகூப்பிக்கொண்டு, इति वाचम् - இவ்வாறு வார்த்தையை, उवाच - சொன்னான்.

(க-து) அந்தப்புரத்துள் அழைத்துச் சென்றபின், முனிவர்கள் அமரத்தகுந்த பிரம்பினாலான ஆஸனங்களிலே அமரச் செய்தபின், ஹிமவான், தானும் ஓர் ஆஸனத்தில் உட்கார்ந்து கைகூப்பியவனாக முனிவர்களை நோக்கிக் கூறத்தொடங்கினான்.

वेत्रासन - முனிவர்கள் அமரத்தகுந்த ஆஸனத்தைக் கவி கூறினார். ईश्वराः - எட்டுவகையான யோகஸித்தியைப் பெற்றவர்கள். அந்த ஸித்தியினால்தான் அவர்கள் மனோவேகமாக ஆகாயத்தில் ஸஞ்சரிக்க முடிந்தது. कृतासन - परिग्रहः - இதற்குப் பதிலாக இரண்டு பாடங்கள் இருக்கின்றன;

(1) नीचासन - परिग्रहः - முனிவர்களின் ஆஸனத்திற்குத் தாழ்வான ஆஸனத்தில் அமர்ந்தவனாக என்பது பொருள்.

(2) अनासन - परिग्रहः - என்பது அருணகிரி பாடம். ஆஸனம் ஏற்காதவனுக என்பது பதவுரை. தரையிலே உட்கார்ந்து கொண்டோ அல்லது நின்று கொண்டோ ஹிமவான் பேசினுன் எனக்கருத்துரைப்பர் அவர். இனிவரும் பத்து சுலோகங்கள் ஹிமாவனுடைய பேச்சாக அமைந்தவை.

अपमेघोदयं वर्षमदृष्टकुसुमं फलम् ।
अतर्कितोपपन्नं वो दर्शनं प्रतिभाति मे ॥ ५४ ॥

अतर्कित - उपपन्नम् - நினைக்கப்படாமலே கிடைத்துள்ள, वः दर्शनम् - தங்களுடைய தரிசனமானது, अप - मेघ - उदयम् - மேகத்தோற்றமின்றி வந்த, वर्षम् - மழையாகவும், अदृष्ट - कुसुमम् - புஷ்பம் தென்படாமலே வந்த, फलम् - பழமாகவும், मे - எனக்கு, प्रतिभाति - தோன்றுகிறது.

(க-து) மஹர்ஷிகளே, தாங்கள் இங்கு விஜயம் செய்வீர்கள் என்பதை நான் நினைக்கவும் இல்லை. எதிர்பாராத வகையில் கிடைத்த தங்களது தர்சனம், மேகம் தோன்ருமல் வரும் மழை போலும், புஷ்பமின்றி வரும் பழம் போன்றும் உள்ளது.

ஆகாயத்தில் மேகம் தோன்றுவது மழையின் வரவை காட்டும். புஷ்பத்தின் தோற்றம் காயும், பழமும் வரப்போவதைக் காட்டும். மேகமற்ற மழையும், பூவற்ற பழமும் எவ்வளவு ஆச்சரியத்தை உண்டு பண்ணுமோ அத்தகைய வியப்பை உண்டாக்கியது மஹர்ஷிகளின் எதிர்பாராத வருகை ஹிமவானுக்கு. இவ்வார்த்தையினின்றும் ஹிமவானுடைய மகிழ்ச்சியும் வியப்பும் புலனுகும்-

मूढं बुद्धमिवात्मानं हैमीभूतमिवायसम् ।
भूमेर्दिवमिवारूढं मन्ये भवदनुग्रहात् ॥ ५५ ॥

भवत् - अनुग्रहात् - தங்களது அனுக்ரஹத்தால், मूढम् - (முன்க்ஷணம்வரை) அறிவற்றவனுகிய, आत्मानम् - என்னே, बुद्धम् - इव - அறிவு பெற்றவன் போலும், आयसम् - இரும்பாகக் கிடந்த, आत्मानम् - என்னே, हैमीभूतम् - इव - தங்கமாக மாற்றப் பட்டவன் போலும், आत्मानम् - (தரையில் கிடந்த) என்னே, भूमेः - பூமியினின்றும், दिवम् - ஸ்வர்க்கத்தை, आरूढम् - इव - (ஏறியவன்) அடைந்தவன் போலும், मन्ये - எண்ணுகின் றேன்.

(க-து) மஹர்ஷிகளே, இதுவரை அறிவற்றுக்கிடந்த நான் தங்கள் வரவால் திடீரென இப்பொழுது அறிவு பெற்றவனுக நினேக் கின்றேன். இரும்பு போல் கிடந்த என்னே, எல்லோரும் போற்றும் தங்கமாக மாறியவன் போலக் கருதுகின்றேன். தரையில் கிடந்த என்னே, ஸ்வர்க்கத்தை அடைந்தவன்போல் எண்ணுகின்றேன்.

இந்த சுலோகத்திலுள்ள इव - என்ற சொல் உத்ப்ரேக்ஷை யைக் குறிக்க வந்தது. உபமானத்தைக் குறிப்பதல்ல என்பர் உரைகாரர். உவமையாகக் கொள்வதிலும் பிழை ஒன்றும் இல்லே.

முதல் உபமானம் மஹர்ஷிகளின் அருளால் ஹிமவான் அறிவு பெற்றதையும், இரண்டாவது உபமானம் அவனது தன்மையில் ஏற்பட்ட உயர்வையும், மூன்ருவது, அவனது அதிகாரத்தில் ஏற்பட்ட பெருமையையும் காட்டும் என்பர்.

अद्य प्रभृति भूतानामधिगम्योऽस्मि शुद्धये ।
यदध्यासितमर्हद्भिस्तद्धि तीर्थं प्रचक्षते ॥ ५६ ॥

अद्य प्रभृति - இன்று முதல், भूतानाम् - ஸகல பிராணிகளா லும், शुद्धये-தூய்மை பெறுவதற்காக, अधिगम्यः - அடையத்தக்க வனுக, अस्मि - ஆகி இருக்கின்றேன். हि - ஏனெனில், यत् - எந்த இடமானது, अर्हद्भिः - பூஜைக்குரிய பெரியோர்களால், अध्यासितम् - அமரப்பட்டதோ, तत्हि - அந்த இடத்தையே, तीर्थम् - புண்ய ஸ்தானமாக, प्रचक्षते - (பெரியோர்) கூறுகின்றனர்.

(க-து) எனது ஸ்தாவர சரீரமான மலையில் தாங்கள் அடி வைத்து அமர்ந்ததால், இன்று முதல் நான் புண்யம் தரும் ஸ்தான மாக-க்ஷேத்ரமாக-ஆகிவிட்டேன். இனி, எல்லோரும் பாவத்தைப் போக்கித் தூய்மை பெற என்னிடம் வருவர். ஏனெனில் பெரி யோர்கள் இருந்த இடமே தீர்த்தமாகும்.

'भूतानाम्' - मर्त्यानाम् - என்பது அருணகிரி பாடம்.

**अवैमि पूतमात्मानं द्वयेनैव द्विजोत्तमाः ।**
**मूर्ध्नि गङ्गाप्रपातेन धौतपादाम्भसा च वः ॥ ५७ ॥**

द्विज - उत्तमाः - சிறந்த பிராம்மணர்களே, मूर्ध्नि - (எனது) சிரஸில் (சிகரத்தில்), गङ्गा - प्रपातेन - கங்கை விழுவது, वः - தங்களுடைய, धौत - पाद् - अम्भसा - च - பாதம் அலம்பிய நீர், द्वयेन - एव (என்ற) இவ்விரண்டினுல் மாத்திரமே, आत्मानम् - என்னை, पूतम् - தூய்மை பெற்றவனுக, अवैमि - கருதுகின்றேன்.

(க-து) சிவபிரானது முடியினின்று எனது சிகரத்தில் விழும் கங்கையினுலும் தங்களுடைய பாதம் அலம்பிய ஜலத்தின் ஸ்பர்சத் தினுலும் எனது இரண்டு வடிவங்களையும் தூய்மை பெற்றனவாகக் கருதுகின்றேன்.

பகீரதன் கங்கையைத் தேவர் உலகினின்றும் கொண்டு வந்தபொழுது, சிவபிரான் அதனைத் தம் தலையில் ஏற்று, பிறகு ஹிமாலயத்தின் சிகரத்தில் விழும்படி செய்தார்.

கங்கை ஜலத்துடன் ஸப்தர்ஷிகளின் பாதம் அலம்பிய ஜலத்தைச் சேர்த்துக் கூறியதால் ஹிமவான் பாத ஜலத்தை - ஶ்ரீ பாத தீர்த்தத்தை - கங்கையின் நீருக்கு ஒப்பாகக் கருதினுன் என்பது கிடைக்கின்றது.

धौत - पादाम्भसा - ' அலம்பப்பட்ட பாதத்தையுடைய ஜலத்திஞல் ' என்பது பதப்பொருள். " धौतः पादः, येन तादृशेन अंभसा " அருணகிரி.

**जङ्गमं प्रैष्यभावे वः स्थावरं चरणाङ्कितम् ।**
**विभक्तानुग्रहं मन्ये द्विरूपमपि मे वपुः ॥ ५८ ॥**

मे - எனது, द्वि - रूपं - இரண்டு (வகையான) வடிவமுடைய, वपुः - சரீரங்களும், (भवद्भिः) - தங்களாலே, विभक्त - अनुग्रहम् इव - தனித்தனியே பகுத்துச் செய்யப் பட்ட அருளுடையனவாக, मन्ये - எண்ணுகிறேன். (எவ்வாறெனில்), जङ्गमम् - (எனது) இத்தேவவடிவம், वः உங்களுக்கு, प्रैष्यभावे - பணியாளஞக இருக்கும் தன்மையில், अस्ति - இருக்கின்றது. स्थावरम् - (இடம் விட்டுப் பெயராத) மலைவடிவம், चरण - अङ्कितम् - (தங்களது) திருவடிகளாலே அடையாளம் செய்யப்பட்டதாக, (अस्ति) - இருக்கின்றது.

(க-து) எனது மலைவடிவத்திற்குத் தங்களுடைய பாத ஸ்பர்சமாகிய அருளைச் செய்தீர்கள். எனது இவ்வடிவிற்கு, என்னைத் தங்களுடைய பணியாளஞகச் செய்து அருள் செய்கின்றீர்கள். ஆகையினுல் எனது இருவகைச் சரீரங்களும் அதனதனக்கு ஏற்றவாறு அருள் பெற்றுள்ளன.

स्थावरम् - அசையாதது, மலைவடிவம். जङ्गमम् - இடம் விட்டுச் செல்வது என்பது பதப்பொருள். இங்கு ஹிமவானது தேவசரீரத்தைக் குறித்தது. प्रैष्यभावः - பணி,

அல்லது பணியாளனது தன்மை. अस्ति, भवद्भिः - என்ற சொற்களைச் சேர்த்துப் பொருள் கூறப்பட்டது.

द्वैरूप्यं तेन मे कृतम् - என்பது அருணகிரி பாடம்.

भवत्संभावनोत्थाय परितोषाय मूर्च्छते ।
अपि व्याप्तदिगन्तानि नाङ्गानि प्रभवन्ति मे ॥ ५९ ॥

मे - எனது, अङ्गानि - அவயங்கள், व्याप्त - दिग् - अन्तानि - अपि - திசைகளின் கோடிவரை வியாபித்திருப்பனவாயினும், भवत् - संभावना - उत्थाय - தங்களுடைய அனுக்ரஹத்தினுல் உண்டான, मूर्च्छते - மேன்மேலும் விருத்தியடைகின்ற, परितोषाय - ஸந்தோஷத்தை (தம்முன் தாங்க), न प्रभवन्ति - சக்தியுடையன வாக இல்லை.

(க-து) தாங்கள் செய்த அருளினுல் உண்டான, க்ஷணம் தோறும் வளர்கின்ற-ஸந்தோஷம், திசையின் கடைசிவரை வியாபித்திருக்கும் எனது சரீரத்தில் அடங்கவில்லை.

व्याप्तदिगन्तानि - 'வியாபிக்கப்பட்ட திசைகளின் கோடிகளையுடைய' - என்பது பதப்பொருள். இந்த விசேஷணம் மலைவடிவத்திற்கே சேருமாயினும், பின் கூறப்படும் கருத்தை ஒட்டி, தேவசரீரத்தின் விசேஷணமாகவும் கொள்ளவேண்டும். தனது பெரிய சரீரத்தை, அதிசயோக்தியால் திசைகளில் வியாபித்ததாகக் கூறினுன். அல்லது இரண்டு வடிவத்தையும் ஒன்ருகக் கருதிக் கூறினுன் என்றும் கொள்ளலாம்.

न केवलं दरीसंस्थं भास्वतां दर्शनेन वः ।
अन्तर्गतमपास्तं मे रजसोऽपि परं तमः ॥ ६० ॥

भास्वताम् - ஒளிபொருந்திய, वः - தங்களுடைய, दर्शनेन - தர்சனத்தினுல், दरी - संस्थम् - (எனது) குஹையிலுள்ள, तमः केवलम् - இருள் மாத்திரமே, अपास्तम् न - போக்கப்பட்டதென்பதில்லை; मे - எனது, अन्तः - गतम् - மனத்திலுள்ளதும், रजसः - ரஜோகுணத்திற்கு, परम् - அடுத்திருப்பதுமான, तमः अपि - தமோகுணமும் (அஜ்ஞானமும்), अपास्तम् - போக்கப்பட்டது.

(க-து) சூரியன் போல் ஒளிபொருந்திய தாங்கள் ஹிமாலயத்தில் இறங்கி நிற்பதால் தங்களது காந்தி நான்கு திசைகளிலும் பரவி குஹைகளில் இருட்டைப் போக்கிவிட்டது. அதுமாத்திரமல்ல; தங்களைக் கண்டதால் என் மன இருளுமகன்றது.

மேலே உள்ள சூரியனது ஒளி பெரும்பாலும் கீழ் நோக்கி வருவதால், குஹைகளின் உட்புறத்தில் பிரவேசிக்க முடியாது. அதனுல் குஹைகளின் இருள் இதுவரை நீக்கப் படாமலே இருந்தது. இப்பொழுது மஹர்ஷிகள் ஹிமாலயத்தில் தரையில் வந்து நிற்கின்றனர். இவர்களது ஒளி விளக்கின் ஒளிபோல் நாற்புறமும் செல்வது. எனவே அண்மையிலுள்ள குஹைகளின் உட்புறத்தில் சென்று அவற்றின் இருளை அகற்றியது. "भवतां दर्शनेन दरीसंस्थं - तमः . . ." இந்த வாக்கியத்தில் भवतां दर्शनेन என்பதற்கு 'தாங்கள் ஸமீபத்தில் இருந்ததால்' என்று பொருள் கொள்ளவேண்டும். दर्शनम् - அண்மையில் இருத்தல். ஏனெனில் ஹிமவான் மஹரிஷிகளைப் பார்ப்பதால் மாத்திரம் குஹையின் இருள் நீங்காது.

कर्तव्यं वो न पश्यामि स्याच्चेत्किं नोपपद्यते ।
मन्ये मत्पावनायैव प्रस्थानं भवतामिह ॥ ६१ ॥

वः - உங்களால், कर्तव्यम् - செய்யப்படவேண்டிய காரியம் எதையும், न - पश्यामि- நான் காணவில்லை; स्यात् - चेत् - அப்படி ஒன்று இருக்குமாயின், किं न - उपपद्यते - அது நிறைவேருமல் இருக்குமா? इह - இவ்விடத்தில், भवताम् - தங்களுடைய, प्रस्थानम् - வருகையானது, मत् - पावनाय - एव - எனது தூய்மைக் காகவே, (अस्ति) - இருக்கிறது, (इति) - என்று, मन्ये - எண்ணு கின்றேன்.

(க-து) எல்லா நிறைவும் பெற்றுள்ள தங்களுக்கு ஆகவேண்டிய காரியம் எதுவும் இருக்காது. அப்படி ஒன்று இருக்குமாயின், அது நிறைவேருது இருக்குமா? தங்களது தபஸின் சக்தியினுல் எதுவும் நிறைவேறக் கூடியதே. ஆயினும் தாங்கள் இவ்விடம் வந்தது என் மன இருளை அகற்றி என்னைத் தூயவனுகச் செய்வதற்கே எனக் கருதுகின்றேன்.

प्रस्थानम् - புறப்பாடு அல்லது ப்ரயாணம் என்பது பதப்பொருள். இடப் பொருத்தம் கருதி வருகை என்று பொருள் கூறப்பட்டது. 'भवताम् इह' - भवतां इदम् என்பது அருணகிரி பாடம். अस्ति - इति என்ற சொற்கள் मन्ये என் பதன் முன் தொக்கி நிற்கின்றன.

तथापि तावत्कस्मिंश्चिदाज्ञां मे दातुमर्हथ ।
विनियोगप्रसादा हि किंकराः प्रभविष्णुषु ॥ ६२ ॥

तथा - अपि - அவ்வாறிருப்பினும், कस्मिंश्चित् - ஏதாவதொரு காரியத்தில், आज्ञाम् - கட்டளையை, तावत् - இப்பொழுது, मे - எனக்கு, दातुम् - கொடுக்க, अर्हथ - தகுந்தவர்களா கின்றீர்கள். हि - ஏனெனில், किङ्कराः - (நல்ல) வேலைக் காரர்கள், प्रभविष्णुषु - எஜமானர்கள் விஷயத்தில், वि - नियोग - प्रसादाः - கட்டளையையே அருளாகக் கருதுவார்கள்.

(க-து) "தங்களுக்கு ஆகவேண்டிய காரியம் ஒன்றும் இல்லை. ஆயினும் தாங்கள் ஏதாவதொரு காரியத்தைச் செய்யும்படி எனக்கு உத்தரவு தரவேண்டும். நல்ல வேலைக்காரர்கள், எஜமானரது கட்டளையைத்தான், அவர் தமக்குச் செய்யும் அருளாகக் கருதுவர். மற்றவைகளை அல்ல. எனக்கும் அத்தகைய அருளையே தாங்கள் செய்யவேண்டும்."

திறமையுள்ள வேலைக்காரர்களைத்தான் எஜமானர் அடிக்கடி கட்டளையிடுவர். எஜமானர் அவர்களிடம் வைத்த நம்பிக்கைக்கும் அன்பிற்கும் அவ்வாறு கட்டளை இடுவது அடையாளமாகையால் வேலைக்காரர்களும் அதனை ஒரு அருளாகக் கருதி மகிழ்வர். இதனையே "किंकराः विनियोग-प्रसादाः" என்றது.

एते वयममी दाराः कन्येयं कुलजीवितम् ।
ब्रूत येनात्र वः कार्यमनास्था बाह्यवस्तुषु ॥ ६३ ॥

एते - தங்கள் முன் நிற்கின்ற, वयम् - நான், अमी दाराः - என் மனைவி, कुल - जीवितम् - என் வம்சத்திற்கு உயிரான, इयम् - कन्या - இந்த பெண் (என்ற), अत्र - எங்கள் மூவரில், येन - எவராலே, वः - உங்களுக்கு, कार्यम् - ஆக வேண்டிய காரியம் உளதோ, (तम् जनम्) - அவரைப் பற்றி, ब्रूत - குறிப்பிடுங்கள். बाह्य - वस्तुषु - (எங்களைத் தவிர்த்த) பிற பொருள்களிலே, अनास्था - (எனக்குக்) கருத்தில்லை.

(க-து) "இதோ தங்கள் எதிரில் நான் இருக்கின்றேன். அவள் என் மனைவி; இவள் என் குலத்தின் உயிரான மகள்; எங்கள் மூவரிலே யாரால் என்ன காரியம் ஆகவேண்டுமோ அதனைக் கூறுங்கள். நாங்கள் அதனைச் செய்ய ஸித்தமாக இருக்கிறோம். பொன், ரத்னம் முதலிய பிற பொருள்களை என் மனம் பெரிதாகக் கருதவில்லை."

वयम् - அரசனுக்கையால் ஹிமவான் தன்னைப் பன்மையில் குறிப்பிட்டான்.

इत्यूचिवांस्तमेवार्थं गुहामुखविसर्पिणा ।
द्विरिव प्रतिशब्देन व्याजहार हिमालयः ॥ ६४ ॥

इति - இவ்வாறு, - ऊचिवान् - கூறிய, हिम - आलयः - ஹிமவான், गुहा - मुख - विसर्पिणा - குகையின் வாயினின்றும் வருகின்ற, प्रतिशब्देन - எதிரொலியினால், तम् - एव - அதே, अर्थम् - கருத்தை, द्विः - இரண்டு முறை, व्याजहार इव - கூறியவன் போல் காணப்பட்டான்.

(க-து) ஹிமவானுடைய பேச்சு குகைகளின் வாயில்களில் எதிரொலி செய்தது. இவ்வெதிரொலியினாலே, ஹிமவான், தான் கூறியதை வலியுறுத்துவதற்காக, இரு முறை கூறுபவன் போல் காணப்பட்டான்.

எதிரொலியைக் கவி, மறுமுறை கூறுவதாக உத்ப்ரேக்ஷித்தார். दरीमुखविसर्पिणा - குகையின் வாயிலில் பரவுகின்ற என்பர் உரைகாரர்கள்.

अथाङ्गिरसमग्रण्यमुदाहरणवस्तुषु ।
ऋषयो नोदयामासुः प्रत्युवाच स भूधरम् ॥ ६५ ॥

अथ - பிறகு, ऋषयः - மஹரிஷிகள், उदाहरण - वस्तुषु - கூறப்பட வேண்டிய விஷயங்களிலே, अग्रण्यम् - சிறந்தவரான, अङ्गिरसम् - அங்கிரஸை, नोदयामासुः - (பேசும்படி) தூண்டினர்; सः - அவர், भू - धरम् - ஹிமவானுக்கு, प्रत्युवाच - பதில் கூறினார்.

(க-து) விஷயங்களை எடுத்துக் கூறுவதிலே திறமை வாய்ந்த அங்கிரஸைப் பேசும்படி மஹரிஷிகள் பணித்தனர். அவர் பதில் கூறினார்.

उदाहरण वस्तुषु अग्रण्यम् - விஷயங்களைக் கூறுவதிலே சிறந்தவரான என்பது கருத்து.

இனிவரும் பதினெட்டு சுலோகங்கள் அங்கிரஸின் பேச்சாக இருப்பது. முதல் எட்டு சுலோகங்களிலே ஹிமவானது பெருமையைக் கூறுகின்றார்.

उपपन्नमिदं सर्वमतः परमपि त्वयि ।
मनसः शिखराणां च सदृशी ते समुन्नतिः ॥ ६६ ॥

इदम् सर्वम् - (நீ கூறிய) இது முற்றிலும், (ஏன்), अतः - परम् - अपि - இதற்கு மேலும் கூட, त्वयि उपपन्नम् - உன்னிடம் பொருந்தியிருப்பதே; ते - உனது, मनसः - மனத்திற்கும், शिखराणाम् च - சிகரங்களுக்கும், समुन्नतिः - உயர்வு, सदृशी - ஸமமானதே.

(க-து) அபமேகோதயம் என்று தொடங்கி, மனைவி, மகள், செல்வம் முதலியயாவற்றையும் அர்ப்பணம் செய்வதாக நீ கூறியது முற்றிலும் நற்குடியில் பிறந்து தூய மனம் பெற்றுள்ள உனக்குப் பொருத்தமானதே. இதில் சிறிதும் அதிசயோக்தி இல்லை. இதை விட அதிகமாகக் கூறி இருப்பினும் அதுவும் உன் விஷயத்தில் உண்மை கூறியதாகுமேயன்றி உயர்வு நவிற்சியாகாது. உன் சிகரம் போல் உன் மனமும் உயர்ந்தது பெருந்தன்மை வாய்ந்தது. இத்தகைய பெருந்தன்மை வாய்ந்த உன் மனம் எதைத் தான் கொடுக்க முற்படாது?

स्थाने त्वां स्थावरात्मानं विष्णुमाहुस्तथा हि ते ।
चराचराणां भूतानां कुक्षिराधारतां गतः ॥ ६७ ॥

स्थावर - आत्मानम् - மலைவடிவினனாகிய, त्वाम् - உன்னை, विष्णुम्-விஷ்ணுவாக, आहुः-(பெரியோர்) கூறுகின்றனர். स्थाने- இது பொருத்தமானதே. तथाहि - (எவ்வாறெனில்), ते - உனது, कुक्षिः - நடுப்பகுதியானது, चर - अचराणाम् - அசைவன

வும், அசையாதனவையுமான, भूतानाम् - ஸகல ஜீவன் களுக்கும், आधारताम् - இடமான தன்மையை, गतः - அடைந் துள்ளது.

(க-து) "ஹிமவானே, உனது மலைவடிவத்தை விஷ்ணுவாகக் கூறுகின்றனர். இது பொருத்தமானதே; ஏனெனில் விஷ்ணுவின் வயிற்றில் பிரபஞ்சம் முற்றிலும் இருப்பதாகக் கூறுவர். அது போல் உன்னுடைய பிரதேசத்திலும், எல்லாவகையான ஜீவராசிகளும் பிறவும் இருக்கின்றன."

ஹிமவானது அடிப்பகுதி பூமிக்குக் கீழும் சிகரம் ஆகாயத்திலும் இருப்பதால் நடுப்பகுதியே எல்லாப் பொருள்களுக்கும் ஸ்தானமாக இருப்பது.

कुक्षिः - இச்சொல் விஷ்ணு விஷயத்தில் வயிறு என்றும் ஹிமவான் விஷயத்தில் மத்ய பாகம் என்றும் பொருள் படும்.

स्थावराणां हिमालयः - *(10.25)* ஸ்ரீ க்ருஷ்ணன் கீதையில் 'அசையாத பொருள்களான மலைகளிலே நான் ஹிமாலயம்' என்று கூறியுள்ளதைக் கவனிக்க. त्वां स्थावरात्मानं विष्णुम् आहुः என்று அன்வயம் கொண்டு "உன்னை ஸ்தாவரவடிவி லுள்ள விஷ்ணுவாகக் கூறுவர்" என்றும் உரைப்பர் சிலர்.

**गामधास्यत्कथं नागो मृणालमृदुभिः फणैः ।**
**आ रसातलमूलात्त्वमवालम्बिष्यथा न चेत् ॥ ६८ ॥**

त्वम् - நீ, आ - रसातल - मूलात् - பாதாள லோகம் என்ற அடியிலிருந்து, न- अवालम्बिष्यथाः - चेत् - இப்பூமியைத் தாங்கி இராவிடில், नागः - ஆதிசேஷன், मृणाल - मृदुभिः - தாமரைக் குருத்துபோல் மெதுவான, फणैः - படங்களால், गाम् - பூமியை, कथम् - எவ்வாறு, अधास्यत् - தாங்கி இருப்பான்?

(க-து) ''பாதாளம் தொடங்கி நீ இந்தப் பூமியைத் தாங்கி இராவிடில் ஆதிசேஷன் பலமற்ற, தாமரைக் குருத்துபோல் மிருது வான தன் படங்களால் எவ்வாறு இதனைத் தாங்கி இருப்பான்?''

பூமியை ஆதிசேஷன் தன் படங்களில் தாங்குவதாகப் புராணங்கள் கூறுகின்றன. ஆதிசேஷனது படங்கள் தாம ரைக் குருத்துபோல் மெதுவானவை. பூமியின் பாரத்தைத் தாங்கும் சக்தியுடையனவல்ல. உண்மையில் ஹிமாலயம், பாதாளம் வரை வியாபித்து பூமியைத் தாங்கிக்கொண் டிருப்பதால்தான் ஆதிசேஷன் ஹிமாலயத்தின் உதவியால் சிரமமின்றி பூமியைத் தாங்குவதாகக் கூறுகிறார் அங்கிரஸ். मृणाल सदृशैः - என்றும் பாடம் உண்டு.

अच्छिन्नामलसन्तानाः समुद्रोर्म्यनिवारिताः ।
पुनन्ति लोकान् पुण्यत्वात् कीर्तयः सरितश्च ते ॥ ६९ ॥

अच्छिन्न - अमल - सन्तानाः - இடையறாத - தூய்மை வாய்ந்த தொடர்ச்சியையுடையனவும், समुद्र - ऊर्मि - अनिवारिताः - ஸமுத்ரத்தின் அலைகளால் தடுக்கப்படாதவைகளுமான, ते - உனது, कीर्तयः - புகழும், सरितः - च - நதிகளும், पुण्यत्वात् - (இயற்கையிலே) பரிசுத்தமானவையாதலால், लोकान् - உலகங்களை, पुनन्ति - தூயவை ஆக்குகின்றன.

(க-து) உன்னிடம் தோன்றிய கங்கை முதலிய நதிகளும் உனது கீர்த்தியும், இயற்கையிலேயே, பரிசுத்தமானவை. அவை இவ்வுலக மக்களை தூயவர்களாக்குகின்றன''.

ஹிமவானுடைய கீர்த்திக்கும் நதிக்கும் பொதுவாக இரண்டு விசேஷணங்கள் தரப்பட்டுள்ளன.

(1) (i) अच्छिन्न . . . सन्तानाः - ஹிமவானது கீர்த்தி, தர்மம் முதலிய காரியங்களை தொடர்ந்து செய்வதால் இடையறுது இருக்கின்றது. கெட்ட காரியம் எதையும் செய்யாததால் எப்பொழுதும் நிர்மலமாக இருக்கின்றது. கீர்த்தியின் தொடர்ச்சி தூயதாகவும் இடையறுததாகவும் இருக்கின்றது என்பது பொருள். (ii) நதிகளும் இடையறுத சுத்தமான பிரவாஹமுடையன.

(2) समु . . . वारिताः - கீர்த்தி ஸமுத்திரத்திற்கும் அப்பால், செல்வது. நதியும் ஸமுத்ர அலைகளால் தடையுருமல் ஸமுத்ரமெங்கும் வியாபிப்பது. புண்யவான்களின் பெயரைக் கேட்பதும் புண்யம் தருமாகையால், ஹிமவானது புகழ் புண்யந்தருவதாகக் கூறப்பட்டது.

यथैव श्लाघ्यते गङ्गा पादेन परमेष्ठिनः ।
प्रभवेण द्वितीयेन तथैवोच्छिरसा त्वया ॥ ७० ॥

गङ्गा - கங்கை, प्रभवेण - தனக்கு (முதற்) காரணமான, परमेष्ठिनः - மஹாவிஷ்ணுவின், पादेन - பாதத்தினுல், यथा - एव - எவ்வாறு, श्लाघ्यते - கொண்டாடப்படுகிறதோ, तथा - एव - அவ்வாறே, - द्वितीयेन-(அதனுடைய) இரண்டாவது, (प्रभवेण) - உத்பத்தி ஸ்தானமும், उत् - शिरसा - நிமிர்ந்த சிகரமுடையவனுமான , त्वया - உன்னுலும், श्लाघ्यते - கொண்டாடப்படுகிறது.

(க-து) கங்கை, மஹாவிஷ்ணுவின் பாதத்தினின்றும் முதலில் தோன்றியது. அக்காரணமாக, அது கொண்டாடப்படுகிறது. அதே போல், கங்கை பூமிக்கு வந்தபோது உன்னிடம் தோன்றியது; எனவே தோற்றத்திற்கு இரண்டாவது காரணமாக நீ இருந்தமையால் கங்கை கௌரவிக்கப்படுகிறது.

சுலோகம் 67-இல் ஹிமாலயத்தை விஷ்ணுவாகவே கூறினார். இங்கு விஷ்ணுவிற்குச் சமமாக ஹிமாலயம் கூறப்படுகின்றது.

மஹாபலியை அடக்க விரும்பி விஷ்ணு திரிவிக்ரமனாகத் தோன்றி ஓரடியால் பூமியை அளந்தபின், இரண்டாவது அடியால் ஆகாசம் முழுவதையும் அளந்தார். பகவானது பாதம் பிரம்மலோகம் வரை சென்றபொழுது பிரம்மதேவர் தமது கமண்டலுவிலிருந்த ஜலத்தினால் விஷ்ணுவினது பாதத்தை அலம்பிப் பூஜை செய்தார். அந்நீரே பிறகு கங்கையாகப் பிரவஹித்தது. இதனாலேயே கங்கைக்கு विष्णु - पादोद्भवा எனப்பெயர் கூறுவர். பகீரதன் கங்கையை ஸ்வர்க்கத்தினின்றும் பூமிக்குக் கொண்டு வந்தபொழுது சிவபிரான் தலையினால் தாங்கி, ஹிமாலயத்தின் சிகரத்தில் விழச்செய்ததால் ஹிமாலயம் கங்கைக்கு இரண்டாவது உத்பத்தி ஸ்தானமாயிற்று.

तिर्यगूर्ध्वमधस्ताच्च व्यापको महिमा हरेः ।
त्रिविक्रमोद्यतस्यासीत्स तु स्वाभाविकस्तव ॥ ७१ ॥

त्रि - विक्रम - उद्यतस्य - மூன்று அடிகளை வைக்க முயன்ற, हरेः - மஹாவிஷ்ணுவிற்கு, महिमा - பெரிய வடிவம். तिर्यक् - குறுக்கிலும் (நாற்புறத்திலும்), ऊर्ध्वम् - மேலும், अधस्तात् - च - கீழும், व्यापकः - வியாபிக்கின்றதாக, आसीत् - இருந்தது. तव तु - உனக்கோ, सः - அப்பெரிய வடிவம், स्वाभाविकः - இயற்கையாகவே உள்ளது.

(க-து) "வாமன அவதாரம் செய்து, பின் மூன்று அடிகளை வைக்க முயன்ற பொழுதுதான் விஷ்ணுவின் வடிவம் நாற்புறத்திலும் மேலும், கீழும் வியாபிக்கின்றதாக இருந்தது. வியாபித்த-விசாலமான வடிவம் அவருக்கு ஒரு சமயமே இருந்தது. உனக்கோ இயற்கையிலே பெரும் வடிவமுள்ளது. அது மேலும் கீழும் நாற்புறத்திலும் எப்பொழுதுமே வியாபித்திருப்பது. இவ்வகையில் நீ விஷ்ணுவைவிட உயர்ந்தவனாகின்றாய்."

तिर्यक् - குறுக்கே; நாற்புறமும் என்று பொருள் கொள்ள வேண்டும். महिमा - மஹத்வம் - பெரிய வடிவம்.

यज्ञभागभुजां मध्ये पदमातस्थुषा त्वया ।
उच्चैर्हिरण्मयं शृङ्गं सुमेरोर्वितथीकृतम् ॥ ७२ ॥

यज्ञ - भाग - भुजाम् - मध्ये - யாகத்தில் ஹவிர்ப்பாகத்தைப் பெறும் தேவர்களிடையில், पदम् - இடத்தை, आतस्थुषा - பெற்றுள்ள, त्वया - உன்னால், सुमेरोः - மஹாமேருவினது, उच्चैः - உயரமானதும், हिरण्मयम् - தங்கத்தினாலானதுமான, शृङ्गम् - கொடுமுடியும், वितथीकृतम्- பயனற்றதாகச் செய்யப்பட்டது.

(க-து) மஹாமேருமலை முற்றிலும் தங்கத்தினாலானது. அதன் சிகரங்களும் தங்கமே. இவ்வளவு பெருமையுடையதாயினும் யாகத்தில் அவிர்பாகம் பெறும் பெறுமை அதற்குக் கிடையாது. அது ஹிமாலயத்திற்கே உண்டு. ஹிமவானும் யாகத்தில் பாகம் பெறும் தேவர்களின் மத்தியில் இடம் பெற்றவன்.

மேருவின் தங்கச்சிகரமும் அதற்குப் பெருமை தரவில்லை. அது வெற்று ஆடம்பரமாக மாத்திரமே உள்ளது.

முன் சுலோகத்தில் விஷ்ணுவைவிட உயர்ந்தவன் ஹிமவான் என்று கூறப்பட்டது. இதில், ஹிமவான் தன் இனத்தைச் சேர்ந்த மேருவினும் உயர்ந்தவன் என்று கூறப்படுகிறது.

काठिन्यं स्थावरे काये भवता सर्वमर्पितम् ।
इदं तु ते भक्तिनम्रं सतामाराधनं वपुः ॥ ७३ ॥

काठिन्यम् - கடினத்தன்மை, सर्वम् - முழுதும், भवता - உன்ஞல், स्थावरे काये - பர்வத சரீரத்தில், अर्पितम् - வைக்கப்பட்டுள்ளது. सताम् - பெரியோர்களை, आराधनम् -- ஆராதிக்கின்ற, ते - इदं - वपुः - तु - உனது இச்சரீரமோ, भक्ति - नम्रम् - பக்தியிஞல் வணங்கி இருப்பது.

(க-து) உனது கடினத்தன்மை முழுவதும் பர்வத சரீரத்தில் (மலையாகிய உடலில்) உள்ளது. இத்தேவ சரீரமோ, கடினத்தன்மை சிறிது மின்றி பெரியோர்களைப் பூஜிப்பதாக, மிகவும் வணக்கத்துடன் இருக்கின்றது.

உலகில் மிருது சரீரிகளில் கடின மனத்தவர்கள் உண்டு. ஹிமவானுக்கு கடினத்தன்மை ஒரு சரீரத்திலும், மிருதுத்தன்மை மற்ருெரு சரீரத்திலும் உள்ளது. மலையுடல் கடினமானது. தேவசரீரம் மிருதுவானது. மிருதுவான சித்தமுடையது என்பது கருத்து. இதஞல் ஹிமவானது விநய குணம் போற்றப்பட்டது.

तदागमनकार्यं नः शृणु कार्यं तवैव तत् ।
श्रेयसामुपदेशात्तु वयमत्रांशभागिनः ॥ ७४ ॥

तत् - ஆகையால், नः - எங்களுடைய, आगमन कार्यम् - வருகையின் பயனை, शृणु - கேள்; तत् कार्यम् - அக்காரியம், तव - एव - உன்னுடையதே; वयं - तु - நாங்களோ, श्रेयसाम् - நன்மைகளை, उपदेशात् - எடுத்துக் கூறுவதால், अत्र - இதில், अंश - भागिनः - பங்கு பெறுகின்றவர்களாகின்ருேம்.

(க-து) ஆகையால் நாங்கள் இங்கு வந்ததின் காரணம் என்ன வெனக் கவனத்துடன் கேட்பாயாக. எங்கள் வருகை உன் பயனைக் கருதியதேயாம். உனக்கு நன்மையைக் கூறுகின்றோம் என்ற இது மாத்திரமே இக்காரியத்தில் எங்களது பாகம்; வேறு சுயநலம் ஏதுமில்லை.

अणिमादिगुणोपेतमस्पृष्टपुरुषान्तरम् ।
शब्दमीश्वर इत्युच्चैः सार्धचन्द्रं बिभर्ति यः ॥ ७५ ॥

यः - எவர், अणिमा - आदि - गुण - उपेतम् - அணிமா முதலான எட்டு ஸித்திகளுடன் கூடியதும், अस्पृष्ट - पुरुषान्तरम् - வேறு மனிதனைக் குறிக்காததும், उच्चैः - சிறந்ததுமான, ईश्वरः - इति - शब्दम् - ஈசுவரன் என்ற சொல்லை, सार्ध - चन्द्रम् - பிறைச் சந்திரனுடன் கூடியிருக்கும்படி, बिभर्ति - தாங்குகின்றாரோ (தமக்கே உடையவராக இருக்கின்றாரோ) - (அத்தகைய சிவபிரான் உனது மகளை மனைவியாகப் பெற விரும்புகின்றார்).

(க-து) ஈசுவரன் என்ற சொல்லுக்கு அணிமா முதலான பெருமையுடையவர் என்பது பொருள். இச்சொல் சிவபிரான் ஒருவரையே குறிப்பது. அவரது பெருமையைக் குறிக்க இதனைவிட வேறு உயர்ந்த சொல் இல்லை. இதனை அவர், பிறைச் சந்திரனைப் போல் தம்மை மாத்திரமே குறிப்பதாகக் கொண்டுள்ளார்.

இந்த சுலோகத்திலும் இதற்கு அடுத்துள்ள இரண்டு சுலோகங்களிலும் வரும் यः, येन, यं, यस्य - என்ற சொற்கள் சிவபிரானைக் குறிக்கின்றன; இவற்றோடு இணைக்க வேண்டிய सः என்ற பதம் சுலோகம் 78-இல் வருகின்றது.

ஈச்வரன் அணிமா முதலான எட்டு ஸித்திகளையுடையவர்; अणिमा - யோக சக்தியினால் மிக நுண்ணிய வடிவத்தை எடுத்துக் கொள்ளுதல்; महिमा - மிகப் பெரிய வடிவத்தை ஏற்றல்; गरिमा - தேவையானால் கனமுடையவராதல்; लघिमा -

லேசாக இருத்தல்; प्राप्तिः - நினைத்த இடத்திற்குச் செல்லல், தொலைவிலுள்ள பொருளையும் கையினால் தொடும் சக்தி; प्राकाम्यम् - நினைத்ததைப் பெறுதல், ईशित्वम् - தன் புலன்களை அடக்குதல்; वशित्वम् - வெளியிலுள்ள வஸ்துக்களை தாம் விரும்பியபடி இயக்குதல் என்பன. यस्मिन्नीश्वर इत्यनन्यविषयः शब्दो यथार्थाक्षरः என விக்ரமோர்வசீயத்திலும் கூறினார். उच्चैः - மிகச் சிறந்த; உலகம் முழுவதும் நன்கு அறிந்த என்பது பொருள்; सार्धचन्द्रम् - இங்குள்ள अर्ध என்ற சொல் பாதி என்ற பொருளில் வந்ததன்று. பிறைச்சந்திரன் என்று பொருள்.

कलितान्योन्यसामर्थ्यैः पृथिव्यादिभिरात्मभिः ।
येनेदं ध्रियते व्यक्तं धुर्यैर्यानमिवाध्वनि ॥ ७६ ॥

येन - எந்த சிவபிரானால், कलित - अन्योन्य - सामर्थ्यैः - ஸம்பாதிக்கப்பட்ட - பரஸ்பரம் இணைந்த - சக்தியையுடைய, पृथिवी - आदिभिः - பூமி முதலான, आत्मभिः - (தமது) சரீரங்களால், इदम् - இந்த, व्यक्तम् - உலகமானது (உலகத்தினர்), (अध्वनि) - வாழ்க்கை என்ற வழியில், धुर्यैः - குதிரைகளால், अध्वनि - வழியிலே, यानम् - इव - ரதம் வஹிக்கப்படுவது போல், ध्रियते - தாங்கப்படுகின்றதோ (அச்சிவபிரான் உன் மகளை மணக்க விரும்புகின்றார்).

(க-து) வழியிலே ரதத்தைக் குதிரைகள் தாங்கி இழுத்துச் செல்வதுபோல், வாழ்க்கையாகிய வழியில் உலகத்தினரைத் தாங்குவது சிவபிரானது எட்டு சரீரங்களாகிய பூமி முதலியவை. அவைகளில் ஒவ்வொன்றும் பிறவற்றின் உதவியைப் பெற்றுத் தாங்குகின்றன.

कलितान्योन्यसामर्थ्यैः தனியே ஒரு குதிரை பெரிய ரதத்தை இழுக்க முடியாத பொழுது, மற்றொரு குதிரையின் சக்தி

யைப் பெற்றுவிடின் இழுக்கத் திறனுடையதாகிறது. பஞ்ச பூதங்கள் தனித் தனியே காரியத்தைச் செய்ய முடிவதில்லே. பிறவற்றின் உதவியைப் பெற்றே செய்கின்றன. தனி மண்ணில் போட்ட விதை முளேப்பதில்லே. அதே மண் ஜலத்துடன் சேர்ந்தால் விதை முளேக்க உதவுகின்றது. விறகின் உதவியால் எரிகின்ற நெருப்பே சமையலுக்கு உதவு கின்றது. எனவே சிவபிரானது சரீரங்கள் ஒன்ருேடொன்று சேர்ந்து தமக்குள்ள சக்திகளே பரஸ்பரம் கொடுத்துக் கொண்டு உலகை வாழ்விக்கின்றன. சூரியனுல் உலகம் ஒளி பெறுகின்றது. சந்திரன் ஓஷதிகளுக்குப் பலத்தை அளிக்கின்ருன். யாகம் செய்பவரும் உலகத்தின் நலனுக்கு உதவுபவரே.

சிலர் இச்சுலோகம் பஞ்சீகரணத்தைக் குறிக்கின்ற தென்பர்.

योगिनो यं विचिन्वन्ति क्षेत्राभ्यन्तरवर्तिनम् ।
अनावृत्तिभयं यस्य पदमाहुर्मनीषिणः ॥ ७७ ॥

योगिनः - யோகிகள், क्षेत्र - अभ्यन्तर - वर्तिनम् - சரீரத்துள் இருக் கின்ற, यम् - எவரை, विचिन्वन्ति - (யோகாப்யாசத்தினுல்) தேடு கின்றனவோ, मनीषिणः - வித்வான்கள், यस्य - எவருடைய, पदम् - இடத்தை, अनावृत्ति - भयम् - திரும்பி வருதல் என்ற பய மற்றதாக, आहुः - கூறுகின்றனரோ, (அத்தகைய சிவபிரான் உன் மகளே மணக்க விரும்புகின்ருர்).

(க-து) "சிவபிரான் சரீரத்துள் ஆத்மாவிற்கும் ஆத்மாவாக இருக்கின்ருர். யோகிகள் அவரை யோக முறையினுல் காண முயல் கின்றனர். ஸ்வர்க்கம் முதலான இடங்களுக்குச் சென்றவர் புண்ணியம்

குறைந்தவுடன் திரும்பவும் இவ்வுலகிற்கு வருகின்றனர். சிவபிரானது ஸ்தானத்திற்குச் சென்றவர்கள் திரும்பவும் இவ்வுலகுக்கு வந்துவிடுவோமோ என்று அஞ்ச வேண்டியதில்லை.

पदम् - என்பதற்கு சிவபிரானது வடிவம் எனக்கொண்டு அதில் இரண்டறக் கலந்தவர்களுக்குத் திரும்பவும் இவ்வுலகிக்குத் திரும்புவோம் என்ற அச்சமில்லை என்று உரை கூறுவர் அருணகிரிநாதர்.

**स ते दुहितरं साक्षात्साक्षी विश्वस्य कर्मणाम् ।**
**वृणुते वरदः शम्भुरस्मत्संक्रामितैः पदैः ॥ ७८ ॥**

विश्वस्य - உலகத்தினரின், कर्मणाम् - செயல்களை, साक्षी - காண்பவரும், वरदः - விரும்பிய பயனை அளிப்பவரும், सः - பெருமை வாய்ந்தவருமான, शंभुः - साक्षात् - சிவபிரான் தாமே, अस्मत् - संक्रामितैः - எங்களிடம் தரப்பட்ட, पदैः - சொற்களின் மூலம், ते - உனது, दुहितरम् - மகளை, वृणुते - மனைவியாக வரிக்கின்கின்றார் (வேண்டுகின்றார்).

(க-து) "உலகத்தினரின் செயல்களை நேரிலே காண்பவர். அவ்வவற்றிற்கான சுபாசுப பலன்களைத் தருபவர். வேண்டிய பயனை அளிக்கவல்லவர். வேதங்களிலே கூறப்பட்ட பெருமை வாய்ந்தவர். உன் மகளைத் தமக்கு மனைவியாகத் தரவேண்டுமென சிவபிரான் தாமே நேரில் வேண்டுகின்றார். நாங்கள் உன்னிடம் கூறிய சொற்கள் அவர் எங்களிடம் கூறிய வார்த்தைகளே."

विश्वस्य कर्मणाम् वरदः - என்ற சொற்கள் வரனான சிவபிரானது பெருமையை சுருங்கச் சொல்வன. सः - என்பது முதல் மூன்று சுலோகங்களில் கூறிய கருத்தை நினைவூட்டுவது. பிரசித்திபெற்றவர்; வேதங்களிலே, सः - என்ற இச்சொல்லாலேயே குறிக்கப்படுபவர் என்றும் பொருள். शंभुः - साक्षात् - சிவபிரானே ஹிமவானிடம் நேரில் வந்து கேட்பதாகக்

கருதவேண்டும். ஏனெனில் பேசியவர்கள் முனிவர்களே ஒழிய, சொற்கள் எல்லாம் சிவபிரானுடையதுவே. अस्मत्संक्रामितैः- எங்களிடம் தந்த (கூறிய) சொல்லை நாங்கள் உன்னிடம் கூறினோம் என்பது கருத்து. अयाचितारम् - என முதல் ஸர்க்கம் சு. 52-இல் கூறிய குறை இதிலே நீக்கப்பட்டுள்ளது. अन्नं विद्या च कन्या अयाचयिभ्यो न दीयते - உணவையும், கல்வியையும் கன்னிகையும் கேட்காதவர்களுக்குத் தருதல் கூடாது என்பது உலக வழக்கு; वृणुते - என்ற சொல், கேட்கப்படுபவரின் உயர்வைக் காட்டும். இவ்வினைக்கு யாசித்தல் என்ற பொருளும் உண்டு.

**तमर्थमिव भारत्या सुतया योक्तुमर्हसि ।**
**अशोच्या हि पितुः कन्या सद्भर्तृप्रतिपादिता ॥ ७९ ॥**

भारत्या - சொல்லுடன், अर्थम् - इव - அர்த்தத்தை இணைப்பதுபோல், सुतया - உன் மகளுடன், तम् - அச்சிவபிரானை, योक्तुम् - (விவாஹத்தினால்) சேர்க்க, अर्हसि - நீ தகுந்தவனாகின்றாய்; हि - ஏனெனில், सत्-भर्तृ प्रतिपादिता - நல்ல வரனுக்குத் தரப்பட்ட, कन्या - பெண், पितुः - தந்தையினால், अशोच्या-வருந்த வேண்டாதவளாகின்றாள்.

(க-து) "ஈசுவரன் சொல்லைப் படைத்து ஒவ்வொரு சொல்லையும் அதனதன் பொருளுடன் இணைக்கின்றான் என்பது தார்க்கிகர்களின் கருத்து. சொல் போன்ற உன் மகளைப் பொருள் போன்ற சிவபிரானுடன் நீ சேர்க்க வேண்டும். நல்லவரனுக்கு மகள் தரப்பட்டால், அம்மகளைப் பற்றிப் பிறகு தந்தை கவலையுற வேண்டியிராது". என்றார் அங்கிரஸ்.

தார்க்கிகர்களின் கொள்கையை அனுசரித்துக் கவி இங்கே பார்வதி சிவபிரான் இணைப்பைக் கூறினார். சொல்லும் பொருளும் என்றுமே இணைந்தவை என்ற கருத்தை மீமாம்ஸ

கர்கள் கூறுவர். அதனை ஒட்டிப் பார்வதியும் பரமசிவனும்என்றுமே சேர்ந்திருப்பவர்கள் என்ற கருத்தை "वागर्थाविव संपृक्तौ" என்ற ரகுவம்ச முதல் சுலோகத்தில் கூறினார். सद्भर्तृ - இங்கு भर्तृ - என்று சொன்னது நல்லவரனை; நல்லவரனே, கணவனாகப் பின் வரப்போவதால், भर्तृ - என்ற சொல்லால் குறித்தார். अशोच्या - வருந்த வேண்டாதவள். தந்தை அவளைப் பற்றி வருந்தும்படியான நிலை ஏற்படாது என்று கருத்து.

यावन्त्येतानि भूतानि स्थावराणि चराणि च ।
मातरं कल्पयन्त्वेनामीशो हि जगतः पिता ॥ ८० ॥

स्थावराणि - (இடம் விட்டு) செல்லாதனவும், चराणि - च - செல்லுபவையுமாக, यावन्ति - எவ்வளவு, भूतानि - ஜீவராசிகள் (இவ்வுலகில்) இருக்கின்றனவோ, (एतानि) அவை எல்லாம், एनाम् - இவளை, मातरम् - (தமது தாயாக), कल्पयन्तु - கருதுமாக; हि - ஏனெனில், ईशः - சிவபிரான், जगतः - இவ்வுலகின், पिता - தந்தை ஆவார்.

(க-து) உலகின் தந்தையாகிய சிவபிரானைப் பார்வதி மணந்தால், இவ்வுலகின்கண்ணுள்ள எல்லா ஜீவராசிகளும் இவளைத் தாயாகக் கருதும். அவ்வகையினை நீ செய்வாயாக.

प्रणम्य शितिकण्ठाय विबुधास्तदनन्तरम् ।
चरणौ रञ्जयन्त्वस्याश्चूडामणिमरीचिभिः ॥ ८१ ॥

विबुधाः - தேவர்கள், शिति - कण्ठाय - சிவபிரானுக்கு, प्रणम्य - வணக்கம் செய்து, तत्- अनन्तरम् - அதன்பின், अस्याः - இவளது, चरणौ - பாதங்களை, चूडामणि - मरीचिभिः - கிரீட ரத்னங்களின் காந்தியால், रञ्जयन्तु - சிவந்தனவாகச் செய்வர்.

(க-து) சிவபிரானை எப்பொழுதுமே தேவர்கள் வணங்குவார்கள். அவர் பார்வதியை மணந்தால், அத்தேவர்கள், ஈசுவரனை

வணங்கியபின் கிரீடம் தாங்கிய தமது தலைகளைப் பார்வதியின் பாதத் தருகில் வைத்து அவளையும் வணங்குவர். அதனால் அவர்களது கிரீடத்திலுள்ள ரத்னங்களின் சென்னிறம் அவளது பாதங்களில் பரவி அவற்றையும் சிவந்தனவாகச் செய்யும்.

शितिकण्ठः - கறுத்த கழுத்தை உடையவர் சிவபிரான்.

उमा वधूर्भवान्दाता याचितार इमे वयम् ।
वरः शंभुरलं ह्येष त्वत्कुलोद्भूतये विधिः ॥ ८२ ॥

उमा - பார்வதி, वधूः - மணப்பெண்; भवान् - நீ, दाता - (அவளைத்) தருபவனாகின்றாய்; इमे- இங்குள்ள, वयम् - நாங்கள், याचितारः - (உன்னை) யாசிப்பவர்கள்; शंभुः - சிவபிரான், वरः - வரன் (மணமகன்); एषः विधिः - இந்த விவாஹமானது, त्वत् - कुल उद्भूतये - உனது குலத்திற்கு நன்மைதர, अलम् - हि - திண்ணமாகத் திறனுடையது.

(க-து) ஒரு விவாஹம் சிறப்புடையதாக வேண்டுமாயின் அதில் ஸம்பந்தப்படுபவர்கள் எல்லோரும் அவரவர்களுக்கு வேண்டிய குணங்களை உடையவர்களாக இருக்க வேண்டும்; எல்லா நற்குணங் களும் வாய்ந்த பார்வதி இவ்விவாஹத்தில் மணப்பெண்; எந்த தானமும் பெருமை பெறுவது கொடுப்பவனது குண விசேஷத்தால் தான். இப்பார்வதியைத் தரும் பெருமை பெற்ற நீ ச்ரத்தை, பக்தி, விநயம் முதலிய குணங்கள் நிறைந்தவன். இவ்விவாஹத்திற்காக உன்னிடம் யாசிக்கின்றவர்கள் நாங்கள்; தன்னலமற்றவர்கள். வரன் எல்லா நன்மைகளையும் அளிக்கவல்ல சிவபிரான். இவ் விவாஹம் உனது குலத்திற்கே பெருமை தருவதாகும்.

उमा, भवान्, वयम, शम्भुः - என்ற சொற்கள் பொருள் பொதிந்தவை. மஹர்ஷிகள் அவற்றை, சில கருத்தை மனத்தில் கொண்டு உபயோகித்துள்ளனர்.

अस्तोतुः स्तूयमानस्य वन्द्यस्यानन्यवन्दिनः ।
सुतासंबन्धविधिना भव विश्वगुरोर्गुरुः ॥ ८३ ॥

सुता - संबन्ध - विधिना - இவ்விவாஹத்தைச் செய்வதன் மூலம், अस्तोतुः - பிறரை ஸ்துதிக்காதவரும், स्तूयमानस्य - (பிறரால்) துதிக்கப் படுபவரும், अनन्य - वन्दिनः - (பிறரை) வணங்காதவரும், वन्द्यस्य - பிறரால் வணங்கத் தக்கவரும், विश्व - गुरोः - உலகத்தின் தலைவருமான சிவபிரானுக்கும், गुरुः - தலைவனாக, (வணக்கத்திற்குரியவனாக), भव - நீ ஆவாயாக.

(க-து) சிவபிரானுக்கு மேற்பட்டவர் யாருமில்லாததால் அவர் யாரையும் புகழவோ, வணங்கவோ வேண்டியதில்லை. இவ்வுலகம் அவரைத் துதித்து வணங்குகின்றது இவ்விவாஹத்தைச் செய்வதன் மூலம், உலகம் வணங்கும் சிவபிரானாலும் நீ வணங்கப்பெறுவாய்.

गुरुः - பெரியவர், மரியாதைக்கு உரியவர். 'पित्रादयस्त्रयो भ्राता पितुर्मातामहस्तथा । ज्येष्ठभ्राता मातुलश्च श्वशुरो गुरवस्त्विमे' ॥ என்பது குருவாகக் கருதவேண்டியவர்களைத் தொகுத்துக் கூறுகின்றது. தந்தை, தாய், ஆசிரியர், தந்தையின் ஸஹோதரர், தாயின் தந்தை, மூத்த ஸஹோதரன், மாமன், மாமனார் ஆகிய இவர்களைக் குருவாகக் கருத வேண்டும்.

இந்த சுலோகத்துடன் அங்கிரஸின் பேச்சு முடிகின்றது.

एवंवादिनि दिवपौ पार्श्वे पितुरधोमुखी ।
लीलाकमलपत्राणि गणयामास पार्वती ॥ ८४ ॥

देव - ऋषौ - தேவர்ஷியான அங்கிரஸ், एवं - वादिनि - இவ்வாறு பேசும்பொழுது, पार्वती - பார்வதி, पितुः - தந்தையின், पार्श्वे - அருகில், अधः - मुखी - முகம் கவிழ்த்தவளாக, लीला - कमल - पत्राणि - மனமகிழ்ச்சிக்காகக் கையில் வைத்திருந்த தாமரையின் இதழ்களை, गणयामास - எண்ணினாள்.

(க-து) இவ்வாறு மஹர்ஷி பேசும்பொழுது, தந்தையின் அருகில் தலை குனிந்து நின்று கொண்டிருந்த பார்வதி தான் கையில்

பிடித்திருந்த தாமரை மலரின் இதழ்களை எண்ணிக்கொண்டிருந்தாள்.

தனது விவாஹத்தைப் பற்றிய பேச்சாக இருந்ததால், பார்வதி வெட்கமுற்றிருந்தாள். தலைகுனிந்திருத்தலும், தாமரை மலரின் இதழ்களை எண்ணுதலும் அவளது வெட்கமுற்ற நிலையைக்காட்டின. அவ்விடத்தை விட்டுச் செல்வது அதிதிகளுக்கு அவமரியாதையாகுமாதலால் அவள் அங்கேயே இருந்தாள். लीला - விளையாட்டு, மனமகிழ்ச்சி, அல்லது அழகு.

शैलः संपूर्णकामोऽपि मेनामुखमुदैक्षत ।
प्रायेण गृहिणीनेत्राः कन्यार्थेषु कुटुम्बिनः ॥ ८५ ॥

शैलः - ஹிமவான், संपूर्ण - कामः - अपि - தன் மனோரதம் ஈடேறப் பெற்றவனாயினும், मेना -मुखम् -மேனையின் முகத்தை उदैक्षत - (நிமிர்ந்து) பார்த்தான். प्रायेण - பெரும்பாலும், कुटुम्बिनः - கிருஹஸ்தர்கள், कन्या - अर्थेषु - பெண்ணிற்கான காரியங்களில், गृहिणी - नेत्राः-மனைவியையே கண்ணாகக் கொண்டுள்ளனர்.

(க-து) தன் மகளைச் சிவபிரானுக்குத் தரவேண்டுமென்பதே ஹிமவானுடைய நெடுநாளைய விருப்பாகும். மஹரிஷிகளின் வருகையால் அவ்வாசை இப்பொழுது முற்றிலும் நிறைவேறி விட்டதெனலாம். ஆயினும் மனைவியின் கருத்தை அறிய அவளது முகத்தை நோக்கினான். உலகில் கிருஹஸ்தர்கள், தமது மகளிற்குச் செய்ய வேண்டிய விவாஹம் முதலிய காரியங்களில் மனைவியின் கருத்தைக் கொண்டே நடப்பர்.

गृहिणीनेत्राः - கண்ணின்றி பொருளைக்காண முடியாதது போல் மனைவியின் கருத்தின்றி விவாஹம் முதலிய விஷயங்களை நிச்சயிப்பது எளிதல்ல. प्रायेण - பெரும்பாலும் என்று

கூறியதால், உலக முறை காட்டப்பட்டது. மனைவியின் கருத்தைக் கருதாதவர்களும் உலகில் உண்டு என்பதும் இதனுல் கிடைக்கும்.

मेने मेनापि तत्सर्वं पत्युः कार्यमभीप्सितम् ।
भवन्त्यव्यभिचारिण्यो भर्तुरिष्टे पतिव्रताः ॥ ८६ ॥

मेना - अपि - மேனையும், पत्युः - கணவனுடைய, अभीप्सितम् - விருப்பமாகிய, तत् सर्वम् कार्यं - அக்கார்யம் முழுவதையும், मेने - அங்கீகரித்தாள். पतिव्रताः - பதிவிரதைகள், भर्तुः - கணவர்களது इष्टे - விருப்பத்தில், अव्यभिचारिण्यः - மாருத கருத்துடையவர்க, ளாக, भवन्ति - இருக்கின்றனர்.

(க-து) ஹிமவானது கருத்தை முற்றிலும் மேனை அங்கீகரித் தாள். பதிவ்ரதைகள் கணவரது கருத்துக்கு மாருக நடப்பதில்லை.

இந்த சுலோகம் இருப்பதாக அருணகிரி கருதவில்லை.

इदमत्रोत्तरं न्याय्यमिति बुद्ध्या विमृश्य सः ।
आददे वचसामन्ते मङ्गलालङ्कृतां सुताम् ॥ ८७ ॥

सः - ஹிமவான், वचसाम् - (முனிவர்களது) பேச்சின், अन्ते - முடிவிலேயே, अत्र - இவ்விஷயத்தில், इदम् - இதுவே (தான் செய்யப் போவதே), न्याय्यम् - தக்க, उत्तरम् - பதிலாகும், इति - என, बुद्ध्या - தன் மனத்தால், विमृश्य-ஆலோசித்து, मङ्गल - अलङ्कृताम् - மங்களத்ரவ்யங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்த, सुताम् - மகளை, आददे - (தன் கரத்திஞல்) பற்றினன்.

(க-து) மஹரிஷிகளின் பேச்சு முடிந்த க்ஷணத்திலேயே மனைவியின் கருத்தை கண்ஞேக்கினல் அறிந்த ஹிமவான் மகளைத் தருகிறேன் என வாயால் கூறுவதைவிட செயலின் மூலம் காட்டுவதே சரியானது என எண்ணி, மங்களமான அணியுடன் இருந்த

பார்வதியை மஹரிஷிகளின் ஸமீபம் அழைத்துச் சென்று தருவதற்காக கையிஞல் பிடித்துக் கொண்டான்.

मङ्गल - अलङ्कृताम् - " அப்பொழுதே மிக அவசரத்துடன் புஷ்பம் முதலியவற்ருல் அலங்கரிக்கப்பட்ட " என்று உரை கூறுவர் அருணகிரி. " முன்பே மங்களகரமான அலங்காரத்துடன் இருந்த" என்ற கருத்தை உரைப்பர் மல்லிநாதர், विचिन्त्य - என்பது அருணகிரி பாடம்.

एहि विश्वात्मने वत्से भिक्षासि परिकल्पिता ।
अर्थिनो मुनयः प्राप्तं गृहमेधिफलं मया ॥ ८८ ॥

"वत्से - குழந்தாய், एहि - இங்கு வா; विश्व - आत्मने - சிவபிராஞுக்கு, भिक्षा - பிக்ஷையாக (தானப் பொருளாக), परिकल्पिता - असि - தீர்மானிக்கப்பட்டு இருக்கின்ருய்; अर्थिनः - (உன்னை) வேண்டுபவர்கள், मुनयः - மஹரிஷிகள்; गृहमेधि-फलम् - கிருஹஸ்தன் அடையக் கூடிய சிறந்த பயன், मया - என்ஞல், प्राप्तम् - அடையப்பட்டுவிட்டது."

(க-து) குழந்தாய், பார்வதி, இப்படி வா, உன்னைச் சிவபிராஞுக்குத் தருவதாக நிச்சயிக்கப்பட்டுள்ளது. சிவபிராஞுக்கு உன்னை கன்யாதானமாக அளிப்பதிஞல் ஒரு கிருஹஸ்தன் அடையக்கூடிய நற்பயனையும் நான் பெற்றுவிட்டேன்.

भिक्षा - பிக்ஷை. தானமாகத் தரப்படும் பொருள் எதுவும் பிக்ஷையாகக் கருதப்படலாம். ''रत्नादि स्तंवपर्यन्तं सर्वं भिक्षा तपस्विनः ॥ गृहमेधिफलम् - (கோதானம் முதலியவற்றைச் செய்வது எளிது). கிருஹஸ்தன் செய்யக்கூடிய தானங்களிலே சிறந்தது கன்யாதானம் என்பர்; सर्वेषामेव दानानां कन्यादानं विशिष्यते । மஹாபாரதம்.

நாடகங்களிலே, தனியே ஒருவரிடம் கூறுவதுபோல் ஹிமவான் இதனைப் பார்வதிக்கு மாத்திரம் கூறிஞன்

என்றும், ஸப்தர்ஷிகளின் காதில் விழும்படி இதனைக் கூற வில்லை என்றும் கொள்வதில் சிறிது பொருத்தம் உண்டு. முனிவர்கள் காதுபடச் சொன்னால், अर्थिनः मुनयः - என்பது புகழ்ச்சியாகவும், प्राप्तं गृहमेधि - फलं मया - என்பது வெற்று உபசாரமொழியாகவும் கருதப்படலாம். அடுத்த சுலோகம் இதனை வலியுறுத்தும். நாடகத்தின் இயல்பைக் கவி காவ் யத்தில் அமைத்ததும் போற்றத்தக்கதாகும்.

एतावदुक्त्वा तनयामृषीनाह महीधरः ।
इयं नमति वः सर्वांस्त्रिलोचनवधूरिति ॥ ८९ ॥

मही - धरः - ஹிமவான், तनयाम् - பெண்ணிடம், एतावत् - இதை மாத்திரமே, उक्त्वा - சொல்லிவிட்டு, ऋषीन् - மஹரிஷி களிடம், इयम् - இதோ இருக்கின்ற, त्रि - लोचन - वधूः - சிவ பிரானது மணமகள், वः सर्वान् - உங்கள் எல்லோரையும், नमति - வணங்குகின்றாள், इति - என, आह - கூறினான்.

(க-து) ஹிமவான், பெண்ணிடம் சுருக்கமாகப் பேசியபின் மஹரிஷிகளிடம், 'இதோ இருக்கின்ற சிவபிரான் மணமகள் உங்களை நமஸ்கரிக்கின்றாள்' என்று கூறினான்.

இதில் ஹிமவானது பெருந்தன்மை புலனாகின்றது. 'தருகிறேன்' என்று சொல்லாமல், பார்வதியைக் கொடுத்து விட்டதாகவே கருதும்படி. அவளைப் பார்வதி என்றோ, என் மகள் என்றோ கூறாமல் சிவபிரானின் மணமகள் என்று குறிப்பிட்டது போற்றத்தக்கது.

त्रिलोचनस्य वधूः - என இரண்டு பதங்களால் கூறாமல் त्रिलोचनवधूः - என ஸமஸ்தமான (தொகைச்) சொல்லை உபயோகித்ததும் ரஸிப்பதற்கு உரியதாகும்.

ईप्सितार्थक्रियोदारं तेऽभिनन्द्य गिरेर्वचः ।
आशीर्भिरेधयामासुः पुरःपाकाभिरम्बिकाम् ॥ ९० ॥

ते - அம்முனிவர்கள், ईप्सित - अर्थ - क्रिया - उदारम् - (தாங்கள்) விரும்பியதைச் செய்வதில் கம்பீரமான, गिरेः - ஹிமவானது, वचः - வார்த்தையை, अभिनन्द्य - கொண்டாடி, अम्बिकाम् - (ஜகன்மாதாவான) பார்வதியை, पुरः पाकाभिः - சமீபத்திலேயே பலனளிக்கக்கூடிய, आशीर्भिः ஆசீர்வாதங்களாலே, एधयामासुः - வாழ்த்தினர்.

(க-து) ஹிமவானது வார்த்தைப்படி பார்வதி வணங்கவும் ஸப்தர்ஷிகள், தாம் விரும்பியதைச் செய்வதில் பெருந்தன்மையுடன் கூடிய அவனது வார்த்தைகளைப் புகழ்ந்து, சீக்கிரமே பலனளிக்கக் கூடிய ஆசீர்வாதங்களால் ஜகன்மாதாவான பார்வதி தேவியை வாழ்த்தினர்.

अम्बिकाम् - ஹிமவான் முன் சுலோகத்தில் கூறியதை ஆமோதிப்பவர் போல் கவி, பார்வதியை வேறு சொல்லால் குறிக்காமல், 'मातरं कल्पयन्तु' என ஸப்தர்ஷிகள் கூறியதை அனுசரித்து, 'தாய்', என்றே குறிப்பது நோக்கத்தக்கது. अम्बिकाम् एधयामासुः - பார்வதியின் அத்ருஷ்டத்தை வளர்த்தனர் என உரைப்பார் அருணகிரி. "தாதுக்களுக்குப் பல பொருள் உண்டு'' என்பதற்கேற்ப, ''வாழ்த்தினார்கள்'', என்ற பொருள் உரைக்கப்பட்டது.

तां प्रणामादरस्रस्तजाम्बूनदवतंसकाम् ।
अङ्कमारोपयामास लज्जमानामरुन्धती ॥ ९१ ॥

प्रणाम - आदर - स्रस्त - जाम्बूनद - वतंसकाम् - நமஸ்காரத்தில் அதிகம் சிரத்தையினால் சிறிதே நழுவிய பொன்மயமான தலையணியையுடையவளும், लज्जमानाम् - வெட்கப்படுகிறவளு

மான, ताम् - அவளை, अरुन्धती - அருந்ததி, अङ्कम् - தன் மடியில் (தன் அருகில்), आरोपयामास - உட்காரவைத்துக்கொண்டாள்.

(க-து) மிகபக்தியுடன், அதிகம் தலையைத் தாழ்த்தி வணங்கியதால் பார்வதியின் சிரஸிலிருந்த ஆபரணம் சிறிதே தன்னிடத்திலிருந்து அசைந்தது. தான் மணக்கப்போகும் சிவபிரானைச் சேர்ந்தவர்கள் எதிரிலிருந்ததால் அவள் வெட்கமுற்றாள். அவளை அன்பினால் தன் மடியில் வைத்துக்கொண்டாள் அருந்ததி.

प्रणामाद्र . . . वतंसकाम् = वंतसः - காதிலுள்ள குண்டலங்கள் என்று பொருள் கொள்வர் மல்லிநாதர். स्रस्तं - என்பதற்கு 'கீழே விழுந்த' எனப்பொருள் உரைப்பர் சிலர். स्रस्तं என்பதற்கு 'தன்னிடத்தினின்றும் நழுவிய' என்றே பொருள் கொள்ளவேண்டும். स्रस्तं - नितंबादवलंबमाना - என்பதையும், कनक वलयं स्रस्तं स्रस्तं मया प्रतिसार्यते - என்பதனையும் காண்க. தலையைச் தாழ்த்தி வணங்கும் பொழுது தலையிலுள்ள அணி அசைவது இயற்கை. ஆபரணம் கீழே விழுவது அபசகுனமாகவும் கருதப்படலாம். अङ्कम् - மடி, சமீபம் என்ற பொருளும் உண்டு. அருந்ததி தன் சமீபத்திலுள்ள ஆஸனத்தில் உட்கார வைத்தாள் எனவும் பொருள் கூறலாம். आर्याप्यरुन्धती-तत्र - என (சுலோகம் 32) சிவபிரான் கூறியதற்கேற்ப அருந்ததி இவ்விவாஹத்தில் செய்த உதவி இச்சுலோகத்திலும் கூறப்படுகின்றது.

तन्मातरं चाश्रुमुखीं दुहितृस्नेहविक्लवाम् ।
वरस्यानन्यपूर्वस्य विशोकामकरोद्गुणैः ॥ ९२ ॥

दुहितृ - स्नेह - विक्लवाम् - பெண்ணிடமுள்ள அன்பினால் மனம் தளர்ந்தவளும், अश्रु - मुखीम् - கண்களில் நீருடையவளுமான, तत् - मातरम् - च - மேனையை, अनन्य - पूर्वस्य - வேறு மனைவி

யில்லாத, वरस्य - வரனை சிவபிரானது, गुणैः - குணங்களைக் கூறுவதால், विशोकाम् - துக்கமற்றவளாக, अकरोत् - (அருந்ததி) செய்தாள்.

(க-து) 'விவாஹமான பின் தன் மகள் தன்னை விட்டுப்பிரிந்து விடுவாள், அவளது வாழ்வு எப்படி இருக்குமோ?' என்ற எண்ணம் மேனையை மனம் தளர்வுறச் செய்தது. அது காரணமாகக் கண்களில் நீர்மல்கியது. இதனைக் கண்ணுற்ற அருந்ததி, சிவபிரானது குணங்களையும் அவருக்கு வேறு மனைவி இல்லாததால், பார்வதி கணவரது முழு அன்பையும் பெற்று வாழ்வாள் என்பதனையும் கூறி மேனையைத் தேற்றினாள்.

वैवाहिकीं तिथिं पृष्टास्तत्क्षणं हरबन्धुना ।
ते त्र्यहादूर्ध्वमाख्याय चेरुश्चीरपरिग्रहाः ॥ ९३ ॥

तत् - क्षणम् - அந்த க்ஷணத்திலேயே, हर - बन्धुना - சிவபிரானுக்கு உறவினனாகப் போகின்ற ஹிமவானால், वैवाहिकीम् - விவாஹத்திற்குத் தகுந்த, तिथिम् - நாளைப்பற்றி, पृष्टाः - கேட்கப்பட்ட, चीरः - परिग्रहाः - மரவுரியணிந்த, ते - அம் மஹர்ஷிகள், त्रि - अहात् - ऊर्ध्वम् - மூன்று நாட்களுக்குப் பின், (என), आख्याय - கூறிவிட்டு, चेरुः - புறப்பட்டனர்.

(க-து) தம்பதிகளின் நன்மையிலே கருத்துக்கொண்ட ஹிமவான் விவாஹத்திற்குச் சிறந்த நாள் எதுவென மஹர்ஷிகளைக் கேட்க, நான்காவது நாள் சிறந்ததெனக் கூறிவிட்டுத் தாம் அமர்ந்த ஆஸனங்களின்றும் எழுந்தனர்.

तिथि - தினம். त्रि - अहात् - ऊर्ध्वम् - மூன்று நாட்களுக்குப்பின். அதாவது 'நான்காவது நாளில்' என்பது கருத்து.

ते हिमालयमामन्त्र्य पुनः प्राप्य च शूलिनम् ।
सिद्धं चास्मै निवेद्यार्थं तद्विसृष्टाः खमुद्ययुः ॥ ९४ ॥

ते - அம்முனிவர்கள், हिम - आलयम् -ஹிமவானிடம், आमन्त्र्य - விடைபெற்றுக்கொண்டு, पुनः - மறுபடியும், शूलिनम् - சிவ பிரானை, प्राप्य - च - அடைந்து, सिद्धम् - நிறைவேறிய, अर्थम् - காரியத்தை, अस्मै - அவருக்கு, निवेद्य - च - தெரிவித்தபின், तत् - विसृष्टाः - அவரால் அனுமதிக்கப்பட்டவர்களாக, खम् - ஆகாயத்தில், उद्ययुः - கிளம்பினர்.

(க-து) ஹிமவானிடம் விடைபெற்றுக்கொண்டு முனிவர்கள் சிவபிரானிடம் வந்தனர். காரியம் நிறைவேறியதைத் தெரிவித்தனர். பின் அவரது அனுமதிபெற்றுத் தம்மிடமாகிய ஆகாயத்திற்குச் சென்றனர்.

पशुपतिरपि तान्यहानि कृच्छ्रा-
दगमयदद्रिसुतासमागमोत्कः ।
कमपरमवशं न विप्रकुर्यु-
र्विभुमपि तं यदमी स्पृशन्ति भावाः ॥ ९५ ॥

अद्रि - सुता - समागम - उत्कः - பார்வதியை ஸந்திப்பதிலே மிக ஆவலையுடைய, पशु - पतिः - अपि - சிவபிரானும், तानि - अहानि - அம்மூன்று நாட்களை, कृच्छ्रात् - மிக ச்ரமத்துடன், अगमयत् - போக்கினர். अमी - இந்த, भावाः - ஆவல் முதலிய உணர்ச்சிகள், अवशम् - தன் வசமில்லாத (மனத்தை அடக்க இயலாத), अपरं कम् - வேறு எந்த மனிதனைத்தான், न - विप्रकुर्युः - துன்புறுத்தா? (மனமாறுதலடையச் செய்யா?). यत् - ஏனெனில் (அவைகள்), विभुम् - புலனைவென்ற, तम् अपि - அச்சிவ பிரானையும், स्पृशन्ति - தொடுகின்றனவே! (பாதிக்கின்றன).

(க-து) ஸம்ஸாரத்தில் உழலுகின்ற ஸகல ஜீவராசிகளுக்கும் தலைவர் சிவபிரான். புலன்களை அடக்கியவர். அவர் உணர்ச்சிக்கு வசப்பட்டுள்ளார் என்பதை நம்பவும் முடியாது. அத்தகைய

சிவபிரானும் பார்வதியைச் சந்திக்க மிக ஆவலுடையவராக, நான்காம் நாள் நடக்க வேண்டிய விவாஹத்திற்கு இடையிலே உள்ள மூன்று நாட்களையும் மிகக் கஷ்டத்துடன் போக்கினர்.

சிவபிரானே இந்நிலையிலிருந்தார் எனின் புலன்களை அடக்காது, தன் வசமின்றியுள்ள மனிதர்கள் இவ்வுணர்ச்சிகளுக்கு வசப்பட்டுத் தவிப்பர் என்பதைக் கூறவேண்டியதில்லை.

ஜீவராசிகளைப் 'பசு' வென்பர். அவர்களின் மோக்ஷத்திற்குக் காரணமாயிருப்பதால் சிவபிரானைப் 'பசுபதி' எனக் கூறுவர்.

स्पृशन्ति - தொடுகின்றன என்பது பதப்பொருள். பாதிக்கின்றன என்பது கருத்து.

इति महाकवि - श्री कालिदासकृतौ कुमारसम्भवे

महाकाव्ये षष्ठः सर्गः ॥

# सप्तमः सर्गः

अथौषधीनामधिपस्य वृद्धौ तिथौ च जामित्रगुणान्वितायाम् ।
समेतबन्धुर्हिमवान्सुताया विवाहदीक्षाविधिमन्वतिष्ठत् ॥ १ ॥

अथ - பிறகு, हिमवान् - ஹிமவான், ओषधीनाम् अधिपस्य - ஓஷதிகளின் தலைவனாகிய சந்திரனுக்கு, वृद्धौ - வளர்ச்சி இருக்கும் பொழுது (சுக்ல பக்ஷத்தில்), जामित्र - गुण - अन्वितायाम् - விவாஹத்திற்குத் தகுந்த நற்குணமமைந்த, तिथौ - च - தினத்தில், समेत - बन्धुः - உறவினருடன் கூடியவனாக, सुतायाः - (தன்) மகளுக்கு, विवाह - दीक्षा - विधिम् - விவாஹத்திற்குப் பூர்வாங்கமான நற்சடங்கை, अन्वतिष्ठत् - செய்தான்.

(க-து) ஸப்தர்ஷிகள் குறிப்பிட்ட மூன்று நாள் சென்றபின் விவாஹத்திற்கான நல்ல தினத்தில் (நான்காவது நாளில்) உறவினர்களுடன் இருந்துகொண்டு, விவாஹத்திற்குப் பூர்வாங்கமாகச் செய்யவேண்டிய சில நற்காரியங்களைப் பார்வதிக்கு ஹிமவான் செய்வித்தான்.

अथ - மூன்று நாட்கள் சென்றபின்; ओषधीनामधिपस्य वृद्धौ - சந்திரனை ஓஷதிகளுக்குத் தலைவனாகக் கூறுவர். அவனுடைய வளர்ச்சி இருக்கும் சமயம் சுக்லபக்ஷம். சுக்ல பக்ஷத்தில் விவாஹம் முதலிய சுப சடங்குகளைச் செய்யும்படி சாஸ்திரம் கூறுகின்றது. "उद्गयने आपूर्यमाणपक्षे कल्याणे नक्षत्रे चौलकर्मोपनयन-गोदान-विवाहाः (आश्वलायन. गृ. सू - 1 - 4 - 1) என்பதனைக் காண்க. जामित्र - விவாஹலக்னத்திற்கு ஏழாவது இடத்தை ஜாமித்ரம் என்பர். 'जामित्रम् सप्तमं स्थानम्' - என்பது बृहत्संहिता। அதிலே கிரஹங்கள் இல்லாமல் இருப்பது தான் அதற்குக் குணமாகும். இதையே 'ஏழாமிடம் சுத்தி' என்று கூறுவர்

பெண்ணின் நலத்தைக் கருதி ஜாமித்ர குணம் வேண்டு மென்பர். ஜாமித்ரம் என்பது லக்னத்திற்கு உரியது; (திதிக்கு) தினத்திற்கு உரியது அல்ல. ஆதலால் பதத்தின் பொருளை விட்டு "விவாஹத்திற்குப் பொருத்தமான" என்று பொருள் கொள்ளவேண்டும் என்பர் அருணகிரி. "லக்னத்தின் மூலம் ஜாமித்ரம், தினத் திற்கே வந்து விடுகிறது" என்பர் மல்லிநாதர்; तिथौ - என்பதற்குப் பதிலாக तनौ என்று பாடம் கொள்வர் தக்ஷிணாவர்த்தர். तनौ - 'லக்னத்தில்' என்பது பொருள். जामित्रम् என்ற சொல்லை, जायामित्रम् - என்பது जामित्रम् - என ஆயிற்று என்று விரித்துரைப்பர் சிலர். विवाहदीक्षा - दीक्षा - என்பதற்கு உபநயனம் என்ற பொருள் உண்டு. இங்கு பொதுவாக ஒரு தூய சடங்கைக் குறித்தது. பெண்களுக்கு விவாஹமே உபநயனமாக உள்ளது. எனவே விவாஹம் என்ற நற்சடங்கின், विधिः - செயல், என்ற பொருளும் கொள்ளலாம். மேலே கூறப்படுவதினின்று, இந்த பூர்வாங்கச் சடங்கை ஸ்திரீகள் செய்ததாகக் கவி கூறுவதால் ஹிமவான் செய்தான் என்பதற்குச் செய்வித்தான் எனப் பொரு ளுரைப்பர் நாராயணர். இந்த சுலோகத்தில் ஹிமவான், மகளுக்கு விவாஹம் செய்தான் எனப் பொதுவாகக் கூறி, கவி இதனையே விரிவாக இந்த ஸர்க்கத்தில் வர்ணிக் கின்றார். विवाहदीक्षा - विवाहसंस्कारः । विधिः - कर्म - என்பது மல்லிநாதர் உரை.

वैवाहिकैः कौतुकसंविधानैर्गृहे गृहे व्यग्रपुरंध्रिवर्गम् ।
आसीत्पुरं सानुमतोऽनुरागादन्तःपुरं चैककुलोपमेयम् ॥ २ ॥

अनुरागात् - ( பார்வதியிடத்துள்ள) அன்பினால், गृहे - गृहे - ஒவ்வொரு வீட்டிலும், वैवाहिकैः - விவாஹத்திற்கான, कौतुक - संविधानैः - மங்களப் பொருள்களை சம்பாதிப்பதினாலே, व्यग्र - पुरन्ध्रि - वर्गम् - சுறுசுறுப்புடன் இருக்கின்ற ஸ்த்ரீகளையுடைய, सानुमतः पुरम् - ஹிமவானது நகரமும், अन्तःपुरं - च - அந்தப் புரமும், एक - कुल उपमेयम् - ஒரே வீட்டுடன் உவமிக்கத் தக்கதாக, आसीत् - இருந்தது.

(க-து) நகர ஜனங்கள் அனைவரும் பார்வதியிடம் அன்பு பூண்டவர்கள். அவளுடைய விவாஹத்தைத் தமது வீட்டில் நடக்கும் விவாஹமாகவே கருதி தோரணம் கட்டுதல், கோலமிடுதல், அலங் கரித்தல் முதலான மங்கள காரியங்களில் ஈடுபட்டனர். அதேபோல் ஹிமவானது அந்தப்புரத்திலும் ஸ்த்ரீகள் மங்களப் பொருள்களைச் சேகரிப்பதில் சுறுசுறுப்புடன் இருந்தனர். இதனைப் பார்க்கும் பொழுது இது ஹிமவான் வீடு, இவை பிறரது வீடுகள் என்ற பேதமே தெரியவில்லை. அந்தப்புரமும் பிற வீடுகளும் சேர்ந்து கல்யாணம் நடக்கவிருக்கும் ஒரே வீடுபோல் காணப்பட்டன.

कुलम् - என்பதனை 'வம்சம்' எனக்கொண்டு, எல்லோரும் ஒரு குலத்திற் பிறந்தவர் போல் காணப்பட்டனர் என்றும் பொருளுரைக்கலாம்.

संतानकाकीर्णमहापथं तच्चीनांशुकैः कल्पितकेतुमालम् ।
भासोज्ज्वलत्काञ्चनतोरणानां स्थानान्तरं स्वर्ग इवाबभासे ॥ ३ ॥

संतानक - आकीर्ण - महा - पथम् - ஸந்தானக புஷ்பங்கள் தூவப்பட்ட பெரும் வீதிகளையுடையதும், चीन - अंशुकैः - சீனா வின் பட்டுத்துணிகளால், कल्पित - केतु - मालम् - அமைக்கப்பட்ட கொடிகளின் கூட்டமுடையதும், काञ्चन - तोरणानाम् - பொன் மயமான வாசல்களின், भासा - காந்தியினால், उज्ज्वलत् - பிர காசிக்கின்றதுமான, तत् - அந்த நகரம் (ஓஷதிப்ரஸ்தம்),

स्थानान्तरम् - வேறு இடத்திலுள்ள, स्वर्गः इव - ஸ்வர்க்கம் போல், आवभासे - விளங்கியது.

(க-து) கல்பக விருக்ஷங்களில் ஒன்ருகிய ஸந்தானகத்தின் மலர்கள் வீதி எங்கும் தூவப்பட்டு இருந்தன. சீனுவினின்றும் வந்த பட்டுக்களால் நகரத்தில் துவஜங்களைக் கட்டினர். நகரத்திற்கு வெளியிலே பொன்மயமான வாசலை அமைத்தனர். இவற்ருல் மிகப் பொலிவுடனிருந்த அந்த நகரம், வேறு இடத்திலிருக்கும் ஸ்வர்க்கம் போல் காணப்பட்டது.

ஸந்தானகம்: தேவ விருக்ஷங்களில் ஒன்று. இங்கு இச் சொல் ஐந்துவகை கல்பக விருக்ஷங்களையும் குறித்தது. तोरण - நகரத்திற்கு வெளியே அமைக்கப்பட்ட பெரிய வாசல். மலர், கொடிகள் தோரணவாசல்கள் இவற்ருல் உண்டான சோபை காரணமாக வேறு ஓரிடத்தில் இருக்கும் மற்றெரு ஸ்வர்க்கம் போல் காணப்பட்டதெனக் கவி உத்ப்ரேக்ஷித்தார். स्थानान्तर-स्वर्गः என்றும் பாடம் உண்டு.

**एकैव सत्यामपि पुत्रपङ्क्तौ चिरस्य दृष्टेव मृतोत्थितेव ।**
**आसन्नपाणिग्रहणेति पित्रोरुमा विशेषोच्छ्वसितं बभूव ॥ ४ ॥**

पुत्र - पङ्क्तौ - பலபுத்ரர்களும் புத்திரிகளும், सत्याम् - अपि - இருக்கும் பொழுதும், उमा - एका - एव - பார்வதி ஒருத்தியே, चिरस्य - வெகு நாளைக்குப் பின், दृष्टा - इव - பார்க்கப்பட்டவள் போலும், मृता - उत्थिता - इव - இறந்து உயிர்பெற்றெழுந்தவள் போலும், आसन्न-पाणि - ग्रहणा - इति - அண்மையிலுள்ள விவாஹம் உடையவள் என்ற காரணத்தால், पित्रोः - தாய் தந்தையர் களுக்கு, विशेष - उच्छ्वसितम् - முக்கியமான உயிராக, बभूव இருந்தாள்.

(க-து) ஹிமவானுக்குப் பல புத்திரர்களும், புத்ரிகளும் இருந் தனர், ஆயினும் பார்வதிக்கு விவாஹம் சமீபத்திலிருந்ததால்

அவளிடம் தாய் தந்தையர், மிகவும் அன்பு செலுத்தினர். தங்களின் உயிராகக் கருதினர். வெகுநாள் காணுதவளைக் காண்பது போலும், செத்துப் பிழைத்தவளைக் காண்பது போலும் எண்ணி மகிழ்ந்தனர்.

ஹிமவானுக்கு பல புத்ரர்களும், புத்ரிகளும் உண்டு என்பது கவி இங்கு கூறியதிலிருந்துதான் அறியவேண்டியிருக்கிறது. மைனுகம், கிரௌஞ்சம் என்ற புத்திரர்கள் உண்டு. கங்கையையும் மகளாகக் கருதுவர். எனவே पुत्रपङ्क्तौ सत्यामपि - என்பதற்கு இரு மகன்களும், வேறு ஒரு மகளும் இருந்தும் கூட என்று பொருள் கொள்ளவேண்டும். पुत्रपङ्क्तौ - புத்ரபுத்ரிகளின் வரிசை என்பது பதப் பொருள். मृता - उत्थिता - इव - விவாஹ ஸந்தர்ப்பத்தில் இத்தகைய அமங்கலச் சொல்லைக் கவி உபயோகித்தது சரியில்லை என்பது சிலர் கருத்து. उपोढपाणिग्रहणा - என்பது அருணகிரி பாடம்.

अङ्काद्ययावङ्कमुदीरिताशीः सा मण्डनान्मण्डनमन्वभुङ्क्त ।
संबन्धिभिन्नोऽपि गिरेः कुलस्य स्नेहस्तदेकायतनं जगाम ॥ ५ ॥

सा - அவள், उदीरित - आशीः - கூறப்பட்ட ஆசீர்வாதமுடையவளாக, अङ्कात् - (ஒருவர்) மடியினின்றும், अङ्कम् - (மற்றொருவரின்) மடியை, ययौ - அடைந்தாள். मण्डनात् -(ஒருவர் தந்த) அணியை அனுபவித்த பின், मण्डनम् - (மற்றவர் கொடுத்த) அணியை, अन्वभुङ्क्त - அனுபவித்தாள். संबन्धि - भिन्नः - अपि - உறவினரால் பகுக்கப்பட்டதாயினும், गिरेः कुलस्य - ஹிமவானுடைய வம்சத்தின் (வம்சத்தினரின்), स्नेहः - அன்பு, तद् - एक - आयतनम् - பார்வதி என்ற ஓரிடத்தையே நோக்கியதாக, जगाम - சென்றது.

(க-து) உறவினரான ஸ்த்ரீகள் அன்பினுல் அவளைத் தம்மிடம் அழைத்து மடியில் வைத்து ஆசீர்வதித்தனர். ஆபரணமும் அணிவித்தனர். அவள் ஒருவர் மடியினின்றும் மற்றொருவர் மடிக்குச் சென்ருள். ஒருவர் தந்த ஆபரணத்தை அணிந்து அனுபவித்த பின்னர் மற்றவர் தந்தவற்றையும் அனுபவித்தாள். ஹிமவானுடைய வம்சத்திலுள்ளவர்களின் அன்பு, அவரவர்களது மக்கள் முதலிய பிற உறவினரால் பகுக்கப்பட்டதாயினும் அச்சமயம் அவள் ஒருத்தியிடமே ஒருமுகமாகச் சென்றது.

मैत्रे मुहूर्ते शशलाञ्छनेन योगं गतासूत्तरफल्गुनीषु ।
तस्याः शरीरे प्रतिकर्म चक्रुर्बन्धुस्त्रियो याः पतिपुत्रवत्यः ॥ ६ ॥

मैत्रे - மித்ரனைத் தேவதையாகக் கொண்ட, मुहूर्ते - முஹூர்த் தத்தில் (வேளையில்), उत्तर - फल्गुनीषु - உத்தர நக்ஷத்ரம், शश - लाञ्छनेन - சந்திரனுடன், योगम् - சேர்க்கையை, गतासु - அடைந்திருக்கும் பொழுது, याः - எந்த ஸ்த்ரீகள், पति- पुत्रवत्यः - பதியையும் புத்ரர்களையுமுடையவர்களோ, (ताः) : அத்தகைய, बन्धुस्त्रियः - உறவினர்களான ஸ்த்ரீகள், तस्याः- शरीरे - அவளது மேனியில், प्रतिकर्म - அலங்காரத்தை, चक्रुः - செய்தனர்.

(க-து) ஸுமங்கலிகளான ஸ்த்ரீகள் உத்தர நக்ஷத்ரம் கூடிய சுபதினத்தில் மித்ர முஹூர்த்தத்தில் அவளுக்கு விவாஹத்திற்கான அலங்காரத்தைச் செய்யத் தொடங்கினர்.

मैत्र - மித்ரன் என்ற தேவதையின் காலம். சூரியனின் உதயத்தினின்றும் நான்கு நாழிகைக்குப் பிறகுள்ள இரண்டு நாழிகை நேரம். இருபத்திஞன்கு நிமிஷங்களை கொண் டது ஒரு நாழிகை. शशलाञ्छनः - முயலை அடையாளமாக வுடையவன் சந்திரன். पति-पुत्रवत्यः-ஸுமங்கலிகளே இத்தகைய அலங்காரத்தைச் செய்ய அனுமதிக்கப்படுவர். ஸுமங் கலிகளிலும் மலடிகள் விலக்கப்பட்டுள்ளனர், उत्तरफल्गुनी-

உத்தரம்; இச்சொல் பன்மையிலே உபயோகிக்கப்படும். विवाहे-शुभदात्यन्तं तस्मादुत्तरफल्गुनी - என்ற கௌதமவசனம் உத்தர பல்குனி விவாஹத்திற்கு மிகச் சிறந்ததெனக் கூறும். (பூர்ண) சந்திரன் உத்தர நக்ஷத்ரத்துடன் சேருவது பங்குனி மாதத்தில் தான். எனவே பார்வதியின் விவாஹம் பங்குனி உத்தரத்தன்று நடந்திருக்கலாம் எனத்தோன்றுகிறது. பல சிவ விஷ்ணு ஆலயங்களில் திருக்கல்யாண உத்ஸவம் தற்போது நடக்கின்றது. காஞ்சியிலும் பங்குனி உத்தரத்தன்று காமாக்ஷி - ஏகாம்ரநாதர் திருக்கல்யாணம் பிரதி வருஷம் நடப்பதையும் கவனிக்கலாம்.

सा गौरसिद्धार्थनिवेशवद्भिर्दूर्वाप्रवालैः प्रतिभिन्नशोभम् ।
निर्नाभि - कौशेयमुपात्तबाणमभ्यङ्गनेपथ्यमलंचकार ॥ ७ ॥

सा - அப்பார்வதி, गौर - सिद्धार्थ - निवेशवद्भिः - வெண்கடுகு வைக்கப்பட்ட, दूर्वा - प्रवालैः - அறுகம்புல்லின் முளைகளாலே, प्रतिभिन्न - शोभम् -அதிகமான சோபையுடையதும், निर्नाभि - कौशेयम्- கஸ்தூரியின் வாசனை கொண்ட பட்டு வஸ்திரமுடையதும், उपात्त - बाणम्-(கையிலே) எடுக்கப்பட்ட பாணமுடையதுமான, अभ्यङ्ग - नेपथ्यम् - எண்ணெய் ஸ்நானத்திற்கான அலங்காரத்தையும், अलंचकार - அழகுபெறச் செய்தாள்.

(க-து) விவாஹத்திற்கான மங்கள ஸ்நாநம் செய்விப்பதற்கு முன் பார்வதிக்கு உறவினர்கள் எண்ணெய் ஸ்நானம் செய்விக்க முற்பட்டனர். அதற்கான அலங்காரத்தையும் அவர்கள் அவளுக்குச் செய்தனர். வெண்கடுகுடன் கூடிய அறுகம்புல்லை அவள் சிரஸில் வைத்தனர். கஸ்தூரியின் பரிமளமுடைய பட்டுவஸ்திரத்தை அணிவித்தனர். க்ஷத்ரியப் பெண்கள் விவாஹ காலத்தில் பாணத்தைக் கையில் வைத்திருக்க வேண்டுமாதலால் ஒரு பாணத்தைக் கையில் பிடித்திருந்தாள். இத்தகைய அப்யங்க அணி

அவளால் அழகு பெற்றதாயிற்று. அழகு தரும் பொருளும் அவளால் அழகு பெற்றது.

गौरसिद्धार्थ - வெண்கடுகு மூளைகள் என்றும் பொருள் கொள்ளலாம். இவைகளும் அறுகம் புல் மூளைகளும் சேர்ந்து அதிகம் அழகைத் தந்தன. निर्नाभि - கஸ்தூரி எனப் பொரு ளுரைப்பர். निर्नाभि - कौशेयम् - 'உடலின் இடைப்பகுதியை முற்றிலும் மறைத்த பட்டுவஸ்திரமுடையது' என்றும் உரை கூறுவர் சிலர். उन्नीविकौशेयम् - என்பது அருணகிரி பாடம். उपात्तबाणम् - க்ஷத்ரியப்பெண் பிராம்பணரை மணக்கும் போது பாணத்தைக் கையில் பிடிக்கவேண்டும் என ஸ்ம்ருதி கூறுகின்றது. தேவர்களில் சிவபிரான் பிராம்மணர் என்பர் நாராயணர்.

> शरः क्षत्रियया ग्राह्यः प्रतोदो वैश्यकन्यया ।
> वसनस्य दशा ग्राह्या शूद्रयोत्कृष्टवेदने ॥ मनु - ३ - ४४

अभ्यङ्ग - எண்ணெய் தேய்ப்பது. अलङ्कार - எல்லோருக்கும் உடை அழகைத்தரும். ஆனுல் அவ்வுடைக்கே அழகு தந்தாள் பார்வதி. அவ்வணிகள் அவள் சரீரத்தில் இருந்தபொழுது பொலிவுற்று விளங்கின.

**बभौ च संपर्कमुपेत्य बाला नवेन दीक्षाविधिसायकेन ।**
**करेण भानोर्बहुलावसाने संधुक्ष्यमाणेव शशाङ्करेखा ॥ ८ ॥**

(किं च) - மேலும், बाला - பார்வதி, नवेन - புதிய, दीक्षा-विधि - सायकेन - விவாஹ தீக்ஷைக்கான பாணத்துடன், संपर्कं - ஸம்பந்தத்தை, उपेत्य - அடைந்து (கையில் ஏந்தி யிருந்ததால்), बहुलावसाने - கிருஷ்ண பக்ஷத்தின் முடிவில், भानोः - சூரியனுடைய, करेण - கிரணத்தினுல், संधुक्ष्यमाणा

விருத்தியடைவிக்கப்படுகின்ற, शश - अङ्क - रेखा - इव - சந்திர கலை போல், बभौ - விளங்கினாள்.

(க-து) அப்யங்கத்திற்கான அலங்காரத்தினால் அவளும் அழகு பெற்று விளங்கினாள். கையிலே பாணம் ஏந்திய அந்த யுவதி, சூரியனது கிரணத்தின் தொடர்பு பெற்று விருத்தியடைகின்ற சுக்ல பக்ஷத்தின் ஆரம்பத்திலுள்ள சந்திரகலை போல் மிக அழகுடன் விளங்கினாள்.

बाला - தந்தையின் வீட்டில் இருக்கும் விவாஹமாகாத பெண்ணைக் குறிப்பது. யௌவனத்தின் தொடக்கத்தில் உள்ள நிலையைக் கருதி பார்வதியை இச்சொல்லால் குறிப்பிட்டார் கவி.

बहुल - கிருஷ்ண பக்ஷம். अवसानम् - முடிவு. बहुलावसाने - கிருஷ்ண பக்ஷத்தின் முடிவு - சுக்ல பக்ஷத்தின் ஆரம்பம் என்று பொருள் கொள்ள வேண்டும். नवेन - இதனை, सायकेन - என்பதுடன் சேர்க்க. பார்வதி கையில் வைத்திருந்த பாணம் புதியது. भानोः करेण सन्धुक्ष्यमाणा - சுக்ல பக்ஷத்தில் சந்திரனது கலை, சூரியனது கிரணத்தினால் விருத்தியடைகின்றது. சூரிய கிரணம் சந்திர மண்டலத்தில் படுவதால் சந்திரனிடத்தினின்றும் வெளிச்சம் கிடைக்கின்றது. சந்திரனும் வளர்ச்சி அடைந்து அழகு பெறுகிறான் என்பர்.

இங்கே பார்வதிக்கு சந்திர கலையும், பாணத்திற்கு ஒளிரிய கிரணமும் உபமானங்கள். சந்திரன் அழகு பெற்றது போல் பார்வதியும் அழகுடன் விளங்கினாள் என்பது உபமானத்தால் பெறப்படும்.

முன் சுலோகத்தில் பார்வதியினால் அப்யங்க உடை அழகு பெற்றது எனக்கூறப்பட்டது. இதில் அவ்வுடையும் அவளுக்கு அழகு தந்தது என்றார். अन्योन्य - शोभाजननाद्भूव साधारणो

भूषण भूष्य - भावः - (1.42) என்றதில் கூறிய கருத்தே இவ்விரண்டு சுலோகங்களாலும் பெறப்படுவதாகும்.

तां लोध्रकल्केन हृताङ्गतैलामाश्यानकालेयकृताङ्गरागाम् ।
वासो वसानामभिषेकयोग्यं नार्यश्चतुष्काभिमुखं व्यनैषुः ॥ ९ ॥

लोध्र - कल्केन - லோத்ரப் பொடியினுல், हृत - अङ्ग - तैलाम् - நீக்கப்பட்ட சரீரத்திலுள்ள எண்ணெயுடையவளும், आश्यान - कालेय - कृत - अङ्गरागाम् - சிறிது ஈரமுடைய கஸ்தூரி மஞ்சளினுல் செய்யப்பட்ட சரீரப்பூச்சையுடையவளும், अभिषेक - योग्यम् - ஸ்நானத்திற்குத் தக்க, वासः-பருத்தியினுலான வஸ்திரத்தை, वसानाम् - அணிந்திருப்பவளுமான, ताम् - அவளை, नार्यः - ஸ்த்ரீகள், चतुष्क - अभिमुखम् - நாற்கால் மண்டபத்திற்கு (ஸ்நான க்ருஹத்திற்கு), व्यनैषुः - அழைத்துச் சென்றனர்.

(க-து) அவளது சரீரத்தில் தடவிய எண்ணெயை, லோத்ரப் பட்டையின் பொடியைத் தடவித் தேய்த்து நீக்கினர். பின் இதனுல் ஏற்பட்ட வறட்சியைப் போக்கி நல்ல நிறம் தர கஸ்தூரி மஞ்சள் சாந்தை உடல் முழுவதும் பூசினர். ஸ்நானம் செய்வதற்குத் தக்க வஸ்திரமணிந்த அவளை, ஸ்நானம் செய்விப்பதற்காக ஏகாந்தமான ஒரு நாற்கால் மண்டபத்திற்கு அழைத்துச் சென்றனர்.

लोध्र-ஒருவகை மரம். வெள்ளொலொத்தி என்பது தமிழ்ப் பெயர். இதன் பட்டையை இடித்துப் பொடி செய்தோ, ஜலம் விட்டு அறைத்து விழுதாகச் செய்தோ, சரீரத்தில் தடவிய எண்ணெயை நீக்க உபயோகிப்பர். आश्यान - कालेय - कृतांगरागाम्- வெள்ளொலொத்திப் பொடியினுல் சரீரத்தில் வறட்சியுண்டாகுமாகையால் அவ்வறட்சியை நீக்கவும் சரீரத்திற்கு நல்ல நிறம் தரவும் கருதிக் கஸ்தூரி மஞ்சளை அரைத்துக் குழைத்துத் தடவினர். कालेय-குங்குமப்பூ என்றும் கொள்வர்.

काश्मीरजं तु कालेयं विद्वद्भिः जागुडं स्मृतम् - என்பது ஹலாயுத கோசம். சிலர் சந்தனம் என்றும் மஞ்சள் நிறமான ஒரு வாசனைப் பொருள் எனவும் கூறுவர். கஸ்தூரி மஞ்சள் என்றும் மரமஞ்சள் என்றும் நட்கர்ணி என்பவர் கூறுகின்றார். अङ्गराग - உடலுக்கு நல்ல நிறமளிக்கும் சாந்துவகை. वासः - ஸ்நானத்திற்கான பருத்தித்துணி. चतुष्काभिमुखम् - எண்ணெய் தேய்த்து, லோத்ரப்பொடியைத் தூவி எண்ணெயை நீக்கியது, கஸ்தூரி மஞ்சள் சாந்தினை பூசியது, வஸ்திரமணிவித்தது இவை எல்லாம் தனிமையில் அந்தப்புரத்தில் செய்விக்கப்பட்டன என்று கருதவேண்டும். स्त्रियः - ஸ்நானம் செய்விக்க நியமிக்கப்பட்ட உறவினரான ஸ்த்ரீகள். நாற்கால் மண்டபமும் பிறர் பலரும் காணமுடியாத இடமாகும்.

विन्यस्तवैदूर्यशिलातलेऽस्मिन्नाबद्धमुक्ताफलभक्तिचित्रे ।
आवर्जिताष्टापदकुम्भतोयैः सतूर्यमेनां स्नपयांबभूवुः ॥ २० ॥

विन्यस्त - वैदूर्य - शिलातले - வைடூர்யகல் பதித்த தரையையுடையதும், आबद्ध - मुक्ताफल - भक्ति - चित्रे - நூல்களில் கோக்கப்பட்ட சிறந்த முத்துக்களினாலான அலங்காரத்தினால் அழகாயிருப்பதுமான, अस्मिन् - அந்த நாற்கால் மண்டபத்தில், एनाम् - அவளை, आवर्जित - अष्टापद - कुम्भ - तोयैः - தங்கக் குடங்களின்றும் ஊற்றப்பட்ட ஜலத்தால், सतूर्यम् - வாத்ய கோஷத்துடன், स्नपयां बभूवुः - ஸ்நானம் செய்வித்தனர்.

(க-து) ஸ்த்ரீகள் வைடூர்ய ரத்னம்பதித்த தரையையுடைய, முத்துச் சரங்களால் அலங்கரிக்கப்பட்ட அழகான அம்மண்டபத்தில், வாத்யம் முழங்க, தங்கக் குடங்களினின்றும் புண்ய தீர்த்தங்களை ஊற்றி அவளுக்கு மங்கள ஸ்நானம் செய்வித்தனர்.

பார்வதி ஸ்நானம் செய்த மண்டபம் இரண்டு விசேஷணங்களால் வர்ணிக்கப்பட்டுள்ளது.

(1) विन्यस्त - वैदूर्य - शिलातलम् - शिलातलम् - பாறையினலான ஆஸனம்; வைடூர்யக் கல்லிஞலான (கல்லிழைத்த) ஆஸனமுடையதாக அம்மண்டபம் இருந்தது என்பர் ஒரு உரைகாரர். இந்த விசேஷணம் பார்வதி அமர்வதற்கான ஆஸனம் நன்கு அமைந்திருந்தது என்பதனைக் காட்டும். தரையிலேயே வைடூர்யம் பதித்திருந்தது என்பர் மல்லி நாதர்.

(2) आबद्ध - चित्रे - தொங்கவிடப்பட்ட - முத்து ஸரங்களி ஞலான - அலங்காரத்திஞல் - அழகான என்பது ஒருவரது உரை. आवर्जित . . . तोयैः- 'ஊற்றப்பட்ட தங்கக்குட நீரிஞல்' என்பது பதவுரை.

सा मङ्गलस्नानविशुद्धगात्री गृहीतवत्युद्गमनीयवस्त्रम् ।
निर्वृत्तपर्जन्यजलाभिषेका प्रफुल्लकाशा वसुधेव रेजे ॥ ११ ॥

मङ्गल - स्नान - विशुद्ध - गात्री - மங்களத்திற்கான ஸ்நானத் திஞல் பரிசுத்தமான சரீரமுடையவளும், उद्गमनीय - वस्त्रम् - தூய (வெண்மையான) வஸ்திரத்தை, गृहीतवती - அணிந்த வளுமான, सा - அவள், निर्वृत्त - पर्जन्य - जलाभिषेका - மழை ஜலத்திஞலுண்டான ஸ்நானமுடையதும், प्रफुल्ल - काशा - மலர்ந்த (வெண்ணிற) நாணல் புஷ்பங்களையுடையதுமான, वसुधा - इव - பூமிபோல், रेजे - விளங்கிஞள்.

(க-து) விவாஹத்திற்கான ஸ்நானம் செய்து பார்வதி, வெண்மையான பட்டு வஸ்திரத்தைத் தரித்தாள். இந்நிலையில் அவள், மழையிஞல் நனைந்து, வெண்மையான நாணல் புஷ்பங் களையுடைய பூமிபோல் காணப்பட்டாள்.

பார்வதிக்கு பூமியும், அவளது வெண்மையான வஸ்தி ரத்திற்கு நாணல் பூவும் உபமானங்கள். मङ्गल - स्नान - विशुद्धगात्री-

ஸ்நானம் அவளுக்குச் சிறந்த பொலிவைத் தந்தது. उद्गमनीय-वस्त्रम् - சுத்தமான வஸ்திரம் என்பது பதப்பொருள். धौतमुद्गमनीयं स्यात् - என்பது ஹலாயுத நிகண்டு. அவள் அணிந்திருந்த வஸ்திரத்திற்கு நாணல் உபமானமாக வந்ததால் वस्त्रम् -என்பதனை வெண்ணிறப்பட்டு என்றும் கொள்ளலாம். गृहीत - पत्युद्गमनीयवस्त्रा என்பது மல்லிநாதர் பாடம். 'வரனை அனுகத்தகுந்த வஸ்திரமணிந்த' என்பது அவரது உரை. गृहीत - शुद्धोद्गमनीय - என்றும் பாடம் உண்டு. சுலோகம் 26 - காண்க. निर्वृत्तपर्जन्यजलाभिषेका - நிறைவேறிய மழை ஜலஸ்நான முடைய என்பது பதப்பொருள். பூமிக்கு ஸ்நானம் மழை பெய்வதால் உண்டாவது.

வெண்பட்டு அணிந்திருந்த பார்வதிக்குத் தக்க உபமானமாக இருக்கும்படி பூமிக்கு प्रफुल्लकाशा - மலர்ந்த நாணல் பூவுடைய என்ற விசேஷணம் தந்தார். நாணல் பூவும் வெண்மையானது தான்.

तस्मात् प्रदेशाच्च वितानवन्तं युक्तं मणिस्तम्भचतुष्टयेन ।
पतिव्रताभिः परिगृह्य निन्ये क्लृप्तासनं कौतुकवेदिमध्यम् ॥ १२ ॥

तस्मात् - அந்த, प्रदेशात् - இடத்தினின்றும், वितानवन्तम् - (துணியாலான) மேற்கட்டியுடையதும், मणि - स्तम्भ - चतुष्टयेन - ரத்தினமயமான நான்கு ஸ்தம்பங்களுடன், युक्तम् -கூடியதும், क्लृप्त - आसनम् - அமைக்கப்பட்ட (ஸுகமான) ஆஸனமுடையதுமான, कौतुक - वेदि - मध्यम् - பிரதிஸரம் கட்டுவதற்கான மேடையின் நடுப்பாகத்திற்கு, पतिव्रताभिः - பதிவிரதைகளால் (ஸுமங்கலிகளால்), परिगृह्य - பிடித்து (அணைத்து), निन्ये - (அவள்) அழைத்துச் செல்லப்பட்டாள்.

(க-து) ஸ்நான மண்டபத்திலிருந்து பார்வதியை ஸ்த்ரீகள் அலங்கார மண்டபத்திற்கு அழைத்துச் சென்றனர். அம்மண்டபம் விதானமுடையதாகவும் நான்கு ரத்தினமயமான தூண்களையுடைய தாகவும் இருந்தது. அம்மண்டபத்தின் மத்தியில் அவள் அமர் வதற்காக நல்ல ஆஸனம் ஒன்றும் போடப்பட்டிருந்தது.

वितानम् - *அரசர் முதலியோர் உட்காருமிடத்திற்கு* மேலே *அழகிற்காகவும்,* மேல் *தளத்தின் உட்புறத்தை மறைப்பதற் காகவும் கட்டப்படும் துணி. இதனைத் தமிழில் 'மேற்கட்டி'* என்பர். இவ்வகை விதானம் இப்பொழுதும் கோயில்களில் காணப்படும். பந்தல்களின் உட்புற அலங்காரமும் இவ்வகை யைச் சேர்ந்ததே. 'கொடியே விதானமே' என்பது திருப் பாவைப் பாசுரம் 26. कौतुकम् - மணப்பெண்ணின் கையில் கட்டப்படும் மங்களநூல். இதனைப் பிரதிஸரம் என்றும் கங்கணம் அல்லது காப்பு என்றும் கூறுவதுண்டு. பார்வ திக்கு இந்நூலையும் பிற அணிகளையும் அணிவிப்பதற்காக அலங்கார மண்டபத்திற்கு அழைத்து வந்தனர்.

இருபத்தைந்தாவது சுலோகத்தில், மங்களநூலை மேனை கட்டியதாகக் கூறப்பட்டுள்ளது காண்க.

**तां प्राङ्मुखीं तत्र निवेश्य तन्वीं क्षणं व्यलम्बन्त पुरोनिषण्णाः ।**
**भूतार्थ-शोभा-ह्रियमाणनेत्राः प्रसाधने संनिहितेऽपि नार्यः ॥ १३॥**

नार्यः - (அலங்கரிப்பதற்காக நியமிக்கப்பட்ட) ஸ்த்ரீகள், ताम् - அந்த, तन्वीम् - மெல்லியலாளை (பார்வதியை), तत्र - அவ்வாஸனத்தில், प्राङ्मुखीम् - கிழக்கு நோக்கியவளாக, निवेश्य - உட்காரவைத்து, पुरः - निषण्णाः - அவள் எதிரில் அமர்ந்த வர்களாக, प्रसाधने - அலங்காரப் பொருட்கள், संनिहिते - अपि - ஸமீபத்தில் இருக்கும் பொழுதும் கூட, भूतार्थ - शोभा - ह्रियमाण -

नेत्राः - (அவளுக்கு) இயற்கையாயுள்ள அழகினுல் கவரப்படு கின்ற கண்களையுடையவர்களாக, क्षणम् - சிறிது நேரம், व्यलम्बन्त - தாமதித்தனர்.

(க-து) பார்வதியை அம்மண்டபத்தில் ஆஸனத்தில் கிழக்கு நோக்கி அமரவைத்தனர். அலங்காரப் பொருள்கள் எல்லாம் ஸித்தமாக எதிரில் இருக்கும் பொழுதும் அந்த ஸ்த்ரீகள் பார்வதி யின் இயற்கையான எழிலினுல் வசீகரிக்கப்பட்டுத் தாம் செய்ய வேண்டியதையும் மறந்து ஒரு க்ஷணம் இருந்தனர்.

नार्यः - பார்வதிக்கு அலங்காரம் செய்வதற்காக நிய மிக்கப்பட்ட ஸ்த்ரீகள். प्राङ्मुखीम् - மங்கள கார்யங்களிலே கிழக்கு நோக்கி உட்காருவது முறையாகும். मङ्गल्ये प्राङ्मुखो-भवेत् என்பர். प्रसाधनम् - அலங்காரம். இங்கு அலங்காரத் திற்கான பொருள்களைக் குறித்தது. भूतार्थ - வாஸ்தவமான - முன்பே இருந்த, இயற்கையான என்பது பொருள். ஸ்த்ரீகள் அணி செய்விக்காமல் தாமதித்ததற்குக் காரணம் கூறப்பட்டது भूतार्थ . . . என்பதில். " இயற்கையழகுள்ள இவளுக்கு இச்செயற்கை அழகு வேண்டாம் என்றும், அவளது அழகு இவ்வணிகளால் மறைக்கப்படலாம் என்றும் அஞ்சி ஒரு க்ஷணம் வாளாவிருந்தனர் எனலாம். அவளது அழகைக் கண்டு விஸ்மிதர்களாகச் செய்வதறியாது இருந் தனர் என்றும் கூறலாம். பெண்களும் மயங்கும் வகையில் அவள் பொலிவு அமைந்திருந்தது எனலாம்''.

धूपोष्मणा त्याजितमार्द्रभावं केशान्तमन्तःकुसुमं तदीयम् ।
पर्याक्षिपत्काचिदुदारबन्धं दूर्वावता पाण्डुमधूकदाम्ना ॥ १४ ॥

काचित् - ஒரு ஸ்த்ரீ, धूपोष्मणा - (நறுமணமுடைய) புகை யின் உஷ்ணத்தினுல், आर्द्रभावम् - ஈரமான தன்மை, त्याजितम् -

நீக்கப்பட்டதும், अन्तः कुसुमम् - உள்ளே வைக்கப்பட்ட புஷ்ப முடையதுமான, तदीयम् - அவளது, केशान्तम् - அழகிய கூந்தலே, दूर्वावता - அறுகம்புல்லுடன் தொடுக்கப்பட்ட, पाण्डु - मधूक - दाम्ना - வெண்மையான இலுப்பைப் பூ மாலேயினுல், उदार - बन्धम् - அழகான முடிச்சுடையதாக இருக்கும்படி, पर्याक्षिपत् - முடிந்தாள்.

(க-து) கூந்தலின் ஈரத்தை அகில் புகையின் உஷ்ணத்தினுல் போக்கி, கூந்தலினுட்புறத்திலும் சில மலர்களே வைத்து அறுகம் புல்லே இடைஇடையே தொடுத்துள்ள இலுப்பைப்பூ ஸரத்தைக் கொண்டு கூந்தலே அழகாக முடிந்தாள்.

धूपोष्मणा - கூந்தலின் ஈரத்தை சந்தனம், அகில் இவற்றின் புகையினுல் நீக்குவர். अन्तः कुसुमम् - கூந்தலுக்கு வாசனே யூட்டக் கருதி சில புஷ்பங்களே கூந்தலின் உட்புறத்தேயும் வைத்தனர். केशान्तः - केश - अन्त - இரண்டு சொல்லும் சேர்ந்து அழகிய கூந்தலேக் குறிக்கின்றன. अन्तः - அழகான - रम्ये समासान्त इष्यते - என்று சப்தார்ணவ நிகண்டு கூறும். अन्त - என்பதற்கு நுனி என்ற பொருள் இங்கு இல்லே. दूर्वा - மங்களவஸ்துக்களில் ஒன்று அறுகு. मधूक - இலுப்பைப்பூ. मधूकानि बध्नाति, मधुमतीरोषधीः बध्नाति - என்பவற்றை அனுசரித்து விவாஹத்தில் இதனே மங்களத்திற்காக உபயோகிப்பர். விவாஹத்தில் செய்யப்படும் சடங்குகளில் சில எல்லோருக்கும் பொதுவானவை. சில தேச குல ஆசாரத்தை அனுசரித்து மாறியிருக்கும். தேசவழக்கம், குல வழக்கம் இவற்றைப் பின்பற்ற வேண்டும் என ஆச்வலாயனர் தமது க்ருஹ்ய ஸூத்ரத்தில் சொல்லியிருக்கிருர். अथ खलु, उच्चावचाः जनपदधर्माः ग्रामधर्माश्च, तान् विवाहे प्रतीयात् । 1 - 7 - 1.

எனவே இந்த ஸர்க்கத்தில் விவாஹத்தில் செய்யப் பட்டதாகக் கூறப்படும் சடங்குகளில் சில தென்னாட்டில் செய்யப்படாவிடினும் காளிதாஸரிருந்த இடத்தில் அவை செய்யப்பட்டதாகக் கருத வேண்டும். இலுப்பைப்பூ மாலை யணிவிப்பது தென்னாட்டில் இல்லை. मदारबन्धं - पर्याक्षिपत् - இது முடிச்சின் அழகைக் கூறுகின்றது.

विन्यस्तशुक्लागुरु चक्रुरङ्गं गोरोचनापत्रविभक्तमस्याः ।
सा चक्रवाकाङ्कितसैकतायास्त्रिस्रोतसः कान्तिमतीत्य तस्थौ ॥१५॥

अस्याः - அவளுடைய, अङ्गम् - மேனியை, विन्यस्त - शुक्ल - अगुरु - பூசப்பட்ட வெண்ணிற அகில் சாந்துடையதாகவும், गोरोचना - पत्र - विभक्तम् - கோரோசனையினால் எழுதப்பட்ட வரிகளால் அழகுடையதாகவும், चक्रुः - செய்தனர். सा - (அது காரண மாக) அவள், चक्रवाक - अङ्कित - सैकतायाः - சக்ரவாகப் பக்ஷிகளுடன் கூடிய மணற்பாங்கான இடமுடைய, त्रिस्रोतसः - கங்கையின், कान्तिम् - அழகையும், अतीत्य - வென்று, तस्थौ - இருந்தாள்.

(க-து) அவளது சரீரத்தில் வெண் அகில் சாந்தைப் பூசியபின் கோரோசனைத் திரவத்தினால் கொடி, இலை, பூ இவை போன்ற வரிகளை எழுதி அலங்கரித்தனர். வெண்ணிறமான சரீரமும், பொன்னிறமான வரிகளையுமுடைய பார்வதி, பொன்னிறமான சக்ரவாகப் பக்ஷிகள் அமர்ந்திருக்கும் வெண்மையான மணல் திட்டுக்களையுடைய கங்கையைவிடச் சிறந்த தோற்றம் பெற்றிருந் தாள்.

வெண்மையான சரீரத்திற்கு மணல் திட்டும், கோரோசனை அலங்காரத்திற்கு - சக்ரவாகப் பக்ஷிகளும் ஒத்து இருந்தன என்று கருதவேண்டும். अगुरु - சந்தனம் போல் வாசனையுள்ள ஒருவகை மரம். இதன் சாந்தினையும்

சந்தனம்போல் உபயோகிப்பர். கார் அகில் என கறுத்த நிறமுடையதும் உண்டு. எனவே சுக்ல என்ற விசேஷணம் தரப்பட்டது. गोरोचना-पत्र-विभक्तम्- கோரோசனையைக் குழைத்து புஷ்பம் போலும் இலைபோலும் வரிகளை நெற்றி, கன்னம் முதலிய இடங்களிலே எழுதுவர். இதனைப் 'பத்ரம்' என்றும், வரிகள் என்றும் கூறுவர். विभक्तम् - विशेषितम् - சிறப்பிக்கப் பட்டது என்பது பதப்பொருள். त्रिस्रोताः - மூன்று பிரவாஹங் களையுடையது. ஆகாசத்திலும் பூமியிலும், பாதாளத்திலும் பிரவஹிப்பதால் கங்கை இப்பெயர் பெற்றது.

लग्नद्विरेफं परिभूय पद्मं समेघलेखं शशिनश्च बिम्बम् ।
तदाननश्रीरलकैः प्रसिद्धैश्चिच्छेद सादृश्यकथाप्रसङ्गम् ॥ १६ ॥

प्रसिद्धैः - (புஷ்பங்களால்) அலங்கரிக்கப்பட்ட, अलकैः - நெற்றியின் மேற்பகுதியில் புரளும் குழல்கற்றையுடன் கூடிய, तद् - आनन - श्रीः - அவளுடைய முக சோபை, लग्न - द्विरेफम् - வண்டுகளுடன் கூடிய, पद्मम् - தாமரையையும், समेघ-लेखम् - சிறு மேகத்துடன் கூடிய, शशिनः बिम्बं - च - சந்திர மண்டலத்தையும், परिभूय - வென்று, सादृश्य - कथा - प्रसङ्गम् - ஒப்புமைப்பற்றிப் பேச்சிற்கான இடத்தையும், चिच्छेद - நீக்கியது.

(க-து) அழகிய கறுத்த அலகங்களுடன் கூடிய பார்வதியின் முகம் வண்டுடன் கூடிய தாமரை, மேகத்துணுக்குடன் கூடிய சந்திர பிம்பம் இவற்றைக் காட்டிலும் மிக அழகாக இருந்ததால் அவளு டைய முகத்திற்கு உவமையாக, அவ்விரண்டையும் கூறுவதற்கு இடமே இல்லாமல் போயிற்று.

சமமாக உள்ள பொருளையே உவமையாகக் கூற இயலும். கறுத்த அலகமுடைய பார்வதியின் முகத்திற்கு

வண்டுடன் கூடிய தாமரை மலரைக் கூறலாமாயினும், தாமரையைவிட அவள் முகம் பொலிவுற்று இருந்ததால் அதனை உவமையாகக் கூற முடியவில்லை. அவ்வாறே மேகத்துடன் கூடிய சந்திரனும் உவமையாகவில்லை.

अलकैः - முன்னுச்சியில் புரளும் கேசம். இவற்றால் தாமரையையும், சந்திரனையும் வென்றது என்றும் பொருள் கூறலாம். அலகத்துடனிருக்கும் முகத்திற்குச் சேர, வெறுந் தாமரையையும், சந்திரனையும் கூறாது, முறையே வண்டுடனும், மேகத்துணுக்குடனும் இருக்கும் தாமரையையும் சந்திரனையும் கூறினார்.

कर्णार्पितो लोध्रकषायरूक्षे गोरोचनाक्षेपनितान्तगौरे।
तस्याः कपोले परभागलाभाद्बबन्ध चक्षूंषि यवप्ररोहः ॥ १७ ॥

तस्याः - அவளுடைய, कर्ण - अर्पितः - காதின் மேல் வைக்கப் பட்ட, यव - प्ररोहः - யவ தான்ய முளை, लोध्र - कषाय - रूक्षे - லோத்ர திரவம் காரணமாக ப்ரகாசமானதும், गोरोचना - क्षेप - नितान्त - गौरे கோரோசனை பூசியதால் மிகச் சிவந்திருப்பதுமான, कपोले - கன்னத்தில், परभाग - लाभात् - நல்ல இடங்கிடைத்தமையால், चक्षूंषि - (காண்போரின்) கண்களை, बबन्ध - (தன்னிடமே) இழுத்தது (நிலைபெறச்செய்தது).

(க-து) லோத்ரச் சாந்தினைத் தடவி எண்ணெயை நீக்கியதால் பார்வதியின் கன்னங்கள் பிரகாசமாக இருந்தன. மேலும், கோரோசனையினால் நல்ல நிறம் பெற்று விளங்கின. அலங்காரத்திற்காக, யவதான்யத்தின் நீண்ட முளைகளை அவள் காதுகளின் மேல் வைத்த பொழுது, அம்முளைகள், நல்லநிறப் பின்னணியைப் பெற்றதால் அழகு பெற்று காண்போரின் கண்களை தம்மிடமே நிலையாக இருக்கும்படி இழுத்தன.

यवप्ररोह: - கோதுமை போன்ற ஒருவகை தான்யம் யவம். இவற்றின் முளைகளை அணிவர். लोध्र - कषाय - லோத்ரப் பட்டையை அரைத்துச் செய்த சாந்து. எண்ணெயை நீக்கும் சக்தி இதற்கு உண்டு. तां लोध्रकल्केन - என்ற - 9 - ஆம் சுலோகம் காண்க. कषाय: - சாந்து; रूक्ष - பிரகாசமான, परभाग: - சிறந்த இடம் அல்லது குணச்சிறப்பு, இயற்கையிலே அழகான முளைகள், அழகான கன்னங்களுடன் தொடர்பு பெற்றதால் மிகவும் அழகியதாயின.

**रेखाविभक्तः सुविभक्तगात्र्याः किंचिन्मधूच्छिष्टविमृष्टरागः ।**
**कामप्यभिख्यां स्फुरितैरपुष्यदासन्नलावण्यफलोऽधरोष्ठः ॥ १८ ॥**

सुविभक्त - गात्र्याः - நன்கு அமைந்த மேனியையுடைய பார்வதியின், रेखा - विभक्तः - கோட்டினால் பகுக்கப்பட்டுள்ளதும், किंचित् - मधु - उच्छिष्ट - विमृष्ट-रागः - சிறிதே தேன்மெழுகினால் பிரகாசப்படுத்தப்பட்ட சிவப்பு நிறமுடையதும், आसन्न - लावण्य - फलः - அழகின் பயனை அண்மையிலேயே பெறப் போகின்றதுமான, अधर - ओष्ठः - கீழ் உதடு, स्फुरितैः - (தனது) துடிப்புக்களால், काम् - अपि - வர்ணிக்க இயலாத, अभिख्याम् - சோபையை, अपुष्यत् - (அவளுக்கு) வளர்த்தது.

(க-து) பார்வதியின் சரீரத்தில் வலது பாகமும் இடது பாகமும் ஏற்றத்தாழ்வின்றி ஒரேவகையில் அமைந்து இருந்தன. அவளது கீழ்உதடு மெல்லிய ஒரு கோட்டினால் இடையிலே பகுக்கப்பட்டு இருந்தது; இயற்கையாகவே சிவந்த உதட்டிற்கு செம்பஞ்சுரஸம் பூசி, தேன்மெழுகினால் மெருகிட்டனர்; எனவே, உதடு மிக அழகுற்றதாய், கணவனால் காணப்பெறுதல் என்ற அழகின் நற்பயனை அண்மையில் உடையதாய், சிறிதே அசைவதாய் இருந்து, அவளது முகத்தின் அழகை, விவரித்துக் கூறமுடியாதபடி அதிகமாக்கியது.

सुविभक्तः - 'நன்கு பகுக்கப்பட்ட' என்பது பதப்பொருள். யௌவனப் பருவம் வருவதற்கு முன் சரீர அமைப்பில் சில ஏற்றத் தாழ்வுகள் இருக்கலாம். யௌவனம் அத்தகைய குறைபாடுகளை நீக்கி, சரீரத்தைச் சரியான வகையில் பாகு பாடு செய்து வலதுபுறம், இடது புறம் என்ற இரண்டினை யும் ஒரே வகையில் ஒத்து இருக்கும்படி அமைக்கின்றது. ஸர்க்கம் 1, சுலோகம் 32 - காண்க. रेखाविभक्तः - 'ஒரு கோடு போல் அமைந்துள்ளது' என்பர் சிலர். கீழே 'सुविभक्त' என்பதற்கு இணங்க அவளது உதடு மெல்லிய சிறு கோட் டினால் இடையிலே பகுக்கப்பட்டிருந்தது. किञ्चित् . . . रागः - உதட்டிற்கு செவ்வர்ணம் தீட்டியபின், சிறிது தேன்மெழுகி னால் அதனைத்துடைப்பர். அவ்வாறு துடைப்பது, மெரு கிட்டது போல் உதட்டிற்குப் பிரகாசத்தைத் தரும். 'सिक्थकमलक्तकञ्चौष्ठयोर्दत्वा' - என்பர் வாத்ஸ்யாயனர் தமது காம ஸூத்ரத்தில்; आदौ ओष्ठमलक्तपिण्डेनोत्पिष्य पुनश्च तांबूकमुपयुज्य सिक्थकगुळिकया शनैः शनैः ताडयेत् - என்பது இதன் உரை. सिक्थकम् - தேன்மெழுகு. आसन्नलावण्यफलः - 'ஸமீபத்துள்ள அழகின் பயனையுடைய' என்பது பதப்பொருள். உதட்டின் அழகிற்குப் பலன் ஸமீபத்துள்ளது. ஸத்ரீகளின் அழகின் பயன் கணவர் கண்டு களிப்பதேயாம். प्रियेषु सौभाग्य - फला हि चारुता - என்பதனைக் காண்க. சீக்கிரமே விவாஹம் நடை பெறப்போவதால் சிவபிரான் கண்டு களிக்கும் பாக்யத்தைப் பெற்றது அவ்வுதடு. कामपि - உதடு முகத்திற்கு தந்த அழகினைக் கவி, தம்மால் வர்ணிக்க முடியாது எனவும் ரஸிகர்கள் தம்மனக் கண்ணினால் ஊஹித்துக் கொள்ள வேண்டும் என்றும் கருதுகிறார். स्फुरितैः - துடிப்பு, வரப் போகும் நன்மையைக் காட்டுவதாகும்.

पत्युः शिरश्चन्द्रकलामनेन स्पृशेति सख्या परिहासपूर्वम् ।
सा रञ्जयित्वा चरणौ कृताशीर्माल्येन तां निर्वचनं जघान ॥१९॥

चरणौ - (பார்வதியின்) பாதங்களை, रञ्जयित्वा - வர்ணத்தி ஞல் அழகு செய்தபின், "अनेन - இதனுல், पत्युः - (உன்) கணவரது, शिरः - चन्द्र - कलाम् - தலையிலுள்ள சந்திரகலையை, स्पृश - தொடு," इति - என, सख्या - தோழியினுல், परिहास - पूर्वम् - பரிஹாஸத்துடன், कृत - आशीः - ஆசீர்வதிக்கப்பட்ட, सा - அப் பார்வதி, ताम् - அவளை, माल्येन - கையிலுள்ள மாலையினுல், निर्वचनम् - வார்த்தை ஏதுமின்றி, जघान - அடித்தாள்.

(க-து) பார்வதியின் பாதங்களுக்குச் செவ்வர்ணம் பூசியபின், "உனது கோபத்தைத் தணிக்கச் சிவபிரான் உன் கால்களில் விழும் பொழுது அவர் சிரஸிலுள்ள சந்திரனை இப்பாதத்தால் நீ உதைக்க வேண்டும்" என ஆசீர்வதித்தாள் ஒரு தோழி. இதனைக் கேட்ட பார்வதி ஒன்றும் கூருமல், ஒரு மாலையினுல் மெதுவாக அவளைத் தட்டினுள்.

अनेन - இந்த ஒருமைச்சொல் "வர்ணத்தைக் குறிக் கின்றது." இவ்வர்ணத்தினுல் சந்திரகலையைத் தொடு என்று உரைகூறுவர் போஜர். பாதத்தைக் குறிப்பதாகக் கொள்வதில் பிழை ஒன்றும் இல்லை. माल्यम् - புஷ்பம் என்ற பொருளும் உண்டு. கையிலிருந்த தாமரை மலரினுல் தட்டி ஞள் என உரைகூறுவர் அருணகிரி. निर्वचनम् - பார்வதி ஏதும் கூருததற்குக் காரணம் அவளது வெட்கம். அவள் கூறியதை ஏற்காமைக்கு அடையாளமும் ஆகும். जघान - அடித்தாள். பிரியத்தினுல் பார்வதி தோழியைத் தட்டியது அவளை மேலும் பேசாது இருக்கச் செய்வதற்காக.

तस्याः सुजातोत्पलपत्रकान्ते प्रसाधिकाभिर्नयने निरीक्ष्य ।
न चक्षुषोः कान्तिविशेषबुद्ध्या कालाञ्जनं मङ्गलमित्युपात्तम् ॥

प्रसाधिकाभिः - அலங்காரம் செய்யும் பெண்களால், सुजात - उत्पल - पत्र - कान्ते - நன்கு வளர்ந்த நீலத்தாமரை இதழ் போல் அழகான, तस्याः - அவளுடைய, नयने - இரண்டு கண்களையும், निरीक्ष्य - பார்த்தபின், कालाञ्जनम् - சிறந்த மையானது, चक्षुषोः - கண்களுக்கு, कान्ति - विशेष - बुद्धया - சிறந்த அழகைத் தரும் என்ற எண்ணத்தால், न - उपात्तम् - (கையில்) எடுக்கப்படவில்லை. मङ्गलम् - (ஆனல்) மையிடுதல் மங்களகரம், इति - என்பதாலேயே, उपात्तम् - எடுத்துக் கொள்ளப்பட்டது.

(க-து) அணிசெய்விக்கும் பெண்கள், நன்கு வளர்ந்துள்ள நீலத்தாமரையின் இதழ்போல் கறுத்து நீண்டு அகன்று இருந்த பார்வதியின் கண்களைக் கண்ட பின்னும் மையைக் கையிலே எடுத்தது, மையிடுதல் மங்களம் என்று கருதியதால் தான். அவள் கண்களுக்கு மை அழகு செய்யும் என்ற கருத்தினுல் அல்ல.

सुजात - நன்கு தோன்றியது என்பது பதப்பொருள். गम्भीराम्भस्समुद्भूत - सुमृष्टनाल रविकर - विकसित - என்று ஸ்ரீராமனுஜர் கூறுவது सुजात - என்னும் சொல்லின் பொருளாகும். काल - अञ्जनम् -काल கறுத்த; இது மையின் இயற்கையான நிறத்தைக் குறித்தது. சிறந்த மை என்பர் மல்லிநாதர். मङ्गलम् -குங்குமம் போல் மையிடுவதும் மங்களமாகும்.

सा संभवद्भिः कुसुमैर्लतेव ज्योतिर्भिरुद्यद्भिरिव त्रियामा ।
सरिद्विहंगैरिव लीयमानैरामुच्यमानाभरणा चकासे ॥ २१ ॥

आमुच्यमान - आभरणा - (ஒன்றன் பின் ஒன்ருக) அணிவிக்கப்படும் ஆபரணமுடைய, सा - அவள், संभवद्भिः - (ஒன்றன்பின் ஒன்ருகத்) தோன்றுகின்ற, कुसुमैः - புஷ்பங்களால், लता - इव - கொடி (விளங்குவது) போலும், उद्यद्भिः - உதயமாகின்ற, ज्योतिर्भिः - நக்ஷத்திரங்களினுல், त्रि - यामा - इव - இரவு (விளங்கு

வது) போலும், लीयमानैः - (வந்து) உட்காருகின்ற, विहङ्गैः - பறவைகளினுல், सरित् - इव - நதி (விளங்குவது) போலும், चकासे - விளங்கினுள்.

(க-து) புஷ்பங்கள் தோன்றும் கொடி போன்றும், உதயமாகின்ற நக்ஷத்ரங்களையுடைய இரவு போன்றும், பறவைகள் வந்து அமரும் நதி போன்றும் ஒன்றையடுத்து ஒன்ருக ஆபரணம் அணிவிக்கப்படும் பார்வதி அழகுடன் விளங்கினுள்.

புஷ்பங்கள் கொடிகளுக்கு இயற்கையாக அமைவது போல் ஆபரணங்களும் அவளுக்கு இயற்கையாக இருப்பன போல் பொருந்தி இருந்தன. இங்குள்ள மூன்று உபமானங்களும் மூன்று கருத்துக்களைக் குறிக்கும்.

कुसुमैः लता - इव - இவ்வுபமானம் கொடிகளில் பல நிறப் புஷ்பங்கள் இருப்பதுபோல் பார்வதியின் ஆபரணங்சள் பல நிறமுள்ள ரத்னங்களால் ஆனவை என்பதைக் குறிக்கும். ज्योतिर्भिः त्रियामा इव - இவ்வுபமானம் நக்ஷத்திரங்கள் போன்ற முத்திஞலான அணிகளைக்காட்டும். लीयमानैः विहंगैःसरित् इव - இங்கு கூறப்படும் பக்ஷி சக்ரவாகம் என்று கொண்டு அவைகள் பொன்னிறமுடையவையாதலால் பொன்னணிகளைக் குறிக்கும் என்பர் மல்லிநாதர்.

आत्मानमालोक्य च शोभमानमादर्शबिम्बे स्तिमितायताक्षी ।
हरोपयाने त्वरिता बभूव स्त्रीणां प्रियालोकफलो हि वेषः ॥२२॥

किञ्च - மேலும் (பிறகு), शोभमानम् - சோபையுடனிருக்கின்ற, आत्मानम् - தன்னை, आदर्श - बिम्बे - கண்ணுடியில் தோன்றிய பிரதிபிம்பத்தில், आलोक्य - பார்த்து, स्तिमित - आयत - अक्षी - சலனமற்ற நீண்டகண்களையுடையவளாக, सा - அப்பார்வதி,

हर - उपयाने - சிவபிரானை அடைவதில், त्वरिता - அவசரமுடைய வளாக, बभूव - ஆனாள். हि - ஏனெனில், स्त्रीणाम् - ஸ்த்ரீகளின், वेषः - அலங்காரம், प्रिय - आलोक - फलः - கணவன் காண்பதையே பயனாக உடையது.

(க-து) அலங்காரம் செய்தபின் பணிப்பெண்கள் பார்வதியின் முன் கண்ணாடியை வைத்தனர். கண்ணாடியில் தன்னழகைக் கண்டவுடன் ஆச்சரியத்தினால் பார்வதியின் கண்கள் அசைவற்று நின்றன. இவ்வழகைச் சிவபிரான் காண வேண்டுமென்ற விருப்பத்தால் சீக்கிரமே அவரிருக்குமிடத்திற்குச் செல்ல மனத்துள் அவள் விரைந்தாள். ஏனெனில் ஸ்த்ரீகளின் அழகைக் காண வேண்டியவரும் கண்டு மகிழவேண்டியவரும் கணவர்தாம். அழகின் பயன் அதுவே.

स्तिमित - 'அசைவற்ற'; கண் அசைவற்றிருந்தமைக்குக் காரணங்கள் இரண்டு. தான் முன்பு காணுதவகையில் தன்னழகு இச்சமயத்தில் அமைந்திருந்ததால் வியப்பு உணர்ச்சியால் அவள் கண் இமைக்கவும் மறந்தது. சிவபிரானது நினைவு வந்ததாலும் கண் இமைப்பு இல்லை. ஏனெனில் ஆழ்ந்த சிந்தனை இருக்கும் பொழுது கண்ணிமைப்பும் நின்று விடுகிறது. 'आदर्शबिम्बे' - 'வட்டமான கண்ணாடியில்' என்றும் பொருள் கூறலாம்.

இதுவரை பணிப்பெண்களும் உறவினரும் செய்த அலங்காரம் கூறப்பட்டது. இனிவரும் மூன்று சுலோகங்களில் பெண்ணின் தாய் செய்ய வேண்டியதும் பார்வதிக்கு மேனை செய்ததுமான அலங்காரம் கூறப்படுகின்றது.

अथाङ्गुलिभ्यां हरितालमार्द्रं माङ्गल्यमादाय मनःशिलां च ।
कर्णावसक्तामलदन्तपत्रं माता तदीयं मुखमुन्निनाय ॥ २३ ॥

अथ - பிறகு, माता - தாய் (மேனை), माङ्गल्यम् - மங்களத்திற்கான, आर्द्रम् - ஈரமான, हरितालम् - மஞ்சள் நிறமான தாளகத்

தையும், मनः शिलाम् च - மனச் சிலையையும், अङ्गुलिभ्यां - இரண்டு விரல்களால், आदाय - எடுத்த பின், कर्ण - अवसक्त - अमल - दन्त - पत्र - காதிலே அணிவிக்கப்பட்ட வெண்ணிற, யானைத் தந்தத்தினாலான காதணியுடைய, तदीयम् - அவளது, मुखम् - முகத்தை, उन्निनाय - நிமிர்த்தினாள்.

(க-து) மேனை, பார்வதியின் காதுகளிலே யானைத்தந்தத்தினால் செய்யப்பட்ட வெண்ணிறமான காதணியை அணிவித்தாள், திலகமிட விரும்பி குழைத்த மஞ்சள் நிறத்தாளகத்தையும் மனச்சிலையையும் இருவிரல்களில் எடுத்துக்கொண்டு இடது கையினால் முகவாயைப் பிடித்து பார்வதியின் முகத்தை நிமிர்த்தினாள்.

हरिताल: - மஞ்சள் நிறமானது. இது தமிழில் அரிதாரம் எனப்படும். मनः शिला - மனச் சிலை. இது சிவப்பு நிறமுடையது. ஒரு வகை தாதுப்பொடி. दन्त-पत्रम्-தந்தத்தினால் இலை வடிவிலே செய்யப்பட்ட காதணி. இதனை மேனை அணிவித்தாள். இது இலைவடிவின்றி வேறு வடிவிலும் இருக்கலாம். उन्निनाय—" तिलक - विधानार्थं मुखमुन्नमय्य दर्शनकुतूहलात् किञ्चित्कालं तूष्णीमेव स्थितवतीत्यर्थः। अत एवोन्नयने वाक्य- समाप्तिः। न पुनरुन्नीय तिलकं चकारेत्यत्र" என்பது அருணகிரி உரை. उन्नमय्य - என்பது மல்லிநாதர் பாடம்.

**उमास्तनोद्भेदमनु प्रवृद्धो मनोरथो यः प्रथमं बभूव ।**
**तमेव मेना दुहितुः कथंचिद्विवाहदीक्षातिलकं चकार ॥ २४ ॥**

यः - (மேனைக்கு) எந்த, मनोरथः - ஒரு விருப்பம், उमा - स्तन - उद्भेदम् - अनु - பார்வதியின் யௌவனப் பருவத் தொடக்கத்திற்குப் பின், प्रथमम् - (பிற விருப்பங்களுக்கெல்லாவற்றினும்) முதன் முதலாக, प्रवृद्धः - (தோன்றி) வளர்ந்து, बभूव - இருந்ததோ, तमेव - அவ்விருப்பத்தையே, विवाह - दीक्षा -

तिलकम् - விவாஹ தீக்ஷையின் திலகமாக, मेना - மேனை, दुहितुः - தன் மகளுக்கு, कथंचित् - மிக சிரமத்துடன், चकार - செய்தாள்.

(க-து) பார்வதிக்கு யௌவனம் தோன்றிய நாளிலிருந்தே மேனையின் மனத்தில் அவளை நல்லவரனுக்கு விவாஹம் செய்து தர வேண்டுமென்ற விருப்பம் உண்டாயிற்று. கணவரது வீட்டில் பார்வதி வாழவேண்டிய வகைகளைப்பற்றி மேனையின் மனத்தில் தோன்றிய ஆசைகள் எல்லாவற்றினையும் விட முதன் முதலில் தோன்றியது இவ்விருப்பமே. தாய் திலகமிடுதலே விவாஹத்தின் தொடக்கத்தைக் குறிக்குமாகையால் மேனை ஸந்தோஷத்தினால் ஆனந்த பாஷ்பம் கண்களை மறைக்க மிகசிரமத்துடன், பார்வதியின் நெற்றியில் தனது ஆசையே உருவமெடுத்து வந்தது போன்ற திலகத்தை, ஹரிதாளம், மனச்சிலை இவைகளால் இட்டாள்.

उमास्तनोद्भेदमनु - இங்குள்ள, अनु - என்ற சொல் காரணத்தைக் காட்டியது. உமையின் யௌவனத் தோற்றம் மேனை மனத்தில் தோன்றிய ஆசைக்குக் காரணமாயிருந்தது. जपमनु वप्राषीत् - என்பதைக் காண்க. प्रवृद्धः - யௌவனம் வளர வளர ஆசையும் வளர்ந்தது. प्रथमम् - கணவரது வீட்டில் அவனது அன்பை அடைந்து ஸர்வாதிகாரம் பெற்று அவள் வாழவேண்டும் என்பது போன்ற மற்ற விருப்பங்கள் எல்லாவற்றிற்கும் முதலில் உண்டான விருப்பம், விவாஹம் செய்விக்கவேண்டும் என்பது. ''எப்பொழுது நான் என் பெண்ணின் முகத்தில் விவாஹ தீக்ஷைக்கான திலகமிடும் பாக்யம் பெறுவேன்'' என்று மேனை எண்ணிய விருப்பமே எல்லாவற்றினும் முதலாகும். ஏனெனில் திலகமிடுதல் விவாஹத் தொடக்கத்தைக் குறிப்பதாகும். तमेव तिलकम् - அவ்வாசை நிறைவேறியதால் திலகமிட்டாள் என்று கூறுமல், அவ்வாசையையே திலகமாக இட்டாள் என ஆசையைத் திலகமாகக் கவி கூறியது மேனையின் அதிக விருப்பத்தைக் காட்டியது. कथञ्चित् - ஆனந்தபாஷ்பம் கண்களை மறைத்ததா

லும், அச்சமயத்தில் உண்டான உணர்ச்சி மிகுதியாலும் நிகழ்ந்த கை நடுக்கத்தினுலும் மிகவும் சிரமப்பட்டுத் திலக மிட்டாள் என்க. यः मनोरथः तं . . . . तिलकं चकार - எந்த வகை யில் திலகமிட வேண்டுமென்று ஆசைப்பட்டாளோ அவ் வகையில் திலகமிட்டாள் என்பர் அருணகிரி.

முதல் சுலோகத்தில் கூறிய विवाहदीक्षा என்ற பதம் இச்சுலோகத்தில் வந்திருப்பதைக் காண்க.

बबन्ध चास्राकुलदृष्टिरस्याः स्थानान्तरे कल्पितसन्निवेशम् ।
धात्र्यङ्गुलीभिः प्रतिसार्यमाणमूर्णामयं कौतुकहस्तसूत्रम् ॥ २५ ॥

अस्र - आकुल - दृष्टिः - ஆனந்தக் கண்ணீரால் கலங்கிய பார்வையுடைய, सा - மேனை, स्थानान्तरे - வேறு இடத்தில், कल्पित - सन्निवेशम् - வைக்கப்பட்டதும், धात्री अङ्गुलीभिः - தாதி யின் விரல்களால், प्रतिसार्यमाणम् - (அதன் இடத்தில் இருக் கும்படி) ஒதுக்கப்பட்டதும், ऊर्णामयम् - செம்மறி ஆட்டு ரோமத்தினுலானதுமான, कौतुक - हस्त - सूत्रम् - 'கௌதுகம்' என்ற கையில் அணிவிக்கப்படும் பிரதிஸரத்தை, अस्याः - அவளுக்கு, बबन्ध - च - கட்டினுள்.

(க-து) மேனை ஆட்டுரோமத்தினுலான மங்கள நூலைப் பார்வதியின் கையில் கட்டினுள். ஆனந்த பாஷ்பம் காரணமாக கண்கலங்கி இருந்ததால் மேனை நன்கு பார்க்க முடியவில்லை. எனவே, மங்கள நூலை அது இருக்க வேண்டிய இடத்தில் வைக்கா மல் வேறு இடத்தில் வைத்துக்கட்ட முற்பட்டாள். தாதி, சரியான இடத்தில் இருக்கும்படி அதனை ஒதுக்கினுள்.

ऊर्णामयम् - மங்கள நூலை ஆட்டு ரோமத்தினுல் செய்வர். कौतुकम् - மங்களம்; 'மங்களத்திற்கான', என்று பொருள். அந்நூலுக்கே 'கௌதுகம்' என்ற பெயரும் உண்டு. மற்ருெரு

பெயர் ப்ரதிஸரம் என்பது. हस्त - सूत्रम् - கையிலே கட்டப்படு வதால் हस्त सूत्रम् என்ருர்.

क्षीरोदवेलेव सफेनपुञ्जा पर्याप्तचन्द्रेव शरत्त्रियामा ।
नवं नवक्षौमनिवासिनी सा भूयो बभौ दर्पणमादधाना ॥ २६ ॥

नव - क्षौम - निवासिनी - புதிய வெண்பட்டு உடுத்தியவளும், नवम् - புதிய, दर्पणम् - கண்ணுடியை, आदधाना - கையிலேந்திய வளுமான, सा - அவள், सफेन - पुञ्जा - நுரைத்திரளுடன் கூடிய, क्षीर - उद - वेला - इव - பாற்கடலின் கரை (அலேசாயும் இடம்) போலும், पर्याप्त - चन्द्रा - பூர்ண சந்திரனேயுடைய, शरत् - त्रियामा - इव - சரத்கால இரவு போலும், भूयः - அதிகம் (மிகவும்), बभौ - அழகுடன் விளங்கிஞள்.

(க-து) வெண்பட்டு அணிந்த பார்வதி, நுரைத்திரளேயுடைய பாற்கடலின் கரைபோல் காணப்பட்டாள். புதிய கண்ணுடியைக் கையிலேந்திய அவள் பூர்ண சந்திரனேயுடைய சரத்கால இரவு போல் இருந்தாள். இந்நிலேயில் அவள் மிக ஸௌந்தர்யத்துடன் விளங்கிஞள்.

दर्पणः - மங்களப் பொருள்களிலே ஒன்ருதலால் பார்வதி யின் கையில் கண்ணுடியைத் தந்தனர். शरत् त्रियामा - சரத் கால இரவு மேகங்களில்லாததால் நக்ஷத்திரங்களின் ஒளி யால் இருள் குறைந்து பிரகாசத்துடன் இருக்கும். भूयः बभौ. முன்னிலும் அதிக அழகுடன் விளங்கிஞள். वेला - கடலின் அலேமோதுகின்ற தரைப்பகுதி. கரைமேல் மோதும் அலே என்பர் அருணகிரி.

तामर्चिताभ्यः कुलदेवताभ्यः कुलप्रतिष्ठां प्रणमय्य माता ।
अकारयत्कारयितव्यदक्षा क्रमेण पादग्रहणं सतीनाम् ॥ २७ ॥

कारयितव्य - दक्षा - செய்ய வேண்டியவைகளைச் செய்வதில் திறமை வாய்ந்த, माता - தாய் மேனை, कुल - प्रतिष्ठाम् - தனது குலத்தை நிலை பெறச் செய்பவளான, ताम् - அப்பார் வதியை, अर्चिताभ्यः - விசேஷமாகப் பூஜிக்கப்பட்ட, कुल - देवताभ्यः - குல தெய்வங்களுக்கு, प्रणमय्य - நமஸ்காரம் செய் வித்தபின், सतीनाम् - பதிவிரதைகளுக்கு, पाद - ग्रहणम् - (பாதங் களைத் தொட்டு) நமஸ்காரத்தை, क्रमेण - முறைப்படி, अकारयत् - செய்வித்தாள்.

(க-து) மேனை, செய்யவேண்டியதனைத்தையும் நன்கு அறிந்த வள். எனவே விவாஹத்திற்கு முன், விசேஷமாகப் பூஜிக்கப் பட்ட குலதெய்வங்களை வணங்கும்படி பார்வதிக்குக் கூறி வணங்கச் செய்தாள். அதன்பின் உறவினரும் பதிவிரதையுமான ஸ்த்ரீ களுக்கு, அவர்களின் வயது, குலம், முதலியவைகளை அனுசரித்து முறையே வந்தனம் செய்யும்படி கூறினாள்.

कुल प्रतिष्ठाम् - குலத்தை நற்பெயருடன் நிலைபெறச் செய் பவள். பெண்கள் தங்களது நன்னடத்தையால் புகுந்த குலம் மாத்திரமேயன்றிப் பிறந்த குலத்திற்கும் பெருமை தருப வர்கள். अर्चिताभ्यः - சிறப்பாகப் பூஜை செய்யப்பட்ட. कुलदेवताभ्यः - ஒவ்வொரு குலத்திலும் விசேஷமாகப் பூஜிக்கப்படும் தெய் வங்கள் உண்டு. இவைகளைக் குலதெய்வங்கள் என்பர். இப் பொழுதும் வெங்கடாசலபதி, சாஸ்தா முதலியவர்களைக் குலதெய்வமாகப் பூஜிக்கின்றனர். पादग्रहणम् - பாதத்தைத் தொட்டு வணங்குதல்; क्रमेण - 'வயதிலே மூத்தவர்களை முத லிலும், இளையவர்களைப் பிறகும் என்ற முறைப்படி.

अखण्डितं प्रेम लभस्व पत्युरित्युच्यते ताभिरुमा स्म नम्रा ।
तया तु तस्यार्धशरीरभाजा पश्चात्कृताः स्निग्धजनाशिषोऽपि ॥

नम्रा - வணங்கிய, उमा - பார்வதி, ताभिः - அப்பதிவிரதைகளால், 'पत्युः - கணவரது, अखण्डितम् - பரிபூர்ணமான, प्रेम - அன்பை, लभस्व - அடைவாயாக,' इति - என்று, उच्यते - स्म - கூறப்பட்டாள். तस्य - கணவரது, अर्ध - शरीर - भाजा - (விவாஹத்திற்குப்பின்) பாதி சரீரத்தைப்பெற்ற, तया - तु - அவளாலோ, स्निग्ध - जन - आशिषः - अपि - அன்புடையோரின் ஆசீர்வாதங்களும் கூட, पश्चात् - कृताः - (பின்னிருப்பதாக) மிகத் தாழ்ந்தனவாகச் செய்யப் பட்டன.

(க-து) "கணவரது அன்பை முற்றிலும் நீயே அடைய வேண்டும். (அதனில் பங்கு பெறும்படி உனக்குப் போட்டியாக மற்றொரு மனைவி இருத்தல் கூடாது)" என்று அப்பதிவிரதைகள் ஆசீர்வாதம் செய்தனர். அவ்வாசீர்வாதம், கிடைத்தற்கரிய ஒரு பயனை அடையும்படி கூறியதேயானாலும், விவாஹத்திற்குப்பின், அன்பு மாத்திரமேயன்றி, சிவபிரானது சரீரத்தில் பாதியையும் பெற்றதால், பார்வதி, அவ்வாசீர்வாதம் ஒரு சிறிய பலனையே கூறியதாகக் கருதும்படி செய்துவிட்டாள். ஆசீர்வாதத்தில் கூறிய பயனைக்காட்டிலும் அதிக பயன் பெற்றாள்.

கிடைத்தற்கரிய பெரிய பயனைக் கொண்டதாயினும் அவ்வாசீர்வாதம், பின் நிகழ்ந்த பலனைக்காணும்பொழுது அல்ப பலனுடையதாகக் காணப்பட்டது. अखण्डितम् - துண்டிக்கப்படாதது. வேறு மனைவியர் இருப்பின் அன்பு பங்கிடப் பட்டுவிடும். स्निग्धजन आशिषः अपि - இங்குள்ள अपि என்ற சொல் அன்பைப் பூர்ணமாகப் பெறுவதும் கடினம் என்பதைக் காட்டுகின்றது. पश्चात् कृताः பின்னிட்டதாகச் செய்யப் பட்டன, என்பது பதப்பொருள். தாழ்ந்ததாக, ஒருசிறு பயனைக் கூறியதாகச் செய்யப்பட்டது என்பது கருத்து. முதல் சுலோகத்தில் குறிப்பிட்ட விவாஹ தீக்ஷை இதுவரை கூறப்பட்டது.

इच्छाविभूत्योरनुरूपमद्रिस्तस्याः कृती कृत्यमशेषयित्वा ।
सभ्यः सभायां सुहृदास्थितायां तस्थौ वृषाङ्कागमनप्रतीक्षः ॥

कृती - ஸமர்த்தனும், सभ्यः - பண்புடையவனுமான, अद्रिः - ஹிமவான், इच्छा - विभूत्योः - தனது ஆசை, செல்வம் இவை களுக்கு, अनुरूपम् - தக்கவாறு, तस्याः - பார்வதியின், कृत्यम् - விவாஹதீக்ஷையை, अशेषयित्वा - முற்றிலும் முடித்து, सुहृद् - आस्थितायाम् - நண்பர்களால் வீற்றிருக்கப் பெற்ற, सभायाम् - ஸபையில், वृष - अङ्क-आगमन - प्रतीक्षः - சிவபிரானது வருகையை எதிர்நோக்கியவனாக, तस्थौ - இருந்தான்.

(க-து) செய்ய வேண்டியதைச் செய்வதிலே திறமை வாய்ந்த வன் ஹிமவான். நல்ல பண்புடையவன். அவன், பெண்ணிற்குச் செய்யவேண்டிய விவாஹ தீக்ஷையை தன் உத்ஸாஹத்திற்கும், செல்வத்திற்கும் தக்கப்படி செய்து முடித்தபின், நண்பர்களுடன் சபையில் சிவபிரானுடைய வருகையை எதிர்நோக்கி இருந்தான்.

सभ्यः - நல்லவர்களுடன் சபையில் இருக்கத்தக்கவன்; நாகரிகமான முறையில் பேசவும், நடக்கவும் அறிந்தவன். பண்புடையவன். असभ्यः என்பது இதன் எதிர்ப்பதம்.

इच्छाविभूत्योः अनुरूपम् - பெண்ணின் விவாஹத்தைச் சிறப் பாகச் செய்ய விருப்பமும் அதற்கேற்ற செல்வமும் இருந்தன. எனவே இவ்விரண்டிற்கும் ஏற்றவகையில் தீக்ஷையைச் செய்தான்.

இனி வரும் இருபத்திரண்டு சுலோகங்கள், சிவபிரானது அலங்காரம், வருகை முதலியவற்றைக் கூறுகின்றன.

तावद्भवस्यापि कुबेरशैले तत्पूर्वपाणिग्रहणानुरूपम् ।
प्रसाधनं मातृभिरादृताभिर्न्यस्तं पुरस्तात्पुरशासनस्य ॥ ३० ॥

तावत् - அதே ஸமயத்தில், कुबेर - शैले - கைலாஸத்தில், तत् - पूर्व - पाणि - ग्रहण - अनुरूपम् - மிகச்சிறந்ததும் விவாஹத்திற்குத் தகுந்தவாறுள்ளதுமான, प्रसाधनम् - அலங்காரப் பொருள், आदृताभिः - பக்தியுள்ள, मातृभिः - தாய்மார்களால், पुर - शासनस्य - முப்புரங்களை எரித்த, भवस्य - अपि - சிவபிரானது, पुरस्तात् - முன்னிலையில், न्यस्तम् - வைக்கப்பட்டது.

(க-து) உமைக்கு அலங்காரம் முதலிய விவாஹதீக்ஷை நடந்த அதே ஸமயத்தில், கைலாஸத்தில், வரன் அணிந்து கொள்வதற்கான அலங்காரப் பொருள்களை, பிராஹ்மி, மாஹேச்வரி முதலான தாய்மார்கள் மரியாதையுடன் சிவபிரானெதிரில் வைத்தனர். அப்பொருள்கள் எல்லாம் விவாஹத்திற்கு ஏற்றனவாகவும், மிகச் சிறந்தனவாகவும் இருந்தன.

कुबेर - शैल - கைலாஸம். இது குபேரனுடையது. तत्पूर्व-पाणिग्रहण -“அம் முதல் முதலான திருமணத்திற்கு” என்று பதப்பொருள். तत्पूर्व - அதுவே முதலாவதான; ஆனால் இச்சொல், முதல் விவாஹம் எப்போதும் சிறப்புடன் இருக்குமாதலால், லக்ஷணையினால் ‘மிகச்சிறந்த’ என்ற பொருள் தந்தது. तत्पूर्व - இந்த சொல்லைக்கவி புதிய - அல்லது முதன் முதலான என்ற பொருளிலே உபயோகிக்கின்றார். तत्पूर्व - भंगे वितथ - प्रयत्नः- (ரகு. 2.42) என்பதனைக் காண்க. तत्पूर्व - என்பதனை पाणिग्रहण - என்பதுடன் சேர்த்து அந்த முதல் விவாஹத்திற்கு பொருத்தமான என்று கூறுவர் மல்லிநாதர் முதலிய உரைகாரர்கள். இது சிவபிரானுக்கு முதல் விவாஹமில்லாததால் இப்பொருளிற்குப் பொருத்தம் காண்பதில் சிரமம் உண்டு. मातृभिः - சிவபிரானுக்குப் பணிவிடை செய்யும் தேவதைகள்: பிராஹ்மி, மாஹேச்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, இந்திராணி, சாமுண்டா என எழுவர். அவர்களை सप्त मातरः - என்ற சொல்லால் குறிப்பர்.

मातृभिः न्यस्तम् - 'बन्धुभूताः हि नार्यः वरमण्डने विशेषेण कौतुकिन्यो भवन्ति' என்பது அருணகிரியின் உரை. உறவினரான பெண்கள் வரனை அலங்கரிப்பதில் சிறப்பாக ஊக்கம் கொள்கின்றனர்.

तद्गौरवान्मङ्गलमण्डनश्रीः सा पस्पृशे केवलमीश्वरेण ।
स एव वेषः परिणेतुरिष्टं भावान्तरं तस्य विभोः प्रपेदे ॥ ३१ ॥

ईश्वरेण - சிவபிரானல், सा - அந்த, मङ्गल - मण्डन - श्रीः - மங்கல அலங்காரப் பொருள், तद् - गौरवात् - அத்தாய்மார்களிடமிருந்த கௌரவத்தால், केवलम् पस्पृशे - தொடுதல் மாத்திரமே செய்யப் பட்டது. विभोः - வல்லமை வாய்ந்த, तस्य - அச்சிவபிரா னுடைய, सः एव वेषः - முன்பிருந்த உடை முதலியன, परिणेतुः - வரனுக்கு (மணமகனுக்கு), इष्टम् - பிரியமான, भाव - अन्तरम् வேறு வேறு பொருளாக மாறும் நிலையை, प्रपेदे - அடைந்தன.

(க-து) தாய்மார்கள் வைத்த மங்கலப் பொருள்களை, அவர் களிடம் உள்ள மரியாதையினல் அங்கீகரித்ததற்கு அடையாள மாகத் தொட்டார். ஆனல் எடுத்துக்கொள்ளவில்லை. வல்லமை வாய்ந்த சிவபெருமானுக்கு முன்பே இருந்த விபூதி, கபாலம், யானைத்தோல், பாம்பு, முதலியவைகளே, உலகில் வரன் அணிவதற்கு உகந்த பொருளாக அவர் விருப்பத்தை அனுசரித்து மாறிவிட்டன.

मङ्गलमण्डनश्रीः - 'श्रीशब्देन 'श्रीमत्' लक्ष्यते । श्रीमन्मण्डनमित्यर्थः। नारायणः । पस्पृशे केवलम् - தொடப்பட்டனவேயன்றி தரிக்கப் பட்டன அல்ல.

எந்தப்பொருள் எப்படி மாறியதென்பது பின்வரும் சுலோகங்களில் கூறப்படுகின்றது.

बभूव भस्मैव सिताङ्गरागः कपालमेवामलशेखरश्रीः ।
उपान्तभागेषु च रोचनाङ्को गजाजिनस्यैव दुकूलभावः ॥ ३२ ॥

भस्म एव - விபூதியே, सित - अङ्गरागः - வெண்மையான சந்தனச் சாந்தாக, बभूव - மாறியது; कपालम् - एव - மண்டை ஓடே, अमल - शेखर - श्रीः - நிர்மலமான தலையணியாக, (बभूव) - மாறியது; गज - अजिनस्य - एव - யானைத்தோலுக்கே, उपान्त - भागेषु - ஓரங்களிலே (கரைகளிலே), रोचना - अङ्कः - கோரோசனை யினாலான (ஹம்ஸம் முதலிய) அடையாளமுடைய, दुकूल - भावः च - பட்டுவஸ்திரமாக இருக்கும் தன்மை, (बभूव) - உண்டா யிற்று.

(க-து) ஸத்யஸங்கல்பனான சிவபிரானது விருப்பப்படி விபூதி சந்தனமாயிற்று; கபாலம் தலையின் அணிகலனாயிற்று; யானைத்தோல் கோரோசனையால் அழகு செய்யப்பட்ட கரையையுடைய வெண் பட்டாக மாறியது.

अमलशेखर - श्रीः - 'श्रीमच्छेखरः' என்று வ்யாக்யானம் செய்வர் நாராயணர்.

शङ्खान्तरद्योति विलोचनं यदन्तर्निविष्टामलपिङ्गतारम् ।
सान्निध्यपक्षे हरितालमय्यास्तदेव जातं तिलकक्रियायाः ॥ २३ ॥

शङ्ख - अन्तर - द्योति - நெற்றியின் மத்தியில் பிரகாசிப்பதும், अन्तः - निविष्ट - अमल - पिङ्ग - तारम् - உள்ளே இருக்கின்ற நிர்மலமான பொன்னிற விழியையுடையதுமாக, यत् - எந்த மூன்றுவது, विलोचनम् - கண் இருந்ததோ, तत् - एव - அதுவே, हरिताल - मय्याः - ஹரிதாளத்தினாலான, तिलक - क्रियायाः - திலகம் இடுதலை, सान्निध्य - पक्षे - அமைப்பதில் உதவியாக, जातम् - இருந்தது.

(க-து) நெற்றியிலிருந்த மூன்றுவது கண், ஹரிதாள திலகமாக இருந்து சிவபிரானுக்கு அழகை அளித்தது.

शङ्खः - நெற்றி எலும்பு, शङ्खो निधौ ललाटास्थि - என்பது அமரம். अन्तर्निविष्ट अनल - என்பது அருணகிரியின் பாடம்.

" உள்ளே இருக்கின்ற அக்னியினுல் பொன்னிறமான விழியுடைய " என்பது உரை. तिलकक्रियाया: - क्रियाशब्दो द्रव्यपरः 'कृतस्य तिलकस्य' என்பது அருணகிரி உரை. सान्निध्यम् - இருத்தல், இருப்பது. पक्षः - உதவி; துணை. तिलकक्रियाया: सान्निध्य - पक्षे - திலகமிருப்பதால் ஆகவேண்டிய காரியத்தில் - அதாவது அழகை உண்டாக்குவதில், जातम् - காரணமாக ஆயிற்று மூன்ருவது கண்.

यथाप्रदेशं भुजगेश्वराणां करिष्यतामाभरणान्तरत्वम् ।
शरीरमात्रं विकृतिं प्रपेदे तथैव तस्थुः फणरत्नशोभाः ॥ ३४ ॥

यथाप्रदेशम् - தம்தமிடத்தில், आभरणान्तरत्वम् - (ஹாரம், கடகம் முதலிய) வெவ்வேறு ஆபரணமான நிலையை, करिष्यताम् - (செய்கின்ற) அடையப்போகின்ற, भुजग - ईश्वराणाम् - ஸர்ப்பங்களின், शरीरमात्रम् - உடல் மாத்திரமே, विकृतिम् - மாறு பாட்டை, प्रपेदे - அடைந்தது; फण - रत्न - शोभा: - படத்திலுள்ள ரத்தினங்களின் சோபைகள், तथा - एव - அப்படியே (மாறுபாடு இன்றி), तस्थुः - இருந்தன.

(க-து) சிவபிரானது கழுத்து, கை, தோள், இடுப்பு முதலிய இடங்களில் எல்லாம் பாம்புகள் இருந்தன. அந்தந்த இடமும் ஒவ்வொரு வகை ஆபரணம் அணிவதாகும். எனவே, ஆங்காங்கு இருந்த ஸர்ப்பங்கள், அவ்வவ்விடங்களிலே அணியும் ஆபரணமாக மாறியபொழுது அவைகளின் உடல்கள் மாத்திரமே மாறின. அவை களின் சிரஸிலுள்ள ரத்தினங்கள் மாறவில்லை. அந்தந்த அணிகளிலே பதித்த ரத்தினங்களாக நின்றன அவை. கழுத்திலே இருந்த பாம்பு முத்துமாலையாகவும், தோளிலே இருந்தது தோள்வளையாகவும், கையிலே இருந்தது கங்கணமாகவும், இடையிலே இருந்தது உதரபந்தனம் என்ற ஆபரணமாகவும் மாறின என்பதாம்.

दिवापि निष्ठ्यूतमरीचिभासा बाल्यादनाविष्कृतलाञ्छनेन ।
चन्द्रेण नित्यं प्रतिभिन्नमौलेश्चूडामणेः किं ग्रहणं हरस्य ॥ ३५ ॥

दिवा - अपि - பகலிலும். निष्ठ्यूत - मरीचि - भासा - வெளிவிடப் பட்ட கிரணங்களின் காந்தியுடையதும், बाल्यात् - சிறியதாக இருப்பதால், अनाविष्कृत - लाञ्छनेन - களங்கமற்றதுமான, चन्द्रेण - சந்திரனுடன், नित्यम् - எப்பொழுதும், प्रतिपन्न - मौलेः - இணைந்த சிரஸையுடைய, हरस्य - சிவபிரானுக்கு, चूडामणेः - வேறு தலையணியான ரத்தினத்தை, ग्रहणम् - எடுத்துக்கொள்வது, किम् - எதற்கு?

(க-து) அழகிற்குத் தலையிலே ரத்தினமணிவர். சிவபிரானது முடியில் பகலிலும் ஒளிவீசுகின்ற களங்கமற்ற சந்திரன் இருப்பதால் வேறு ஆபரணத்தை அவர் ஏற்கத் தேவையில்லை.

दिवापि . . . . । ஈசுவரனது அருளால் சந்திரகலை பகலிலும் ஒளியுடனிருந்தது. बाल्यात् - இளமைப்பருவம்; சிவபிரானது சிரஸில் இருப்பது ஒரே கலையாகையால் அதன் சிறிய உருவம் கருதி இச்சொல்லை உபயோகித்தார் கவி. अनाविष्कृत लाञ्छनेन - ' வெளியில் காண்பிக்கப்படாத களங்கமுடைய, என்பது பதப்பொருள். களங்கமற்ற, என்பது கருத்து. ग्रहणम् - இச் சொல்லை - ' கூறுதல் ' என்ற பொருளுடையதாகக் கொண்டு " சிவபிரானது சூடாமணியைப் பற்றி கூறுவது எதற்காக? " என உரைப்பர் அருணகிரி.

चूडामणेः - शिरोऽलङ्कारस्य ग्रहणं वचनम् । ग्रहणशब्दस्य वचनार्थत्वं प्रसिद्धम् । वैकुण्ठनामग्रहणं अशेषाघहरं विदुः (भा-6-2-14) इत्यादौ । किम् - किमर्थम् ? निष्प्रयोजनमित्यर्थः । என்பது அவர் உரை.

इत्यद्भुतैकप्रभवः प्रभावात्प्रसिद्धनेपथ्यविधेर्विधाता ।
आत्मानमासन्नगणोपनीते खड्गे निषक्तप्रतिमं ददर्श ॥ ३६ ॥

इति - இவ்வாறு, प्रभावात् - தமது சக்தியால், प्रसिद्ध - नेपथ्य - विधेः - உலகறிந்த அணி அமைப்பை, विधाता - செய்தவரும்,

अद्भुत - एक - प्रभवः - ஆச்சர்யத்திற்கெல்லாம் முக்கிய காரணமுமான சிவபிரான், आसन्न - गण - उपनीते -அருகிலிருந்த பணியாளனுல் கொண்டுவரப்பட்ட, खड्गे - கத்தியில், निषक्त - प्रतिमम् - தோன்றிய பிரதிபிம்பமுடைய, आत्मानं - தமது சரீரத்தை, ददर्श - பார்த்தார்.

(க-து) இவ்வாறு தமது சக்தியால் அணி செய்துகொண்ட சிவபிரான், தம் கருத்து அறிந்த பணியாளனுல் கொண்டு வரப்பட்ட பளபளப்பான கத்தியில் தமது வடிவத்தைப் பார்த்துக் கொண்டார்.

खड्गे - என்பதற்குப் பதிலாக, दङ्के - என்ற பாடம் கொண்டு, கோட்டரியில் என்று பொருள் கூறுவர் நாராயணர். गण - சிவஸேவகன். வீரர்கள் கத்தியிலே தம் உருவத்தைக் காண்பர்.

स गोपतिं नन्दिभुजावलम्बी शार्दूलचर्मान्तरितोरुपृष्ठम् ।
तद्भक्तिसंक्षिप्तबृहत्प्रमाणमारुह्य कैलासमिव प्रतस्थे ॥ ३७ ॥

सः - அவர், नन्दि - भुज - अवलम्बी - நந்திகேசுவரனது கையைப் பற்றியவராக, शार्दूल - चर्म - अन्तरित - उरु - पृष्ठम् - புலித்தோலினுல் மறைக்கப்பட்ட விசாலமான முதுகுடைய தும், तत्- भक्ति - संक्षिप्त - बृहत् - प्रमाणम् - சிவபிரானிடம் பக்தியி னுல் தனது பெரிய வடிவத்தைச் சுருக்கிக் கொண்ட, कैलासम्- इव - கைலாஸம்போல் இருந்ததுமான, गो - पतिम् - விருஷபத் தின் மேல், आरुह्य - ஏறிக்கொண்டு, प्रतस्थे - புறப்பட்டார்.

(க-து) சிவபிரான் நந்திகேசுவரரின் கையைப்பிடித்துக் கொண்டு தமது வாஹனமான விருஷபத்தின் மேல் ஏறிப் புறப்பட்டார். வெண்மையான அவ்விருஷபம், சிவபிரானிடம் பக்தியால் தனது பெரிய வடிவத்தைச் சுருக்கிக் கொண்டு வந்த கைலாஸம் போல் இருந்தது. அதன் முதுகில் புலித்தோல் போடப்பட்டு இருந்தது.

வெண்மை நிறம், வடிவம், சிவபிரானிருக்குமிடமாயிருத்தல் முதலிய காரணங்களால் விருஷபம், கைலாஸமாக உத்ப்ரேக்ஷிக்கப் பட்டது.

तद्भक्ति-संक्षिप्त- बृहत् - प्रमाणम् - "சிவபிரானிடமுள்ள பக்தியால் குறுக்கிய பெரிய வடிவத்தையுடைய" என உரைப்பர் மல்லிநாதர். அவர் இச்சொல்லை - गोपति - என்பதற்கு விசேஷணமாகக் கொள்வர். மற்றொரு உரையாசிரியர், 'ஏறுவதற்கு வசதியாக வடிவினைச் சிறியதாகச் செய்தது. பின் பெரியதாக செய்துகொண்டது விருஷபம். அது காரணமாகவே கைலாஸத்துடன் ஒப்பிட்டது' என்பர். கைலாஸமே இவ்வடிவினதாக வந்தது என்பது சிலர் கருத்து.

तं मातरो देवमनुव्रजन्त्यः स्ववाहनक्षोभचलावतंसाः ।
मुखैः प्रभामण्डलरेणुगौरैः पद्माकरं चक्रुरिवान्तरिक्षम् ॥ ३८ ॥

तं देवम् - அச்சிவபிரானை, अनु - व्रजन्त्यः - பின் தொடர்பவர்களும், स्व - वाहन - क्षोभ - चल - अवतंसाः - தங்களது வாஹனங்களின் அசைவினால் ஆடுகின்ற (குண்டலங்களை) காதணிகளையுடையவர்களுமான, मातरः - தாய்மார்கள், प्रभा - मण्डल - रेणु-गौरैः - ஒளிவட்டமாகிய மகரந்தப் பொடியால் சிவந்த, मुखैः - முகங்களால், अन्तरिक्षम् - ஆகாய வெளியை, पद्म - आकरम् - தாமரைத் தடாகமாக, चक्रुः - इव - செய்தனர்போல் காணப் பட்டனர்.

(க-து) சிவபிரானுக்குப் பின்னால் ஏழு தாய்மார்களும், தம் தமது வாஹனமான ஹம்ஸம், மயில், காளை, முதலியவற்றின் மேல் ஏறிக் கொண்டு புறப்பட்டனர். அவ்வாஹனங்களின் அசைவினால் அவர்களது காதணிகள் அசைந்தன. சிவந்த ஒளிவட்டமுடையவையும், செந்தாமரை போன்றவையுமான தமது முகங்களால் ஆகாயத்தைத் தாமரைத் தடாகமாகச் செய்தவர்கள் போல் காணப் பட்டனர்.

अवतंस - தலையணி என்பர் நாராயணர். इव - என்பதனை, पद्माकरं - என்பதுடன் சேர்த்து ஆகாயத்தைத் தாமரைத் தடாகம் போல் செய்தனர் என்பர் அவர். இவர்களின் முகமாகிய தாமரை மலருக்கு அவர்களின் முக ஒளியே மகரந்தப் பொடியாக இருந்தது. गौर - சிவப்பு என்ற பொருளும் உண்டு.

**तासां च पश्चात्कनकप्रभाणां काली कपालाभरणा चकासे ।**
**बलाकिनी नीलपयोदराजी दूरं पुरःक्षिप्तशतह्रदेव ॥ ३९ ॥**

कनक - प्रभाणाम् - பொன்போல் காந்தியுடைய, तासाम् - அவர்களுக்கு, - पश्चात् - பின்னால், कपाल - आभरणा - மண்டை ஓட்டை ஆபரணமாக அணிந்த, काली - च - மஹாகாளியும், बलाकिनी - கொக்குகளையுடையதும், दूरम् - வெகுதூரம், पुरः - क्षिप्त - शतह्रदा - முன்னே வீசப்பட்ட மின்னலையுடையதுமான, नील - पयोद - राजी - इव - கறுத்த மேகவரிசைபோல், चकासे - காணப்பட்டாள்.

(க-து) பொன்னிறமுள்ள தாய்மார்களுக்குப் பின்னால், வெண்மையான கபாலத்தை அணிந்த கறுப்பு நிறமுடைய பத்ரகாளி சென்றாள். இந்நிலையில் அவள், வெண்ணிறக் கொக்குகளையுடையதும் தனக்கு முன்னால் வெகுதூரம் பொன்னிற மின்னலைத் தோற்றுவித்ததுமான கறுத்த மேகத்திரள் போல் காணப்பட்டாள்.

காளிக்கு மேகமும், கபாலத்திற்கு கொக்குகளும், முன் செல்லும் பொன்னிறமான தாய்மார்களுக்கு, பொன்னிறமான மின்னலும் உபமானங்கள். काली - சிவபிரானது ஸம்ஹார சக்தியின் வடிவம் என்பர். बलाकिनी - மழை நாளில் மேகங்களின் அருகில் வெண்மையான கொக்குகள் பறப்பதைக் கவி வேறு இடங்களிலும் கூறியிருக்கிறார். राजिः - என்பது அருணகிரி பாடம்.

**ततो गणैः शूलभृतः पुरोगैरुदीरितो मङ्गलतूर्यघोषः ।**
**विमानशृङ्गाण्यवगाहमानः शशंस सेवावसरं सुरेभ्यः ॥ ४० ॥**

ततः - பிறகு, शूल - भृतः - சிவபிரானுக்கு, पुरः - गैः - முன் செல்கின்ற, गणैः - ஸேவகர்களால், उदीरितः - உண்டாக்கப் பட்ட, मङ्गल - तूर्य-घोषः- மங்களத்திற்கான வாத்யங்களின் ஒலி, विमान - शृङ्गाणि - விமானங்களின் சிகரங்களில், अवगाहमानः - புகுவதாக (அடைவதாக), सुरेभ्यः - தேவர்களுக்கு, सेवा - अवसरम् - (சிவ) ஸேவைக்கான ஸந்தர்ப்பத்தை, शशंस - தெரிவித்தது.

(க-து) சிவபிரானுக்கு முன்னே செல்கின்ற ஸேவகர்கள் மங்களகரமான வாத்யங்களை ஓசை செய்ய, அவ்வோசை ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் தேவர்களின் விமானங்களை அடைந்து சிவபிரானை ஸேவிக்க இதுவே தக்க தருணமெனத் தேவர்களுக்கு அறிவித்தது.

तूर्य - வாத்யம், शशंस - வாத்ய கோஷத்தைக் கேட்டுப் பல தேவர்கள் வந்ததால், வாத்ய கோஷம், தேவர்களுக்கு சிவபிரானை தர்சனம் செய்வதற்கான ஸமயத்தைக் கூறியது போல் காணப்பட்டது என உத்ப்ரேக்ஷையாகக் கொள்வர் நாராயணர்.

**उपाददे तस्य सहस्ररश्मिस्त्वष्ट्रा नवं निर्मितमातपत्रम् ।**
**स तद्दुकूलादविदूरमौलिर्बभौ पतद्गङ्ग इवोत्तमाङ्गे ॥ ४१ ॥**

तस्य - அவருக்கு, सहस्र - रश्मिः - சூரியன், त्वष्ट्रा - விச்வ கர்மாவினால், निर्मितम् - நிர்மாணிக்கப்பட்ட, नवम् - புதிய, आतपत्रम् - குடையை, उपाददे - பிடித்தான். तत् - दुकूलात् - அக் குடையின் பட்டுத்துணிக்கு, अविदूर - मौलिः - சமீபத்திலுள்ள சிரஸையுடைய, सः - அவர் (சிவபிரான்), उत्तम - अङ्गे - (தமது)

தலை மேல், पतद् - गङ्गः - इव - விழுகின்ற கங்கையையுடையவர் போல், बभौ - விளங்கினார்.

(க-து) தேவ சில்பியான விசுவ கர்மாவினால் புதிதாகத்தயார் செய்யப்பட்ட வெண்பட்டுக் குடையைத் தேவவடிவினில் வந்த சூரியன் சிவபிரானுக்குப் பிடித்தான். அக்குடையின் வெண்பட்டு முனைக்கு அருகில் சிவபிரானது தலை இருந்ததால், வெண்மையான கங்கை அவர் சிரஸில் அப்பொழுதும் விழுந்து கொண்டிருப்பது போல் காணப்பட்டது.

சூரியன் தேவவடிவில் வந்தான். மண்டல வடிவில் அல்ல.

मूर्ते च गङ्गायमुने तदानीं सचामरे देवमसेविषाताम् ।
समुद्रगारूपविपर्ययेऽपि सहंसपाते इव लक्ष्यमाणे ॥ ४२ ॥

गङ्गा - यमुने - च - கங்கையும், யமுனையும், मूर्ते - (நதி வடிவினைவிட்டு) தேவஸ்த்ரீ வடிவினையுடையவர்களாகவும், सचामरे - சாமரமுடையவர்களாகவும், समुद्र - गा - रूप - विपर्यये - अपि - நதி வடிவில்லாத பொழுதும், सहंसपाते इव - பறந்துவரும் ஹம்ஸமுடையவர்கள் போல், लक्ष्यमाणे - காணப்படுபவர்களாகவும் இருந்துகொண்டு, तदानीम् - அப்பொழுது, देवम् - சிவபிரானுக்கு, असेविषाताम् - च - தொண்டு செய்தனர்.

(க-து) கங்கையும், யமுனையும் தங்களது நதிவடிவத்தை விட்டு தேவஸ்த்ரீ வடிவமுடையவர்களாக வெண்சாமரத்தை வீசி சிவபிரானுக்குத் தொண்டு செய்தனர். நதி வடிவத்தில் இருக்கும் பொழுது அவ்விரண்டு நதிகளும் வெண்ணிற ஹம்ஸமுடையவைகளாக இருக்கும். நதி வடிவமின்றி ஸ்த்ரீ வடிவத்தில் இருக்கும் பொழுதும்கூட அசைகின்ற சாமரங்களால் தம்மிடம் ஸஞ்சரிக்கும் ஹம்ஸமுடையவர்கள் போல் அவர்கள் காணப்பட்டனர்.

स - हंस - पाते इव - "ஹம்ஸங்களின் ஸஞ்சாரமுடையவை போல்" என்பது பதவுரை. அசைகின்ற சாமரங்கள்

மேலும், கீழும் பறந்து சஞ்சரிக்கும் ஹம்ஸங்களுக்கு ஒப்பாக இருந்தன.

**तमभ्यगच्छत्प्रथमो विधाता श्रीवत्सलक्ष्मा पुरुषश्च साक्षात् ।**
**जयेति वाचा महिमानमस्य संवर्धयन्तौ हविषेव वह्निम् ॥ ४३ ॥**

प्रथमः - (ஸ்ருஷ்டி செய்பவர்களில்) முதல்வரான, विधाता - பிரம்ம தேவரும், तं अभ्यगच्छत् - சிவபிரானை எதிர்கொண்டு சென்றார். श्रीवत्स - लक्ष्मा - ஸ்ரீவத்ஸத்தை அடையாளமாகக் கொண்ட, पुरुषः च - மஹாவிஷ்ணுவும், साक्षात् - ஸ்வயவடிவினிலேயே, तम् - அவரை, अभ्यगच्छत् - எதிர்கொண்டு சென்றார். हविषा - (நெய் முதலிய) ஹவிஸ்ஸினால், वह्निम् - इव - அக்னியை (வளர்ப்பது) போல், 'जय - வெல்வீராக,' इति - என்ற, वाचा - வார்த்தையால், अस्य - அவருடைய, महिमानम् - பெருமையை, संवर्धयन्तौ - விருத்தி செய்பவர்களாக, (अभूताम्). அவ்விருவரும் இருந்தனர்.

(க-து) பிரம்ம தேவரும், விஷ்ணுவும் 'ஜய' என்று சொல்லி சிவபிரானது பெருமையை வளர்ப்பவர்களாக அவரை எதிர்நோக்கிச் சென்றனர்.

प्रथमः विधाता - ஸப்தரிஷிகளும் ஸ்ருஷ்டிகர்த்தர்களாகையால் அவர்கள் எல்லோருக்கும் முதலில் இருக்கின்ற ஸ்ருஷ்டி கர்த்தா பிரம்மதேவர் - நான்முகர். श्रीवत्सलक्ष्मा - விஷ்ணுவின் மார்பிலே ஒரு மறு உண்டென்றும், அதற்கு ஸ்ரீவத்ஸம் என்று பெயரெனவும் கூறுவர். पुरुषश्च साक्षात् - உலகில் பாதுகாப்பு என்கிற காரியத்தைச் செய்பவர் விஷ்ணு. இதனை அவர் தமது அம்சங்களாலும், அவதாரங்களாலும் செய்வர். சிவபிரானை எதிர்கொண்டு சென்ற பொழுது அவரே நேரில் வந்தார் என்பதனைக் காட்டுகிறது

' ஸாக்ஷாத் ' என்ற சொல். அவதார வடிவினில் வரவில்லை. मूर्त्यन्तराव्यवहितेन आत्मीयरूपेणैवेत्यर्थः । अरुणगिरिः । संवर्धयन्त्या - என்று பாட பேதம் கொண்டு वाचा - என்பதற்கு விசேஷணமாகச் செய்து, சிவபிரானது பெருமையை வளர்க்கும் 'ஜய' என்ற சொல் லுடன் சிவபிரானிடம் சென்றனர் என்று உரை கூறுவர் அருணகிரி.

**एकैव मूर्तिर्बिभिदे त्रिधा सा सामान्यमेषां प्रथमावरत्वम् ।**
**विष्णोर्हरस्तस्य हरिः कदाचिद्वेधास्तयोस्तावपि धातुराद्यौ ॥४४॥**

सा - வேதங்களிலே பிரஸித்தமான, एका · एव - ஒரே मूर्तिः - (பரபிரம்ம) வடிவமானது, त्रिधा - மூன்ருக (பிரம்மா, விஷ்ணு, சிவன் என்று), विभिदे - பிரிந்தது. एषाम् - இவர் களுக்கு (இம்மூவருக்கும்), प्रथम - अवरत्वम् - முதல்வர், இளையவர் என்ற நிலை, सामान्यम् - பொதுவானது. कदाचित् - ஒரு சமயம், हरः - சிவபிரான், विष्णोः - விஷ்ணுவிற்கு, (आद्यः) - முதல்வர், (ஆகின்ருர்); (कदाचित्) - ஒரு சமயம், हरिः - விஷ்ணு, तस्य - சிவ பிரானுக்கு, (आद्यः) - முதல்வராகிருர்; (कदाचित्) - ஒரு சமயம், वेधाः - பிரம்மதேவர், तयोः - அவ்விருவருக்கும், (आद्यः) - முதல் வராகின்ருர்; (कदाचित्) - ஒருசமயம், तौ - अपि - அவ்விருவரும், धातुः - பிரம்மதேவருக்கு, आद्यौ - முதல்வராகின்றனர்.

(க-து) வேதங்களில் கூறப்பட்ட பிரம்மஸ்ரூபமே செய்யப் போகும் காரியத்தை முன்னிட்டு பிரம்மா, விஷ்ணு, சிவன் என மூன்று வடிவங்களை ஏற்றது. இம் மூன்று வடிவங்களுக்கும் பெருமையில் ஏற்றத் தாழ்வில்லை. ஏற்றத்தாழ்வு இருப்பதுபோல் தோன்றுவது இம் மும் மூர்த்திகளும் தமது இஷ்டப்படி ஒவ்வொரு சமயம் ஏற்படுத்திக் கொண்டது. உண்மையில் பேதமில்லை.

இச்சுலோகம் காளிதாஸர் மும்மூர்த்திகளிடம் கொண்ட கருத்தைக் காட்டுகின்றது. மூர்த்திகளிடம் வேற்றுமை

பாராட்டாதவர் அவர். ஒரு சமயம் சிவபிரான் விஷ்ணு விற்கும் முதல்வராகின்ருர். ஒரு சமயம் விஷ்ணு சிவபிரா னுக்கு முதல்வராகின்ருர். சில சமயம் பிரம்மா இவ்விரு வருக்கும் முதல்வராகின்ருர். ஒரு சமயம் சிவபிரானும் விஷ்ணுவும் பிரம்மாவிற்கும் மேலாக இருக்கின்ருர்கள்.

காவியத்தின் நாயகராகிய சிவபிரானுக்குத் தனிப்பட்ட பெருமைக் கூருததால் இச்சுலோகம் காளிதாஸருடைய தல்ல என்று சிலர் கூறுவதை மறுத்து, உலகம் படைக்கும் பரமாத்மாவே பரமேச்வரன் என்று இச்சுலோகம் வெளியிடு வதால் சிவபிரானது பெருமையே கூறப்பட்டதாகும் என்கிருர் நாராயணர்.

तं लोकपालाः पुरुहूतमुख्याः श्रीलक्षणोत्सर्गविनीतवेषाः ।
दृष्टिप्रदाने कृतनन्दिसंज्ञास्तद्दर्शिताः प्राञ्जलयः प्रणेमुः ॥ ४५ ॥

पुरुहूत - मुख्याः - இந்திரன் முதலான, लोक - पालाः - லோக பாலர்கள், श्री - लक्षण - उत्सर्ग - विनीत - वेषाः - தமது செல்வத் திற்கான அடையாளங்களை விடுவதால் வணக்கத்துடன் கூடிய உடையுடையவர்களாகவும், दृष्टि - प्रदाने - (சிவபிரான்) பார்வையைத் தரும் விஷயத்தில், कृत - नन्दि - संज्ञाः - நந்தி கேசுவரருக்கு ஸமிஞ்ஞை செய்பவர்களாகவும் (இருந்து கொண்டு), तत् - दर्शिताः - நந்திகேசுவரரால் காண்பிக்கப் பட்டு, प्राञ्जलयः - கைகூப்பியவர்களாக, तम् - அவரை, प्रणेमुः - வணங்கினர்.

(க-து) இந்திரன் முதலிய லோக பாலகர்கள், தமது அதிகாரத் திற்குரிய குடை, சாமரம் முதலியவைகளை நீக்கி, சிவபிரானைக் காண்பதற்குரிய உடையுடன் வந்தனர். வந்து, சிவபிரானது கண்ணேக்குத் தம்மிடம் வரவேண்டுமென நந்திகேசுவரனுக்கு

கையசைத்தல் முதலான சில ஸமிஜ்ஞைகளைச் செய்து, பின், அவனால் அறிமுகப்படுத்தப்பட்டுக் கைகூப்பிச் சிவபிரானை வணங்கினர்.

कम्पेन मूर्ध्नः शतपत्रयोनिं वाचा हरिं वृत्रहणं स्मितेन ।
आलोकमात्रेण सुरानशेषान्संभावयामास यथाप्रधानम् ॥ ४६ ॥

शतपत्र - योनिम् - பிரம்மதேவரை, मूर्ध्नः - (தம்) சிரஸின், कम्पेन - அசைவினாலும், हरिम् - விஷ்ணுவை, वाचा - வார்த்தையினாலும், वृत्र - हणम् - இந்திரனை, स्मितेन - புன்னகையாலும், अशेषान् - எல்லா, सुरान् - தேவர்களையும், आलोक - मात्रेण - கண்ணோக்கு ஒன்றினாலும், यथा - प्रधानम् - (அவரவர்களின்) முக்யத்வத்திற்குத் தக்கபடி, संभावयामास - கௌரவித்தார்.

(க-து) சிவபிரான் தம் தலையை அசைத்து பிரம்மதேவரைக் கௌரவித்தார். விஷ்ணுவினிடம் பேசி மரியாதை செய்தார். இந்திரன் புன்னகையால் கௌரவிக்கப்பட்டான். மற்றைத் தேவர்களை கண்ணோக்கு மாத்திரமே கௌரவித்தது. இவ்வாறு அவரவர்களின் பதவிக்குத் தக்கவாறு சிவபிரான் அத்தேவர்களைக் கௌரவித்தார்.

शतपत्रम् - தாமரை; शतपत्रयोनिः - தாமரையில் தோன்றியவர்; பிரம்மதேவர்.

तस्मै जयाशीः ससृजे पुरस्तात्सप्तर्षिभिस्तान्स्मितपूर्वमाह ।
विवाहयज्ञे विततेऽत्र यूयमध्वर्यवः पूर्ववृता मयेति ॥ ४७ ॥

तस्मै - சிவபிரானுக்கு, सप्त - ऋषिभिः - ஸப்தர்ஷிகளாலே, पुरस्तात् - (மற்ற மஹர்ஷிகள் கூறுவதற்கு) முன்பே, जय - आशीः - 'வெல்வீராக' என ஆசீர்வாதம், ससृजे - செய்யப்பட்டது. 'वितते - விரிவான (தொடங்கப்பட்ட), अत्र - இந்த, विवाह - यज्ञे - விவாஹமாகிய யாகத்தில், यूयम् - நீங்கள், मया - என்னாலே,

पूर्व - वृताः - முன்பே வேண்டப்பட்டுள்ள, अध्वर्यवः - ரித்விக்கு களாகின்றீர்கள், इति - என, तान् - அவர்களை நோக்கி, स्मित - पूर्वम् - புன்னகையுடன், आह - கூறினார்.

(க-து) தேவர்ஷிகள் பலர் வருவதற்கு முன்பே வந்த ஸப்தர்ஷிகள், சிவபிரானை ஆசீர்வதித்தனர். விவாஹத்தை நிச்சயம் செய்தவர்கள் அவர்களே. ஆதலால் சிவபிரான், "விவாஹம் என்ற இந்த பெரிய யஜ்ஞத்திற்காக முதலிலேயே உங்களை நான் ரித்விக்கு களாக வரித்துள்ளேன். ஆதலால் விவாஹத்தை நடத்தி முடிப்ப தற்கான முயற்சியையும் நீங்கள் எடுத்துக் கொள்ள வேண்டும்" எனப் புன்னகையுடன் கூறினார்.

पुरस्तात् - இதர மஹர்ஷிகள் வந்து ஆசீர்வதிப்பதற்கு முன்னமே ஸப்தர்ஷிகள் வந்து ஆசீர்வதித்தனர். अध्वर्यवः - யாகம் செய்கின்ற யஜமானருக்கு உதவுபவர்களுக்கு ரித்விக் குகள் எனப்பெயர். அவர்களில் முக்கியமானவர் பிரம்மா, ஹோதா, உத்காதா, அத்வர்யு என நால்வர். இங்கு வந்த அத்வர்யு என்ற சொல் யாகத்தில் உதவி செய்பவர்களைப் பொதுவாகக் குறித்தது. विवाह-यज्ञे -யாகம் போல் சிவ-பார்வதி விவாஹமும் உலக நன்மையைக் கருத்தில் கொண்டு ஏற் படுவதால், விவாஹத்தை யஜ்ஞமெனக் கூறினார். वितत - 'விரிவான, பெரிய' என்று பொருள். சிவபிரான் அவர்களை முன்பே வேண்டியுள்ளார் என்பது ஆறும் ஸர்க்கத்தில் உள்ளது. குறிப்பாக சுலோகம் 6. 33. காண்க.

विश्वावसुप्राग्रहरैः प्रवीणैः संगीयमानत्रिपुरावदानः ।
अध्वानमध्वान्तविकारलङ्घ्यस्ततार ताराधिपखण्डधारी ॥ ४८ ॥

प्रवीणैः - திறமை வாய்ந்த, विश्वावसु - प्राग्रहरैः - விசுவாவஸு முதலிய கந்தர்வர்களால், संगीयमान - त्रिपुर - अवदानः - பாடப்படு கின்ற திரிபுரம் எரித்தல் என்ற வீரச்செயலையுடையவரும்,

अध्वान्त - विकार - लङ्घ्यः - அறிவின்மையின் பயனுகிய ஆசை முதலியவைகளால் வெல்ல முடியாதவரும், तारा - अधिप - खण्ड - धारी - பிறைச் சந்திரனைத் தரித்தவருமான சிவபிரான், अध्वानम् - (கடக்க வேண்டிய) மார்க்கத்தை, ततार - கடந்தார்.

(க-து) கந்தவர்களின் தலைவனுகிய விசுவாவஸுவும், மற்ற கந்தர்வர்களும், சிவபிரானது முப்புரமெரித்த பெரும் வீரச்செயலைப் புகழ்ந்து பாட, ஆசைக்கு வசப்படாத சிவபிரான், செல்ல வேண்டிய மார்க்கத்தைக் கடந்து சென்றார்.

विश्वावसुः - தேவர்களில் பாடகர்களாகிய கந்தர்வர்கள் தலைவன். प्रवीण - திறமைவாய்ந்தவர்கள்; வீணையையுடையவர்கள் என்றும் கூறலாம். ध्वान्त - மதிமயக்கம்; विकार - அதன் விளைபொருளான ஆசை, கோபம் முதலியன; இவற்றுக்கு வசப்படாதவர் சிவபிரான். விவாஹம் செய்து கொள்ள முற்பட்டதும் காமத்தால் அல்ல என்பது இதனுல் குறிப்பிடப்படுகிறது. ஸர்க்கம் 6. சுலோகம் 26 காண்க. प्राग्रसरः, अपदान - என்று பாடம் கொள்வர் நாராயணர். ताराधिप - நக்ஷத்திரங்களின் தலைவன் - சந்திரன்; खण्ड - துண்டு, சிறிய பகுதி; ताराधिपखण्ड - பிறைச் சந்திரன்.

खे खेलगामी तमुवाह वाहः सशब्दचामीकरकिंकिणीकः ।
तटाभिघातादिव लग्नपङ्के धुन्वन्मुहुः प्रोतघने विषाणे ॥ ४९ ॥

खे - ஆகாயத்தில், खेल - गामी - அழகாகச் செல்கின்றதும், सशब्द - चामीकर - किङ्किणीकः - ஒலியுடன் கூடிய தங்கச் சிறு மணிகளையுடையதுமான, वाहः - விருஷபம், प्रोत - घने - ஒட்டிக் கொண்ட மேகமுடையனவும், तट - अभिघातात् - ( நதியின் ) கரையை முட்டுவதால், लग्न - पङ्के - इव - (स्थिते) - பதிந்த

மண்ணுடையனவை போல் இருப்பவையுமான, विषाणे - இரு கொம்புகளை, मुहुः - அடிக்கடி, धुन्वन् - அசைத்துக் கொண்டு, तम् - அச்சிவபிரானை, उवाह - தாங்கிச் சென்றது.

(க-து) சிவபிரானது வாஹனமாகிய விருஷபம் அவரைத் தாங்கிக்கொண்டு ஆகாயத்தில் அழகாகச் சென்றது. அது அணிந்திருந்த சிறிய தங்க மணிகள், சரீர அசைவினால் ஒலித்தன. மேகங்களிடையே சென்றதால் மேகத்துணுக்குகள் அதன் கொம்புகளிலே பதிந்தன. அது காரணமாகக் கொம்புகள், கரைமுட்டி விளையாடுவதால் சேறுடையன போல் காணப்பட்டன. மேகத்துணுக்குகளை உதறுவது போல் கொம்புகளை அசைத்துக் கொண்டு சென்றது விருஷபம்.

खे - என்பதை, उवाह - என்பதுடன் சேர்த்து ஆகாயத்தில் தாங்கிக்கொண்டு சென்றது என்றும் கூறலாம். तटाभिघातात् - लग्नपङ्के - நதி முதலியவற்றின் கரைகளிலே முட்டி விளையாடுவது மாடு முதலிய கொம்புள்ள பிராணிகளுக்கு ஸ்வபாவம். அப்பொழுது கொம்புகளிலே மண் ஒட்டிக் கொள்ளும். ஒட்டிய மண்ணை உதறுவதும் அவைகளுக்கு இயற்கையாகும். खेल - 'மெதுவாக' என்பது நாராயண உரை. தர்சனம் செய்ய விரும்பியவர்களின் வசதி கருதி விருஷபம் மெதுவாகச் சென்றது என்பர். धुन्वन् - அசைத்துக் கொண்டு; மேகங்களிடையே விருஷபம் சென்றதால் அதன் கொம்பில் மேகத்துணுக்குகள் ஒட்டிக் கொண்டன. தலையை அசைத்துக் கொண்டு செல்வதும் மாடுகளின் இயற்கையாகும். கொம்பில் ஒட்டிய மேகத்தை உதிர்க்க விரும்பி விருஷபம் கொம்புகளை அசைத்துக் கொண்டு சென்றதாகக் கவி உத்ப்ரேக்ஷித்தார்.

स प्रापदप्राप्तपराभियोगं नगेन्द्रगुप्तं नगरं मुहूर्तात् ।
पुरोविलग्नैर्हरदृष्टिपातैः सुवर्णसूत्रैरिव कृष्यमाणम् ॥ ५० ॥

सः - அந்த விருஷபம், अप्राप्त - पर - अभियोगम् - சத்துருவின் எதிர்ப்பற்றதும், नग - इन्द्र - गुप्तम् - மலையரசனான ஹிமவானால் பாதுகாக்கப்பட்டதும், पुरः विलग्नैः - முன்னே சென்ற, हर - दृष्टि - पातैः - சிவபிரானுடைய (நெற்றிக்) கண்ணோக்குகளாகிய, सुवर्ण - सूत्रैः - தங்கக்கயிறுகளால், कृष्यमाणं - इव - (சமீபத்திற்கு) இழுத்து வரப்பட்டது போல் இருப்பதுமான, नगरम् - ஓஷதி பிரஸ்தத்தை, मुहूर्तात् - சிறிது நேரத்தில், प्रापत् - அடைந்தது.

(க-து) அவ்விருஷபம், ஹிமவானால் பாதுகாக்கப்பட்டதும், அக்காரணத்தினாலேயே சத்ருக்களின் எதிர்ப்பின்றி இருப்பதுமான ஓஷதிபிரஸ்தத்தைச் சிறிது நேரத்தில் அடைந்தது. சிவபிரானது பொன்னிறமான பார்வை அந்நகரத்தை நோக்கி இருந்ததால், அந்த நகரமே தங்கக் கயிற்றினால் விருஷபத்தின் ஸமீபத்திற்கு இழுத்துவரப்பட்டது போல் காணப்பட்டது.

अप्राप्त - पर - अभियोगम् - ''அடையப்படாத சத்ருவின் எதிர்ப்பையுடைய'' என்பது பதப்பொருள், पुरः - अवलग्नैः - விருஷபத்தில் அமர்ந்திருந்த சிவபிரானது பொன்னிறப் பார்வை ஓஷதிபிரஸ்தத்தின் மேல் முன்பே சென்று விழுந்திருந்தது. दृष्टिपातैः . . . - कृष्यमाणम् - நகரம் சிவபிரானது பார்வையாகிய பொன் கயிற்றால் அவரது ஸமீபத்திற்கு இழுத்து வரப்பட்டதுபோல் இருந்தது எனக் கவி உத்ப்ரேக்ஷித்தார். விருஷபம் வெகு சீக்கிரத்திலே அந்த நகரை அடைந்ததும், வேகமான வாகனங்களில் செல்லும் பொழுது எதிரிலுள்ள பொருள் நம்மை நோக்கி வருவது போன்ற தோற்றமும் கவி இவ்வாறு உத்ப்ரேக்ஷிப்பதற்குக் காரணமாயின. வேகமாக விருஷபம் செல்லும் பொழுது நகரமே அவரிடம் வருவது போன்றிருந்தது. இது போன்ற கருத்தைக் கவி, केनाप्युत्क्षिपतेव पश्य भुवनं मत्पार्श्वमानीयते - என சாகுந்தலத்தில் [7.8] கூறினார்.

आकृष्यमाणः - என்று பாடம் கொண்டு விருஷபத்திற்கு விசேஷணமாகச் செய்து, சிவபிரானுடைய கண்ணேக்காகிய தங்கக் கயிற்றினுல் இழுக்கப்பட்டது போல் அவ்விருஷபம் ஒரு நொடியில் நகரமடைந்தது என்பர் மல்லிநாதர். मुहूर्तम् - இரண்டு நாழிகை. இங்கு 'சிறிது நேரம்' என்ற பொருளில் வந்தது.

**तस्योपकण्ठे घननीलकण्ठः कुतूहलादुन्मुखपौरदृष्टः ।**
**स्वबाणचिह्नादवतीर्य मार्गादासन्नभूपृष्ठमियाय देवः ॥ ५१ ॥**

तस्य - அந்த நகரத்திற்கு, उपकण्ठे - சமீபத்தில், घन - नील - कण्ठः - மேகம் போல் நீலநிறமான கழுத்தையுடைய, देवः - சிவபிரான், कुतूहलात् - ஆவலினுல், उत् - मुख - पौर - दृष्टः - தலை நிமிர்த்திய ஜனங்களால் பார்க்கப்பட்டவராக, स्व - बाण - चिह्नात् - தமது பாணத்தை அடையாளமாக உடைய, मार्गात् - மார்க்கத்திலிருந்து (ஆகாசத்திலிருந்து), अवतीर्य - இறங்கி, आसन्न - भू - पृष्ठम् - சமீபத்திலுள்ள தரையை, इयाय - அடைந்தார்.

(க-து) சிவபிரான் ஓஷதிபிரஸ்தத்திற்கு அருகில், திரிபுர ஸம்ஹார காலத்தில் அவரது பாணம் சென்ற மார்க்கமான ஆகாசத்தினின்றும் கீழே தரையில் இறங்கினுர்.

स्वबाणचिह्नात् - "திரிபுரஸம்ஹார காலத்தில் சிவபிரானது பாணம் சென்ற இடமான ஆகாசத்தினின்றும்" என்று பொருள். स्ववाहचिह्नात् - என்பது அருணகிரி பாடம். भूपृष्ठं इयाय - தம்மை எதிர் கொண்டழைக்க வந்தவர்களின் ஸௌகர்யத்தைக் கருதி, நகரத்திற்கு வெளியில் தரையில் இறங்கினுர்,

तमृद्धिमद्बन्धुजनाधिरूढैर्वृन्दैर्गजानां गिरिचक्रवर्ती ।
प्रत्युज्जगामागमनप्रतीतः प्रफुल्लवृक्षैः कटकैरिव स्वैः ॥ ५२ ॥

आगमन - प्रतीत: - (சிவபிரானுடைய) வருகையால் சந்தோஷமடைந்த, गिरि-चक्रवर्ती - மலையரசன் (ஹிமவான்), ऋद्धिमत् - बन्धुजन - अधिरूढैः - செல்வமுடைய உறவினர்கள் அமர்ந்த, गजानां - वृन्दैः - யானைக்கூட்டங்களுடன், प्रफुल्ल - वृक्षैः - புஷ்பித்த மரங்களையுடைய, स्वैः - தன்னுடைய, कटकैः इव - தாழ்வரைகளுடன் (செல்வது) போல், तम् - சிவபிரானை, प्रत्युजगाम - எதிர்கொண்டு சென்றான்.

(க-து) ஹிமவான், நகர வாசலில் வந்த சிவபிரானை எதிர் கொண்டு சென்றான். நன்றாக ஆடை ஆபரணங்கள் அணிந்துள்ள உறவினர்கள் யானை மீது அமர்ந்து ஹிமவானுடன் அவரை வரவேற்கச் சென்றனர். யானைகள் சூழச் சென்ற ஹிமவான் தன்னைச் சுற்றிலுமுள்ள தாழ்வரைகளுடன் செல்பவன் போல் காணப் பட்டான்.

யானைகளுக்கு சிறு குன்றுகளும், அவற்றின் மேல் அமர்ந்துள்ள உறவினர்க்கு குன்றுகளின் மேலுள்ள பூ நிறைந்த மரங்களும், அவர்களின் பிரகாசமான ஆடை அணிகலன்களுக்கு புஷ்பங்களும் உபமானமாக வந்தன. செல்வமுடையவர்களே ஆடை அணியுடையவர்களாதலால் ऋद्धिमत् என்ற சொல் உறவினர்க்கு அடைமொழியாக வந்தது. कटक - பர்வதத்தின் இடைப்பகுதி. இங்கு ஹிமவானின் இடைப் பகுதியிலுள்ள சிறு குன்றுகள் என்றும் பொருள் கொள்வர். गिरिचक्रवर्ती - மலைகளின் அரசன்; ஹிமவான்.

वर्गावुभौ देवमहीधराणां द्वारे पुरस्योद्घटितापिधाने ।
समीयतुर्दूरविसर्पिघोषौ भिन्नैकसेतू पयसामिवौघौ ॥ ५३ ॥

दूर - विसर्पि - घोषौ - வெகுதூரம் பரவுகின்ற ஓசையுடைய தான, देव - महीधराणाम् - தேவர்கள் மலைகள் ஆகிய இவர் களின், उभौ वर्गौ - இரண்டு இனத்தவரும், उद्घटित - अपिधाने - திறக்கப்பட்ட கதவையுடைய, पुरस्य - द्वारे - நகரத்தின் வாசலில், भिन्न - एकसेतू - உடைந்த ஒரு (பொதுவான) அணையையுடைய, पयसां - ओघौ - इव - நீரின் இரு பிரவாகங்கள் போல், समीयतुः - ஒன்று சேர்ந்தனர்.

(க-து) ஜலத்தை இரு பகுதிகளாகப் பிரித்து இடையே பொதுவாக இருக்கின்ற ஒரு அணை உடைந்தபொழுது அவ்விரு ஜலத்திரளும் பேரொலி செய்து கொண்டு கலப்பது போல், நகர வாசல் திறக்கப்பட்டவுடன் ஹிமவானது உறவினர்கள், சிவபிரானுடன் வந்த தேவர்கள் என இருதிறத்தினரும் தம் தமது யானை முதலிய வாஹனங்களும், வாத்யங்களும் பேரொலி செய்ய, ஒருவரோடொருவர் கலந்தனர்.

दूर . . . . घोषौ - இந்திராதி தேவர்களுடனும் ஹிமவானுட னும் வந்த உறவினரும், பணியாட்களும் வாஹனங்களும் செய்த ஓசை வெகுதூரம் பரவியது. भिन्न-एक-सेतू - ஒரு பெரிய நீர்நிலையிலுள்ள ஜலத்தை தடுத்திருந்த ஒரே அணை சிறிது உடைந்தால் இரு பகுதியிலுமுள்ள நீர்த்திரள் ஒன்றோ டொன்று மிகவேகமாக ஓசையுடன் கலக்கும். இங்கு பொதுவான அணைக்குக் கதவும் இரு கூட்டத்தினருக்கு இரு ஜலத்திரளும் உபமானம். இவ்வுபமானம் இரு கூட்டத் தினரும் எவ்வளவு வேகமாக ஒருவரோடொருவர் கலந்தனர் என்பதையும் கலந்தபின் பேதமின்றி இருந்தனர் என்ப தையும் காட்டும்.

ह्रीमानभूद्भूमिधरो हरेण त्रैलोक्यवन्द्येन कृतप्रणामः ।
पूर्वं महिम्ना स हि तस्य दूरमावर्जितं नात्मशिरो विवेद ॥ ५४ ॥

भूमि - धरः - ஹிமவான், त्रैलोक्य - वन्द्येन - மூவுலகினுலும் வணங்கத்தக்க, हरेण - சிவபிரானுல், कृत - प्रणामः - வணங்கப் பட்டபொழுது, ह्रमान् - வெட்கமுற்றவனுக, अभूत् - ஆனுன். हि - ஆனுல், सः - அவன், तस्य - சிவபிரானுடைய, महिम्ना - பெருமையால், पूर्वं - (அவர் வணங்குவதற்கு) முன்பே, आत्म - शिरः - தன் தலே, दूरम् - மிகவும், आवर्जितम् - தாழ்த்தப்பட்டு உள்ளதை, न - विवेद - அறியவில்லே.

(க-து) சிவபிரான் தனக்கு மாமனுராக ஆகப்போகின்றவனும் அக்காரணத்தினுலேயே தம்மால் வணங்கத் தக்கவனுமாக இருந்த ஹிமவானுக்கு நமஸ்காரம் செய்தார். மூவுலகினுலும் தன்னுலும் வணங்கப்படவேண்டிய சிவபிரானது வணக்கத்தை தான் ஏற்க வேண்டியதாக உள்ளதே என எண்ணி ஹிமவான் வெட்கமுற்முன். ஆனுல் சிவபிரானது பெருமை காரணமாக அவன், தான் அறியாம லேயே, அவர் வணங்குவதற்கு முன்பே, தன் தலேயைத்தாழ்த்தி அவருக்கு வணக்கம் செய்து விட்டான். தான் அவ்வாறு வணக்கம் செய்ததையும் அவன் உணரவில்லே. சிவபிரான் செய்தது ப்ரதி நமஸ்காரமாயிருந்ததே அன்றி முதல் நமஸ்காரமாக இல்லே. பிரதி நமஸ்காரத்தை ஏற்பதில் ஒருவர் வெட்கமுற வேண்டியதில்லே. சிவபிரான் செய்ததை முதல் நமஸ்காரமாக எண்ணியதால் வெட்க முற்முன் ஹிமவான்.

हि - तु शब्दार्थे हि शब्दः । பெரியோரைக் கண்டவுடன் தாம் அறியாமலே மக்கள் வணங்குவர் என்பது மஹாபாரதத்தில் கிருஷ்ணன் தூதராகச் சென்றபொழுதும் கூறப்பட்டுள்ளது. துரியோதனன் யாரும் கிருஷ்ணனே வணங்குதல் கூடாது என்று கட்டளே இட்டபொழுதும் கூட எல்லோரும் கிருஷ்ணனே வணங்கினர். 'यथार्हं केशवे वृत्तिमवशाः प्रतिपेदिरे' என்பது மஹாபாரதம்.

स प्रीतियोगाद्विकसन्मुखश्रीर्जामातुरग्रेसरतामुपेत्य ।
प्रावेशयन्मन्दिरमृद्धमेनमागुल्फगाढापितमार्गपुष्पम् ॥ ५५ ॥

प्रीति - योगात् - பிரீதி காரணமாக, विकसत् - मुख - श्रीः - மலர்ந்த முக சோபையுடைய, सः- அந்த ஹிமவான், जामातुः - மருமகனுகப் போகின்ற சிவபிரானுக்கு, अग्र - सरताम् - முன்னே செல்பவனுக இருக்கும் தன்மையை, उपेत्य - அடைந்து, एनम् - அச்சிவபிரானை, आगुल्फ - गाढार्पित - मार्ग - पुष्पम् - கணுக் கால் வரை அழுந்தும்படி நெருக்கமாகத் தூவப்பட்ட புஷ்பங்களை வழியிலேயுடையதும், ऋद्धम् - செல்வம் நிறைந் ததுமான, मन्दिरम् - தனது வீட்டிற்குள், प्रावेशयत् - புகச் செய்தான்.

(க-து) ஹிமவான் அதிக சந்தோஷத்தினுல் மலர்ந்த முகத்தின னுக, தானே சிவபிரானுக்கு முன் சென்று ஜனங்களை விலகச் செய்து, செல்வச் செழிப்புள்ள தனது மாளிகைக்கு அழைத்துச் சென்ருன். வழி முழுவதும் கணுக்கால் வரை அழுந்தும்படி புஷ்பங்கள் தூவப் பட்டிருந்தன.

जामातुः - "மாப்பிள்ளைக்கு" - சீக்ரத்திலேயே பார்வதியை மணக்கப் போவதால் மணமான பின் இருக்கும் உறவைக் கொண்டு சிவபிரானை இச்சொல்லால் குறித்தார் கவி. अग्रसरः - முன் செல்பவன்; ஹிமவான் வேறு ஆட்களைக் கொண்டு ஜனஸமூஹத்தை விலக்காது, தானே முன் சென்று விலக் கினுன். முன் செல்பவனுக இருந்ததும் இதற்காகவே. आगुल्फगाढार्पित - मार्ग - पुष्पम् "கணுக்கால் வரை பதியும்படியாகத் தூவப்பட்ட மார்க்கத்திலுள்ள புஷ்பங்களையுடையதும்" என்பது பதப்பொருள், गाढार्पित - मार्ग - என்பதற்குப் பதிலாக कीर्णपुष्पमार्ग - पुष्पम् - என்று பாடம் கொள்வர் மல்லிநாதர். "கணுக்கால் வரை தூவப்பட்ட புஷ்பங்களையுடைய கடை வீதியையுடையதும்" என்பது பொருள்.

तस्मिन्मुहूर्ते पुरसुन्दरीणामीशानसंदर्शनलालसानाम् ।
प्रासादमालासु बभूवुरित्थं त्यक्तान्यकार्याणि विचेष्टितानि ॥५६॥

तस्मिन् - அந்த, मुहूर्ते - ஸமயத்தில், ईशान - संदर्शन - लालसानाम् - சிவபிரானைக் காண்பதில் ஆவலுள்ள, पुर - सुन्दरीणाम् - நகர ஸ்த்ரீகளுக்கு, प्रासाद - मालासु - பல மாளிகைகளிலும், इत्थम् - இவ்வாறு, त्यक्त - अन्यकार्याणि - மற்ற வேலைகளை எல்லாம் விட்ட विचेष्टितानि - (இனி கூறப்படும்) சில செயல்கள், बभूवुः - உண்டாயின.

(க-து) சிவபிரானைக் காண்பதில் மிக ஆவல் கொண்ட, மாளிகைகளில் இருந்த நகரத்துப் பெண்கள், வேறுவேலைகளை எல்லாம் விட்டனர். இவ்வாசை காரணமாக அப்பெண்களிடம் வேறுசில புதுமையான செயல்கள் தோன்றின.

मुहूर्त - இச்சொல் இங்கு சிறிது பொழுதைக் குறித்தது. அந்த ஒரு சிறு நேரத்திலே சிவபிரானைக் காணாவிடில் பின் அவர்களுக்குச் சிவபிரானைக் காணும் பாக்யம் கிடைக்காதோ என்பதால் மிகவும் ஆவலுடன் இருந்தனர். प्रासाद - माला - மாளிகையின் வரிசைகள்; வரிசையான மாளிகைகள், 'பல மாளிகைகளிலும்' என்பது கருத்து.

இனி வரும் ஐந்து சுலோகங்களில் பெண்களிடம் தோன்றிய செயல்கள் கூறப்படுகின்றன. இவை ரகுவம்சத்தில் அஜனது விவாஹத்தை வர்ணிக்கும் ஏழாவது ஸர்க்கத்திலும் உள்ளன. சுலோகங்கள் 6-10. காண்க.

आलोकमार्गं सहसा व्रजन्त्या कयाचिदुद्वेष्टनवान्तमाल्यः ।
बन्द्धुं न संभावित एव तावत्करेण रुद्धोऽपि च केशपाशः ॥५७॥

आलोक - मार्गम् - ஜன்னலின் வழியை நோக்கி, सहसा - வேகமாக, व्रजन्त्या - செல்கின்ற, कयाचित् - ஒரு யுவதியால், श्लथेन - वान्त - माल्यः - முடிச்சு அவிழ்ந்து உதிர்ந்த புஷ்பங்களை யுடைய, केशपाशः - சிறந்த கூந்தல், करेण - கையினால், रुद्धः अपि च - தாங்கப்பட்ட தாயினும், तावत् - ஜன்னலின் சமீபம் செல்லும் வரை, बन्द्धुम् - முடிவதற்கு, न संभावितः एव - எண்ணப்படவே இல்லை.

(க-து) ஒரு ஸ்த்ரீ ஜன்னலை நோக்கி வேகமாகச் சென்ற பொழுது அவளது கூந்தல் அவிழ்ந்து புஷ்பங்கள் உதிர்ந்தன. அவிழ்ந்த கூந்தலைக் கையினால் தாங்கிக் கொண்டே, ஜன்னல் வரை சென்றாள். ஜன்னலை அடையும் வரை கூந்தலை முடிய வேண்டும் என்ற எண்ணமே அவளுக்கு உண்டாகவில்லை.

माल्यम् – புஷ்பம் என்ற பொருள் உண்டு.

प्रसाधिकालम्बितमग्रपादमाक्षिप्य काचिद्द्रवरागमेव ।
उत्सृष्टलीलागतिरागवाक्षादलक्तकाङ्कां पदवीं ततान ॥ ५८ ॥

काचित् - ஒருத்தி, प्रसाधिका - आलम्बितम् - அலங்காரம் செய்யும் பணிப் பெண்ணால் தாங்கப்பட்ட, अग्र - पादम् (தனது) நுனிக்காலை, द्रवरागम् - एव - ஈரமான செவ்வர்ணப் பூச்சை யுடையதாக இருக்கும் பொழுதே, आक्षिप्य - (அவளிடமிருந்து) இழுத்துக் கொண்டு, उत्सृष्ट - लीलागतिः - (தனது) அழகிய நடையை விட்டவளாக, आ - गवाक्षात् - ஜன்னல் வரையுள்ள, पदवीम् - வழியை, अलक्तक - अङ्कां - செம்பஞ்சு வர்ணத்தினால் அடையாள முடையதாக, ततान – செய்தாள்.

(க-து) ஒரு பணிப்பெண் தனது யஜமானியின் பாதத்தைத் தாங்கி, செம்பஞ்சு ரஸத்தைத் தடவி அழகு செய்து கொண்டிருந்தாள். சிவபிரான் வீதியில் வருவதைக் கேள்வியுற்ற அந்த ஸ்த்ரீ பாதத்தில் பூசிய வர்ணம் உலருவதற்கு முன்பே அதை சட்டென

இழுத்துக்கொண்டு, வழக்கமான தனது அழகிய நடையையும் விட்டு வெகு வேகமாக ஜன்னலுக்கு வந்தாள். அவள் காலிலிருந்த செம்பஞ்சு வர்ணம் வழியெங்கும் பதிந்தது.

विलोचनं दक्षिणमञ्जनेन संभाव्य तद्वञ्चितवामनेत्रा ।
तथैव वातायनसन्निकर्षं ययौ शलाकामपरा वहन्ती ॥ ५९ ॥

अपरा - மற்றொருத்தி, दक्षिणम् - (தனது) வலது, विलोचनम् - கண்ணை, अञ्जनेन - மையினால், संभाव्य - அழகு செய்தபின், तत् - वञ्चित - वाम - नेत्रा - மை இடப் பெறாத இடது கண்ணுடையவளாக, तथा - एव - அப்படியே, शलाकाम् - மையிடும் தூலிகையை, वहन्ती - (கையில்) எடுத்துக் கொண்டு, वातायन - सन्निकर्षम् - ஜன்னலின் சமீபத்திற்கு, ययौ - சென்றாள்.

(க-து) வலது கண்ணிற்கு மையிட்ட ஒருத்தி, சிவபிரான் வருவதைக் கேட்டவுடன் இடது கண்ணிற்கு மையிடாமலே, மையிடும் தூலிகையைக் கையிலேந்திக்கொண்டு ஜன்னலை நோக்கி வெகு வேகமாக ஓடினாள்.

तद्वञ्चित - वाम - नेत्रा - 'மையினால் (மை இடாததால்) ஏமாற்றப் பட்ட இடது கண்ணுடையவளாக' என்பது பதப் பொருள். வலது கண்ணுக்கு மையிடத் தொடங்கிய பொழுது, இடது கண் தனக்கும் மை கிடைக்கும் என்று ஆசையுடன் இருந்தது. மையிடாமல் அதனை ஏமாற்றினாள் என்பது கருத்து. वञ्चन - ஏமாற்றுதல். தருவதாகச் சொல்லிக் கொடாமல் இருப்பது, பின் விவாதம் செய்வது, காலம் தாழ்த்துதல், கொடுத்ததைத் திருப்பி எடுத்துக் கொள்ளுதல் என ஏமாற்றுதலை நான்கு வகையாகக் கூறுவர்.

अदानं च प्रतिश्रुत्य विसंवादनमेव च ।
कालस्य हरणं चाहुः प्रत्यादानं च वञ्चनम् ॥

இடது கண்ணிற்கு மையிடாமை முதல் வகையைச் சேர்ந்த ஏமாற்றுதலாகும் என்பர் அருணகிரி.

**जालान्तरप्रेषितदृष्टिरन्या प्रस्थानभिन्नां न बबन्ध नीवीम् ।**
**नाभिप्रविष्टाभरणप्रभेण हस्तेन तस्थाववलम्ब्य वासः ॥ ६० ॥**

अन्या - மற்றொரு ஸ்த்ரீ, जालान्तर - प्रेषित - दृष्टिः - ஜன்னல்களிடையே செலுத்தப்பட்ட பார்வையுடையவளாக, प्रस्थान - भिन्नाम् - வேகமான நடையினுல் அவிழ்ந்த, नीवीम् - இடைவஸ்திரத்தின் முடிச்சை, न बबन्ध - கட்டவில்லை; नाभि - प्रविष्ट-आभरण-प्रभेण - நாபியினருகில் பரவிய ஆபரண ஒளியுடைய, हस्तेन - கையினுல், वासः - வஸ்திரத்தை, अवलम्ब्य - பிடித்துக் கொண்டு तस्थौ - நின்ருள்.

(க-து) பெண் ஒருத்தி சிவபிரானைப் பார்க்க வேகமாகச் சென்றதால், அவளது இடை ஆடையின் முடிச்சு அவிழ்ந்தது. ஆயினும் வஸ்திரம் முடிவதில் நேரத்தைச் செலவு செய்ய விருப்பமின்றி, வஸ்திரத்தைக் கையினுல் தாங்கிப் பிடித்துக் கொண்டே ஜன்னலின் சமீபம் சென்ருள். அவள் அவ்வாறு தாங்கிச் சென்ற பொழுது கையிலுள்ள ஆபரணங்களின் ஒளி அவளது இடையைச் சோபையுடையதாகச் செய்தது.

**अर्धाचिता सत्वरमुत्थितायाः पदे पदे दुर्निमिते गलन्ती ।**
**कस्याश्चिदासीद्रशना तदानीमङ्गुष्ठमूलार्पितसूत्रशेषा ॥ ६१ ॥**

सत्वरम् - வேகமாக, उत्थितायाः - எழுந்த, कस्याश्चित् - ஒருத்தியின், अर्ध - आचिता - பாதி கோக்கப்பட்டதும், दुर्निमिते - கஷ்டப்பட்டு வைக்கப்பட்ட, पदे पदे - ஒவ்வொரு அடியிலும், गलन्ती - நழுவுகின்ற (மணிகளையுடையதுமான), रशना - மேகலை, तदानीम् - அப்பொழுது, अङ्गुष्ठ - मूल - अर्पित - सूत्र - शेषा - கட்டை

விரலில் அடியில் கட்டப்பட்ட நூல் மாத்திரமே மிகுந்ததாக, आसीत् - ஆயிற்று.

(க-து) ஒரு பெண், நூலின் ஒரு முனையைத் தன் கால் கட்டை விரலில் கட்டிவிட்டு, அந்நூலில் ரத்தனங்களைக் கோத்து மேகலை தயார் செய்து கொண்டிருந்தாள். சிவபிரான் வருவதைக் கேட்ட அவள் அந்நூலை, அவிழ்த்து வைப்பதால் வரும் காலதாமதத்தையும் பொறுக்காமல் கையில் பிடித்திருந்த நூலின் மறுநுனியை விட்டு வேகமாக நடந்து சென்றாள். வழியில், கோக்கப்பட்ட மணிகள் எல்லாம் நழுவ நூல் மாத்திரமே அவள் காலில் இருந்தது. அவ்வளவு ஆவல் அவளுக்கு!

तासां मुखैरासवगन्धगर्भैर्व्याप्तान्तराः सान्द्रकुतूहलानाम् ।
विलोलनेत्रभ्रमरैर्गवाक्षाः सहस्रपत्राभरणा इवासन् ॥ ६२ ॥

सान्द्र - कुतूहलानाम् - அதிக ஆவலையுடைய, तासाम् - அந்த ஸ்த்ரீகளுடைய, आसव - गन्ध - गर्भैः - மதுவின் மணமுடையவையும், विलोल - नेत्र - भ्रमरैः - அசைகின்ற கண்களாகிய வண்டுகளையுடையவையுமான, मुखैः - முகங்களால், व्याप्त - अन्तराः - நிறைந்த இடைவெளியுடைய, गवाक्षाः - ஜன்னல்கள், सहस्रपत्र - आभरणाः इव - தாமரைப் புஷ்பங்களாலான அலங்காரமுடையன போல், आसन् - இருந்தன.

(க-து) அப் பெண்களின் முகங்கள் தாமரைப் புஷ்பங்களையும், கண்கள் வண்டுகளையும், அவர்கள் அருந்திய மதுவின் மணம் தாமரை மலரின் தேனின் மணத்தையும் ஒத்திருந்தன. அப் பெண்கள் ஜன்னலின் அருகில் நின்ற பொழுது ஜன்னல்கள் தாமரை மலரால் அழகு செய்யப்பட்டன போல் காணப்பட்டன.

सहस्रपत्रावरणाः - எனப்பாடம் கொண்டு, தாமரை மலரான கதவுடையன போல் ஜன்னல்கள் காணப்பட்டன என உரை கூறுவர் அருணகிரி. सहस्रम् - ஆயிரம். இங்கு 'பல' என்ற பொருளில் வந்தது. पत्रम् - இதழ். தாமரையில் இதழ்கள்

பல இருப்பதால் தாமரையை सहस्र-पत्रम् - என்பர். आसव - गन्धगर्भ- மதுவின் மணத்தை வாயினில் கொண்ட என்பது பதப் பொருள். गर्भः - (வாயின்) உட்பகுதி.

**तावत्पताकाकुलमिन्दुमौलिरुत्तोरणं राजपथं प्रपेदे ।**
**प्रासादशृङ्गाणि दिवापि कुर्वञ्ज्योत्स्नाभिषेकद्विगुणद्युतीनि ॥६३॥**

तावत् - அதே சமயத்தில், इन्दु - मौलिः - சிவபிரான், दिवा - अपि - பகலிலும், प्रासाद शृङ्गाणि-நகர மாளிகைகளின் சிகரங்களை, ज्योत्स्ना - अभिषेक - द्विगुण - द्युतीनि - நிலவை வர்ஷிப்பதால் இரு மடங்கான காந்தியுடையனவாக, कुर्वन् - செய்து கொண்டு, पताका - आकुलम् - கொடிகள் நிறைந்ததும், उत्तोरणम् - உயர்த்திக் கட்டப்பட்ட தோரணங்களை (வளைவுகளை) யுடையதுமான, राज - पथम् - ராஜவீதியை, प्रपेदे - அடைந்தார்.

(க-து) நகரப்பெண்கள் சிவபிரானைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையால் ஜன்னலினருகே வந்த அதே சமயத்தில் சிவபிரானும் ஓஷதிபிரஸ்தத்திலுள்ள முக்யமான வீதியை அடைந்தார். சிவபிரானது வரவைக் கருதி எங்கும் கொடிகள் கட்டப்பட்டு இருந்தன. வீதியை அலங்கரிப்பதற்காக ஆங்காங்கு தோரணங்கள் (அலங்கார வளைவுகள்) அமைக்கப்பட்டிருந்தன. சிவபிரானுடைய தலையிலுள்ள சந்திரனது நிலவு படுவதால் நகர மாளிகைகளின் அழகு இருமடங்காகியது.

ज्योत्स्ना - अभिषेक - நிலவை அபிஷேகம் செய்வதால்-மேலே ஊற்றுவதால் - என்பது பதப்பொருள். சிவபிரானது சிரஸில் இருந்த சந்திரனுடைய ஒளிபட்டு முன்பே அழகுடன் இருந்த மாளிகைகளின் ஒளி இருமடங்காயிற்று. तोरणम् - பெரியோர்கள் வரும்பொழுது வீதிகளிலே அலங்காரமாக ஆங்காங்கு சில வளைவுகளை அமைப்பர். வாசல்போல் அமைந்த அவை தோரணமெனப்படும். வீதியையும் வாசலையும் அழகு

செய்வதற்காகக் கட்டப்படும் பூமாலையும், இலைமாலையும் கூட இக்காரணத்தால் தோரணம் எனத் தமிழில் வழங்கப் படுகின்றன. राजपथः - விசேஷ காலங்களில் அரசர்கள் பவனி வரும் வீதி. முக்யமான பெரிய வீதி என்பது கருத்து.

**तमेकदृश्यं नयनैः पिबन्त्यो नार्यो न जग्मुर्विषयान्तराणि ।**
**तथाहि शेषेन्द्रियवृत्तिरासां सर्वात्मना चक्षुरिव प्रविष्टा ॥ ६४ ॥**

एक - दृश्यम् - காணப்பட வேண்டியவர்களில் தலைசிறந்த, तम् - அவரை, नयनैः - கண்களால், पिबन्त्यः - பானம் செய்கின்ற (ஆவலுடன் பார்க்கின்ற), नार्यः - பெண்கள், विषयान्तराणि - வேறு விஷயங்களை, न - जग्मुः - அறியவில்லை. तथाहि - (அது) அவ்வாறு தான் இருந்தது; आसाम् - அவர்களுடைய, शेष - इन्द्रिय - वृत्तिः - மற்றப்புலன்களின் செயல் எல்லாம், सर्वात्मना - முற்றிலும், चक्षुः - கண்ணில், प्रविष्टा - इव - புகுந்துவிட்டது போலும் (இருந்தது).

(க-து) 'சிவபிரான் ஒருவரே காணத்தகுந்தவர். காணத்தகுந்தவர்களில் முக்கியமானவரும் அவர்தாம். எனவே நகரத்து ஸ்த்ரீகள் அவரை ஆவலுடன் நோக்கினர். சுற்றிலுமுள்ள மற்ற விஷயங்களை அறியாது மெய்ம்மறந்து இருந்தனர். அவர்கள் வேறு எதையும் உணரவில்லை. ஆதலால் காது முதலான மற்ற இந்திரியங்களின் செயல்களும் கண்ணிலே ஒடுங்கியனவோவென நினைக்கும்படி இருந்தது.

एक - दृश्य - காணத் தகுந்தவர் அவர் ஒருவரே எனவும் பொருள் கொள்ளலாம், पिबन्त्यः - ஆவலுடன் பார்ப்பதை கண்களால் பானம் செய்வதாகக் கூறுவர். सर्वात्मना - चक्षुरिव प्रविष्टा - என்பதற்குப் பதிலாக, विनोरघातेन जडीबभूव - என்பது அருணகிரியின் பாடம். "மற்றப் புலன்களின் செயல்களுக்கு

தடையில்லாத பொழுதும் அவைகள் வேலை செய்யா தொழிந்தன'' என்பர்.

स्थाने तपो दुश्चरमेतदर्थमपर्णया पेशलयापि तप्तम् ।
या दास्यमप्यस्य लभेत नारी सा स्यात्कृतार्था किमुताङ्कशय्याम् ॥

पेशलया - अपि - மென்மை வாய்ந்தவளாயினும், अपर्णया - பார்வதியினால், एतदर्थम् - இச்சிவபிரானையடைவதற்காக, दुश्चरम् - செய்யமுடியாத (கடினமான), तपः - தவம், तप्तम् - செய்யப்பட்டது (என்பது), स्थाने - பொருத்தமானதே; या नारी - எந்த ஸ்த்ரீ, अस्य - இவருக்கு, दास्यम् - अपि - அடிமையாக இருக்கும் நிலையையும், लभेत - அடைவாளோ, सा - அவள், कृतार्था - பாக்கியசாலியாக, स्यात् - ஆவாள். या - எவள் अङ्कशय्याम् -மனைவியாக இருக்கும் நிலையை, लभेत - அடைவாளோ, सा - அவள், कृतार्था इति - பாக்கியசாலி என, किमुत (वक्तव्यम्) - கூறவும் வேண்டுமோ ?

(க-து) ''மென்மையான சரீரமுடையவள் பார்வதி. எளிய தவமும் செய்ய இயலாதவள். அவள் இச்சிவபிரானை அடைய உடலை வருத்திக் கடுந்தவம் செய்தது சரியானதே. ஏனெனில் இச் சிவபிரானுக்குப் பணிப்பெண்ணாக இருப்பவளும் பாக்கியசாலி எனின் மனைவியாக இருப்பவளின் பெருமையைக் கூற வேண்டுமோ?'' என சிவபிரானைக் கண்ட பெண்கள் கூறினர்.

இதிலிருந்து நான்கு சுலோகங்கள் சிவபிரானைப் பார்த்த பெண்கள் பேசிய பேச்சாக உள்ளன.

अपर्णया - ஸர்க்கம் 5 சுலோகம் 28 காண்க. दास्यम् - அடிமை நிலை; பணியாளாக இருத்தல். किमुत - கேள்வியைக் குறிப்பது; सुतराम् - அதிகம் என்ற பொருளும் உண்டு.

'या - எவள், अङ्कशय्याम् - (சிவபிரானது) மடியாகிய படுக்கையை, श्रयेत - அடைவாளோ, सा - அவள், किमुत - மிகவும், कृतार्थी स्यात् - பாக்யசாலியாவாள்' என்றும் பொருள் கூறலாம்.

परस्परेण स्पृहणीयशोभं न चेदिदं द्वन्द्वमयोजयिष्यत् ।
अस्मिन्द्वये रूपविधानयत्नः पत्युः प्रजानां विफलोऽभविष्यत् ॥६६॥

स्पृहणीय - शोभम् - (எல்லோராலும் தமக்கும் இவ்வழகு வேண்டுமென) விரும்பத் தக்க அழகையுடைய, इदम् द्वन्द्वम् - இவ்விருவரையும், परस्परेण - பரஸ்பரம், न अयोजयिष्यत् चेत् - (கணவனும் மனேவியுமாக) சேர்த்திராவிடில், प्रजानाम् - पत्युः - பிரஜைகளின் தலைவரான பிரம்ம தேவருக்கு, अस्मिन् द्वये - இவ்விருவரிடத்திலும், रूप - विधान - यत्नः - அழகை அமைப்பதில் ஏற்பட்ட முயற்சி, विफलः - பயனற்றதாக, अभविष्यत् - ஆகி இருக்கும்.

(க-து) இவ்விருவரின் அழகைக் கண்ட யாவரும் அவர்களின் அழகு தமக்கும் வேண்டுமென ஆசைப்படுவர். அவ்வாறு எல்லோ ராலும் ஒப்பத்தகுந்த அழகைப்பெற்ற இவ்விருவரையும் பிரம்மதேவர் கணவனும் மனேவியுமாகச் சேர்த்திராவிடின் அவர் இவ்விருவருக்கும் முயன்று அமைத்த அழகு வீணுகி இருக்கும். அழகு அழகுடன் சேர்வதே பொருத்தமானது.

இச்சுலோகத்திற்கு அருணகிரி, நாராயணர் இவ்விரு வரின் உரை இல்லை. இதனை குமாரஸம்பவத்தில் இருப்ப தாகக் கருதவில்லை எனத் தோன்றுகிறது. ரகுவம்சத்தில் இச்சுலோகம் (7 - 14,) உள்ளது.

न नूनमारूढरुषा शरीरमनेन दग्धं कुसुमायुधस्य ।
व्रीडादमुं देवमुदीक्ष्य मन्ये संन्यस्तदेहः स्वयमेव कामः ॥६७॥

आरूढरुषा - அதிகம் கோபமடைந்த, अनेन - சிவபிராளுல், कुसुम - आयुधस्य - மன்மதனுடைய, शरीरम् - தேஹம், न दग्धम् - எரிக்கப்படவில்லை; नूनम् - இது உண்மைதான். कामः - மன்மதன், अमुम् - இந்த, देवम् - பிரகாசிக்கின்ற சிவபிரானை, उदीक्ष्य - கண்டு, व्रीडात् - வெட்கத்தால், स्वयं एव - தானே संन्यस्त - देहः - சரீரத்தை விட்டவன் ஆனுன் (इति) என, मन्ये - நினைக்கிறேன்.

(க-து) ''சிவபிரான் கோபத்திஞல் மன்மதனுடைய உடலை எரித்ததாக ஜனங்கள் கூறுவது சரியில்லை. இவர் அவனை தஹிக்க வில்லை. மன்மதன், தன்னைவிட அழகு வாய்ந்த சிவபிரானைக் கண்டவுடன் வெட்கமுற்றுத் தான் இனி உயிருடன் வாழ்தல் கூடாது எனக் கருதி யோக முறையினுல் உடலை சாம்பலாக்கிக் கொண்டான் எனக் கருதுகிறேன்'' என ஒரு ஸ்த்ரீ கூறினுள்.

मन्ये - நான் கருதுகிறேன் என ஒருத்தி கூறியதாயினும் அதுவே பலரின் கருத்து எனக் கருத வேண்டும். व्रीडः - வெட்கம்: இது ஆண்பால் சொல்லாகவும் வரும். संन्यस्तदेहः - 'விடப்பட்ட சரீரமுடையவன்' என்பது பதப் பொருள்.

**अनेन संबन्धमुपेत्य दिष्ट्या मनोरथप्रार्थितमीश्वरेण ।**
**मूर्धानमालि क्षितिधारणोच्चमुच्चैस्तरं वक्ष्यति शैलराजः ॥ ६८ ॥**

आलि - ஸகியே! शैलराजः - ஹிமவான், मनोरथ - प्रार्थितम् - தனது ஆசைகளுக்கு விஷயமாக இருந்த, अनेन - ईश्वरेण - संबन्धम् - இச் சிவபிரானுடன் ஸம்பந்தத்தை, दिष्ट्या - அத்ருஷ்ட வசமாக, उपेत्य - (இப்பொழுது) அடைந்து, क्षिति - धारणोच्चम् - பூமியைத் தாங்குவதால் நிமிர்ந்துள்ள, मूर्धानम् - (தனது) தலையை, उच्चैस्तरम् - மேலும் நிமிர்ந்திருக்கும்படி, वक्ष्यति - தாங்கப் போகின்ருன்.

(க-து) பூமியைத் தாங்குபவன் ஹிமவான். அப்பெருமையினுலே அவன் தலை நிமிர்ந்துள்ளான். சிவபிரானுடன் ஸம்பந்தம் செய்து கொள்ள வேண்டுமென்ற விருப்பம் நெடுநாளாக உள்ளது. தெய்வாதீனமாக அது இப்பொழுது நிறைவேறப் போகின்றது. இந்த ஸம்பந்தமும் அவனுக்குப் பெருமை அளிப்பதாகும். ஆதலால் முன்பே நிமிர்ந்துள்ள அவன் தலை இப்பெருமை காரணமாக இப்பொழுது மேலும் நிமிர்ந்து இருக்கப் போகின்றது".

தங்கள் அரசனுகிய ஹிமவானுக்குள்ள பெருமை மேலும் உயரப் போகின்றது என்பதைக் கருதி ஓஷதிப்ரஸ்தப் பெண்கள் அவனது பாக்யத்தைப் புகழ்ந்து கூறுகின்றனர். தலை உயர்ந்தது என்பது பெருமையின் உயர்வைக் குறித்தது.

क्षितिधारणोच्चम् - நதிகளாலும் மழையினுலும் மற்றும் பல விளை பொருள்களாலும் மக்களுக்கு நன்மை செய்வதால், மலை பூமியைத் தாங்குவதாகக் கூறுவர். ஹிமவானிடம் தோன்றிய கங்கை முதலிய நதிகளால் நாடு பெறும் நன்மையைக் கருதி ஹிமவான் பூமியைத் தாங்குகின்ருனெனக் கூறத் தடையில்லை. ஸர்க்கம் 6 சுலோகம் 68 காண்க. उच्चैस्तरम् - என்பதே சரியான பாடம் என்பர் மல்லிநாதர்; उच्चैस्तराम् - என்பது அருணகிரி பாடம்.

इत्योषधिप्रस्थविलासिनीनां शृण्वन्कथाः श्रोत्रसुखास्त्रिनेत्रः ।
केयूरचूर्णीकृतलाजमुष्टिं हिमालयस्यालयमाससाद ॥ ६९ ॥

त्रि - नेत्रः - சிவபிரான், इति - இவ்வாறு, ओषधिप्रस्थ - विलासिनीनाम् - ஓஷதிப்ரஸ்த ஸ்த்ரீகளின், श्रोत्र - सुखाः - காதிற்கு இனிமையான, कथाः - வார்த்தைகளை, शृण्वन् - கேட்டுக் கொண்டு, केयूर - चूर्णीकृत - लाज - मुष्टिम् - தோள்வளைகளால் பொடி செய்யப்பட்ட பொரிகளின் பிடிகளையுடைய, हिम - आलयस्य - आलयम् - ஹிமவானது வீட்டை, आससाद - அடைந்தார்.

(க-து) ஓஷதிப்ரஸ்த ஸ்த்ரீகள் கூறிய காதிற்கினிய இத்தகைய சொற்களைக் கேட்டுக் கொண்டு சிவபிரான் ஹிமவானது வீட்டிற்குச் சென்றார். அவர் புகும்பொழுது சிறுபெண்கள் தூவிய பொரிகள் ஜனங்களிடையில் விழுந்து அவர்களின் தோள்வளைகளின் உராய்தலால் பொடியாயின.

தோளோடு தோள் உராயும்படி ஜனக்கூட்டம் அவ்வளவு அதிகமாக இருந்தது. மரியாதைக்குரியவர்களைப் பொரியைத் தூவி வரவேற்கும் பழக்கம் காளிதாஸர் கூறுவதினின்றும் தெரிகிறது ரகுவம்சத்தில், ஸர்க்கம் 2, சுலோகம் 10-இல் இதே கருத்து வந்துள்ளது. केयूर - தோளில் (கையின் மேற் பகுதியில்) அணியப்படும் ஒருவகை ஆபரணம். தூவப்பட்ட பொரிகள் தோள்களின் இடையில் விழவும், அங்கு தோள் வளைகள் மோதுதலால் பொடியாயின. लाजमुष्टि - பொரிப் பிடி : - பிடிப் பிடியாக எடுத்துத் தூவப்பட்ட பொரி என்பது கருத்து. त्रिनेत्रः - மூன்று கண்ணுடையவர் - சிவபிரான்.

तत्रावतीर्याच्युतदत्तहस्तः शरद्घनाद्दीधितिमानिवोक्ष्णः ।
क्रान्तानि पूर्वं कमलासनेन कक्ष्यान्तराण्यद्रिपतेर्विवेश ॥ ७० ॥

तत्र - அங்கு, अच्युत - दत्त - हस्तः - விஷ்ணுவினால் கை கொடுக்கப்பட்டவராக, शरद् - घनात् - சரத்கால மேகத்தினின் றும், दीधितिमान् - इव - சூரியன் (இறங்குவது) போல, उक्ष्णः - விருஷபத்தினின்றும், अवतीर्य - இறங்கி, कमलासनेन - பிரம்ம தேவரால், पूर्वम् - முதலில், क्रान्तानि - கடக்கப்பட்ட अद्रि - पतेः - ஹிமவானது, कक्ष्यान्तराणि - (வீட்டின்) பல பகுதிகளை, (கட்டு களை), विवेश - ப்ரவேசித்தார்.

(க-து) ஹிமவானது அரண்மனையை அடைந்ததும், விஷ்ணு கை கொடுக்க, சிவபிரான் அதனைப் பற்றிக் கொண்டு சரத்கால

வெண்மேகத்தினின்றும் சூரியன் வருவது போல், விருஷபத்தினின்றும் கீழே இறங்கினார். தமக்கு முன்னே சென்ற பிரம்மதேவர் வழிகாட்ட, ஹிமவானது அரண்மனையின் பல விசாலமான அறைகளை ஒன்றன் பின் ஒன்றாக அடைந்தார்.

अच्युतदत्तहस्तः - விஷ்ணுவிற்கும் சிவபிரானுக்குமுள்ள நட்பினைக் காட்டியது. दीधितिमान् इव - சரத்கால மேகம் வெண்மையாக இருக்கும். மேகத்தின் பின் இருந்த சூரியன் மேகம் விலக, கண்ணுக்குப் புலனாகின்றது. இதனை மேகத்தினின்றும் சூரியன் இறங்குவதாகக் கவி கூறினார். வெண்ணிறம், பெரிய வடிவம் இவை காரணமாக, வ்ருஷபம் மேகத்துடன் ஒப்பிடப்பட்டது. कक्ष्या - பெரிய விசாலமான அறைகள்; வீட்டில் ஒன்றன்பின் ஒன்றாக அமைந்துள்ள பல பெரும் பகுதிகள்; இவற்றைத் தமிழில் 'கட்டுகள்' என்றும் கூறுவர். முதற்கட்டு, இரண்டாம் கட்டு என்பதனைக் காண்க. विवेश - ஒன்றன் பின் ஒன்றாக அவ்வறைகளைக் கடந்து சென்றார்.

**तमन्वगिन्द्रप्रमुखाश्च देवाः सप्तर्षिपूर्वाः परमर्षयश्च ।**
**गणाश्च गिर्यालयमभ्यगच्छन्प्रशस्तमारम्भमिवोत्तमार्थाः ॥ ७१ ॥**

तम् - अन्वक् - சிவபிரானை அடுத்து, इन्द्र - प्रमुखाः - இந்திரன் முதலான, देवाः - च - தேவர்களும், सप्तर्षि - पूर्वाः - ஸப்தர்ஷிகளை முன்னிட்ட, परम - ऋषयः - च - சிறந்த மஹர்ஷிகளும், गणाः - च - பிரமத கணங்களும், - उत्तम - अर्थाः - சிறந்த நற்பயன்களைக் கருதும் மனிதர்கள், प्रशस्तम् - கொண்டாடத் தக்க, आरम्भम् - इव - முயற்சியை (அடைவது) போல, - गिरि - आलयम् - ஹிமவானது வீட்டை, अभ्यगच्छन् - அடைந்தனர் (புகுந்தனர்).

(க-து) சிவபிரான் முன்னே செல்ல, அவரை அடுத்து அவருக்குப் பின்னால் தேவர்களும் ஸப்தர்ஷிகளும், மற்ற மஹர்ஷிகளும், சிவஸேவகர்களான கணங்களும், நற்பயனைக் கருதுபவர் நன்முயற்சியை அடைவது போல், ஹிமவானது வீட்டை அடைந்தனர்.

तत्रेश्वरो विष्टरभाग्यथावत्सरत्नमर्घ्यं मधुमच्च गव्यम् ।
नवे दुकूले च नगोपनीतं प्रत्यग्रहीत्सर्वममन्त्रवर्जम् ॥ ७२ ॥

ईश्वरः - சிவபிரான், तत्र - அங்கு, विष्टर - भाक् - ஆஸனத்தில் அமர்ந்தவராக, यथावत् - முறைப்படி, सरत्नम् - ரத்னங்களுடன் கூடிய, अर्घ्यम् - அர்க்கிய தீர்த்தம், मधुमत् - தேன் கலந்த, गव्यम् च - தயிர் (மதுபர்க்கம்), नवे - புதிய, दुकूले च - இரண்டு பட்டு வஸ்திரங்கள் (ஆகிய), नग - उपनीतम् - ஹிமவான் அளித்த, सर्वम् - எல்லாவற்றையும், अमन्त्र - वर्जम् - மந்திரங்களுடன், प्रत्यग्रहीत् - ஏற்றுக்கொண்டார்.

(க-து) சிவபிரானை வரவேற்று ஹிமவான் தக்க ஆஸனத்தில் அமரச் செய்தான். பின் ரத்னம், அர்க்யம், மதுபர்க்கம் இரண்டு பட்டு வஸ்திரங்கள் இவைகளை அவருக்கு சாஸ்திரத்தில் கூறிய முறைப்படி மந்திரங்களைக் கூறி அளித்தான். அவற்றை எல்லாம் ஏற்பதற்கான மந்திரங்களைக் கூறிச் சிவபிரான் பெற்றுக் கொண்டார்.

சிறந்த அதிதிகளுக்கு மதுபர்க்கம் அளித்து உபசரிப்பது முறையாகும். சிறப்பாக மணப் பிள்ளையை வரவேற்கும் பொழுதும் இதை அளிக்க வேண்டும். இவ்வழக்கம் தற்காலத்திலும் உள்ளதே. வரனை வரவேற்கும் வகையைப் பற்றி ஆச்வலாயன குமாரில காரிகை கூறுகிறது.

स्वलंकृतः सितच्छत्रोऽपदातिर्ज्ञातिबान्धवैः । वृतो वधूगृहं गत्वा मधुपर्केण पूजितः - 19-2. என்பதனைக் காண்க. अर्घ्यम् - மரியாதைக்காகத் தரப்படும் ஜலம்; இதனுடன் ரத்னத்தையும் அளிப்பர்.

मधुमत् - தேன் கலந்தது. இதனை मधुपर्कम् - என்றும் கூறுவர். गव्यम् - இச்சொல் பாலையும் குறிக்குமாயினும் இங்கு தயிரைக் குறித்தது. ஏனெனில் மதுபர்க்கத்தில் தயிர்தான் கலக்கப் படுகிறது. தேன், தயிர், நெய், ஜலம், கற்கண்டு என இவ்வைந்தும் கலந்த பண்டம் மதுபர்க்கம். दधिसर्पिर्जलं क्षौद्रं सिता चैतैश्च पञ्चभिः प्रोच्यते मधुपर्कः - என்பது மதுபர்க்கத்தைப் பற்றிக் கூறுவது.

दुकूलवासाः स वधूसमीपं निन्ये विनीतैरवरोधरक्षैः ।
वेलासमीपं स्फुटफेनराजिर्नवैरुदन्वानिव चन्द्रपादैः ॥ ७३ ॥

स्फुट - फेन - राजिः - பிரகாசமான நுரைத் திரளையுடைய उदन्वान् - ஸமுத்ரம், नवैः - புதிய, चन्द्र - पादैः - சந்திர கிரணங் களால், वेला - समीपं - इव - கரையின் ஸமீபத்திற்குக் கொண்டு போகப்படுவது போல், दुकूल - वासाः - பட்டு வஸ்திரங்களை உடுத்திய, सः - சிவபிரான், विनीतैः - விநயமுடைய, अवरोध - रक्षैः - அந்தப்புரப் பணியாளர்களால், वधू - समीपम् - மணப் பெண்ணின் ஸமீபத்திற்கு, निन्ये - அழைத்துச் செல்லப் பட்டார்.

(க-து) ஹிமவான் அன்புடன் அளித்த பட்டு வஸ்திரத்தைச் சிவபிரான் அணிந்தபின், அவரை, உடை பேச்சு முதலிய எல்லா வற்றிலும் தமது விநயத்தைக் காட்டிய அந்தப்புரப் பணியாட்கள், மணப் பெண் இருக்குமிடத்திற்கு அழைத்துச் சென்றனர்.

சந்திரோதய காலத்தில் கடல் பொங்கிக் கரையில் பரவும். எனவே சந்திரகிரணம் ஸமுத்ரத்தைக் கரைக்கு அழைத்து வருவதாகக் கருதி அதனை உபமானமாகக் கூறினார் கவி. வெண்பட்டாடை அணிந்த சிவபிரானுக்கு வெண்ணிற நுரையையுடைய ஸமுத்ரமும், விநயமுள்ள

வேலைக்காரர்களுக்குக் குளிர்ந்த சந்திர கிரணங்களும், பார்வதிக்கு ஸமுத்ரத்தின் கரையும் உபமானங்கள்.

अवरोधवृद्धैः - அந்தப்புரத்துள்ள திறமை வாய்ந்த பணி யாளர்களாலே என மல்லிநாதர் கூறுவர். वेला - அலை மோதுகின்ற ஸமுத்ரக் கரை; वेला - பெண்பாற் சொல்லாத லால் பார்வதிக்கு உவமையாயிற்று.

तया प्रवृद्धाननचन्द्रकान्त्या प्रफुल्लचक्षुःकुमुदः कुमार्या ।
प्रसन्नचेतःसलिलः शिवोऽभूत्संसृज्यमानः शरदेव लोकः ॥७४॥

शरदा - சரத்காலத்துடன், संसृज्यमानः - சேர்ந்த. लोकः - உலகம், प्रफुल्ल - चक्षुः कुमुदः - மலர்ந்த ஆம்பல் என்ற கண்ணுடையதாகவும், प्रसन्न - चेतः - सलिलः - தெளிந்த மனம் போன்ற நீருடையதாகவும், इव - (ஆவது) போல், प्रवृद्ध - आनन- चन्द्रकान्त्या - சந்திரன் போன்ற அழகிய முகத்தில் வளர்ந்த சோபையுடைய, तया कुमार्या - அப்பார்வதியுடன், संसृज्यमानः - சேர்ந்த, शिवः - சிவபிரான், प्रफुल्ल - चक्षुः कुमुदः - குமுதம் போன்ற மலர்ந்த கண்கள் உடையவராகவும், प्रसन्न - चेतः - सलिलः - நீர் போல் தெளிந்த மனமுடையவராகவும், अभूत् - ஆனார்.

(க-து) பூர்ண சந்திரன் போல் பொலிவுற்ற முகத்துடன் விளங்கிய பார்வதியின் அண்மையை அடைந்த சிவபிரானின் ஆம்பல் மலர் போன்ற கண்கள் ஸந்தோஷத்தால் மலர்ந்தன. மனம் தண்ணீர் போல் தெளிவு பெற்றது. அது எவ்வாறு இருந்ததெனின், அழகிய பெண்ணின் முகம் போன்று ஒளிபெற்று விளங்கும் சந்திர னின் சோபையை உடைய சரத்ருதுவுடன் சேரும் உலகம், ஆம்பல் மலரப் பெற்று விளங்கும்; தெளிந்த தண்ணீருடையதாகும். அத்தகைய உலகம் போல் சிவபிரான், மனமும் கண்களும் மகிழ்ச்சி யினால் மலரப் பெற்று விளங்கினார்.

பார்வதிக்கு சரத்ருது உபமானம். பார்வதி சரத்கால சந்திரன் போன்ற முகமுடையவள்; சரத்ருது பார்வதியின் முகம் போன்ற சந்திரனை உடையது.

சிவபிரானுக்கு உபமானம் உலகம். அவரது கண் களுக்கு ஆம்பல் மலரும், மனத்திற்குத் தெளிந்த தண்ணீரும் உபமானங்கள். உலகிற்கும், கண்கள் போன்ற ஆம்பல் மலர்கள் உள்ளன. நல்லோர் மனம் போன்ற தெளிந்த தண்ணீரும் உள்ளது. சரத்காலத்தில் மழையின்மையால் தண்ணீர் தெளிந்திருக்கும்.

உபமேயமான பார்வதி, சிவபிரான் இவர்களுக்குத் தரப் பட்ட அடைமொழிகளை சரத் ருதுவிற்கும் உலகிற்கும் கூட்டிப் பொருள் கூறப்பட்டுள்ளது.

> तयोः समापत्तिषु कातराणि किंचिद्व्यवस्थापितसंहृतानि ।
> ह्रीयन्त्रणां तत्क्षणमन्वभूवन्नन्योन्यलोलानि विलोचनानि ॥७५॥

समापत्तिषु - ஒன்றை ஒன்று சந்தித்த பொழுது, कातराणि - அச்சமுற்றனவும், किञ्चित् - சிறிது நேரம், व्यवस्थापित - संहृतानि - வைத்தபின் வாங்கப்பட்டனவும், अन्योन्य - लोलानि - ஒருவரை ஒருவர் காண்பதில் ஆவலுடையனவுமான, तयोः - அவ்விரு வரின், विलोचनानि - கண் பார்வைகள், तत्क्षणम् - அந்த சமயத்தில், ह्री - यन्त्रणाम् - வெட்கத்தினால் ஏற்படும் ஸங்கோசத்தை, अन्वभूवन् - அனுபவித்தன.

(க-து) சிவபிரானைப் பார்வதியும், பார்வதியைச் சிவபிரானும் பார்க்க விரும்பிய பொழுது சிற்சில சமயங்களில் அவர்களது பார்வைகள் எதிர்பாரா வகையில் ஒன்றை ஒன்று சந்தித்தன. சந்தித்த காலத்தில் பிறர் என்ன நினைப்பாரோ என எண்ணி அச்ச முற்றனர் அவர்கள். அவ்வாறு பார்வைகள் ஒன்றை ஒன்று

சந்திக்காத பொழுது, சிவனும் பார்வதியும் ஒருவரை ஒருவர் சிறிது நேரம் நன்கு கண்டபின் பிறர் தம்மைக் காண்பரோ என அஞ்சி, வைத்த பார்வையைத் திருப்பிக் கொண்டனர். மறுபடியும் ஆசையி னுல் தூண்டப்பட்ட பொழுதும் அவர்களது பார்வைகள் நாணத்தால் அடக்கத்தை அடைந்தன.

कातराणि - பார்வைகள் தைரியமிழந்தன. பார்வதிக்கும் சிவபிரானுக்கும் உள்ள ஸங்கோசத்தை கண்களின் மேல் ஏற்றிக் கூறினுர் கவி. व्यवस्थापित - संहृतानि - சிவபிரானே பார்வதியோ சிறிதுநேரம் தமது பார்வையை ஒருவர் மற்றவர் மேல் பதிய வைத்துப் பின் அதனைத் திருப்பிக் கொண்டனர். ह्री - यन्त्रणा - நாணம் காரணமாக வரும் தன்னடக்கம்.

**तस्याः करं शैलगुरूपनीतं जग्राह ताम्राङ्गुलिमष्टमूर्तिः ।**

**उमातनौ गूढतनोः स्मरस्य तच्छङ्किनः पूर्वमिव प्ररोहम् ॥७६॥**

अष्ट - मूर्तिः - சிவபிரான், तद् - शङ्किनः - அவரிடம் பயந்தவனும், उमा - तनौ - பார்வதியின் மேனியில், गूढ - तनोः - மறைத்து வைக்கப்பட்ட தேஹ முடையவனுமான, स्मरस्य - மன்மத னுக்கு (மன்மதன் என்ற கொடிக்கு), पूर्वम् - முதலில் தோன் றிய, प्ररोहमिव - தளிர் போன்றுள்ளதும், शैल - गुरु - उपनीतम् - ஹிமவானுல் தரப்பட்டதும், ताम्र - अङ्गुलिम् - சிவந்த விரல்களை யுடையதுமான, तस्याः करम् - பார்வதியின் கரத்தை, जग्राह - பற்றினுர்.

(க-து) ஹிமவானுல் தரப்பட்ட பார்வதியின் கரத்தை சிவபிரான் பற்றினுர். சிவந்த விரல்களையுடைய அவ்வழகிய கை, சிவபிரானிடம் பயந்து பார்வதியின் சரீரத்தில் ஒளிந்துள்ள மன்மதக் கொடியில் முதன்முதலில் தோன்றிய தளிர்போல் இருந்தது.

பார்வதியின் கரத்தைத் தளிருடன் ஒப்பிட்டதால் மன்மதனைக் கொடியாகவோ சிறுசெடியாகவோ கருத வேண்

டும். இலையற்ற மன்மதக் கொடியில் தோன்றிய முதல் தளிர் போல் பார்வதியின் கை இருந்தது. இதனால் கையின் அழகும், பார்த்த மாத்திரத்திலேயே ஆனந்த உணர்ச்சியைச் சிவபிரானுக்கு உண்டாக்கும் ஆற்றலும் கூறப்பட்டதாயின.

प्ररोह - முளை - என்று சிலர் உரை கூறுவர். शैल - गुरु - ஹிமவானுடைய புரோகிதர் என்றும் பொருள் கொள்ள லாம். கன்யாதானம் செய்யத் தந்தையே உரியவராத லால் 'ஹிமவானால்' என்று பொருள் கொள்வதே நலம். शैलगुरुः - மலையரசன்.

**रोमोद्गमः प्रादुरभूदुमायाः स्विन्नाङ्गुलिः पुंगवकेतुरासीत् ।**
**वृत्तिस्तयोः पाणिसमागमेन समं विभक्तेव मनोभवस्य ॥ ७७ ॥**

उमायाः - பார்வதிக்கு, रोम - उद्गमः - மயிர்க் கூச்சம், प्रादुरभूत - தோன்றியது; पुं - गव - केतुः - (விருஷபக் கொடியுடைய) சிவபிரான், स्विन्न - अङ्गुलिः - வியர்த்த விரல்களையுடையவராக. आसीत् - ஆனார். पाणि समागमेन - (அவர்களது) கைகளின் சேர்க்கை யினால், तयोः - அவ்விருவர்களிடத்தும், मनोभवस्य - மன்மத னுடைய, वृत्तिः - இருப்பு, समं विभक्तेव - ஸமமாகப் பகிர்ந்து வைக்கப்பட்டது போல், आसीत् - இருந்தது.

(க-து) ஒருவரை ஒருவர் ஸ்பர்சித்ததும், உணர்ச்சி மிகுதியால் பார்வதி மயிர்க்கூச்சமடைந்தாள். சிவபிரானுக்குக் கை விரல்களில் வியர்வை உண்டாயிற்று. இவ்வாறு அன்பின் அடையாளங்கள் அவ்விருவரிடமும் தோன்றின. முன்பே அவ்விருவரும் ஒத்த அன்புடையவராக இருந்தனர். இப்பொழுது கரஸ்பர்சத்தினால் அவர்களது காதல் ஏற்றத்தாழ்வின்றி (நீர் மட்டம் போல்) இருவரிட மும் ஸமமாகச் செய்யப்பட்டது போலும் எனக் கவி உத்ப்ரேக்ஷித் தார். பார்வதியின் மயிர்க்கூச்சமும் சிவபிரானிடம் தோன்றிய வியர்த்தலும் அனுராகம் இருவரிடமும் ஸமமாக உள்ளதென்பதைக் காட்டின.

प्रयुक्तपाणिग्रहणं यदन्यद्वधूवरं पुष्यति कान्तिमग्र्याम् ।
सांनिध्ययोगादनयोस्तदानीं किं कथ्यते श्रीरुभयस्य तस्य ॥७८॥

प्रयुक्त - पाणि - ग्रहणम् - விவாஹம் செய்து கொண்ட, अन्यत् - यत् - வேறு எந்த, वधू - वरम् - மணமகளும் மணமகனும், तदानीं - விவாஹ காலத்தில், अनयोः - சிவபிரானும் பார்வதியும், सांनिध्य - योगात् - (அவர்களிடம்) இருக்கும் காரணத்தால், अग्र्याम् - சிறந்த, कान्तिम् - சோபையை, पुष्यति - அடைகின்றனர் (என்றால்), तस्य उभयस्य - (தற்போது மணமகளும் மணமகனுமாக இருக்கின்ற) அவ்விருவரின், श्रीः - சோபையானது, किं कथ्यते - கூறப்பட வேண்டுமா?

(க-து) சாதாரணமான ஆணும் பெண்ணும், விவாஹ காலத்தில் சிவபிரானும் பார்வதியும் முறையே அவ்விருவரிடமும் உறைவதால், அழகுடனிருக்கின்றனர். பிறர்க்கு அழகு தரும் அவ்விருவரும், அவர்களது விவாஹ காலத்தில் சோபையுடனிருந்தனர் எனக் கூறவும் வேண்டுமா?

सांनिध्यम् - அண்மையில் இருத்தல்; இது தெய்வங்கள் கரந்து உறைதலைக் குறிக்கும். விவாஹ காலத்தில் மணமகனிடம் சிவபிரானும், மணமகளிடம் பார்வதியும் ஸாந்நித்யம் செய்வதாக (உறைவதாக) சாஸ்திரம் கூறும். वधूरुमात्मिका, भर्ता विवाहे शङ्करात्मकः - என்பதனைக் காண்க.

प्रदक्षिणप्रक्रमणात्कृशानोरुदर्चिषस्तन्मिथुनं चकासे ।
मेरोरुपान्तेष्विव वर्तमानमन्योन्यसंसक्तमहस्त्रियामम् ॥ ७९ ॥

(अन्योन्य - संसक्तम्) - ஒருவரோடொருவர் இணைந்த (கை பற்றிய), तत् मिथुनम् - அத்தம்பதிகள், उत् - अर्चिषः - மேல் நோக்கி எழுகின்ற ஜ்வாலைகளுடன் கூடிய, कृशानोः - அக்னியை, प्रदक्षिण - प्रक्रमणात् - வலமாகச் செல்வதால் (வலம் வருதலால்),

मेरोः - மேரு மலையின், उपान्तेषु - சுற்றுப் புறங்களில், वर्तमानम् - சுற்றுகின்ற, अन्योन्य - संसक्तम् - ஒன்றோடொன்று இணைந்துள்ள, अहः - त्रियामम् - इव - பகலும் இரவும் போல், चकासे - விளங்கினார்கள்.

(க-து) கை பற்றி, அத்தம்பதிகள் ஜ்வலிக்கின்ற அக்னியைப் பிரதக்ஷிணம் செய்தனர். அவ்வாறு சுற்றி வரும்பொழுது, அவர்கள் பொன் மயமான, ஒளிர்கின்ற மேருமலையைச் சுற்றி வரும் பகலும் இரவும் போல் காணப்பட்டனர்.

மேருமலை பொன்னாலானது. அதனைச் சுற்றிச் சூரியன் செல்வதாகக் கூறுவர். சூரியன் உள்ள இடத்தில் பகலும், அவன் இல்லாத இடத்தில் இரவும் உண்டாகின்றன. ஆகவே பகலும் இரவும் மேரு மலையைச் சுற்றி ஒன்றன்பின் ஒன்றாக வருகின்றன எனலாம். கை பற்றிய தம்பதிகள் போல் இணைந்துமுள்ளன பகலும் இரவும் என்ற கருத்தைக் காட்டுகின்றது, अन्योन्य - संसक्तम् - என்ற விசேஷணம். उदर्चिषः - என்பதை மேருமலைக்கும் விசேஷணமாகக் கொண்டு, 'ரத்னங்களாலும் பொன்னாலும் ஒளிர்கின்ற' எனப் பொருள் கொள்ளலாம். मेरोरिवान्ते परिवर्तमानम् - என்பது அருணகிரி பாடம். சிவபிரானுக்குப் பகலும், பார்வதிக்கு இரவும், அக்னிக்கு மேரு மலையும் உபமானங்கள்.

तौ दंपती त्रिः परिणीय वह्निमन्योन्यसंस्पर्शनिमीलिताक्षौ ।
स कारयामास वधूं पुरोधास्तस्मिन्समिद्धार्चिषि लाजमोक्षम् ॥

सः - அந்த, पुरोधाः - புரோகிதர், अन्योन्य - संस्पर्श - निमीलित - अक्षौ - ஒருவரை ஒருவர் தொடுதலால் ஏற்பட்ட இன்ப உணர்ச்சியால் மூடிய கண்களையுடைய, तौ दंपती - அத்தம்பதிகளை, त्रिः - மூன்று தடவை, वह्नि - परिणीय - அக்னியை வலம்

வரச் செய்த பின், समिद्ध - अर्चिषि - ப்ரகாசமான ஜ்வாலைகளை யுடைய, तस्मिन् - அந்த அக்னியில், वधूम् - மணப் பெண்ணை பார்வதியைக் கொண்டு, लाज - मोक्षम् - பொரியிடுதலை, कारयामास - செய்வித்தார்.

(க-து) ஒருவரை ஒருவர் கை பற்றியதால் உண்டான இன்ப நுகர்ச்சியினால் பார்வதியும் பரமேசுவரனும் கண்களை மூடி நின்றனர். அவர்களை மும்முறை அக்னியை வலம் வரச் செய்தார் புரோகிதர். பிறகு, பார்வதி புரோகிதர் கூறியபடி அக்னியில் பொரியை இட்டு ஹோமம் செய்தாள்.

सः - என்பது புரோகிதரின் பிரசித்தியைக் காட்டியது. அல்லது சு. 76 - இல் குறிப்பிடப்பட்ட புரோகிதர் என்றும் கொள்ளலாம். பொரி ஹோமம் இப்பொழுதும் செய்யப்படு கின்றது. ஹோமம் செய்யும்பொழுது பெண் கூறுவதாக உள்ள மந்த்ரம்.

'इमान् लाजानावपामि समृद्धिकरणान् मम ।
दीर्घायुरस्तु मे पतिरेधन्तां ज्ञातयो मम' ॥ என்பது ஹிரண்ய கேசி என்ற க்ருஹ்யஸூத்ரத்தில் (19-6-2) தரப்பட்டுள்ளது. வேறு மந்திரங்களும் உண்டு. இதன் பொருள்:- "எனக்கு எவ்வகையிலும் மேன்மையளிக்கின்ற இப்பொரிகளை அக்னி தேவருக்கு அர்ப்பணம் செய்கின்றேன். என் கணவர் நீண்ட ஆயுளுடையவராக இருக்கவேண்டும். என் சுற்றத்தினர் மேன்மேலும் நன்மை பெற வேண்டும்" என்பதாம்.

**सा लाजधूमाञ्जलिमिष्टगन्धं गुरूपदेशाद्वदनं निनाय ।**
**कपोलसंसर्पिशिखः स तस्या मुहूर्तकर्णोत्पलतां प्रपेदे ॥ ८१ ॥**

सा - அப்பார்வதி, गुरु - उपदेशात् - புரோகிதரின் வார்த் தைப்படி, इष्ट - गन्धम् - ப்ரியமான (நல்ல) வாசனையுடைய,

लाज - धूम - अञ्जलिम् - பொரியின் கை நிறைந்த புகையை, वदनम् - (தன்) முகத்தை நோக்கி, निनाय - கொண்டு சென்றாள்; कपोल - संसर्पि - शिखः - பார்வதியின் கன்னத்தில் பரவுகின்ற நுனியையுடைய, सः - அப்புகை, तस्याः - அவளுக்கு, मुहूर्तं - कर्ण - उत्पलताम् - சிறிது நேரம் காதிற்கு அணியான கருநெய்தல் புஷ்பத்தன்மையை, प्रपेदे - அடைந்தது.

(க-து) பொரியிட்டதால் அக்னியினின்றும் மணமுள்ள புகை எழுந்தது. அப்புகையினைக் கைகளால் எடுத்து முகத்தருகே கொண்டு வந்து நுகரும்படி புரோகிதரால் ஆணையிடப்பட்ட பார்வதி அவ்வாறே செய்தனள். நுகரும்பொழுது அவளது இரு கன்னங்களில் பரவி மேல் சென்ற புகை, காதருகேசெல்லும் பொழுது, காதில் அணியாக வைக்கப்பட்ட நீலோத்பலம் போல் காணப்பட்டது.

புகையின் நிறமும் சுருளும் தன்மையும் பார்வதியின் கன்னத்தின் அருகில் இருத்தலும். புகையைக் காதிலணியும் நீலோத்பலமாகக் கூறக் காரணமாயின. புகை சில க்ஷணங்களே கன்னத்தினருகிலிருக்குமாகையால், मुहूर्तं - என்றார். लाजहोमजनितं धूमं कराञ्जलिना आदाय निजवदनमानीयाघ्रातवतीत्यर्थः; नारायणः ॥ इष्ट - गन्धम् - பொரி நெருப்பில் எரியும் பொழுது உண்டாகும் புகையை விரும்பத்தக்க வாசனையுடையதாகக் கூறினார். लाजाञ्जलिम् विसृज्य धूमाग्रं समाजिघ्रेत् इति प्रयोगवृत्तिकारवचनमत्र प्रमाणम् - என்பர் நாராயணர். பொரியை ஹோமம் செய்தபின் புகையை நுகரவேண்டும் என்பர் விவாஹமுறைகளைக் கூறுபவர்கள். धूमाञ्जलिः - अञ्जलिपरिमितः धूमः - धूमाञ्जलिः ।

**तदीषदार्द्रारुणगण्डलेखमुच्छ्वासिकालाञ्जनरागमक्ष्णोः ।**
**वधूमुखं क्लान्तयवावतंसमाचारधूमग्रहणाद्बभूव ॥ ८२ ॥**

तत् - அந்த, वधू - मुखम् - மணமகளின் முகம், आचार - धूम - ग्रहणात् - (பெரியோர்களின்) வழக்கத்தை அனுசரித்துப்

புகையை ஏற்றதனால், ईषत् - आर्द्र - अरुण - गण्ड - लेखम् - சிறிது வியர்த்துச் சிவந்த அழகிய கன்னமுடையதாகவும், अक्ष्णोः - கண்களில், उच्छ्वासि - काल - अञ्जन - रागम् - சிறிது கரைந்த கறுத்த மை நிறமுடையதாகவும், क्लान्त - यव - अवतंसम् - வாடிய யவமுளைகளாலான காதணியுடையதாகவும், बभूव -ஆயிற்று.

(க-து) பார்வதி, தன் முகத்தில் புகை படும்படி செய்ததால் அவளது கன்னம் வியர்த்து, சிவந்தது; புகைப்பட்டுக் கண்ணில் நீர் வந்ததால், கண்களில் இட்ட மை கரைந்து அதன் நிறம் கண்ணில் அதிகம் பரவி இருந்தது. புகையின் உஷ்ணத்தினால் காதில் அணிந்திருந்த யவதான்ய முளையும் வாடியது.

गण्डलेखा; गण्डः - கன்னம். இத்துடன், लेखा - என்ற சொல் அதனழகைக் குறிப்பதற்காக வந்தது. யவம் கோதுமை கடுகு போன்ற சிலவற்றை விதைத்து வர்ண நீரைத் தெளித்து அவை முளைத்தவுடன் அம்முளைகளைக் காதிலும் தலையிலும் அணிவது வழக்கம். புகையின் நறுமணம் ஏற்பது பெரியோர்கள் இட்ட வழக்கத்தால் வந்ததெனக் கவி இதில் கூறுகிறார்.

वधूं द्विजः प्राह तवैष वत्से वह्निर्विवाहं प्रति पूर्वसाक्षी ।
शिवेन भर्त्रा सह धर्मचर्या कार्या त्वया मुक्तविचारयेति ॥८३॥

" वत्से - குழந்தாய், एषः वह्निः - இந்த அக்னி, तव - உனது, विवाहं - प्रति - விவாஹத்திற்கு, पूर्व - साक्षी - முதல் ஸாக்ஷியாக உள்ளது; भर्त्रा - கணவராகிய, शिवेन - सह - சிவபிரானுடன், मुक्त - विचारया - ஸந்தேஹத்தை முற்றிலும் நீக்கிய, त्वया - உன்னால், धर्म - चर्या - தர்மானுஷ்டானம், कार्या - செய்யப்பட வேண்டும்" इति - என்று, वधूम् - மணமகளிடம், द्विजः - புரோஹிதர், प्राह - கூறினார்.

(க-து) 'குழந்தாய்; இவ்வக்னி ஸாக்ஷியாக உனது விவாஹம் நிறைவேறிவிட்டது. சிவபிரான் உனது கணவர். ஆதலால் அவர் செய்யும் காரியங்கள், 'நல்லனவோ அல்லனவோ' என்று விசாரிக்கத் தேவையில்லை. அவருடன் சேர்ந்து மன ஒற்றுமையுடன் தர்மங்களைச் செய்வாயாக'. எனப் புரோகிதர் பார்வதிக்குக் கூறினார்.

மஹரிஷிகள் எட்டு வகை விவாஹத்தைக் கூறியிருக்கின்றனர். அவற்றில், 'தர்மத்தைச் சேர்ந்து செய்யுங்கள்' எனக் கூறிப் பெண்ணைத் தருதற்கு, ப்ராஜாபத்ய விவாஹம் எனப் பெயர். 'भर्त्रा सह धर्मचर्या कार्या - எனப் புரோஹிதர் கூறியதால் அத்தகைய விவாஹமே பார்வதிக்கும் சிவபிரானுக்கும் நடந்ததாக உரைகாரர்கள் கூறுவார்கள். सह धर्मं चरतम् - इति प्राजापत्यः (आश्व. गृ. सू. 1.6.1.) என்பது ப்ராஜாபத்ய விவாஹ முறையைக் கூறுகின்றது. पूर्वसाक्षी - சூரியன் முதலானவர்களும் ஸாக்ஷிகளாகக் கருதப்படுவதால், அக்னியை இங்கே முதல் ஸாக்ஷியாகக் கூறினார். 'वधूं द्विजः' - वधूं गिरिः - என்றும், पूर्वसाक्षी - कर्मसाक्षी - என்றும் பாடபேதங்கள் உண்டு.

आलोचनान्तं श्रवणे वितत्य पीतं गुरोस्तद्वचनं भवान्या ।
निदाघकालोल्बणभेदयेव माहेन्द्रमम्भः प्रथमं पृथिव्या ॥ ८४ ॥

भवान्या - பார்வதியினால், आलोचन -अन्तम् (நீண்ட அவளது) கண்கள்வரை (स्थिते) இருந்த, श्रवणे - காதுகளை, वितत्य - சாய்த்து, गुरोः - புரோகிதரின், तत् वचनम् - அவ் வார்த்தை, - निदाघ - काल - उल्बण - भेदया - கோடை காலத்தில் அதிகம் பிளவு கொண்டுள்ள, पृथिव्या - பூமியினால், प्रथमम् - முதன் முதல் வருகின்ற, माहेन्द्रम् अम्भः इव - மழை ஜலம் முற்றிலும் (பருகப்படுவது) போல், पीतम् - பானம் செய்யப் பட்டது. (சிரத்தையுடன் கேட்கப் பட்டது).

(க-து) கோடை காலத்தில் வெய்யிலின் மிகுதியால் பிளவுற்ற நிலம், கோடைக்குப் பின் வரும் மழை ஜலம் முழுவதையும் தானே எடுத்துக்கொள்ளும். வெளியில் செல்லவிடாது. அதுபோல் குரு கூறிய வார்த்தை முழுவதையும் பார்வதி, முழு கவனத்துடன் கேட்டாள்.

भवान्या - கவி இச் சொல்லைக் கருத்துடன் உபயோகித்துள்ளார். அக்னிவலம் வந்து பொரி ஹோமம் செய்த க்ஷணம் முதல் பார்வதி சிவபிரானது மனைவியாகிவிட்டாள். எனவே பார்வதி என்ற சொல்லைக் கூறுது, भवानी - சிவபிரான் மனைவி என்பதை உபயோகித்தார்; அம்மி மிதித்தல், ஸப்த பதி இவற்றைக் கவி கூருவிடினும் பொரிஹோமம் கூறியதாலேயே இவ்விரண்டும் கூறப்பட்டனவாகக் கருத வேண்டும். கண், காதுவரை நீண்டிருப்பதாகக் கூறுவது கவிமரபு. இங்கு நீண்ட கண் அருகில் காது இருப்பதாகக் கொள்ளவேண்டும். श्रवणे वितत्य - செவிகளைச் சாய்த்து; முழு கவனத்துடன் என்பது கருத்து, महेन्द्र - இந்திரன்; மழைக்குத் தலைவன்; माहेन्द्रं अम्भः - माहेन्द्र - இந்திரனால் தரப்படுவது; மழை ஜலம் என்பது பொருள்.

பார்வதிக்கு நிலமும், குருவிற்கு இந்திரனும், உபதேசத்திற்கு மழை ஜலமும், காதிற்கு பூமியின் பிளவும் உபமானமாக வந்தன. निदाघकालोल्बणतापया - என்பது மல்லிநாதர் பாடம். 'கோடை காலத்தினால் மிகவும் உஷ்ணமடைந்துள்ள,' என்பது பதப் பொருள்.

ध्रुवेण भर्त्रा ध्रुवदर्शनाय प्रयुज्यमाना प्रियदर्शनेन ।
सा दृष्ट इत्याननमुन्नमय्य ह्रीसन्नकण्ठी कथमप्युवाच ॥ ८५ ॥

प्रिय - दर्शनेन - பிரியமான தோற்றமுடையவரும், ध्रुवेण - நித்யருமான, भर्त्रा - கணவரால், ध्रुव - दर्शनाय - துருவ நக்ஷத்ரத்

தைக் காண்பதற்காக, प्रयुज्यमाना - தூண்டபட்டவளும், (கூறப் பட்டவளும்), ह्री - सन्न - कण्ठी - வெட்கத்திஞல் மெல்லிய குரலுடையவளுமான, सा - அவள், कथं - अपि - கஷ்டத்துடன், आननम् - தனது முகத்தை, उन्नमय्य - நிமிர்த்தி, 'दृष्टः - (துருவ நக்ஷத்ரம்) பார்க்கப் பட்டது', इति - என, उवाच - கூறிஞள்.

(க-து) சிவபிரான், துருவ நக்ஷத்ரத்தைப் பார்க்கும்படிக் கூறியபொழுது பார்வதி வெட்கத்திஞல் மெல்லிய குரலில் 'பார்த் தேன்' எனத் தலை நிமிர்த்திக் கூறிஞள்.

தம்பதிகள் த்ருவ நக்ஷத்ரம், ஸப்தர்ஷிகள், அருந்ததி இவர்களைக் காண வேண்டுமென்பர் மகரிஷி ஆச்வலாயனர்.

ध्रुवमरुन्धतीं सप्तर्षीनिति दृष्ट्वा वाचं विसृजेत् - 1-7-22. என்பது அவர் ஸூத்ரம். த்ருவ நக்ஷத்ரம் ஆகாயத்தில் மேலே உள்ளதால் 'தலை நிமிர்த்தி' என்ருர். துருவதர்சனம், அருந்ததி ஸப்தர்ஷிகளின் தர்சனத்தையும் குறிக்கும். ஸப்தர்ஷிகள் அருகிலேயே இருந்தனர். அருந்ததியும் அங்கு இருப்பதாகக் கொள்ள வேண்டும்.

इत्थं विधिज्ञेन पुरोहितेन प्रयुक्तपाणिग्रहणोपचारौ ।
प्रणेमतुस्तौ पितरौ प्रजानां पद्मासनस्थाय पितामहाय ॥ ८६ ॥

इत्थम् - இவ்வாறு, विधि - ज्ञेन - முறையறிந்த, पुरोहितेन - புரோஹிதரால், प्रयुक्त - पाणि - ग्रहण - उपचारौ - செய்விக்கப்பட்ட விவாஹச் சடங்கையுடையவர்களும், प्रजानां - மக்களின், पितरौ तौ - தாய் தந்தையருமான அவ்விருவரும், पद्म - आसनस्थाय - தாமரை மலரில் தோன்றியவரான, पितामहाय - பிரம்மதேவரை, प्रणेमतुः - வணங்கிஞர்கள்.

(க-து) அவர்களது விவாஹச் சடங்கு முழுவதும், நன்கு முறையறிந்த புரோஹிதரால் செய்விக்கப்பட்டது. உலகிற்குத்

தாய் தந்தையரான அவ்விருவரும் உலகின் பாட்டனாராக இருக்கின்ற பிரம்ம தேவரை வணங்கினர்.

पाणि - ग्रहण - விவாஹம்; उपचारः - அதில் செய்யப்படும் சடங்குகள்; அக்னியை வலம் வருதல் முதலியன.

पद्मासनस्थाय - என்பது பிரம்மாவின் ஆஸனம் தாமரை எனக் காட்ட வந்தது. அப்போது அவர் தாமரை மலரிலோ யோகாஸனமான பத்மாஸனத்திலோ வீற்றிருந்தார் என்பதில்லை. पितामह - பாட்டனார்; ஹிமவானைப் படைத்தவராதலால் பார்வதிக்குப் பாட்டனாராகின்றார் பிரம்மா. விவாஹத்திற்குப் பின் சிவபிரானுக்கும் நெருங்கிய உறவினராகின்றார்.

उपचारः - சடங்குகள்; पाणिग्रहण - கை பற்றுதல்; விவாஹத்தில் பெண்ணின் கையை வரன் गृभ्णामि ते सौभगत्वाय हस्तम् - என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லிப் பற்றுதலால் இச்சொல் விவாஹத்தைக் குறித்தது. पितरौ - ரகுவம்சம் முதல் ச்லோகத்தில், जगतः - पितरौ - எனப் பார்வதி பரமேச்வரர்களை உலகின் தாய் தந்தையராகக் கூறியுள்ளார் கவி.

वधूर्विधात्रा प्रतिनन्द्यते स्म कल्याणि वीरप्रसवा भवेति ।
वाचस्पतिः सन्नपि सोऽष्टमूर्तौ त्वाशास्यचिन्तास्तिमितो बभूव ॥

कल्याणि - மங்களமுடையவளே, वीर - प्रसवा - வீரனை மகனைப் பெறுபவளாக, भव - ஆவாயாக, इति - எனக்கூறி, वधूः - மணமகள், विधात्रा - பிரம்மதேவரால், प्रतिनन्द्यते स्म - கொண்டாடப் பட்டாள். (ஆசீர்வதிக்கப் பட்டாள்); सः - அவர், वाचस्पतिः अपि - सन् - வாக்கிற்குத் தலைவராயினும், अष्टमूर्तौ तु - சிவபிரான் விஷயத்தில், आशास्य - चिन्ता - स्तिमितः - ஆசீர்வாதம் செய்யத் தகுந்த விஷயத்தைப் பற்றி யோசித்ததால் அசைவற்றவராக, बभूव - இருந்தார்.

(ச-து) பிரம்ம தேவர், பார்வதிக்கு வீரஞன மகன் பிறக்க வேண்டும் என ஆசீர்வதித்தார். ஸகல வித்தைகளுக்கும் தலைவியான ஸரஸ்வதியின் கணவர் பிரம்மதேவர்; சொல்லுக்குத் தலைவர் ஆவர். ஆயினும் ஸகல மங்களங்களும் பொருந்திய சிவபிரானுக்குத் தகுந்த ஆசீர்வாதம் என்ன செய்வதென்பதை யோசித்த பொழுது ஒன்றும் புலனுகாது அசைவற்று இருந்தார் அவர்.

क्लृप्तोपचारां चतुरश्रवेदीं तावेत्य पश्चात्कनकासनस्थौ ।
जायापती लौकिकमेषणीयमार्द्राक्षतारोपणमन्वभूताम् ॥ ८८ ॥

**तौ जाया-पती** - அத் தம்பதிகள், **पश्चात्** - பிறகு, **क्लृप्त-उपचाराम्** - செய்யப்பட்ட அலங்காரமுடைய, **चतुरश्र-वेदीम्** - நான்கு மூலைகளையுடைய (சம சதுரமான) மேடையை, **एत्य**- அடைந்து, **कनक-आसनस्थौ** - பொன்மயமான ஆஸனத்தில் அமர்ந்தவர்களாக, **लौकिकम्** - உலக முறையில் வந்ததும், **एषणीयम्** - (உறவினர்கள்) விரும்புவதுமான, **आर्द्र - अक्षत - आरोपणम्** - ஈரமான அக்ஷதையை இடுதலை. **अन्वभूताम्** - அனுபவித்தனர்.

(க-து) பின்பு சிவபிரானும் பார்வதியும் பூர்ணகும்பம், விதானம், தோரணம் முதலியவைகளால் நன்கு அலங்கரிக்கப் பட்டுள்ள மேடையை அடைந்து, பொன்மயமான ஆஸனத்தில் அமர்ந்து, உறவினர்களால் ஆசீர்வதித்துத் தூவப்பட்ட அக்ஷதையைத் தம் சிரஸ் மேல் ஏற்றுக் கொண்டனர்.

**लौकिकम्** - அக்ஷதை இடுவது உலக வழக்கத்தால் வந்தது. **एषणीयम्** - போற்றத் தக்கது. 'உறவினர்கள் தாம் தாம் செய்ய வேண்டுமென விரும்புவது' என்பர் அருணகிரி· **आर्द्राक्षत** - ஈரமான மஞ்சள்பொடியுடனும் நீருடனும் கலந்திருப்பதால் அக்ஷதையும் ஈரமாக இருக்கும். **आरोपणम्** - தூவுதல், தலையினுல் தாங்குதல், ''ஸ்நாதகர்கள், உறவினர், தந்தை, சுமங்கலிகளான ஸ்திரீகள் இவர்களாலே ஆசீர்வதித்து சிரஸில் ஈரமான அக்ஷதை இடப் படுவதை வதூவரர்கள்

அனுபவித்தனர்" எனக் கவி ரகுவம்சத்தில் 7.28. கூறிய துடன் இதனை ஒப்பு நோக்குக.

पत्रान्तलग्नैर्जलबिन्दुजालैराकृष्टमुक्ताफलजालशोभम् ।
तयोरुपर्यायतनालदण्डमाधत्त लक्ष्मीः कमलातपत्रम् ॥ ८९ ॥

लक्ष्मीः - லக்ஷ்மி, पत्र - अन्त - लग्नैः - இதழ்களின் முனைகளில் இருக்கின்ற, जल - बिन्दु - जालैः - நீர்த்திவலைக் கூட்டங்களால், आकृष्ट - मुक्ता - फल - जाल - शोभम् - முத்துச் சரங்களின் அழகைப் பெற்றுள்ளதும், आयत - नाल - दण्डम् - நீண்ட தண்டாகிய காம்பையுடையதுமான, कमल - आतपत्रम् - வெண்தாமரை யாகிய குடையை, तयोः उपरि - அவ்விருவருக்கும் மேல், आधत्त - பிடித்தாள்.

(க-து) லக்ஷ்மிதேவி, வெண் தாமரை மலரை, அவ்விருவருக்கும் குடையாகப் பிடித்து மரியாதை செய்தாள். தாமரை இதழ்களின் நுனியிலிருந்த நீர்த் திவலைகள், வெண்பட்டுக் குடையில் தொங்க விடப்பட்டுள்ள முத்துச் சரம் போல் காணப்பட்டன. எனவே வெண்குடையின் அழகை அத்தாமரை மலர்க்குடை பெற்றிருந்தது. தாமரை மலரின் நீண்ட தண்டு, அக்குடையின் காம்பாக இருந்தது.

லக்ஷ்மி, அத் தம்பதிகளுக்குச் செய்த உபசாரத்தைக் கூறியது இச்சுலோகம். आकृष्ट .... शोभम् - 'கவரப்பட்ட முத்துச் சரத்தின் காந்தியையுடைய' என்பது பதப்பொருள். மஹாவிஷ்ணுவுடன் ஸ்ரீதேவியும் விவாஹத்திற்கு வந்திருந் தாள் என்பது இதனால் குறிப்பிடப்பட்டது. ஸரஸ்வதி வந்திருந்ததை அடுத்த சுலோகம் கூறுகின்றது.

द्विधा प्रयुक्तेन च वाङ्मयेन सरस्वती तन्मिथुनं नुनाव ।
संस्कारपूतेन वरं वरेण्यं वधूं सुखग्राह्यनिबन्धनेन ॥ ९० ॥

सरस्वती च - ஸரஸ்வதி தேவியும், द्विधा - இரு வகையாக प्रयुक्तेन - கூறப்பட்ட, वाङ्मयेन - வார்த்தைகளால், तत् - मिथुनम् - அத் தம்பதிகளை, नुनाव - புகழ்ந்தாள். (எவ்வாறெனில்), संस्कार - पूतेन - (वाङ्मयेन), இலக்கணத்திஞல் பிழையற்றுத் தூயதான பேச்சிஞல் (ஸம்ஸ்கிருத மொழியால்), वरेण्यम् - போற்றத் தகுந்த, वरम् - மணமகனையும், सुख - ग्राह्य - निबन्धनेन - (वाङ्मयेन), எளிதில் அறியத் தகுந்த பதங்களின் அமைப்பையுடைய ப்ராக்ருத மொழியால், वधूम् च - மணமகளையும், (नुनाव) - போற்றிஞள் (ஆசீர்வதித்தாள்).

(க-து) பிழையற்ற ஸம்ஸ்கிருத பாஷையில் பேசி ஸரஸ்வதி சிவபிரானை வாழ்த்திஞள். எளிதிலே பொருள் விளங்கும் பிராகிருத பாஷையில் பார்வதியைப் புகழ்ந்து பேசிஞள்.

கற்ருேர் பேசும் மொழி ஸம்ஸ்கிருதம். கற்றறிந்தவர் களாயினும் ஸ்த்ரீகள் பேசும் மொழி பொதுவாகப் பிராகிரு தம். இது சிதைந்த ஸ்ம்ஸ்க்ருதம் என்பர். ஆஞல் எளிதில் பொருள் விளங்குவது. வாக் தேவியான ஸரஸ்வதி இரு மொழிகளிலும் பேசும் வல்லமை வாய்ந்தவளாதலால் சிவபிரானை ஸம்ஸ்கிருத மொழியில் வாழ்த்திஞள். மென்மை யுடையதும் எளிதில் பொருள் விளங்குவதுமான ப்ராக்ருத மொழியில் பார்வதியைப் போற்றிஞள்.

तौ संधिषु व्यञ्जितवृत्तिभेदं रसान्तरेषु प्रतिबद्धरागम् ।
अपश्यतामप्सरसां मुहूर्तं प्रयोगमाद्यं ललिताङ्गहारम् ॥ ९१ ॥

तौ - அத் தம்பதிகள், संधिषु - (முகம்) முதலிய கதை இணைப்புகளிலே, व्यञ्जित - वृत्ति - भेदम् - நன்கு புலப்படுத்தப்பட்ட கைசிகி முதலிய விருத்திகளையுடையதும், रस - अन्तरेषु - (காதல் முதலிய) பல்வகைச் சுவைகளிலே, प्रति - बद्ध - रागम् -

அதனதற்குரிய - இசைகளையுடையதும், ललित - अङ्गहारम् - மென்மையாக அவயவங்களின் அசைவுகளையுடையதும், आद्यम् - (பிற வகை நாடகங்களுக்கெல்லாம்) உதாஹரணமாக இருந்ததுமான, अप्सरसाम् - அப்ஸரஸ்களின் (அப்ஸரஸ்கள் அபிநயித்த), प्रयोगम् - நாடகத்தை, मुहूर्तं - சிறிது நேரம், अपश्यताम् - கண்டனர்.

(க-து) ஸரஸ்வதி தேவியின் புகழுரை கேட்டபின், சிவபிரானும் பார்வதியும் அப்ஸரஸ்கள் என்ற தேவமகளிர் நடித்த நாடகத்தைச் சிறிது நேரம் பார்த்தனர்.

விவாஹ காலங்களில் பலரது மனமும் மகிழ்ச்சியுறுதல் அவச்யமாதலால் நாடகமும் தெய்வமகளிரால் நடிக்கப் பட்டது. அந்நாடகம் எவ்வாறு இருந்ததென்பதை நான்கு விசேஷணங்களால் கவி குறித்தார்.

(1) सन्धिषु - व्यञ्जित - वृत्ति - भेदम् - सन्धिः - ஒரு பயனுடன் தொடர்பு கொண்ட கதையின் பல பகுதிகளுடைய இணைப்பு களை ஸந்தி என்பர். இவை, முகம், ப்ரதிமுகம், கர்ப்பம், அவமர்சம், உபஸம்ஹாரம் என ஐந்து; கதாநாயகனது மென்மையான செயலை 'கைசிகி' என்றும், மந்திரம், ஜாலம் முதலியவற்றால் வியப்புண்டாக்குதலை 'ஆரபடி' என்றும், வீரம், அருள், கொடை, முதலிய சீரிய குணங்களைக் காட்டும் செயலை 'ஸாத்வதி' என்றும் கூறுவர். இம் மூன்றும் நாடகப் பொருளினைப் பற்றியன. நாடகத்தை அறிமுகப் படுத்தும் நடனுடைய இனிய ஸம்ஸ்கிருத மொழியை 'பாரதி' என்பர்.

தேவமகளிர் நடித்த நாடகம் மேற்கூறிய ஐவகை இணைப்புகளையும் நால்வகை விருத்திகளையும் சுவைக்குத் தக்கவாறு செவ்வனேயுடையதாக இருந்தது.

(2) रसान्तरेषु - प्रतिबद्ध - रागम् - रसाः - சுவைகள்; காதல் (शृङ्गार), நகை (हास्य), இரக்கம் (करुणा), வெகுளி (रौद्र), பெருமிதம் (वीर), அச்சம் (भयानक), இழிப்பு (वीभत्स), வியப்பு (अद्भुत), சமநிலை (शान्त), என சுவைகள் ஒன்பது. இவற்றை நவ ரஸங்கள் என்பர். அவற்றுள் ஒவ்வொரு சுவைக்கும் ஏற்ற ராகங்களை வகுத்திருக்கின்றனர். தெய்வமகளிர் நடித்த நாடகத்தில் ராகங்கள் சுவைக்குத் தக்கவாறு அமைந்திருந்தன.

(3) ललित - अङ्गहारम् - अङ्गहार - உடலின் உறுப்புக்களாகிய கண், முகம், கை முதலியவைகளின் அசைவு. இதுவும் அழகிய முறையில் அமைந்திருந்தது.

(4) आद्यम् - நாடகத்தை ஸம்ஸ்க்ருதத்தில் நாட்யம் எனவும் ரூபகம் எனவும் கூறுவர். 'தமிழில் கூத்து' என்பர். கதாநாயகனுடைய தன்மை வேறுபடுவதாலும் முக்யமான சுவை வேறுபடுவதாலும் நாடகங்கள் பலவகை யாகின்றன. அவைகளுக்குப் பெயரும் ப்ரகரணம், பாணம், ப்ரஹஸநம், டிமம் என்றெல்லாம் வேறுபட்டுள்ளது. ஆயினும் எல்லாவகைக் கூத்திற்கும் நாடகமே மூலமாகவுள் ளது. முதலாக உள்ளது. தெய்வமகளிர் நடித்தது அத்தகைய மூலமான - முதலான, நாடகமாகும்.

आद्यम् - என்பதற்கு நாராயணர் வேறுவகையில் பொருள் கூறுவர். "பரதமுனிவர் பிரம்மாவினிடமிருந்து தாண்டவம் என்ற நாட்டியத்தைக் கற்ற பின் தமக்கு லாஸ்யம் என்ற நாட்டியத்தையும் கற்பிக்க வேண்டுமெனக் கேட்க, அதற்குப் பிரம்மதேவர், லாஸ்யம் மென்மையான நாட்டியமாதலால் அதனைப் பெண்களே கற்கவேண்டும்; ஆண்கள் அதற்குரிய

ரல்லர் எனக்கூறி பரதருக்குக் கற்பிக்காமல் தேவமகளிர்க்கே அதனை முதலில் கற்பித்தார். லாஸ்யம் என்பது தேவ மகளிரிடமே முதன் முதலில் தோன்றியதாகையால், அவர் களது நாட்டியத்தை आयम् என்றார். கலை, பல சிஷ்யர்களின் பரம்பரையில் வருமாயின் முதல் குரு சொல்லித் தந்த முறை சிறிது மாறுபடவும் கூடும். அப்ஸரஸ்கள் பிரம்மதேவர்களின் முதல் சிஷ்யைகளாதலால் அவர்களது நாட்டியம் தூயதாக இருந்தது என்பதும் आय என்ற சொல்லால் குறிப்பிடப்படுவ தாகும்" என்பர்.

இங்கு நாடகத்தின் பெயர் குறிப்பிடப்படவில்லை. உபதேச முறையில் காலக் கிரமத்தில் குறைபாடு வரும் என்பதைக் கீழ்வரும் சுலோகம் காட்டுகின்றது.

शिष्यस्य बुद्धिमान्द्यादाचार्यस्योपदेशसंवरणात् ।
परिमुषितसम्प्रदायानहह परे दूषयन्ति शास्त्रार्थान् ॥

**देवास्तदन्ते हरमूढमार्यं किरीटबद्धाञ्जलयो निपत्य ।**
**शापावसाने प्रतिपन्नमूर्तेर्ययाचिरे पञ्चशरस्य सेवाम् ॥ ९२ ॥**

तद् - अन्ते - நாடகத்தின் முடிவில், देवाः - தேவர்கள், किरीट - बद्ध - अञ्जलयः - தங்கள் கிரீடங்களின் மேல் கை கூப்பிய வர்களாக, ऊढ - भार्यम् - மனைவியை மணம் செய்து கொண்ட, हरम् - சிவபிரானை. निपत्य - அடி பணிந்து, शाप - अवसाने - சாபத்தின் முடிவில், प्रतिपन्न - मूर्तेः - உடம்பு பெற்றுள்ள, पञ्च - शरस्य - மன்மதனுடைய, सेवाम् - பணிவிடையை, ययाचिरे - (அங்கீகரிக்கும்படி) வேண்டினார்கள்.

(க-து) தேவர்கள் சிவபிரானது அடி பணிந்து மன்மதனுடைய பணிவிடைகளை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினர்,

சிவபிரான் தவம் செய்தபொழுது மன்மதனது பணி விடையை, தவத்திற்கு இடையூறாகக் கருதி ஏற்றுக்கொள்ள வில்லை. விவாஹம் செய்து கொண்டதால் இனி அவன் பணிவிடைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும் எனத் தேவர்கள் வேண்டினர்.

இச் சுலோகத்தில் கூறப்பட்டுள்ள சாபம், அதன் முடிவு, மன்மதன் உடல் பெற்றது முதலியவற்றைத் தெரிந்து கொள்ள நான்காம் ஸர்க்கம் சுலோகங்கள் 40-43 கவனிக்க.

92 - ஆம் சுலோகத்திற்குப் பிறகு சில பிரதிகளில் இடைச் செருகலாக மூன்று சுலோகங்கள் உள்ளன. அவை :-

अवाप्य रूपं हरदृष्टिपूतं देव्याः समीपे प्रणिपत्य रुद्रम् ।
अनङ्ग ऊर्ध्वं न मुखं निनाय त्रासेन देवैः कृतपाणिसंज्ञः ॥

उत्तिष्ठ वत्सेति हरेण चोक्तः त्यक्त्वा भयं तस्य पुरः प्रतस्थे ।
भार्यामितः पश्यति माधवं च प्रीत्युन्मुखं चूतशरं वहन्तम् ॥

पूर्वं यथा देवपतेर्नियोगं प्रीत्याऽवहत्त्वाशु तमिन्द्रमेव ।
प्राप्तः पुनः यत्र गजेन्द्रगामी प्रोद्भिद्यमानो नवयौवनेन ॥ ९२ ॥

**तस्यानुमेने भगवान्विमन्युर्व्यापारमात्मन्यपि सायकानाम् ।**
**काले प्रयुक्ता खलु कार्यविद्भिर्विज्ञापना भर्तृषु सिद्धिमेति ॥९३॥**

वि - मन्युः - கோபம் நீங்கிய, भगवान् - சிவபிரான், आत्मनि - अपि - தம்மிடத்திலும், तस्य - அவனுடைய, सायकानाम् - பாணங் களின், व्यापारम् - செயலை, अनुमेने - அனுமதித்தார்; कार्य - विद्भिः - காரியங்கள் செய்யும் முறை அறிந்தவர்களால், भर्तृषु - எஜமானர்களிடத்தில், काले - प्रयुक्ता - தக்க காலத்

தில் செய்யப் படுகின்ற, विज्ञापना - வேண்டுகோள், सिद्धिम् एति खलु - திண்ணமாகப் பயனடைகின்றதல்லவா?

(க-து) சிவபிரானும் மன்மத பாணங்கள் தம்மிடம் வருவதை அங்கீகரித்தார்.

மன்மதனுடைய கணைகள் மனத்தில் காதலைத் தூண்டுவனவாகக் கூறுவது மரபு. व्यापारः - செயல்; இங்கு, காதலையுண்டாக்குதல்.

இச் சுலோகத்தை அடுத்து ஒரு சுலோகம் இடைச்செருகலாக உள்ளது. அது:-

देवेशसम्पादितचारुमूर्तिः तत्संसदि प्रादुरभूत्स कामः ।
लक्ष्यीकृतं शंकरमेव भूयोऽविध्यच्छरैः पुष्पमयैरमोघैः ॥

**अथ विबुधगणांस्तानिन्दुमौलिर्विसृज्य**
**क्षितिधरपतिकन्यामाददानः करेण ।**
**कनककलशयुक्तं भक्तिशोभासनाथं**
**क्षितिविरचितशय्यं कौतुकागारमागात् ॥ ९४ ॥**

अथ - பிறகு, इन्दुमौलिः - சிவபிரான், तान् विबुधगणान् - அத்தேவர் குழாத்தை, विसृज्य - அனுப்பிவிட்டு, क्षितिधर - पति - कन्याम् - பார்வதியை, करेण आददानः - கையில் பற்றி, कनक कलश-युक्तम् - (நீர் நிரம்பிய) தங்கக் கலசம் உடையதும், भक्ति - शोभा-सनाथम् - பல்வகை அலங்காரத்தினால் அழகுடன் கூடியதும், क्षिति - विरचित - शय्यम् - தரையில் அமைக்கப்பட்ட படுக்கையுடையதுமான, कौतुक - अगारम् - சயன கிருஹத்திற்கு, आगात् - சென்றார்.

(க-து) தமது மணவிழாவினைக் கண்டுகளிக்க வந்திருந்த தேவர் கூட்டத்தை அனுப்பிய பின் பார்வதியைத் தமது கரத்தினால்

பற்றிக்கொண்டு சயன க்ருஹம் சென்றார். சயன கிருஹத்தில் நீர்நிறைந்த தங்கக் கலசம்-பூர்ணகும்பம்-வைக்கப்பட்டு, புஷ்பங்கள் வைத்தல் கோலமிடுதல் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மணமான தம்பதிகள் பன்னிரண்டு அல்லது மூன்று இரவுகள் பிரம்மசர்யம் அனுஷ்டிக்க வேண்டும் என்றும், தரையில் படுக்க வேண்டும் என்றும் க்ருஹ்யஸூத்ரங்கள் கூறுவதால் அவர்களுக்கான படுக்கை தரையிலேயே விரிக்கப்பட்டிருந்தது. கட்டிலின்மேல் அல்ல. அது சுகத்திற்கான சயனமும் அல்ல.

इन्दुमौलिः - சந்திரனைச் சிரஸில் அணிந்தவர்; சிவபிரான். क्षितिधर - மலை ; पति - அவற்றின் அரசன், ஹிமவான்; करेण - आददानः - தமது கரத்தினால், அல்லது பார்வதியை அவளது கரத்திலே பற்றி - என இருவகையிலும் பொருள் கூறலாம். கருத்து ஒன்றுதான். क्षिति ..... शय्यम् - தரையில் விரித்த படுக்கையுடையது சயன க்ருஹம். अत ऊर्ध्वं अक्षारलवणाशिनौ अधः - शायिनौ ब्रह्मचारिणौ त्रिरात्रं द्वादशरात्रं वा - (आश्व. गृ. सू 1 - 8 - 11.) என்பர் ஆச்வலாயனர். இங்குள்ள, अधःशायिनौ என்பது கட்டிலில் சயனம் கூடாதென்று கூறிற்றேயன்றித் தரையில் விரிப்பும் கூடாதென்று சொல்லவில்லை. आगात् - अगात् - என்ற பொருளில் வந்தது,

कौतुक - अगारम् - மங்களம் பொருந்திய வீடு. காமகேளிக்கைக்கான வீடு அல்ல என்பது அருணகிரி உரை. कौतुकागारम्- मङ्गलगृहम् - मन्त्रशय्यम् - न तु कामगृहं यथा दक्षिणावर्तव्याख्याने என்பது அவர் உரை.

नवपरिणयलज्जाभूषणां तत्र गौरीम्
वदनमपहरन्तीं तत्कृताक्षेपमीशः ।
अपि शयनसखीभ्यो दत्तवाचं कथंचि-
त्प्रमथमुखविकारैर्हासयामास गूढम् ॥ ९५ ॥

तत्र - அங்கு, ईशः - சிவபிரான், नव - परिणय लज्जा - भूषणाम् - புதிய மணவினையால் ஏற்பட்ட நாணத்தை அணிகலனாக உடையவளும், तत्कृत - आक्षेपम् - சிவபிரான் நிமிர்த்திய, वदनम् - (தன்) முகத்தை, अपहरन्तीम् (வேறுதிசையில்), திருப்பிக் கொள்பவளும், शयन सखीभ्यः अपि - அந்தரங்கத் தோழிகளுக்கும்கூட, कथञ्चित् - (வெட்கத்தின் மிகுதியால்) மிகவும் சிரமத்துடன், दत्तवाचम् - பேசியவளுமான, गौरीम्-பார்வதியை, प्रमथ - मुख - विकारैः- ப்ருங்கிரிடி முதலான தமது ஸேவகர்களின் முக, சேஷ்டைகளால், गूढम् - பிறர் அறியாவண்ணம், हासयामास - சிரிக்கச் செய்தார்.

(க-து) சயன க்ருஹம் அடைந்த பார்வதி நாணம் மிகுந்து மிக அழகாக இருந்தாள். அந்தரங்கத் தோழிகளுக்கும் மறுமொழி கொடுப்பதில் வெட்கம் காரணமாகச் சிரமப்பட்டாள். வெட்கத்தைப் போக்கப் பார்வதிக்குச் சிரிப்பை உண்டாக்குவதே நல்வழி என்று கருதிய சிவபிரான், ஹாஸ்யரஸத்திற்கு உரிய ப்ரமதர்களில் (சிவஸேவகர்களில்) ஒருவனைத் தூண்ட அவன் சில முக சேஷ்டைகளைச் செய்ய, அதன் மூலம் பார்வதியைப் பிறர் அறியா வண்ணம் சிரிக்கச் செய்தார்.

பெண்ணின் வெட்கத்தை நீக்கக் கூறிய உபாயங்களில் சிரிக்கச் செய்தலும் ஒன்று என கோநர்தர் என்பவர் கூறுவர்.

हासेन मधुना नर्मवचसा लज्जिताम् प्रियाम्। विलुप्तलज्जां कुर्वीत निपुणैश्च सखीजनैः। என்பது அவர்து வாக்யம். गूढम् - பிறர் அறியா வண்ணம் - பார்வதி மிக மென்மையாகச் சிரித்தாள் என்பது கருத்து.

इति महाकवि – श्रीकालिदासकृतौ कुमारसम्भवे

महाकाव्ये – सप्तमः सर्गः ॥

० ❋ ०

श्रीनाथो वेङ्कटाद्रीशः निर्व्याजकृपया स्वयम्।

कुमारसम्भव व्याख्यां द्रामिडीं पर्यपूरयत् ॥

शुभं भूयात्

— ❋ —

# अष्टमः सर्गः

## (संशोधितया मल्लिनाथव्याख्यया सञ्जीवन्या समेतः)

### (अवतारिका)

शिवाय जगतामस्तु शिवयोः प्रेम तादृशम् ।
येनान्योन्यस्य शरीरार्धमन्योन्यस्मै समर्पितम् ॥ १ ॥

संभोगो विप्रलम्भश्च द्विधा शृङ्गार इष्यते ।
विप्रलम्भश्चधास्ति वर्ण्यते रसकोविदैः ॥ २ ॥

पूर्वानुराग मानाख्य प्रवासकरुणात्मना ।
प्रागसङ्गतयोर्यूनोराद्यः स्यादुत्तरे त्रयः ॥ ३ ॥

स्युः प्राक्संगतयोरेव; तत्र पूर्वानुरञ्जनम् ।
चक्षुःप्रीत्याद्यवस्थाभिः प्ररूढं शिवयोर्मिथः ॥ ४ ॥

विच्छिन्नं कामदाहेन प्रापय्य परमां दशाम् ।
तावत्सप्तर्षिसंवादप्रमुखैः साधनैः पुनः ॥ ५ ॥

अथ सम्भोगशृङ्गारमनयोः समरागयोः ।
कुमारसम्भवफलं सर्गेऽस्मिन्नाह सम्प्रति ॥ ६ ॥

सोऽपि [1]सङ्क्लिष्ट संकीर्ण संपन्नश्च समृद्धिमान् ।
इति भेदाश्चतुर्धोक्ताः चतुर्णां च वियोगिनाम् ॥ ७ ॥

तत्रावस्थाप्रभेदेन शृङ्गारे नायिकास्त्रिधा ।
मुग्धा मध्या प्रगल्भा च तत्र ह्रीसाध्वसाविलाम् ॥ ८ ॥

मुग्धावस्थां समाश्रित्य देव्याः प्रथमसङ्गमे ।
आदावेकादशश्लोक्या ब्रूते पूर्वानुरागिणोः ॥ ९ ॥

संक्लिष्टं नाम सम्भोगशृङ्गारं शिवयोः कविः ।
चुम्बनेष्वधरेत्यादौ लक्षणन्त्वस्य वक्ष्यते ॥ १० ॥

---

पाठ भेदः—

[1] संक्षिप्तः

**पाणिपीडनविधेरनन्तरं शैलराजदुहितुर्हरं प्रति ।**
**भावसाध्वसपरिग्रहादभूत्कामदोहदसुखं मनोहरम् ॥ १ ॥**

पाणीति ॥ पाणिपीडनविधेः अनन्तरं - पाणिग्रहणानन्तरम् । विधेरिति पञ्चमी षष्ठी च । उभयथाप्यनुशासनसंभवादित्युक्तं प्राक् । शैलराजदुहितुः - पार्वत्याः कर्त्र्याः । हरं प्रति भावसाध्वसपरिग्रहात्, मनोहरं-चित्ताकर्षकं, कामदोहदम् - कामसंवर्धकमित्यर्थः । 'तरुगुल्मलतादीनामकाले कुशलैः कृतम् । पुष्पाद्युत्पादकं द्रव्यं दोहदं स्यात् ।' इति शब्दार्णवे । तच्च तत्सुखं कामदोहदसुखं अभूत् । हरस्येति शेषः । नायिकानायकयोः अन्योन्यानुभावदर्शनात्सुखमाविर्भवति । तच्च मदनोद्दीपकमिति रसविदां स्थितिः । तथा च हरस्य गौर्यां नवोढायां स्वगोचरभावप्रयुक्तसाध्वसदर्शनात् कश्चित् मदनसन्दीपनः सुखमयः विकारः प्रादुर्बभूवेत्यर्थः । तत्र रसभावस्थायिनः कार्यमनुभावः । तदुक्तं - 'रसा गच्छन्ति संस्थानं यत्कार्यमुपलक्ष्यते । सोऽनुभावः' इति ॥

उक्तं भावसाध्वसम् । तस्य सुखमयत्वं च वर्णयति—

**व्याहृता प्रतिवचो न संदधे गन्तुमैच्छदवलम्बितांशुका ।**
**सेवते स्म शयनं पराङ्मुखी सा तथाऽपि रतये पिनाकिनः ॥ २ ॥**

व्याहृतेति ॥ सा - पार्वती, व्याहृता - यत्किंचिदभिहिता सती, प्रतिवचः - प्रत्युत्तरं, न संदधे-न ददावित्यर्थः । अवलम्बितांशुका-गृहीतवस्त्रा सती, गन्तुं अपसर्तुम्, ऐच्छत्-इच्छति स्म । इषिधातोर्लङ् । 'इषुगमियमां छः' इति छकारः । पराङ्मुखी सती, शयनं सेवते स्म । अनभिमुखमशयिष्टेत्यर्थः । तथापि । इत्थं साध्वसात्प्रतिकूलचेष्टितापीत्यर्थः । पिनाकिनः - शिवस्य, रतये - सुखाय । बभूवेति

शेषः। प्रातिकूल्यमपि तस्यानन्दकरमभूदित्यर्थः। एतेन नवोढाया देव्या मौग्ध्यात् लज्जाविजितमन्मथत्वं अवसेयम् ॥

**कैतवेन शयिते कुतूहलात्पार्वती प्रतिमुखं निपातितम्।**
**चक्षुरुन्मिषति सस्मितं प्रिये विद्युदाहतमिव न्यमीलयत्॥ ३ ॥**

कैतवेनेति ॥ प्रिये - भर्तरि, कुतूहलात्। एषा किं करिष्यतीति बुभुत्सयेत्यर्थः। कैतवेन - कपटेन, शयिते - सुप्ते सति, पार्वती - कर्त्री, प्रतिमुखं यथा तथा, निपातितम्। प्रियस्वापपरीक्षार्थं तदभिमुखं प्रवर्तितमित्यर्थः। चक्षुः- स्वदृष्टिं, सस्मितं उन्मिषति - पुनः प्रिये सहासं पश्यतीत्यर्थः। विद्युदाहतं - विद्युता प्रतिहतं, इव न्यमीलयत्। साध्वसादिति भावः। एतेन किंचित्साध्वसस्यापचयो रतेरुपचयश्च व्यज्यते ॥

**नाभिदेशनिहितः सकम्पया शङ्करस्य रुरुधे करस्तया।**
**तद्दुकूलमथ चाभवत्स्वयं दूरमुच्छ्वसितनीविबन्धनम्॥ ४ ॥**

नाभीति ॥ नाभिदेशनिहितः। नीवीमोचनायेति शेषः। शङ्करस्य करः, सकम्पया - वेपथुमत्या। प्रियकरस्पर्शादुत्पन्नसात्त्विकभावयेत्यर्थः। तया-पार्वत्या, रुरुधे - निवारितः। अथ च। तथापीत्यर्थः। तद्दुकूलं, स्वयं-स्वत एव, दूरं- अत्यन्तं, उच्छ्वसितनीविबन्धनं - उच्छ्वसितं स्रस्तं नीविबन्धनं नीविग्रन्थिर्यस्य तत्तथाभूतं, अभवत्। रतिपारवश्यादिति भावः ॥

**एवमालि निगृहीतसाध्वसं शङ्करो रहसि सेव्यतामिति।**
**सा सखीभिरुपदिष्टमाकुला नास्मरत्प्रमुखवर्तिनि प्रिये॥ ५ ॥**

एवमिति ॥ हे आलि-सखि पार्वति, रहसि शङ्करः एवम्। स्वोपदिष्टप्रकारेणेत्यर्थः। निगृहीतसाध्वसं-निरस्तभयं यथा तथा, सेव्यतां इति सखीभिः उपदिष्टं-उक्तं वचनं, सा-पार्वती, प्रिये-शङ्करे, प्रमुखवर्तिनि सति, आकुला-साध्वसविह्वला सती, न अस्मरत् - न स्मृतवतीत्यर्थः। न हि भयपरिप्लुते चेतसि दृढतरोऽप्युपदेशः संस्कारमाधत्त इति भावः ॥

**अप्यवस्तुनि कथाप्रवृत्तये प्रश्नतत्परमनङ्गशासनम्।**
**वीक्षितेन परिगृह्य पार्वती मूर्धकम्पमयमुत्तरं ददौ ॥ ६ ॥**

अपीति ॥ कथाप्रवृत्तये-संलापप्रवर्तनाय, अवस्तुनि-अप्रस्तुतार्थे अपि, प्रश्नतत्परम्। यत्किंचित्पृच्छन्तमित्यर्थः। अनङ्गशासनं-ईश्वरं, पार्वती, वीक्षितेन न तु वाचेत्यर्थः। परिगृह्य-अङ्गीकृत्य, मूर्धकम्पमयं-शिरःकम्परूपम्। स्वार्थे मयट्। उत्तरं ददौ। न तु वाङ्मयं, साध्वसादिति भावः। विहृतनामा लज्जानुभाव उक्तः। तदुक्तं—'ईर्ष्यामानातिलज्जाभ्यां न दत्तं योग्यमुत्तरम्। क्रियया व्यज्यते यत्र विहृतं तदुदीरितम् ॥' इति ॥

पुनस्तमेवाह—

**शूलिनः करतलद्वयेन सा संनिरुध्य नयने हृतांशुका।**
**तस्य पश्यति ललाटलोचने मोघयत्नविधुरा रहस्यभूत् ॥ ७ ॥**

शूलिन इति ॥ सा - पार्वती, रहसि हृतांशुका - प्रियेणाकृष्टवस्त्रा सती, करतलद्वयेन। स्वकीयेनेत्यर्थः। शूलिनः-हरस्य, नयने-नेत्रद्वयं संनिरुध्य-संछाद्य, तस्य - शूलिनः, ललाटलोचने-तृतीयेऽक्षिण, पश्यति सति, मोघयत्नविधुरा-मोघयत्ना निष्फलप्रयासा, अत एव विधुरा, अभूत्। तृतीयकराभावादिति भावः। एतेन किंचिद्धाष्टर्यादयो व्यज्यन्ते ॥

**चुम्बनेष्वधरदानवर्जितं सन्नहस्तमदयोपगूहने ।**
**क्लिष्टमन्मथमपि प्रियं प्रभोर्दुर्लभप्रतिकृतं वधूरतम् ॥ ८ ॥**

चुम्बनेष्विति ॥ चुम्बनेषु अधरदानवर्जितं-ओष्ठार्पणरहितं, अदयोपगूहने-निर्दयालिङ्गने, सन्नहस्तं-सन्नौ स्तब्धौ हस्तौ करौ यस्मिंस्तत्तथोक्तम् । तथा दुर्लभप्रतिकृतम् । अप्रगल्भत्वान्नखदन्तताडनाद्यकृतप्रयत्नमित्यर्थः । अत एव क्लिष्टमन्मथं - लज्जयोपरुद्धमदनं अपि, वध्वा नवोढाया रतं - वधूरतं, प्रभोः-ईश्वरस्य, प्रियम् । अभूदिति शेषः । 'वधूः स्नुषा नवोढा स्त्री भार्या' इति विश्वः । अयं लज्जासाध्वसाभ्यां संकुचितोपचारत्वात्संक्लिष्टसंभोगः । तदुक्तं भूपालेन-'युवानो यत्र संक्षिप्तसाध्वसव्रीडितादिभिः । उपचारान्निषेवन्ते स संक्लिष्ट इतीरितः ॥' इति ॥

**यन्मुखग्रहणमक्षताधरं दत्तमव्रणपदं नखं च यत् ।**
**यद्रतं च सदयं प्रियस्य तत्पार्वती विषहते स्म नेतरत् ॥ ९ ॥**

यदिति ॥ पार्वती प्रियस्य संबन्धि, अक्षताधरं - अक्षतोऽखण्डितोऽधरो-यस्मिंस्तत्तथोक्तं, यत् मुखग्रहणं-मुखचुम्बनम् । अव्रणपदं-लक्ष्मरहितम् । 'पदं व्यवसितत्राणस्थानलक्ष्माङ्घ्रिवस्तुषु' इत्यमरः । दत्तं यत् च नखं-नखकर्म । यत् सदयं रतं च तत् सर्वं, विषहते-सहते स्म । न इतरत् - विपरीतम् । प्रचण्डमिति यावत् । तच्चुम्बनं नखं सुरतं वा न सहते स्म । नवोढात्वादिति हृदयम् । तदुक्तं रतिरहस्ये—'नात्यन्तमानुलोम्येन न चातिप्रतिलोमतः । सिद्धिं गच्छति कन्यासु तस्मान्मध्येन साधयेत्' इति । कन्या - नवोढा ॥

**रात्रिवृत्तमनुयोक्तुमुद्यतं सा विभातसमये सखीजनम् ।**
**नाकरोदपकुतूहलं ह्रिया शंसितुं च हृदयेन तत्वरे ॥ १० ॥**

रात्रीति ॥ सा- पार्वती, विभातसमये-प्रभातकाले, रात्रिवृत्तम्। सुरतवृत्तान्त-मित्यर्थः । अनुयोक्तुं-प्रष्टुम । ' प्रश्नोऽनुयोगः पृच्छा च ' इत्यमरः । उद्यतं- प्रवृत्तं, सखीजनं, ह्रिया-लज्जया, अपकुतूहलं-निराकाङ्क्षं, न अकरोत । न किंचिदाचष्ट इत्यर्थः । हृदयेन-मनसा च, शंसितुं तत्वरे - त्वरिताभूत । औत्सुक्यादिति भावः । त्वरासंभ्रमादीनामनुभावत्वादिति ॥

**दर्पणे च परिभोगदर्शिनी पृष्ठतः प्रणयिनो निषेदुषः ।**
**प्रेक्ष्य बिम्बमनु बिम्बमात्मनः कानि कानि न चकार लज्जया ॥ ११ ॥**

दर्पण इति ॥ च-किंचेति चार्थः । दर्पणे- मुकुरे, परिभोगो नखक्षतादि-संभोगचिह्नं पश्यतीति परिभोगदर्शिनी, सा-पार्वती, पृष्ठतः - पश्चाद्भागे, निषेदुषः-स्थितवतः । सदेः क्वसुः । प्रणयिनः - प्रियस्य हरस्य, बिम्बं - प्रतिबिम्बम् । दर्पणे संक्रान्तमित्यर्थः । आत्मनः - स्वस्य, बिम्बं अनु । प्रतिबिम्बस्य पृष्ठत इत्यर्थः । ' अनुर्लक्षणे ' इति कर्मप्रवचनीयत्वात् द्वितीया । प्रेक्ष्य, लज्जया । स्वचापलप्राकट्यकृतयेत्यर्थः । कानि कानि - यानि कानिचिदवाच्यानि । अङ्गसंवर-णादिचेष्टितानीत्यर्थः । उक्तं च - ' लज्जानुभावेषु साचीकृताङ्गावरणवैवर्ण्या-धोमुखादिकृत ' इति । न चकार ? कृतवत्येवेत्यर्थः ॥

**नीलकण्ठपरिभुक्तयौवनां तां विलोक्य जननी समाश्वसत् ।**
**भर्तृवल्लभतया हि मानसीं मातुरस्यति शुचं वधूजनः ॥ १२ ॥**

नीलकण्ठेति ॥ नीलकण्ठपरिभुक्तयौवनां - नीलकण्ठेन परिभुक्तं यौवनं यस्याः सा तां तथोक्ताम् । प्रियेण भुक्तयौवनामित्यर्थः । तां - पार्वतीं, विलोक्य जननी-मेना, समाश्वसत् - संतुतोषेत्यर्थः । श्वसिधातोर्लङ् । ' अङ्गार्ग्यगालवयोः '

इति विकल्पादडागमः । तथा हि । वधूजनः भर्तृवल्लभतया-पतिवात्सल्येन, मातुः मानसीं-मनोभवां, शुचं-शोकं, अस्यति-निरस्यति हि । विपर्ययाद्विपर्ययश्चेत्यर्थादवसेयम् । सामान्येन विशेषणसमर्थनरूपोऽर्थान्तरन्यासः ॥

संप्रति देव्या मुग्धावस्थातो मध्यमावस्थाप्राप्तिमाह—

**वासराणि कतिचित्कथंचन स्थाणुना पदमकार्यत प्रिया ।**
**ज्ञातमन्मथरसा शनैः शनैः सा मुमोच रतिदुःखशीलताम् ॥१३॥**

वासराणीति ॥ स्थाणुना-शंभुना कर्त्रा, प्रिया-पार्वती कर्मभूता, कतिचित् वासराणि । कैश्चिदहोभिरित्यर्थः । अत्यन्तसंयोगे द्वितीया । कथंचन-कृच्छ्रेण, पदं-पदप्रक्षेपं, अकार्यत - कारिता । सुरतकर्मणीति शेषः । करोतेर्ण्यन्तात्कर्मणि लङ् । 'हृक्रोरन्यतरस्याम्' इत्यणि कर्तुः कर्मत्वं 'ण्यन्ते कर्तुश्च कर्मणः' इत्यभिहितत्वं च । सा - कृतपदा पार्वती, ज्ञातमन्मथरसा-अनुभूतसुरतसुखास्वादा सती । 'आस्वादेऽपि रसं प्राहुः' इति शब्दार्णवे । शनैः शनैः - क्रमेण, रतिदुःखशीलतां, रतौ - रते, दुःखशीलतां - प्रतिकूलस्वभावतां, मुमोच । 'शीलं स्वभावे सद्वृत्ते' इत्यमरः । मध्यमावस्थां प्रापेत्यर्थः ॥

तुल्यलज्जास्मरत्वमेवाह—

**सस्वजे प्रियमुरोनिपीडिता प्रार्थितं मुखमनेन नाहरत् ।**
**मेखलाप्रणयलोलतां गतं हस्तमस्य शिथिलं रुरोध सा ॥ १४ ॥**

सस्वज इति ॥ सा - पार्वती, उरोनिपीडिता - उरसि गाढमाश्लिष्टा सती, प्रियं सस्वजे । न तु निष्पन्दमास्तेत्यर्थः । अनेन स्मरावेशोदयः सूचितः । अनेन - प्रियेण, प्रार्थितं - चुम्बनार्थं याचितम् । 'याच्ञायामभियाने च प्रार्थना

कथ्यते बुधैः ' इति केशवः । मुखं न अहरत् । मेखलाप्रणयलोलतां - मेखलायां प्रणयः - परिचयः । ' प्रणयः स्यात्परिचये याञ्चायां सौहृदेऽपि च ' इति यादवः । तत्र लोलतां-चञ्चलतां, गतं, अस्य - प्रियस्य, हस्तं शिथिलं रुरोध - न्यवारयत् । न तु निर्भरमिति भावः । अत्र सहनप्रतीकाराभ्यां तुल्यलज्जास्मरत्वं व्यज्यते ॥

अथ देव्याः प्रगल्भावस्थां दर्शयितुं तयोः समानुरागत्वं तावदाह—

**भावसूचितमदृष्टविप्रियं चाटुमत्क्षणवियोगकातरम् ।**
**कैश्चिदेव दिवसैरभूत्तयोः प्रेम रूढमितरेतराश्रयम् ॥ १५ ॥**

भावेति ॥ तयोः - शिवयो , कैश्चित् - कतिभिः एव, दिवसैः । भावसूचितं - भावैश्चेष्टाभिः कटाक्षक्षेपादिभिः संज्ञातं, अदृष्टविप्रियं - अदृष्टं विप्रियमप्रियाचरणं यत्र तत्तथोक्तम् । चाटूनि - प्रियोक्तयः अस्मिन्सन्ति चाटुमत् । भूमार्थे मतुप् । क्षणवियोगकातरं - क्षणवियोगात्क्षणमात्रविरहादपि, कातरं - भीरु, इतरेतराश्रयं - अन्योन्यविषयं प्रेम । प्रेमपदाभिलप्याङ्कुरावस्था रतिरित्यर्थः । रूढं अभूत् । क्रमेणानुरागपदाभिलप्यां भोगावस्थां प्राप इत्यर्थः । तदेतत्सर्वं स्फुटीकृतं भूपालेन - ' अङ्कुरपल्लवकलिकाप्रसूनफलभोगभागियम् क्रमशः ' इत्यादिना । उक्ता रतिरेव स्थायीभूता रसीभवति। अङ्कुराद्यवस्थाभेदात्तावत् प्रेमादिपदैरभिलप्यत इत्यर्थः । ' स प्रेमा भेदरहितं यूनोर्यद्भावबन्धनम् । राग एव स्वसंवेद्यदशां प्राप्याप्रकाशितः । यावदाश्रयवृत्तिश्चेदनुरागः ' इति मानादिलक्षणं विस्तरभयान्न लिख्यत इत्याकर एव द्रष्टव्यम् ॥

पूर्वोक्तमेव व्यनक्ति—

**तं यथाऽऽत्मसदृशं वरं वधूरन्वरज्यत वरस्तथैव ताम् ।**
**सागरादनपगा हि जाह्नवी सोऽपि तन्मुखरसैकनिर्वृतिः ॥ १६ ॥**

तमिति ॥ वधूः, आत्मसदृशं - स्वानुरूपं, तं वरं - वोढारं प्रति, यथा अन्वरज्यत - अनुरक्ताभूत् । रञ्जेर्दैवादिकात्कर्तरि लकारः । स्वरितेत्त्वादात्मनेपदम् । तथैव वरः अपि - वोढाप्यात्मनः सदृक् तामात्मसदृशम् । ' त्यदादिषु दृशोऽनालोचने कञ्च ' इति चकारात् क्विप्प्रत्ययः । तां - वधूं प्रत्यन्वरज्यत । वध्वामनुरक्तोऽभूदित्यर्थः । ' गत्यर्थाकर्मक- ' इत्यादिना सकर्मकत्वम् । दृष्टान्तमाह - जाह्नवी - गङ्गा, सागरात् नापगच्छतीति - अनपगा - अनपेता हि । सोऽपि सागरः, तन्मुखरसैकनिर्वृतिः । तस्या जाह्नव्या मुखरसेन अग्रसलिलेन वक्त्रास्वादनेन एका मुख्या निर्वृतिरानन्दो यस्य स तथोक्तः । अत्र दृष्टान्तालंकारः । लक्षणं तूक्तम् । इत्थं समानानुरागकथनाद्रसस्याभासत्वं निरस्तम् । तदुक्तम्— ' एकत्रैवानुरागश्चेत् तिर्यङ्म्लेच्छगतोऽपि वा । योषितो बहुसक्तिश्चेद्रसाभासः स उच्यते ' ॥ कविनाप्युक्तं मालविकायाम् - ' अनातुरोत्कण्ठितयोः प्रसिध्यता समागमेनापि रतिर्न मां प्रति । परस्परप्राप्तिनिराशयोर्वरं शरीरनाशोऽपि समानुरागयोः ॥ ' इति ॥

अथ देव्याः प्रगल्भावस्थामाश्रित्य संभोगमाह—

**शिष्यतां निधुवनोपदेशिनः शङ्करस्य रहसि प्रपन्नया ।**
**शिक्षितं युवतिनैपुणं तया यत्तदेव गुरुदक्षिणीकृतम् ॥ १७ ॥**

शिष्यतामिति ॥ रहसि-एकान्ते, निधुवनमुपदिशतीति निधुवनोपदेशिनः-सुरतविद्यागुरोः । ' व्यवायो ग्राम्यधर्मो मैथुनं निधुवनं रतम् ' इत्यमरः । शङ्करस्य

शिष्यतां प्रपन्नया - प्राप्तया, तया - पार्वत्या, यत् युवतिनैपुणं-युवतिजनोचितं नैपुणम् । सुरतकौशलमित्यर्थः । शिक्षितं-अभ्यस्तम् । आचरितमित्यर्थः । तदेव गुरुदक्षिणीकृतम् । यथोपदेशकरणादेव समतूतुषदित्यर्थः । अनेन कृतप्रतिकृतं सूच्यते ॥

**दष्टमुक्तमधरोष्ठमम्बिका वेदनाविधुतहस्तपल्लवा ।**
**शीतलेन निरवापयत्क्षणं मौलिचन्द्रशकलेन शूलिनः ॥ १८ ॥**

दष्टेति ॥ अम्बिका-पार्वती, दष्टश्चासौ मुक्तश्च तं-दष्टमुक्तम् । 'पूर्वकाल-' इत्यादिना समासः । अधरोष्ठं, वेदनाविधुतहस्तपल्लवा- वेदनया विधुतौ कम्पितौ हस्तपल्लवौ पाणिपल्लवौ यया सा तथोक्ता सती, शीतलेन शूलिनः मौलिचन्द्रशकलेन क्षणं निरवापयत् । शीतलोपचारेण निर्व्यथमकरोदिति विश्रम्भोक्तिः । निवातेर्धातोर्ण्यन्तात् 'अर्तिह्री-' इत्यादिना पुगागमः । अत्राधरपीडनात् सुखेऽपि दुःखवदुपचारात् कुट्टमितस्यानुभवः उक्तः । तदुक्तम्—'केशाधरादिग्रहणे मोदमानापि मानसे । दुःखितेव बहिः कुप्येदेतत्कुट्टमितं हि यत्' इति ॥

**चुम्बनादलकचूर्णदूषितं शङ्करोऽपि नयनं ललाटजम् ।**
**उच्छ्वसत्कमलगन्धये ददौ पार्वतीवदनगन्धवाहिने ॥ १९ ॥**

चुम्बनादिति ॥ अथ शङ्करः अपि, चुम्बनात् - चुम्बनात् हेतोः, अलकचूर्णदूषितं-अलकचूर्णेन दूषितमुपहतं, ललाटजं नयनं उच्छ्वसत्कमलगन्धये-विकचारविन्दगन्धाय । 'उपमानाच्च' इति समासान्त इकारः । पार्वतीवदनगन्धवाहिने-पार्वत्याः वदनगन्धवाहिने । फूत्कारमारुतायेत्यर्थः । ददौ । रजोनिःसारणार्थं तदाभिमुख्येन स्थापितवानित्यर्थः । एतेन देव्याः प्रियवशंवदत्वमुक्तम् । अत्र हरचक्षुष्यलकचूर्णपातकथनाद्देव्या उपरिभावः सूचितः ॥

